கன்னுசாமிப்

# பரம்பரை வைத்தியம்

வைத்திய சிகாமணி
சி. கன்னுசாமிப் பிள்ளையவர்களால்
இயற்றப்பட்டது

பீ. இரத்தின நாயகர் அண்ட் ஸன்ஸ்

கண்ணுசாமிப்

# பரம்பரை வைத்தியம்

இஃது

"சிகிச்சா ரத்னதீபம்", "கண்ணுசாமியம்", "வைத்திய சிந்தாமணி", "சித்த வைத்திய பதார்த்தகுண விளக்கம்" முதலிய நூல்களின் ஆசிரியராகிய

வைத்திய வித்வன்மணி

சி. கண்ணுசாமிப்பிள்ளை அவர்களால்

இயற்றப்பட்டது.



சென்னை:

B. இரத்தின நாயகர் அண்ட் ஸன்ஸ்,

அவர்களால் பதிப்பிக்கப்பெற்றது.



[விலை ரூ. 7—00

# முன்னுரை

முன்னுரை என்பது நூலிற்கு முதன்மையாக மொழியப்படுவதும், அதனை அணிபெறச் செய்வது மாதலின் அதனைப் பெரும்பாலும் ஆசிரியர் எழுதுவதே முறைமையாகும். ஆனால் அத்தகைய பேறு 'கண்ணுசாமி பரம்பரை வைத்தியம்' என்னும் பெரிய இந்நூலிற்குக் கிடைக்கப் பெருமை வருந்தத் தக்கது. இந்நூல் வெளிவருமுன் ஆசிரியர் மறைந்தனராதலின் முன்னுரைத்தலாகிய இத்தொண்டு அவர் தம் குமாரனாகிய என்னைச் சார்ந்தது.

இந்நூலாசிரியராகிய காலஞ்சென்ற வைத்திய வித்வன்மணி சி. கண்ணுசாமிப் பிள்ளை அவர்கள் 28—3—1875-ல் தோன்றி, தன்னறிவு தோன்றிய நாள் முதல்கொண்டே முதலில் இரசவாத வித்தையிலும் பின்னர் வைத்தியத் துறையிலும் உழன்று சித்தர் நூற்களையெல்லாம் நன்காராய்ந்து தான் கண்ட உண்மைகளையெல்லாம் 'தான் பெற்ற பேறு பெறுக இவ்வையகமென' மருத்துவர்கட்குப் பயன்படுமாறு அவ்வப்போது பல நூல்கள் இயற்றி வெளியிட்டது யாவரும் அறிந்ததேயாம்.

சென்னையில் இந்நூலாசிரியர் விடோபா ஔடதசாலையை ஸ்தாபித்தும், இராஜவைத்திய சாலையின் அதிபராக இருந்தும் வைத்திய உலகிற்குப் பெருந்தொண்டாற்றினார்.

இந்நூலாசிரியர் முதலில் 'சிகிச்சாரத்நதீபம்' 'கண்ணுசாமியம்' 'வைத்திய சிந்தாமணி' முதலிய நூல்களையும,

பின்னர் 'சித்த வைத்திய பதார்த்தகுண விளக்கம்' என்னும் நூலையும் இயற்றி வெளியிட்டது சித்த வைத்தியத்திற்கே அத்திவாரம் என்பதை எவரும் மறக்கவோ மறுக்கவோ முடியாதவையாம். 1945-ஆம் ஆண்டில் பல சித்தவைத்திய நண்பர்களின் வேண்டுகோளுக்கிணங்கி 'கண்ணுசாமி பரமபரை வைத்தியம்' என்னும் இந்நூலை இயற்ற ஆரம்பித்து, பல இன்னல்களினிடையிலும் விடா முயற்சியுடன் இதனை இனிது முடித்துவிட்டு இறுதியில் 14—12—1946-ல் தமது 72-ஆம் வயதில் ஆன்ம நிலையை யடைந்தார்.

நாட்டின் சீர்க்கேட்டாலும், பொருளாதார நெருக்கடியாலும் இதுவரை வெளியிட முடியாமலிருந்த இந்நூலை இப்போது அச்சிட முன் வந்துள்ள B. இரத்தின நாயகர் ஸன்ஸ் உரிமையாளராகிய திரு. B. R. அரங்கசாமி நாயகர் அவர்களைப் பெரிதும் பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன்.

இந்நூலாசிரியர் இதுவரையில் இயற்றி வெளியிட்டுள்ள பல நூல்களைப் போலவே இந்நூலிலும் அனுபவத்தில் கண்ட பல சிறந்த முறைகளைத் திரட்டித் தொகுத்திருப்பதுடன் இதுவரையில் வெளிவராததும், சித்தர் நூல்களில் பரிபாஷையாகவும் மறைபொருளாகவுமே கூறப்பட்டுள்ளதும், சித்த வைத்தியத்திற்கே தனிப் பெருஞ் சிறப்பாய் விளங்கப்படுவதுமாகிய முப்புவைக் குறித்து தன் ஆராய்ச்சியில் கண்ட சில கருத்துக்களை எளிய முறையிலே விளங்கும் வண்ணம் 'முப்பு இலம்பகம்' என்னுமோர் பகுதியை இந்நூலில் அமைத்துள்ளது இந்நூலிற்கு ஓர் தனிச் சிறப்பென்று கூறலாம்.

இந்நூலாசிரியரின் மறைவின் காரணத்தை முன்னிட்டும், இந்நூலின் பதிப்பாளரின் விருப்பத்திற்

கிணங்கியும் இந்நூல் அச்சிட ஆரம்பித்தது முதல் முடியும் வரையில் உடனிருந்து கவனிக்கும் பொறுப்பையும், இதற்கு முன்னுரை எழுதும் பொறுப்பையும் எனக்கு இறைவனருள் கூட்டுவித்தது. ஆகையால் அன்பர்கள் இந்நூலில் காணும் குற்றங் குறைகளைப் பாராட்டாது இதனை ஏற்று ஆதரவளிக்குமாறு வேண்டுகின்றேன். இந்நூல் இனிது முடியுமாறு அருள் புரிந்த இறைவனைப் போற்றுவோமாக.

இங்ஙனம்

Dr. K. இராதாகிருஷ்ணன் L. I. M.

# பொருளடக்கம்

# கண்ணுசாமிப்

# பரம்பரை வைத்தியம்

## வைத்தியப் பொது இலம்பகம்

### அட்டவிதப் பரீட்சை

தொகுக்கலுற்ற வட்டவிதப் பரீட்சை தன்னைத்
துலக்கமுறும் பண்டிதரே தெளிவதாகப்
பகுக்கரிய நாடியைநீ பிடித்துப் பாரு 1
பகர்கின்ற வார்த்தையைப்பார் நாவைப் பாரு 2, 3
வகுக்கரிய தேகமதைத் தொட்டுப் பாரு 4
வளமான சரீரத்தின் நிறத்தைப் பாரு 5
சகிக்கரிய மலத்தைப்பார் சலத்தைப் பாரு 6, 7
சார்ந்தவிழி தனைப்பார்த்துத் தெளிவாய்க் காணே. 8

### நாடிபார்க்கும் விதம்

கரிமுக னடியை வாழ்த்திக் கைதனி னாடிபார்க்கில்
பெருவிர லங்குலத்திற் பிடித்தடி நடுவே தொட்டால்
ஒருவிர லோடில் வாத முயர்நடு விரலிற் பித்தந்
திருவிரன் மூன்றி லோடிற் சேத்தும நாடியாமே.

—வைத்திய இரத்தினச் சுருக்கம்

### ஸ்திரீ புருடர்களுக்கு நாடி பார்க்கும் வகை

தானென வுலகத் துள்ளே தங்கிய நாடி பார்க்கில்
வானெனு மின்னே கேளாய் வரும்பலன் சொல்லக் கேளு

நாடியெனும் புருடர்க் கெல்லாம் நாடிதான் வலக்கை யாகும்
தேடியெனு மடவார்க் கெல்லாம் இடம்பெற விடக்கை சித்தே.
—வைத்திய இரத்தினச் சுருக்கம்

## மூவகை நாடியின் நடை

ஆகிய வாதநாடி யன்னம்போற் குயிலைப் போலும்
ஏகிய பித்தநாடி யெழிலாமை யட்டைப் போலும்
போகிய சிலேத்துமநாடி பொல்லாத பாம்பு போலும்
பாகுடன் முனிவர்தாமும் பாடினர் நாடிதானே.
—வைத்திய சார சங்கிரகம்

## வேறு

வாகினி யன்னங் கோழி மயிலென நடக்கும் வாதம்
ஏகிய வாமை யட்டை யிவையென நடக்கும் பித்தம்
போகிய தவளை பாம்பு போலவாஞ் சேத்து மந்தான்
ஆகிய நாடி மூன்று மமர்ந்திடிற் சன்னி யாமே.

ஏதேனும் ஒரு சூத்திரத்தில் மேற்கூறிய வண்ணம் அன்னம், கோழி, மயில், குயில் நடையென்று குறிப்பிடும் போது இவைகள் யாவும் மனிதரைப்போல் காலடி முன் பின்னாக மாற்றி மாற்றி வைத்து நடக்கக்கூடியவற்றைச் சேர்ந்ததாதலால் வாத நாடிக்கு உபமானமாகக் கூறப் பட்டதென்று அறிக. இத்தகையே குதித்தல், சீறல், பாய்ச்சலுடைய பிராணிகளைக் குறிப்பிடும்போது பித்தத் திற்கும், தரையோடு நகர்ந்து செல்லக்கூடிய பிராணி களைக் குறிப்பிடும்போது ஐயத்திற்கும் உபமானமாகக் கூறப்பட்டதென்று அறியக்கடவர். சில சூத்திரங்களில் இத்தகைய மூன்றுவிதமான நடைகளுக்கு மாத்திரை அளவாகவும் கூறப்பட்டுள்ளது. அதனைக் கீழ்க்கண்ட சூத்திரத்தால் இனிதுணர்க.

## மாத்திரையின் அளவு

செய்கின்ற நாடிபெரு விரலின் மேலாய்த்
திருந்திழைமூன் றங்குலத்தி னடுவ தாக
தைகின்ற கோதுமை யரிசிபோலச்
சர்வம்வியா பித்திருக்கும் அததான் கூறில்
கையடியுங் காலடியும் நாடி நிற்கும்
கன்னியருக் கிடப்புறமாங் கணவர்க் கங்கே
மைகின்ற வலப்புறமாம் வாத நாடி
வந்துமுன்னே நடக்குமப்பால் வகைசொல் வேனே.

## வாத பித்த சிலேத்துமம் இருக்கவேண்டிய மாத்திரையின் அளவு

வழங்கிய வாதம் மாத்திரை யொன்றாகில் 1
தழங்கிய பித்தந் தன்னி லரைவாசி 1/2
அழங்குங் கபந்தா னடங்கியே காலோடில் 1/4
பிறங்கிய சீவர்க்குப் பிசகொன்று மில்லையே. —திருமூலர்

இந்த அளவிற்குமேல் குறையினும் மிகினும் தேகத்தில் நோய் என்னும் விகல்பத்தை அடையும். அதனை அடியிற்கண்ட சூத்திரத்தா லறிக.

## 1. நாடிப் பரீட்சை

### வாதநாடியின் குறி

வாதமெனும் நாடியது தோன்றிற் சீத
மந்தமொடு வயிறுபொருமல் இரட்சை வாயு
சீதமுறுங் கிராணிமகோ தரநீ ராமை
திகழ்வாயு சூலைவலி கடுப்புத் தீரா
நீதமுறுங் இறுமிகுனை மண்ட வாதம்
நிலையும்நீர் கிரிச்சனங்கள் தந்து மேகம்
பேதகமா மூத்திரபிணி மூல ரோகம்
பேசவெகு பிணிகளுமே பொருள தாமே.

## வாதபித்த நாடியின் குறி

பொருளான் வாதத்தில் பித்தஞ் சேர்ந்து
பொருந்துகுண மாமுஷ்ண வாயு சத்தி
செரியாமை புளித்தேப்பம் பெருகு நீரிற்
சிவப்புமல மிறுகலுறும் தாது நட்டம்
கருவான தேகமதி லுளைச்சல் சோம்பல்
கைகால்கள் தெறிப்புநாக் கசக்கு மன்னம்
பரிவான வூண்குறைதல் ருசிகே டாதல்
பலநோயும் வருத்திவைக்கும் பாங்கு தானே.

## வாத சிலேத்தும நாடியின் குறி

பாங்கான வாதத்திற் சேத்தும நாடி
பரிசித்தால் திமிர்மேவு மூளைச்ச லாகும்
தீங்கான இருமலுடன் சன்னி தோஷம்
சேர்ந்தவிஷ வெடிசூலை யிருத்து ரோகம்
வாங்காத யீளையுமந் தார காசம்
வலியுடனே பிறவீச்சு வீச்சு வீக்கம்
ஓங்கும்பொல் லாதசுரம் சுவாச காசம்
உண்டாகும் வெகுரோய்க்கு முறுதி தானே.

## பித்த நாடியின் குறி

உறுதியுள்ள பித்தமது தோன்றில் வெப்பு
உஷ்ணவாயு வத்திசுர மதிசா ரங்கள்
மறதியுடன் சிறக்குமாம் பைத்திய ரோகம்
வளர்சோகை யழலெரிவு காந்தல் கைப்பு
இருதயத்திற் கலக்கமது மறப்பு தாகம்
எழுங்கனவு மெய்யுளைவு மயக்க மூர்ச்சை
சிறிதுபெரும் பாடுரத்தம் பிரமே கங்கள்
சேர்ந்துவெகு பிணிபலவுஞ் சிறங்குந் தானே.

## பித்தவாத நாடியின் குறி

சிறப்பான பித்தத்தில் வாத நாடி
சேரிலுறுந் தாதுநட்ட முதிர பீடை
உறைப்பாகச் செரியாமை குன்மஞ் சூலை
உற்றசுரங் கிராணிவயிற் றிரைச்சல் மந்தம்
அறைப்பான ஓங்கார பிறநீர் கோவை
ஆயாச மிரக்கமொடு மயக்க மூர்ச்சை
முறைக்காய்ச்சல் விஷவீக்கம் மூல வாயு
முரடான கோய்பலவு முடுகும் பண்பே.

## பித்த சிலேத்தும நாடியின் குறி

பண்பான பித்தத்தில் சிலேத்துமங் கூடிப்
பரிசித்தா லத்திசுர மிளைப்பே யிளை
கண்காது நயனமலம் நீரும் மஞ்சள்
கனவயிறு பொருமல்மஞ் சட்கண் ணோவு
உண்போது மறுக்குரத்த விப்புருதி தானு
முளமார்தை பீநசமும் ரத்த வீக்கம்
நண்பான காமாலை சோகை வெப்பு
நணுகிவந்த பலபிணியும் காணுந் தானே.

## சிலேத்தும நாடியின் குறி

தானமுள்ள சிலேத்துமந்தா னிளகில் வெப்பு
சயமிளை யிருமல்மந் தார காசம்
ஈனமுறுஞ் சன்னிவிஷ தோஷம் விக்கல்
இருத்துரோ கங்கரப்பன் விரண தோஷம்
மானமுறுஞ் சூலைதிரள் வியாதி வீக்கம்
வருஞ்சத்தி சுவாசம்நெஞ் சடைப்புத் துக்கம்
ஏனமுறுங் காமாலை பாண்டு சோகை
எழுசுரங்கள் பலதுக்க மிடமுண் டாமே.

## சிலேத்தும பித்த நாடியின் குறி

இடமான சிலேத்துமத்தில் பித்த நாடி
எழுந்தனுகில் விஷமுடனே வீக்க முண்டாம்
திடமான குளிர்காய்ச்சல் மஞ்சள் நோவும்
தேகத்தி லுளைச்சலிளை யிருமல் வாந்தி
விடமான நெஞ்சடைப்பு சுவாசம் விக்கல்
வெகுசுரமும் நாவறட்சி பாண்டு ரோகம்
அடமான குவளைரத்தம் அதிசா ரந்தான்
அணுகிவெகு பலநோய்க்குத் தடங்கண் டாயே.

## சிலேத்தும வாத நாடியின் குறி

கண்டாயோ சிலேத்துமத்தில் வாத நாடி
கலந்திடிலே வயிறுபொருமல் கனத்த வீக்கம்
உண்டாலோ வோங்கார சத்தி விக்கல்
உறுந்திரட்சி வாயுவலி சன்னி தோஷம்
விண்டாலோ விளைப்பிருமல் சோகை பாண்டு
விஷபாகம் விஷசூலை பக்க வாதம்
திண்டாடு நாசிகா பீடங் கக்கல்
சிரநோய்கள் பலவும்வந் துதிக்குந் தானே.

## 2. வார்த்தைப் பரீட்சை

பார்ப்பததான் வாதரோகி யின்றன் வார்த்தை
பக்குவமாய்ச் சமசத்த மாயி ருக்கும்
சேர்ப்பதுதான் பித்தரோகி யின்றன் வார்த்தை
செப்பக்கேள் பெலத்துமே யுறத்தி ருக்கும்
ஏற்பதுதான் ஐயரோகி யின்றன் வார்த்தை
யெளிதாகச் சிறுத்திருக்கு மியல்பி தாகும்
கோற்கவே யிம்மூன்றுந் தொந்த மாகில்
கூசாமற் பலவிதமாய்ப் பேச வானே.

## 3. நாப் பரீட்சை

பலமான ருசியறியும் நாவின் கூற்றைப்
பகர்கின்றேன் வாதரோகி யின்றன் நாவு
கலமாக வெடித்துகறுத் திருக்கு முட்போல்
கண்டுகொள்வாய் பித்தரோகி யின்றன் நாவு
நலமுறு சிவந்துபச் சென்றி ருக்கும்
நட்பிலாசி லேத்தமரோகி யின்றன் நாவு
நலமதனி லுற்றமுதி யோர்கள் சொன்ன
தன்மைபடி தடித்துவெளுத் திருக்கும் பாரே.

### வேறு

வாதத்தோர் நாக்கறுத்து வன்னிற துன்னிகமாய்
மாதுவை பித்தத்தோர்க் குறுநாவு மஞ்சளித்திருக்கும்
பேதமாய்க் கசந்திருக்கும் பெய்வளையே சேஷ்மத்தோர்க்குத்
தாறுநா வெளுத்து நோயும் தாக்குமே யெண்ணத் தாலே.

## 4. தேக ஸ்பரிச பரீட்சை

நேயமுடன் வாதத்தின் தேகந் தானும்
நேர்மையாய்க் குளிர்ந்துசில் விடத்தி லேதான்
மாயமுட னுட்டணமுந் தடிது டிப்பு
மருவுதலாம் பித்தத்தின் தேகந் தானும்
தோயவே வுஷ்ணமதா யிருக்குந் தெளிவாய்
சேத்துமத்தின் தேகமது குளிர்ந்தி ருக்கும்
பாயதொந்த தேகமது பலவா றாகும்
பரிந்து தொட்டுத் தேகத்தைப் பார்த்துப் பேசே.

### வேறு

சேரும் வாதநிரேக குணந்தேறே சீதமிகுந் திருக்கும்
பாரும்பித்தத் திரேகமதைப் பார்க்கில் சிவலைச் சென்றிருக்கும்
கூறுஞ்சி லேத்மசடம் வேர்வைகொண்டே யிருக்குமிக் குணங்கள்
சேருந்தொந்த ரோகஉடஞ் செப்புங் குணத்தி லாழ்வீரே.

## 5. தேக நிறப் பரீட்சை

மூன்ருகும் வாதபித்த சிலேத்துமத்தால்
மிகுத்தமுறத் தொந்தித்த ரோகி தேகம்
தோன்ருத சீதள வுஷ்ணங் காலமூன்றுந்
தொகுத்தேன்யான் றிரேகத்தி னிறத்தைக் கேளு
ஊன்ருத வாதவுடல் கறுத்துக் காணும்
உரியபித்த முடல்சிவப்புப் பசுமை காணும்
போன்ருத வையவுடல் வெண்மை தோன்றும்
பொருந்துந்தொந்த ரோகவுடற் கிவற்றை யொக்கும்.

### வேறு

வாத ரோகி மனிதர்கள் மாமுக
மோதி னேங்கறுப் பாயிரு முண்மையே
வேத நீதி விளம்பிய பித்தத்தோற்
கேது வாய்முக மஞ்சளு மெய்துமே.

எய்து சேத்தும மெழுந்தவர் மாமுகம்
மெய்ய தாகக் கருகி வெளுத்திடும்
வைய ளுருரை செய்த வரும்பொருள்
செய்தி காணின் வைத்திய சிரேஷ்டரே.

## 6. மலப் பரீட்சை

ஒக்குமே வாதநோய் மலத்தைப் பார்க்கில்
உகந்தமலம் கறுகியே கறுத்தி ருக்கும்
மிக்கபித்த நோய்மலத்தை யுற்றுப் பார்க்கில்
மிகுந்தசிவப் புடன்பசுமை தானுந் தோற்றும்
மைக்குவளை மானேகே ளைய ரோகம்
மலமதுதான் வெண்மைநிற மாயி ருக்கும்
பக்குவமா யிம்மூன்றுந் தொந்திப் பாகில்
பகருமின் னிறங்கள்வகை பரிர்து காணும்.

### வேறு

மேவு வாத முடையவர் மெய்மலம்
சீவி தாகக் கறுத்திடுஞ் செம்மியே
பாவை யேபித்தத் தோர்மலம் பார்த்திடில்
ஆவியே யெழு மன்னிற மஞ்சளே.

மன்றுஞ் சேற்பனத் தார்மலம் வீழ்குறி
வின்ன நீர விழும்வெளுப் போங்கியே
சொன்ன குண மின்றிமுத் தொந்தத்தே
நின்றிடில் மூன்று நிறமல மெய்துமே.

## 7. நீர்ப் பரீட்சை

ஓங்கிய வாதத்தோர்க்கு நீர்விழுங் குணந்தா னுரைக்கிற்
பூங்கொடி கறுத்துநொந்து சிறுத்துடன் பொருமி வீழும்
பாங்குடன் பித்தத்தோர்க்கும் பசியநீர் சிவந்து காட்டி
எங்கவே கறுக்கதாக எரித்துடன் கடுத்துவீழும்.

வீழுமே சிலேற்பனத் தோர் நீர்க்குணம் விளம்பக் கேளாய்
காளுமே வெளுத்துறைந்து நலம்பெற வீழுங் கண்டாய்
வாள்விழி மானேதொந்த ரோகமா னிடர்க்குத் தானே
தாளுநீர் பலநிறத்தா னென்னவே சாற்றி னேமே.

## 8. விழிப் பரீட்சை

உண்மையாய்க் கண்கள்குறிப் பதைக்கேள் வாதம்
உற்றவிழி கறுத்துநொந்து நீருங் காணும்
தண்மையிலாப் பித்தரோகி யின்றன் கண்கள்
சார்பாகப் பசுமைசிவப் பேறுங் காணும்
வண்மையிலா வையரோகி விழிகள் தானும்
வளமான வெண்மைநிற மேதா னுகும்
திண்மையிலாத் தொந்தரோகி யின்றன் கண்கள்
தீட்டுவாய் பலநிறமென் றுறைய லாமே.

இங்குக் கூறப்பட்டுள்ள அட்டவிதப் பரீட்சைகளால் நோயின் வன்மை மென்மையை நன்குணர்ந்து கொள்வதுடன் வால்மீகர் கூறியுள்ள நீர்ச்சீலைப் பரீட்சை, நெய்ச்சீலைப் பரீட்சை தன்வந்திரி கூறியுள்ள உறுப்புப் பரீட்சை முதலியவற்றை அனுட்டானத்திற்குக் கொண்டு வருவது வைத்தியர்களின் கடமையாதலால் அவற்றை அடியில் கூறப்பட்டுள்ளன.

## வால்மீகர் நீர்ச்சீலை பரீட்சை

அவனியில் மாந்த ருக்கு அணுகிய வியாதிதன்னைக்
கவனமாய்க் கண்டு தேர்ந்து கனிவொடு மருந்து செய்யப்
புவிதனில் வைத்தி யர்க்காய்ப் பூட்டுவே னிரக சியத்தை
அவலமும் சேரி டாது நுறைந்தநீர்ச் சீலை யாலே.

சீலையை நனைத்து மாந்தர் திரமணிக் கடையிற் சுற்றி
காலமே மூன்றே முக்கால் கடிகையுங் கடந்த பின்பு
சாலவச் சீலை வாங்கித் தனிவிரல் வாத நாடி
ஓலமாய்க் குதித்து வாங்கி லுரைத்திடு மரண மென்றே.

வருந்தியே நனைத்துச் சீலை மணிக்கையிற் சுற்றி வைத்துத்
திருந்தியே மூன்றே முக்கால் சென்றபின் னுடை வாங்கிப்
பொருந்தியே வாதநாடி புழுவென நெளியு மாகில்
அருந்திட மருந்து செல்லு மவர்பிழைத் திடுவர் தாமே.

நனைத்தவச் சீலை தன்னை நடுமணிக் கடையிற் சுற்றிச்
சினத்திடா மூன்றே முக்கால் சென்றபின் னுடை வாங்கி
அனைத்தவர் நாடி பார்க்கி லரியதோர் வாத நாடி
சினத்தகண் ணரவம்போலச் சீறியே நெளிந்தாற் றூனே.

இம்மையிற் சாவு சொன்னே மிருபத்தி ரண்டு நாளிற்
செம்மையாய்ச் சீலை தன்னைச் சிறுவிர லதனிச் சுற்றித்
தம்பியே கடிகை ரெண்டில் சார்ந்தபின் னுடைவாங்கி
வம்பிலா வாதந் தேர்ந்தா லவர்பிழைத் திடுவர் காணே.

மெல்லிய துகினீர் தோய்த்து மிகுமணிக் கடையிற் சுற்றிச்
சொல்லிய மூன்றே முக்கால் தோன்றிய நாழி சென்றால்
அல்லியே யவிழ்த்துப் பார்க்கில் அமர்ந்திடும் வாத நாடி
ஒல்லியே யுதைத்துவாங்கி லொன்பது நாளிற் சாவே.

கடுகியே நனைத்துச் சீலை கையிலே பக்கஞ் சுற்றி
முடிகிடா மூன்றே முக்கால் நாழிகை சென்ற பின்பு
அடைவுற வவிழ்த்துப் பார்க்கி லட்டைபோல் நாடி வாங்கில்
முடுகிய சாவு சொன்னேம் மூன்றுநாட் பகலுந் தானே.

முந்தியே நனைத்துச் சீலை முன்மணிக் கடையிற் சுற்றி
உந்திய மூன்றே முக்கால் உள்ளது சென்ற போது
தந்திபோல் வாத நாடி தனித்தது சுழல வாங்கில்
செந்திரு வாளே சொன்னேஞ் சீக்கிர மன்று சாவே.

## வால்மீகர் நெய்ச்சீலை பரீட்சை

ஆடையை நனைத்துச் சுற்றி யணிக்கடை குறிப்பு நெய்யில்
ஊடுறச் சுற்றிப் பார்க்கில் உள்ளதோர் நன்மை தின்மை
தேடியா ராய்ந்து பார்த்துச் செகதலம் விளங்க நாளும்
நாடிவால் மீகர் சொன்னார் நானென்று மறிந்தி லேனே.

பணிபடு சீலை தன்னைப் பாங்குடன் நெய்யிற் றோய்த்து
மணிக்கடை சுற்றி வைத்து மற்றநா ழிகையே சென்றால்
துணிவுட னவிழ்த்துப் பார்க்கில் சுகமுடன் வாத நாடி
தணிப்புடன் சூடு கொண்டால் சாவில்லை பிழைப்பான் றானே.

நெய்யிலே சீலை தோய்த்து நின்மணிக் கடையிற் சுற்றி
கையிலே யிருக்கப் பார்த்து நாழிகை யொன்று சென்றால்
பையவே யவிழ்த்துப் பார்க்கப் பஞ்சுபோ லமர்ந்து நின்றால்
செய்வதோர் மருந்து செல்லும் சீக்கிரம் பிழைப்பான் றானே.

தோகையே நெய்யிற் சீலை தோய்த்துகை சுற்றி வைத்து
நாகமே யணிந்தார் காண நாழிகை யொன்று சென்றால்

ஆகவே யவிழ்த்துப் பார்க்கில் அன்னமாய் நடந்தால் நாடி
யோகவா னென்று சொல்லு வுறுதியாய்ப் பிழைப்பான் றானே.

சுருதியாய் நெய்யிற் சீலை தோய்த்துகை சுற்றி வைத்துக்
கருதுநா ழிகையே யொன்று கடந்தபின் னவிழ்த்துப் பார்க்கில்
பருதியே வாத நாடி பக்கமா யொதுங்கி வாங்கில்
உறுதியாய்க் குருதி சாய்க்கு முப்பதாம் நாளிற் சாவே.

## தன்வந்திரி உறுப்புப் பரீட்சை

உள்ளங்கால் முழங்கால் பள்ள முற்றதோர் மூக்கு தன்னை
துள்ளிய பிடரி தொண்டை சுற்றிய நெற்றி கண்ணும்
தெள்ளிய வுச்சி சூத்ரம் செப்புவாய் காது திரேக
முள்ளதோர் பேச்சுக்கூட வுண்மையா முறுப்பு சூத்திரம்.

இடதுள்ளங் காலே நீரா யிசைந்திடும் வலது காலிற்
சுடுவது நெருப்ப தானால் தோற்றிய குளிர்ச்சி தண்ணீர்
விடுவது போலக் கண்டால் மிகுபிணி தீராதென்றும்
படுவது திட்டம் சொன்னேம் பத்துநாள் சாவு தானே.

வலதுள்ளங் காலே சூடாய் மற்றொரு இடது காலில்
சலமது குளிர்ந்து நின்றால் தலையுச்சி வியர்வை கண்டால்
உலையிடுங் கனலைப் போல உடம்பெலாம் வெதுப்பு மாகில்
அலைதயில் மாதி னுளே யவர்பிழைத் திடுவர் தானே.

குளத்தினி லுறையும் நீர்போல் குளிர்ந்துச்சி வியர்வை தோன்றில்
தளர்ந்திடுங் கைகால் தொட்டுத் தடவிடில் விறைப்ப தானால்
இளைப்பொடு விக்கல் தோன்றும் எகமாய்க் குளிர்ந்து நிற்கு
மலைத்திடுங் கண்ணுஞ் சற்றே மருட்டிடிற் சாவு முண்டே.

நெத்தியுங் குளிர்ந்து கண்ணும் நீலம்போல் காணு மாகில்
சத்தியம் பிடரி தேய்க்கில் சலமெனக் குளிர்ந்து காணில்
பத்தியாய்க் கழுத்து சூழப் பனியது போலத் தோன்றில்
குத்திடுஞ் சிலேத்மம் நெஞ்சில் குறுகிடில் மரண மெண்ணே.

வெத்திசேர் புருவத்தோடே விரற்கொண்டு தடவச் சூடாய்
நெத்தியும் வெதும்ப வுச்சி நீரது குளிர்ந்து நிற்கில்
எத்திசை யறியச் சொன்னே மிடதுள்ளங் கையுஞ் சூடாய்ச்
சத்தியே யீச னுணை சாவில்லை பிழைப்பான் ருனே.

இருக்குமூக் கதனில் நீரா யிடதுள்ளங் காலே சூடாய்
பருமுன்னங் கையிற் பள்ளம் பணியாரம் போலத் தோன்றில்
கருவியைப் போலே தொண்டை கறகறத் தறுக்கு மாகி
லருமுனி யறியச் சொன்ன ரஞ்சாநாள் மரணந் தானே.

விரும்பிய வலதுள் ளங்கால் வெதும்பியே யிடது மூட்டும்
கரும்பது போலே சேர்ந்து கைக்கொண்டு தேய்க்கும்போது
இரும்பது போலே மூக்கு மிருபுறம் வெதும்பி நிற்கில்
அரும்புசேர் குழலி னுளே யவர்பிழைத் திருப்பர் தானே.

பாரெலா மறியச் சொன்னேம் பருத்தடி தொடையில் நீராய்ப்
பேருள்ளங் காலி ரண்டும் பெருத்துநீ ரெனவும் தோன்றிக்
காருள்ளஞ் செவிகள் ரெண்டும் கல்லுபோல் விரைந்து நின்ருல்
தாருரை யீச னுணை சாவுநா ளிரண்ட தாமே.

இவ்வாறு சோதனைகள் செய்து நோயின் பலத்தை அறிந்து அவிழ்தங்களைக் கொடுப்பதற்கு முன்னே ஒரு பரிசுத்தமான இடத்தில் உயர்ந்திருக்கும்படியான ஒரு பீடத்தின் பேரில் முப்பது இழை நூலிட்ட திரியை ஒரு அகண்டத்தில் போட்டு நெய்விட்டுக் கொளுத்தி எரிய விட்டு அவர்கள் குலதெய்வத்தைச் சிந்தித்து வால்மீகர் கூறிய தீபக்குறிச் சோதனையைப் பார்க்கக் கடவர். இந்தத் தீபக்குறி அதிஷ்டவசமாய் மனதிற்கு திருப்தி யுண்டாக்கில் ரோகிக்கும் ரோகியைச் சார்ந்த உறவின ருக்கும் பண்டிதருக்கும் நல்ல பெயரைக் கொடுக்கும். இன்றேல் தனது ஊழியத்தை அவர்பால் செலுத்துவது வீணுகும்.

அதன் விவரத்தைத் அடியிற் கண்ட செய்யுளால் அறிக.

## வால்மீகர் தீபக்குறிச் சோதனை

ஏற்றிய தீபந் தன்னை யேர்தியே முகத்திற் காணச்
சூத்திரந் தன்னைச் சொல்வோம் சோதிபி னியற்கை தன்னால்
சாற்றிலச யறுயுஞ் சாவும் நன்மையாய்ப் பிழைக்கு மாறும்
மாத்திர மின்ன தென்று வால்மீக ருரைத்த தாமே.

சாந்தியாந் தீபந் தன்னைக் கமலமா முகத்தி னேரே
ஏந்தியே பார்க்கும்போது இடந்தனிற் கொழுந்து சாய்ந்து
சோர்ந்திடும் புகையு மூற்றுச் சோதியு மாறு மாகில்
தேர்ந்துநா மறியச் சொன்னோம் சீக்கிர மன்று சாவே.

திண்ணமாய்த் தீபந் தன்னைத் தீர்க்கமாய் முகத்தி னேரே
நுண்மையா யேற்றுப் பார்க்க நுதவியே யிடத்திற் சாய
வெண்ணெய்போற் புகையுங் கப்பி வெடுவெடுப் போடு நிற்க
எண்ணமா யறிந்து கொள்ளு எட்டுநா ளதற்குள் சாவே.

செஞ்சுடர்த் தீபந் தன்னைச் செந்திரு முகத்தி னேரே
மிஞ்சிடா தமைந்து பார்க்கில் மின்னிய பொறியும் வீழ்ந்து
தஞ்சமாய் வலதுபக்கம் தழைத்தபொன் னிறம தானால்
அஞ்சுநா ளதற்குப் பின்னே யவர்பிழைத் திருப்பர் தாமே.

நண்ணிய தீபந் தன்னை நயம்பெறு முகத்தி னேரே
நிண்ணய மாக நோக்கில் நின்றது வலத்தே சாய்ந்து
புண்ணிய வசத்திற் கேற்பப் பொன்னிற மாகத் தோற்றில்
எண்ணமில் லாமற் பின்னே யிருப்பது திண்ணந் தானே.

விளங்கிய தீபந் தன்னை விம்பமாய் முகத்தில் நோக்கி
வளர்ந்தது பார்க்கும்போது வகையது சாயா நிற்கில்
களஞ்சியே மருந்து செல்லும் காசினி யறியச் சொன்னோ
மிளந்தையு முதியோர் தாமு மேற்றமாய்ப் பிழைப்பார் தாமே.

ஓங்கிய சுடரு தன்னை உற்றுநீ பார்க்கும்போது
தேங்கியே யடக்க மற்றுத் தெளிவுடன் கொழுந்து விட்டுத்
தூங்கியே யுயர்ந்து நிற்கில் துப்பமு மில்லை கண்டாய்
ஏங்கியே யசைந்து காணி விடா ரறுஞ் சொல்லும் நாளே.

பருதிய தீபந் தன்னைப் பங்கய முகத்தி னேரே
சுருதிகொண் டேந்திப் பார்க்கில் சுழன்றது புகையுங் கூடி
கருதிய நீல மானல் காசினி யறியச் சொன்னேம்
பிருதிவி யாசை போக்கும் பேசநா ளிருபா னென்றே.

எரிந்திடுந் தீபந் தன்னை இதமுறக் காணும் போது
சொரிந்திடுஞ் சுடரு தானும் சுறுக்கென நோக்கின் கீழே
சரிந்தது துவளு மாயின் சடுதியில் வாய்க்குஞ் சாவுத்
தெரிந்திடு மின்னல் தன்னைச் சிந்தையி லூன்றிப் பாரே.

மின்னிய தீபந் தன்னை விளங்கிய முகத்தி னேரே
உன்னியே பார்க்கும்போது ஊடுரு வுற்று நிற்கில்
பின்னையும் பகையு முண்டாம் பிழைத்திடா னறிந்து சொன்னேம்
வன்னிதோய் கரத்த ரானை மரணமு மைந்து நாளே.

---

# முப்பு இலம்பகம்

முப்பு என்பதின் பொருள் மூன்று உப்புகளின் சேர்க்கையைக் குறிப்பிடும். அது ஒன்றிலிருந்தே மூன்ருக வேறுபட்டு அவைகள் ஒன்றுபட்ட காலத்தில் முப்பு எனப் பேர் பெற்றது. இதனையே அகாரம் உகாரம் என்றும் அவ்விரண்டும் சம்பந்தப்பட்டபோது மகாரமென்ற பெயரை அடைந்ததெனச் சித்தர்கள் கூறியிருக்கின்றனர். அப்படி முடிவுபெற்ற முப்புவின் பயன் என்னவென்று ஆராயுமிடத்து,

மூப்பைக் கண்டார் மூப்பை யகன்றார்
மூப்பைக் கண்டார் மொய்வினை யற்றார்
மூப்பைக் கண்டார் மோதக மூற்றார்
மூப்பைக் கண்டார் மொழிபர னாமே.

என நந்தி ஞானத்தில் கூறப்பட்டுள்ளது. அதாவது, நரை திரை மூப்புப் பிணி முதலியவற்றை நீக்கிச் சுகானந்தத்தோடு நீடூழிகாலம் கடவுளுக்குச் சமத்துவமாக வாழ்வர் என்பதாம். இந்த முப்புவிற்கு ஆதாரம் என்னவென்று அறியக்கடவாய்.

## சமுத்திரம்

கடவுளால் உண்டாக்கப்பட்ட பஞ்சபூத சேர்க்கையால் தோற்றப்படும் இவ்வுலகத்தை நோக்குமிடத்து நிலபாகத்தைவிடச் சலபாகம் மூன்றுமடங்கு அதிகப்பட்டு இருப்பதென்பது யாவரும் அறிந்த உண்மை. சகல சீவ ராசிகட்கும் புல் பூடு செடி கொடி மரம் முதலியவற்றிற்கும் பயன்படுமாறு அக்கடல் சலமானது சூரிய வெப்பத்தால் ஆவி ரூபமாக எழுந்து மேகமெனும் பெயரைப் பெற்றுக் காலத்திற்கு ஏற்றவாறு மழையாகவும் பனியாகவும் பெய்து உதவுகின்றது. இன்னும் இக்கடல் சலமானது உயிருக்கு ஆதாரமாயுள்ள உப்பைப் போதிய அளவு அளிக்கின்றது. இதன் பெருமையே முப்புவிற்கு ஆதாரமென அறியக்கடவர்.

இக்கருத்தைக் கண்டன்றோ ஊர்வசி முப்புச் சூத்திரத்தில்,

ஆதியுப்பு விண்ணிலே யனாதியுப்பு வேலையில்
ஆழிநீரை உண்டுகர்ப்ப மாயிருந்த கொண்டலும்
சோதியுற்ற நாளில்மேனி சூலுறைந்து மாரியாய்த்
தூரும்வேளை தன்னில் மின்னல் மீறுமம் பரத்தனில்

மோதியக்கி னிக்கடாவி வீழுமங்கி யாகவே
மூலவிந்து பூமியூடு தானிறங்கு மேயுவர்
சாதியந்த லத்திலே சமாதி கொண்ட தையனே
சத்தியுள் ளடக்க மாகித் தானிருந்கு மீசனே.

எனக் கூறியிருக்கின்ருர். இதனுல் ஆதியுப்பு என்றும், அனுதியுப்பு என்றும், சமாதியுப்பு என்றும் மூன்றுள தென்று நன்கு விளங்கும்.

## இதுவுமன்றி

என்னவே வானத் திடியினி லொன்று
கன்னிய மான கடல் தனி லொன்று
பொன்னெனப் பூத்த பூமியி லொன்று
முன்னவர் சொன்ன முப்புவிம் மூன்றே.

இவற்றின் விபரத்தை அடியிற் காண்க.

அனுதியுப்பு என்பது கடவுள் சிருஷ்டியிலேயே ஒன்ருக ஏற்பட்டுள்ளது.

பச்சையென்ற உப்பதுவும் பார்த்தாலும் தூயவெள்ளை
உச்சிதமாய்க் கொண்டுறுதி உண்டதொரு உப்பதுகாண்
வைச்சபொரு ளாதியிலும் வாருதியி னுல்செனித்த
தற்சொருப மாய்விதிக்கும் சங்கையிலைக் காண்கிலரே.

அதாவது பச்சையென்று பரிபாஷையாகக் கூறப்பட்ட கடலுப்பானது பார்வைக்கு வெண்மை நிறம் பொருந்தியிருக்கும், இதனை உருசியின்பொருட்டு ஆவலோடு உண்டு வந்ததேயாகும். ஆதியில் சமுத்திரத்தினிடமாகச் சனித்துத் தற்சொருபமாக விளங்கும் இயற்கையைக் காணுவர் இல்லையாயினர் என்று திருவள்ளுவ நாயனுர் தமது ஞானவெட்டியில் கூறியிருக்கின்றனர். இக் கருத்தினைக்கொண்டே,

வீட்டுப்பைக் காணுது வீணர் பலபெயரால்
நாட்டிலதைக் கொண்டு நலமற்ருர்—பாட்டினிலே
சொன்ன பொருளெல்லாம் சோற்றுப்பே யல்லாது
இன்னீர்மை பூநீறுக் கேது.

வீட்டில் உபயோகப்படுத்தும் உப்பைத் தெரிந்து கொள்ளாமல் அறிவு கெட்டவர்கள் பல பெயரால் அழைக்கப்படாநின்ற உப்பைப் பலவிதமாக அபிப்பிராயப்பட்டுச் செய்து கெட்டுப்போனுர்கள். செய்யுளில் கூறப்பட்ட உப்புக்களெல்லாம் சோற்றுப்பே யன்றி இதன் குணம் பூநீறுக்கு ஏது? இல்லை யென வைராக்கிய விளக்கத்தில் கூறப்பட்டுள்ளது.

இன்னும் மகத்துவம் பொருந்திய திருவள்ளுவ நாயனுர் பஞ்சரத்தினம் 500-ல் கூறியபடி,

வீட்டினிலே நின்றிலகல் விட்டு வெளிமேவிக்
காட்டினிலே சுற்றியதால் காணும் பயன்யாது
நாட்டினிலே பாறையுப்பு நானிலத்தில் உண்டு
பூட்டகமு ணர்ந்து தினம் பொருளெடுப்பா ராண்டே.

வீட்டிலிருப்பதை விட்டு வெளியே சென்று காடுகளில் சுற்றிப் பார்ப்பதினுல் என்ன பயன். நம் நாட்டினிலேயே பாறையுப்பு அதிகமாக உண்டு. அதன் ரகசியம் அறிந்து பொருளை எடுப்பார்கள்.

குறிப்பு:—பாறை உப்பு என்ருல் சோற்றுப்பு. உப்பு பயிரிடுவதற்கு முன்னாளில் சமுத்திரக்கரையுள்ள நாடுகளில் ஆங்காங்கு சமுத்திர அலை மோதி மோதிச் சலம் சுண்டி நாளுக்குநாள் பாறை பாறையாக உப்பு உறைந்திருக்கும். இக் கருத்தைக் கொண்டே பாறையுப்பு என்று கூறுவாராயினர்.

கண்டதோ ருப்பைவிட்டால் கட்டில்லை வாதமில்லை
கண்டதோ ருப்பைவிட்டால் கவளமும் சித்தியில்லை
கண்டதோ ருப்பைவிட்டால் கடுக்கார சத்துமில்லை
கண்டதோ ருப்பையீசன் கயற்கண்ணிக் கருளினனே.

உப்பை விட்டுவிட்டால் எந்தச் சரக்கையும் கட்ட முடியாது, வாதத்தொழிலை நடத்தவும் முடியாது, ஒரு வாயளவு அன்னமும் கொள்ள முடியாது, எந்தச் சரக்கையும் காரத்தோடு நீற்றவும் முடியாது என்று சிவபெருமான் பார்வதி தேவிக்கு உபதேசித்தார் என்று கொங்கணவர் வாத காவியம் இரண்டாவது காண்டத்தில் கூறியிருக்கின்றனர்.

உப்பென்றால் வாய்க்கெளிதோ மக்காள் மக்காள்
உருப்படவே கட்டறிந்து கட்டினாலும்
கப்பென்ற காரமதி லேற்றமாட்டார்
கைமுறையாய் ஏற்றுதற்குக் கருகண்டாலும்
செப்பென்ற குகையறிந்து ஊதமாட்டார்
செய்தந்த குகையறிந்து ஊதினாலும்
கொப்பென்ற வுப்பினுட மர்மங் காணார்
கோடான கோடியென்றால் கூசும் நாவே.

மக்களே! உப்பு என்று சொல்லுவது வாய்க்கு எளிது அல்ல. இதை முதலில் நெருப்புக்கு அசையாமல் கட்ட வேண்டும். அப்படிக் கட்டினாலும் அதற்குக் காரம் ஏற்ற வேண்டும். இப்படிக் காரமேற்றும் வகை தெரிந்தாலும் எவ்விதமான குகையில் வைத்து ஊதி நீற்ற வேண்டும் என்றறிதல் வேண்டும். ஒரு சமயம் எல்லாம் தெரிந்து இருந்தாலும் அதனுடைய மேல்போக்கை அறிந்து கொள்ள வேண்டும்.

இதற்காக மார்க்கங்கள் ஆயிரக் கணக்காக உண்டு. சொல்வதற்கும் நாவு கூசும் என்று கொங்கணவர் கூறியிருக்கின்றனர்.

## சமுத்திர உப்பு தீக்ஷை

சாதாரணமாக நவீன சாஸ்திர ஆராய்ச்சிப்படி சர்க்கார் பயிரிட்டு வழங்கும் சோற்றுப்பை முப்பு மார்க்கங்களில் கூட்டக் கூடாது. இதனைப் பயிரிடும்போது சலத்திலுள்ள உப்பானது பூமியினுடைய சத்தைக் கவர்ந்து கொள்ளும். ஆகவே தேவையான சமுத்திர சலத்தைக் கொண்டுவந்து அரை பாகத்தில் அடங்கக் கூடிய மட்கடத்தில் விட்டு அடுப்பில் வைத்து எரித்துச் சுண்டிக் குழம்பு பதமாக வரும்போது பீங்கான் தட்டு களில் விட்டு ரவிமுகத்தில் வைக்க உறைந்து உப்பாகும். இப்படித் தேவையான உப்பைச் சேகரம் செய்து வைத்துக்கொண்டு உப்பின் எடைக்கு நான்கெடை சுண்ணும்பு சலம் விட்டுக் கரைத்து ஏழு மடிப்புள்ள சீலையிலாவது அல்லது ஒரு பெரிய புட்டியில் எனுமல்ட் அல்லது தகரட் புனலைச் செருகி அதனுள் மையொட்டுங் கடுதாசியைக் குவியும்படி மடித்து வைத்தாவது சிறுகச் சிறுக விட்டுக் கொண்டுவர மாசகன்று சுத்த சலமாக வடியும். இதை ஒரு எனுமல்ட் பேசினில் விட்டு அடுப்பில் வைத்துச் சிறுக எரித்துத் தயிர்போல் சுண்டிவரும் பதத்தில் ரவிமுகத்தில் வைக்க உறைந்து உப்பாகும். இப்படியே பத்துமுறை சுண்ணும்பு நீர் விட்டுக் கரைத்து முன்போல் வடிகட்டி எரித்துக் குழம்பு பதத்தில் பீங்கான் தட்டுகளில் விட்டு உலர்த்தி வர உப்பானது பளிங்கு வண்ணம் இருக்கும். இதனையே தொழில்முறைக்குக் கூட்டுவது பண்டிதர்களின் கடமையாகும்.

## உப்புக்கட்டு

முன் சித்தப்படுத்திய கால்படி உப்பில் அரைபாகம் ஒரு எனுமல்ட் பேசினில் போட்டு ½ - படி பனிசலத்தை விட்டு நன்கு கரைத்து வைத்துக் கொள்ளவும். அப்பால்

ஒரு தாம்பிரக் கடாயைச் சுத்தமாக அலம்பி அடுப்பில்
வைத்து முன் நிறுத்தி வைத்துள்ள அரைக்கால்படி
உப்பை விட்டுச் சூடேறும் சமயம் முன் கரைத்து வைத்
துள்ள உப்பு சலத்தைக்கொண்டு சுறுக்குக் கொடுத்துச்
சிறிது ஈரம் இருக்கும்போது வழித்து ரவியில் உலர்த்
தவும், மீண்டும் அந்த உப்பை இருபாகமாகப் பங்கிட்டு
ஒன்றைக் கடாயில் போட்டு மற்றொன்றைக் கரைத்
துச் சுறுக்கிடவும். இப்படிப் பத்துமுறை செய்ய
உப்பு கசிவும் கைப்பும் மாறிக்கட்டும். இதற்கு கார
மேற்றுவதற்கு மார்க்கம் கேட்பாயாக.

## பஞ்ச சுண்ணக்குகை

திரமாக அஞ்சுண்ணக் குகையைக் கேளு
தீர்க்கமுள்ள கடல்நுரைதான் பலமே வாங்கி
உரமான கருவாலே அரைத்து ஊது
உத்தமனே மாண்டபின் கல்லுப்புக் கூட்டி
மறவாமற் கருவாலே யரைத்து ஊது
மார்க்கமுள்ள வெடியுப்புக் கூடச்சேர்த்து
நினைவாகக் கருவாலே யரைத்து ஊது
நிச்சயமாய்த் தானெடுத்துச் சொல்லக் கேளே.

கேளப்பா சீனமுடன் சூடன் கூட்டி
கெணிதமுள்ள கருவாலே யரைத்துக் கொண்டு
மாளப்பா மிகவரைத்து வட்டுப் பண்ணி
மார்க்கமுடன் காயவைத் தோடு மூடி
தாளப்பா மண்சீலை வலுவாய்ச் செய்து
தன்மையுடன் புடம்போடச் சுண்ண மாகும்
ஆளப்பா அஞ்சினமும் ஒன்றாய்க் கூட்டி
அரகரா சுண்ணமதாய் நீறிப் போச்சே.

போச்சப்பா நீறின்சுண் ணும்பை மைந்தா
புகழாகக் கருவாலே குகைதான் பண்ணு
நீச்சப்பா விக்குகைதான் பஞ்ச பூதம்
நிறையான அஞ்சுசுண்ணக் குகையு மாச்சு
வாச்சப்பா விரதமஞ்சுங் குகையைக் கண்டால்
மகத்தான சரக்கெல்லாம் நடுங்கிச் சாகும்
காச்சப்பா சரக்கிட்டுக் குகையை மைந்தா
கடுங்காரச் சுண்ணும்பாய் நீறிப் போச்சே.

நீறிப்போ மிதைவிட்டால் சுண்ணப் போக்கு
நிலையாது அஞ்சுண்ணக் குகையை விட்டால்
தேறிப்போ சூதமது திறமாய் நீறும்
திறமான பொன்னீறும் வெள்ளி நீறும்
கூறப்போ முபரசங்க ளெல்லாம் நீறும்
குணமான நாதவிந்து குறியாய் நீறும்
ஆறிப்போம் சாரமுதற் றுருசு நீறும்
அப்பனே யுப்போடு மெல்லாம் நீற்றே.

நீறுவகைக் கிதுவிட்டால் சுண்ணும் பில்லை
நிறையாக இந்தமுறைப் படியே பண்ணு
மாற்றுவகைக் கிதுவிட்டால் சுண்ண மாகா
மக்களா கரிசுட்டு மாள வேண்டாம்
தேற்றியே மனதடங்கி அறிவில் நின்று
திறமாகப் பதறுமல் வாதம் பார்த்தால்
நேத்தியுள்ள பூரணமாய்க் காண லாகும்
நிறையாக வகைவிபரம் நீதான் கேளே.

அகஸ்தியர் அமுதக் கலைக்ஞானம் - 1200.

இவ்வாறு முடித்துக் கொள்வாயாக.

## வேறு அனுபவ முறை

(1) வாழைக்கட்டைச் சாற்றில் தேவையான அளவு வெடியுப்பை யிட்டுக் கரைத்து வடிகட்டித் தாம்பிரப்

பாத்திரத்தில் விட்டுக் காய்ச்சி உறையும் பதத்தில் பீங்
கான் தட்டுகளில் விட்டு ரவியில் வைக்கவும். இது நன்
றாய் உப்பான சமயம் மீண்டும் முன்போல் வாழைக்
கட்டைச்சாறு விட்டுக் கரைத்துக் காய்ச்சவும். இப்படி தச
தீட்சை செய்து வைத்துக் கொள்ளவும்.

(2) கடல் நுரையைத் துண்டு துண்டாக நறுக்கிச்
சுண்ணாம்பு அப்பளாக்காரம் கரைத்து வடிகட்டிய சலத்
தில் போட்டு எரித்துச் சலம்விட் டலம்பி சுத்திசெய்து
எடுத்த கடல் நுரையைக் கல்வத்திலிட்டு வெண்கரு
எருக்கம்பால் சம்பந்தப்பட்ட ஜெயநீரிலாவது சுண்ணாம்
புக் காடியிலாவது இரண்டு மூன்று தடவை அரைத்து
ஊதிக் காரமேற்றிக் கொள்ளவும்.

(3) தேவையான அளவு சீனத்தைப் பொரித்து
வெண்கரு எருக்கம்பால் சம்பந்தப்பட்ட ஜெயநீரிலாவது
அல்லது சுண்ணாம்புக் காடியிலாவது இரண்டு மூன்று
தடவை அரைத்து ஊதிக் காரமேற்றிக்கொள்ளவும்.

(4) வேண்டுமான அளவு அண்டக் கல்லைக் கொண்டு
வந்து துண்டு துண்டாக உடைத்துக் கடல் நுரையைச்
சுத்தி செய்து சுண்ணம் செய்தவிதமாக இதனையும்
அரைத்து ஊதிச் சுண்ணம்செய்து வைத்துக்கொள்ளவும்.

(5) வேண்டுமான அளவு பூநீறு கொண்டுவந்து சுண்
ணாம்பு நீர் விட்டுக் கரைத்துக் கரைத்து தசதீட்சை
செய்து வைத்துக்கொள்ளவும்.

இப்படி முடிவு பெற்றவைகளில் கடல்நுரைச் சுண்
ணம் பலம் - 6, சீனச் சுண்ணம் பலம் - 3, தீட்சைசெய்த
வெடியுப்பு பலம் - 4, இவற்றைக் கல்வத்தில்போட்டு
அண்ட வெண்கரு ஜெயநீரால் நன்கு அரைத்து வில்லைகள்
செய்து ரவியில் உலர்த்தி ஒரு குடுவையில் போட்டு வாய்
மூடிச் சீலைசெய்து சிறுபுடமிட்டு எடுக்கவும் வெடியுப்பின்

எடை சிறிதுகுறையும்; இந்த எடைக்கு மறுபடியும் வெடி
யுப்பைக் கூட்டி அண்ட வெண்கரு ஜெயநீரால் அரைத்து
வில்லைகள் செய்து உலர்த்தி முன்போல் புடமிடவும். இவ்
வாறு வெடியுப்பின் எடை நிலைத்தபொழுது அதனுடன்
அண்டக்கல் சுண்ணம் பலம்-5, தீட்சைசெய்த பூநீறு
பலம்-2 கூட்டி அண்ட வெண்கரு ஜெயநீரால் அரைத்து
வில்லைசெய்து அகலில் அடக்கி மேல் அகல் மூடிச் சீலை
செய்து இலகு புடமிடக் கடுங்காரச் சுண்ணமாகும். இந்த
சுண்ணத்தில் சாரம்கூட்டி அரைத்து பனியில் வைக்க
ஜெயநீர் ஆகும். இதனுடன் வீரம் கற்பூரம் வகைக்குப்
பலம்-½, பொடித்துக் கூட்டி வைத்துக்கொள்ளவும். இத
னைக் கடுங்கார ஜெயநீர் என்று கூறுவர். அல்லது முன்
முடித்த சுண்ணத்தை ஆறுமாதத்திற்கு மேற்பட்ட அன்
னக்காடியில் போட்டு குழம்புபதமாகக் கரைத்து மூன்று
பங்காக்கி ஏழு சீலைசெய்த கறுப்பு சீசாவில் விட்டு வாலுகா
யந்திரத்தில் வைத்து துவாரமிட்டதும் உட்குவிந்தது
மான சீசாவை மேல்செருகி பாகப்படி மேலே ஈரச் சீலை
யைச்சுற்றி வாயை அடைத்து எரித்துத் திராவகம் வாங்
கவும். இந்தத் திராவகத்தை முன் கரைத்து வைத்துள்ள
மற்றோர் பங்கிலிட்டு முன்போல் திராவகம் வாங்கவும்.
இப்படி மூன்றுமுறை மடக்கி எடுத்த திராவகம் அதிக
காரமுடையதாக இருக்கும். இதனைக் கடுங்காரத் திரா
வகம் என்றும் கூறுவர்.

இதற்குமேல் கடல்நுரை, பூநீறு, சீனம், வெடியுப்பு,
அண்டக்கல் ஆக வைந்தினையும் சமனெடையாகக் கல்
வத்தில் போட்டு முன்னிறக்கி வைத்துள்ள கடுங்கார
திராவகத்தையாவது அல்லது கற்பூரம் வீரம்கூட்டி
வைத்துக்கொள்ளும்படியாகக் கூறியுள்ளக் கடுங்கார
ஜெயநீரையாவது விட்டு 2-சாமம் அரைத்து வில்லை
செய்து உலர்த்தி அகலிலிட்டு மேல் அகல்மூடிச் சீலை
செய்து சிறு புடமிட்டு எடுக்கச் சுண்ணமாகும். அல்லது

தனித்தனிச் சரக்குகளைக் கல்வத்திலிட்டு திராவகத்திலா
வது ஜெயநீரிலாவது அரைத்து வில்லைதட்டி அகலிலடக்கி
சீலைசெய்து புடமிட்டுச் சுண்ணமாக்கிச் சமனெடையாகக்
கூட்டிக் கொள்ளவும். இவ்வாறு முடிவுபெற்ற சுண்
ணத்தைத் திராவகமாவது ஜெயநீராவது விட்டு அரைத்து
மெழுகுபதத்தில் மூசையும் மேல்மூடியும் செய்து நிழலில்
வெடிக்காமல் உலர்த்தி வைத்துக்கொள்ளப் பஞ்சசுண்
ணக் குகையாகும். இந்தக் குகையில் இயற்கைக்குக்
குறைந்த காரமுடைய சரக்குகளை இட்டு மண்சீலைசெய்து
பழுக்க ஊதி எடுத்து ஆறவிட்டுப் பார்க்கக் காரமிகுந்
திருக்கும். இந்த மூசையை வேண்டும்போது புதியதாகச்
செய்துகொள்ள வேண்டும். நாட்சென்றதாக இருப்பின்
காரம் கெடும்.

## ஆதியுப்பு

*சோதிமிகு மின்னற்றன் சூட்சும விந்ததனை*
*மேதினியிற் றூன்பாய்ச்ச மெல்லியளே—காதலித்தே*
*சூல்கொண்ட பான்மையிதைச் சொல்வார்க ளண்டமென*
*மேல்கொண்ட வுப்பிதுவா மெச்சு.*

சித்திரை வைகாசி மாதங்களிலுண்டான கடும் வெயி
லினால் கடலின் சலமானது ஆவிரூபமாக மேலெழுந்து
சென்று மேகமெனப் பெயர்பெற்று, காற்றினியக்கத்தால்
ஓடும்போது ஒன்றோடொன்று மோத அதிலிருந்து ஓர்
விதமான மின்சார சக்தி பூமியில் விழும். அது மலைகளில்
விழும்போது நவரத்னங்களாகவும், கடலில் விழுந்த
போது முத்துகளாகவும், வனங்களில் விழுந்தபோது இந்
திரகோபமாகவும் தோன்றியதுபோலவே, களர்நிலத்தில்
விழுந்த மின்சாரமானது அண்டக்கல்லிற்குப் பீஜ
மாயிற்று. இதைத்தான் வழலைச் சூத்திரத்தில், பின்வரு
மாறு கூறப்பட்டுள்ளது.

பேசுவார் பூநீரே சாரம் சாரம்
பிலமான பீஜனுப்போ காரம் காரம்
கூசாமல் இரண்டிற்கும் நிலமே தெய்வம்
குடியிருப்பு ஓரிடத்தில் குறித்துப் பார்க்கத்
தேசமெல்லாம் போனாலும் தெரியா தப்பா
சிவயோக வாழ்க்கை வந்தால் சித்தியாகும்
வீசுவார் குறிப்பறிந்தோ மென்று சொல்லி
மிலேச்சர்களே பாராதே குருவைத் தேடே.

சாரம் என்பது பூநீறு, காரம் என்பது அண்டக்கல். இரண்டிற்கும் இருப்பிடம் பூமி எனக் கூறியிருக்கின்றனர். இப்படிக் கர்ப்பந் தரித்த எட்டாவது மாதமாகிய மார்கழியில் பௌர்ணமிக்குப்பின் பள்ளந்தோண்டி அடியில் சோதித்து எடுப்பதுண்டு.

புதிய கர்ப்பமாகிய இக்கற்கள் உருண்டை வடிவத்தில் சிறிது நிகளமாகவும் பளுவாகவும் வெண்மையாகவும் பளிங்கு நிறத்தை யொத்ததாகவும் இருக்கும். இவைகளே சிறந்த கற்களாகும். சாதாரணமாகத் தட்டையாகவும் ஒழுங்கீனமாகவும் துவாரங்கள் விழுந்ததாகவும் இலேசாகவும் உள்ள கற்கள் முதிர்ந்த பருவத்தை அடைந்துள்ள தாகையால் பெரிதும் பயன்படாது என்று அறிக. இத்தகைய கற்களைச் சேகரிப்பது கஷ்டசாத்தியமென்றுணரின் சில பிரதேசங்களில் பூமியின் அடிப்பாகத்திலும் மலையடியோரங்களிலும் வெண்மை நிறமும் நீரோட்டமுமுள்ள பளிங்கு கற்கள் வெட்டி எடுப்பதுண்டு; இதனை ஒருவாறு பயன்படுத்திக் கொள்ளலாம்.

## அண்டக்கல் சுண்ணம்

ஆண்டிரண்டில் அந்திசந்தி தீட்சை செய்த
அப்பனே மீந்ததோர் கார மெல்லாம்
மூண்டதொரு சமாதிதனில் அடக்கம் செய்த
முக்கியமாய் மேருவே அண்ட மாச்சு

பூண்டதொரு முப்பதுவய தண்ட மெடுத்து
போக்குரைப்பேன் பூதலத்தி லண்டச் சுண்ணம்
நீண்டதொரு வேதாந்த முடிவில் சொன்ன
* நாதத்தில் மதிசேர்த்துக் கரைத்தி டாயே.

—அகஸ்தியர் அந்தரங்க தீட்சை

அந்தி சந்தி என்று சொல்லும்படியான இரு காலங்களிலும் சமுத்திர சலத்தைத் திட்சை செய்யும் பொருட்டு சூரியவெப்பம் மிகுந்து ஆவிரூபமாகக் கொள்ளப்பெற்று மேகமெனும் பெயரைப் பூண்டு அவைகளின் இடிமுழக்கத்தின் பயனாக உண்டான மின்னலினின்று காரமென்று பாய்ந்த மின்சார விந்தானது களர்நிலத்தில் சமாதியாகி அண்டமாயிற்று. இது முப்பது வருடத்திய அனுபவக் களர்நிலத்தினின்றே சேகரிக்கவேண்டும். பின்னர் நாதத்தின் எடைக்கு நான்கிலோர் பாகம் மதிகூட்டிக் கரைத்துக் கொள்வாயாக.

கரைத்துமே சட்டியிலே விட்டு மைந்தா
கருணையுடன் மேல்மூடிச் சீலை செய்து
திறமுடனே மூன்றுநாள் வைத்து வைக்கத்
தீர்க்கமுடன் நாலாம்நாள் தெளிந்த நீரை
அறைகிறேன் குப்பிதனி லடைத்துக் கொள்ளு
அப்பனே முன்சொன்ன அண்டம் வாங்கி
முறையாக அயச்காம்பால் மாவா யாக்கி
முற்றுமே வடித்தபின்பு சொல்லக் கேளு.

முன் கரைத்து வைத்துள்ளதை ஓர் சட்டியில் விட்டு மேல் சட்டி மூடிச் சீலைசெய்து மூன்றுநாள் அசையாமல் வைத்துவிடுக. நான்காவதுநாள் சீலையை மெதுவாக நீக்கி இரண்டு மூன்று மணிநேரம் அசையாமல் வைத்துத் தெளிந்துள்ள நீரை வடித்துச் சீசாவில் அடைத்து வாய்க்

* சுண்ணம்பு - பூநீறு.



குச் சடை கார்க்குகொண்டு அடைத்து வைத்துக்கொள்க. பிறகு முன் கூறப்பட்ட அண்டத்தை இரும்பு உரலிலிட்டுக் கடப்பாறைகொண்டு நன்கு இடித்து மாவாக்கிச் சீலையில் அரித்து வைத்துக்கொள்க. இதற்குமேல் நான் சொல்வதைக் கேட்பாயாக.

சொல்லக்கேன் வடித்தவண்ட சூரணத்தைச்
சுகம்பெறவே சீலையிலே கிழியாய்க்கட்டி
வெல்லக்கே ளொருபடியா * மமுர்தந் தானும்
விருப்பமுடன் பாண்டத்தில் விட்டு மைந்தா
செல்லும்வகைக் கிழியதனை யதிலே பாய்ச்சு
சீலமுடன் மேல்மூடிச் சலந்தான் சுண்டச்
சொல்லுகிறேன் எரித்தானப் பின்தா னெடுத்துத்
துரிதமுடன் கல்வத்தில் போட்டி டாயே.

முன் சீலையில் அரித்து வைத்துள்ள அண்டக்கல் மாவைச் சுமார் ¼-படி அளவிற்குச் சீலையில் தளர்ச்சியாக முடிச்சுகட்டி ஒரு சட்டியில் போட்டு 1-படி அமுர்தநீரை விட்டு மேல் சட்டி மூடிச் சீலசெய்து அடுப்பிலேற்றி எரித்து நீர் சுண்டின பதத்தில் சீலையை நீக்கி முடிச்சு கட்டியுள்ள அண்டக் கல்மாவைக் கல்வத்தில் போடுவாயாக.

போட்டப்பின் குப்பிதனி லடைத்து வைத்த
புகழான * பழம்புளிநீர் விட்டுத் தானும்
ஆட்டிடுவா யிருசாமம் வற்ற வற்ற
அப்பனே நீர்வார்த்து அரைத்துத் தானும்
நாட்டமுடன் மெழுகுபத மாகும் போது
நலமுடனே வழித்ததனை வில்லை தட்டி
வாட்டிடுவாய் கதிர்முகத்தில் காய்ந்த தானால்
சொல்லுகிறேன் ஓட்டிலிட்டு ஓடுமூடே.

---

* நாதமும் மதியும் கூடியநீர்.

கல்வத்திலிட்ட மருந்தைப் பழம்புளிநீர் என்று கூறும்படியான சீசாவில் அடைத்து வைத்துள்ள நீரைக் கொஞ்சங் கொஞ்சமாக விட்டு இரண்டு சாமத்திற்குக் குறையாமல் அரைத்து மெழுதுபதத்தில் சிறு வில்லைக ளாகத் தட்டி இரவியில் உலர்த்தி மண்ஞேட்டில் வைத்து மேல் ஓடு கொண்டு மூடிவிடுவாயாக.

மூடியே சீலைமண் ணேழுஞ் செய்து
　　முழப்புடத்தில் போட்டிடுவாய் முக்கிய மாக
சூடதற்கு ஆறினபின் எடுத்துப் பாரு
　　அண்டமென்ற சுண்ணத்தின் தெளிவு தானும்
கோடிமதிக் கொக்குமப்பா புலத்தியா கேள்
　　குறிப்புடனே யிதையல்லோ சித்த ரெல்லாம்
பாடினுர் நூல்களிலே அனந்த மார்க்கம்
　　பாரப்பா மறைத்ததெல்லாம் இதுதான் பாரே.

முன் மூடிவைத்துள்ள மண்ஞேட்டின் பொருத்த வாய்க்கு மண்சீலை ஏழு செய்து உலர்த்தித் தரையில் குழித்தோண்டி சுமார் முழப்புடத்திற்கு எருவு அடுக்கி இடையில் மண்சீலை செய்து வைத்துள்ள மண்ஞேட்டை வைத்துத் தீயிடவும். ஆறினபின் சீலையை நீக்கிப்பார்க்க அண்டச் சுண்ணமானது கோடிச்சந்திர பிரகாசமாய்த் தோற்றும். ஓ புலத்தியனே! இந்தச் செய்முறை மார்க்கத் தைத்தான் சித்தர்கள் எல்லாம் பலவிதமாக மறைத்து அளவற்ற நூல்களாகப் பாடி வைத்திருக்கின்றனர்.

## கல்லுப்பின் விபரம்

பருதிமதி வாழ்க்கையிஞ லான உப்பு
　　பாருலகில் மக்கட்குத் தெரியா தப்பா
கருதிசிவ யோகத்தில் நின்ற பேர்க்குக்
　　காசினியி லிந்நூல்தான் கிட்டும் கிட்டும்

---

* நாதமுடன் மதிகூட்டிய நீர்.

உறுதியுடன் இனிமுப்பு முடித்தல் சொல்வேன்
உத்தமனே மூன்றூண்டுங் கடந்த பின்பு
அருந்தவத்தால் வந்ததொரு மதிநா லுக்கு
அப்பனே யொன்றுதான் சாரஞ் சேரே.

சூரிய சந்திர வாழ்க்கையினுல் உதித்த உப்பு உலகத்தில் மக்கட்குத் தெரியாது சிவயோகிகட்கே இந்நூல் மார்க்கம் கைகூடும். இனி முப்பு முடிக்கும் மார்க்கத்தைச் சொல்வேன். சந்திரனுடைய திருநடனத்தாலும் அருந்தவத்தாலும் மூன்ருண்டு, அதாவது மூன்று இடம் என்று சொல்லப்பட்ட சமுத்திரம் ஆகாயம் பூமி இவற்றைக் கடந்து கைவசமாகக் கிடைக்கப்பெற்ற மதி நீர் நான்கு எடைக்குச் சாரம் ஒன்று கூட்டுவாயாக.

குறிப்பு:—இங்குக் கரைத்த நீர் உறைந்துவிடும்; திகைக்க வேண்டாம். நல்ல பனியில் வைக்க மூன்று நாளில் நீராகும். பனி குறைவாக இருந்தால் பின்னும் சில தினம் செல்லும் என்பதைக் கவனத்தில் வைக்கவும்.

சேர்த்துமே கரைத்துமே நாள்தான் மூன்று
தெளிவிருந்து பாய்ச்சதி லண்டச் சுண்ணம்
பார்த்துமே காய்ச்சியப்பா கொஞ்சம் நாழி
பகருகின்றேன் பீங்கானில் வழித்து வைத்து
சேர்த்தியா யொருவாரம் ரவியில் வைத்தால்
நீராமற் காயுமடா காயக் காயப்
பார்த்துமே கத்திகொண்டு கீறி விட்டால்
பகருகின்றேன் மண்டலத்தில் பூத்துக் காயும்.

முன்பு கூட்டிக் கரைத்து வைத்துள்ளதை மூன்று நாள் அசையாமல் வைத்து பிறகு தெளிந்த நீரை வடித்து ஒரு கோப்பையில் விட்டு அந்த எடைக்கு நான்கிலொரு எடை முன் முடித்த அண்டச்சுண்ணம் போட்டுக் கலக்கி சிறிது காய்ச்சி ரவியில் ஏழுநாள் வைக்க மேலே உப்பு உறைந்து ஆடைகட்டும். இதைக் கத்தி கொண்டு

துண்டு துண்டாகும் பொருட்டுக் கீறிவிட உப்பு கீழே இறங்கிவரும்; மீண்டும் ரவியில் வைக்க உப்பு கட்டும். இதையும் முன்போல் கீறிவிட உப்பு கீழ் இறங்கும். இப்படியே சலம் எல்லாம் உப்பாகிற வரை ரவியில் வைத்து வருக.

காய்ந்துமே முப்பாச்சி இதற்குத் தானும்
கனிவுடனே பேரதனைச் சொல்லக்கேளு
ஆய்ந்துமே அட்டுப்பு என்று தானும்
அப்பனே ஒட்டுப்பு என்று தானும்
கூர்ந்துபார் கம்பியுப்பு என்று தானும்
கூறுகின்றேன் பாறையுப்பு என்று தானும்
சேர்ந்துமே சித்தர்கள் கூடித் தானும்
சிறப்பாக நாமங்கள் வைத்திட்டாரே.

இது காய்ந்த அளவில் முப்பு என்று கூறுவர். இதற்குத் தான் சித்தர்கள் எல்லாம் ஒன்று கூடி அட்டுப்பு, ஒட்டுப்பு, கம்பியுப்பு, பாறையுப்பு எனப் பல பெயர்களைச் சூட்டினர்.

வைத்தவுப்பு சந்திரனி னொளிக்கு மேலாம்
வழுத்துகின்றேன் ஆதியந்த உப்ப தற்குப்
பத்தியுடன் சமன்வீரங் கூட்டித் தானும்
பார்மகிழ் அமுர்தத்தா லரைத்துத் தானும்
புத்தியுடன் வில்லைதட்டிக் காய வைத்துப்
புகழாக அகலிவிட்டு மூடித் தானும்
சித்திபெற்ற சீலைமண் செய்து லர்த்திச்
செப்புகின்றேன் புடம்போடச் சுண்ண மாகும்.

இந்த உப்பானது சந்திரனுடைய பிரகாசத்திற்கு மேற்பட்டதாகும். இந்த உப்புடன் சமன்வீரங் கூட்டி அமுர்த நீரால் அரைத்து மெழுகு பதத்தில் வில்லை தட்டிக் காயவைத்து ஓட்டிலடக்கிச் சீலைசெய்து காடைப் புட

மிடச் சுண்ணமாகும். இந்தச் சுண்ணம் முப்புக்குச் சமத் துவமானது. இதைக் கொண்டு அறிவாளிகள் பல தொழில் முறைகளை நடத்துவர் என்பது திண்ணம்.

## சமாதியுப்பு

பூநீ ருவதும் பூதலந் தன்னிலும்
 வானிலும் மாசி பங்குனி மூன்றினில்
காணி ரோகதிர் சந்திரன் விந்தினுல்
 சோனை பாய்ந்து சுகாதீத நீறதாம்
பாணி யோடிப் பருதி முகம்படத்
 தானினி வெண்மை தாரணி தன்னிலும்
கோனினிப் பூமி நாத மெழும்பிடும்
 வேனினி விந்து நாதமீதாண் டையே.

திருவள்ளுவர் - 1500

பூநீரானது இவ்வுலகத்தில் தை, மாசி, பங்குனி ஆகிய இம் மூன்று மாதங்களில் சூரிய சந்திர வாழ்க்கையின் உதவியால் களர்நிலத்தில் உற்பத்தியாகியது. எங்ஙன மெனில் மேற்கூறப்பட்ட பனிக்காலத்தில் பூரண சந்திர னுடைய கிரணமானது களர்நிலத்தில் திருநடன மிட சமாதியிலுள்ள உப்பானது கசிவுற்றுக் கொப்பளித்து மேலெழும்பும். இதுவே நாதநீர் எனப்படும். இது சூரிய னுடைய கிரணத்தால் உறைந்து வெண்மை நிறமான உப்பாகும். இதனையே பூநீறு என்றும் சமாதி உப்பு என்றும் கூறுவர்.

இந்தப் பூநீறு நிலத்தின் சாரத்திற்கு ஏற்றவாறு ஒன்றுக்கொன்று காரத்தில் பேதப்படும். தற்காலத்தில் திருவாரூர், திருநாமநெல்லூர், கின்னனூர், நெய்வெண் ணெய், காளாஸ்திரி, மணப்பாறை, தென்காசி, முகையூர் அன்னபுத்தூர், மகுடஞ்சாவடி, முதளை, சம்பை, திருவரங் கம், கல்கத்தா முதலிய இடங்களில் கிடைக்கக் கூடிய

பூநீருனது விசேஷ குணத்தை யுடையதென அனுபவத்தில் கண்டிருக்கின்றனர். மைசூர், நீலகிரி முதலிய குளிர்ந்த நாடுகளில் நிலமானது வறட்சி கொள்ளாம லிருக்கும் காரணத்தை முன்னிட்டு சித்திரை மாதத்திலும் பூநீறு எடுப்பதுண்டு.

## பூநீறு தீட்சை

பாரென்ன உவருப்பைக் கொண்டு வந்து
பரிவாகச் சுத்தசலர் தன்னி விட்டுச்
சீருடனே கலக்கியே தெளிய வைத்து
தெளிவாகக் காய்ச்சிநன்ருய் வற்றி னக்கால்
நீரிலே மறுபடியும் விட்டுக் கிண்டி
நிலையாகத் தெளியவைத்து இறுத்துக் கொண்டு
வாருடன் காய்ச்சியே வற்ற வைத்து
வாகாக விப்படியே காய்க்சு காய்ச்சே.

குறிப்பு:—பூநீற்றை எடுக்கும்போது சத்தியும் சிவனும் உள்ளடக்கமாக இருத்தல் வேண்டும். இன்றேல் பயன்படாது. பூநீற்றைக் கொண்டுவந்து சுத்தசலம் என்று சொல்லப்பட்ட சுண்ணை நீரை நான்கு மடங்கு விட்டுக் கலக்கித் தெளிய வைத்து வடித்துக் கொள்க. பிறகு நின்று இருக்கும் உப்பில் மறுபடியும் சுண்ணநீர் விட்டுக் கலக்கித் தெளிய விட்டு வடித்துக் கொள்ளவும். இப்படியே கலக்கிக் கலக்கி உப்பின் சாரமெல்லாம் கிடைத்த பின் ஒன்ருகக் கூட்டி பெரிய தாம்பரப் பாத்திரத்தில் விட்டுக் காய்ச்சவும். இது குழம்பு பதமாக வரும்போது பேசின் தட்டுகளில் விட்டு ரவியில் உலர்த்தி உப்பாக எடுத்துக்கொள்ளவும். மீண்டும் இந்த உப்பிற்கு நான்கு எடை சுண்ணநீர் விட்டுக் கரைத்து ஏழு மடிப் புள்ள சீலையில் வடிகட்டி தாம்பிரப் பாத்திரத்தில் விட்டுக் காய்ச்சிக் குழம்பு பதத்தில் உலர்த்தி உப்பாக்கிக் கொள்

ளவும். இப்படி தசதீட்சை செய்யப் பூநீற்றிலுள்ள மாசு கன்று துய்ய வெள்ளை நிறமாக இருக்கும். இதுவே தொழில் முறைகளில் கூட்டத்தக்க வாய்ப்பினை யுடைய தென்று அறிக.

இதுவரையிலும் முப்பு என்பது மூன்று உப்புகளைத் தவிர வேறு இல்லையென்றும், இவ்விடயம் ஒவ்வொருவர்களுடைய மனதில் நன்கு விளங்கும்படி தீட்சைக்கிரமத்துடன் பூரணமாக எழுதியுள்ளேன். இவற்றை ஒருங்கு கூட்டிக் காரமேற்றி சுண்ணம் செய்தல் வேண்டும். கை பாகம் சரியாக இருந்தால் பூரணவேலையாகவும் சிறிது காரங் குறைந்தால் காலரை வேலையாகவும் ஏற்படும். இவற்றை நன்கு உணர்ந்தபின் காரமேற்றுவதற்காகச் சித்தர்கள் என்ன கூறி இருக்கின்றனர் என்று அறிதல் வேண்டும். இதற்குச் சாதனமாகச் சில தொழில் முறையை அடியில் கூறுகின்றேன், இதனில் மனதைச் செலுத்துவீர்களாக.

## நாதவிந்து என்கிற சுத்த கெங்கை விபரம்

அறுதி உப்பு என்கிற சோற்றுப்பையும், ஆதி யுப்பு என்கிற அண்டக்கல்லையும், சமாதி யுப்பு என்கிற பூநீற்றையும் குறித்து முன்னரே எழுதியுள்ளேன். இனி இவற்றின் சார்பாகக் கிடைக்கக்கூடிய சுத்தகெங்கை என்னும் நாதவிந்து நீரைக் கூறுவேன்.

களர் நிலமானது எப்பொழுதும் உப்பு சாரத்தைப் பெற்றுள்ளது. இது மழைக்காலத்தில் ஏராளமான தண்ணீரைக் கிரகித்துக் கொள்ளும். அக்காலத்தில் போதிய சூரியவெப்பம் இல்லாமையால் நிலம் வறட்சி கொள்வதற்கு இடமில்லை. அடுத்தபடியாக தை, மாசி, பங்குனி ஆகிய மூன்று மாதங்களில் உண்டான மிகுதியான பனி

யால் மேல் பாரிசத்தில் வறண்டு இருப்பினும் உட்பாகத்தில் கசிவு பெற்றுச் சதுப்பு நிலமாக இருக்கும். இந்தச் சந்தர்ப்பத்தில் மேற் கூறப்பட்ட மாதங்களில் தசமிமுதல் பௌர்ணமி வரையில் சந்திரனுடைய குளிர்ச்சி பொருந்திய கிரணத்தால் தாக்கப்பட்டபோது அண்டக் கல்லினின்று ஒருவிதமான சத்து (விந்து) மேல் கிளம்பும் அதே காலத்தில் அந்நிலத்திலுள்ள கசிவுபெற்ற உவர் உப்பு (நாதம்) அதனுடன் சம்பந்தப்படும் இவ்வியக்கமானது ஒன்றுக்கொன்று பலாத்காரமான இயக்கமானதால் அவ்விடத்தில் ஓர் விதமான மின்சாரசக்தி விளையும். அப்போது அந்நிலம் அசைவு பெறும். விகாரமான சப்தம் உண்டாகும். அடிப்பாகத்திலிருந்து ஒரு விதமான கரிய மலவாயு வெளியாகிச் சிறு குன்றுகளைப்போல் குவிந்து கொள்ளும். அத்தருணம் மின்சாரச் சக்தியினுல் அங்குமிங்கும் கொள்ளிவாய்ப் பிசாசம்போல அக்கினிமேற் கிளம்பி வட்டமிட்டு மறையும். அங்கு செல்லுகிறவர்களுக்கு திகிலை விளைவிப்பதுமின்றி சில சந்தர்ப்பம் பிராணுபத்தையும் உண்டாக்கும். இதனை நன்குணர்ந்தே.

காணவே யின்னமொரு மார்க்கங் கேளு
கருவாணப் புலிப்பாணி மைந்தா நீயும்
தோணவே பூநீற்றை யெடுக்கும் போது
சுந்தரனே யுந்தனுக்குப் பயமுண் டாகும்
வேணதொரு சித்துமுனி ரிஷிகள் தாமும்
வேதாந்த தாயினது கடாக்ஷத் தாலே
பூணவே வேஷமது மாறல் கொண்டு
புகழாக முன்னிற்பர் பிரமை தானே.

பாரேதான் வேற்றுருவா யெதிரே நின்று
பாங்கான கபாலமது ஏந்திக் கொண்டு
நேரேதான் முன்னுக வந்து நின்று
நேர்மையுட னுங்கார கர்ச்சனை போட்டு

ஆரேதான் பூநீற்றை எடுக்க வல்லார்
ஆண்பிள்ளை நீதானு வென்று கூறி
தேரோட்டும் போட்டியாய்க் கிரியைப் போலும்
தோற்றமுடன் சத்தமதுங் கேட்குந் தானே.

—போகர் - 7000

என சித்தர்கள் பயமுறுத்தி இருக்கின்றனர்.

ஆகையால் பௌர்ணமி யன்றையதினம் சந்திரன் உச்சியில் வரும்போது சுமார் 12-அல்லது 1-மணிக்குள் ஆங்காங்கு நீர்சுரப்பு உண்டாகி மேற்கொண்டு வழியும். இதனையே சுத்தகெங்கை யென்றும் நாதவிந்து என்றுங் கூறுவர். இதை எடுக்கப் போகிறவர்கள் தனியாகப் போகாமல் தனக்கு உதவி செய்யும்படியான சில திட சித்தமானவர்களுடன் போக வேண்டும். அப்படிப் போகும்போது நிலம் பிளவுபட்டு உள்ளுக்கு அழுந்திப் போகாமல் இருப்பதற்கு வசதியான இடமா வென்று கண்டறியும் பொருட்டு ஒரு கெட்டி மூங்கிலைக்கொண்டு பூமியைத் தட்டித் தட்டி கெட்டி சப்தம் கேட்குமாயின் முன் செல்ல வேண்டும். இப்படி சதுப்பு நிலத்தில் அகப் பட்டுக் கொள்ளாமலும், ஆபத்துக்கு இடங் கொடுக்கா மலும், ஜாக்கிரதையாகவும், தைரியமாகவும் இருந்து அங்கு வெளியாகும் நீரைச் சிப்பிகொண்டு பேசின் தட்டு களில் சேகரித்தல் வேண்டும். இதுவே முதற்றரமானது. இப்படி எடுப்பதற்கு அசாத்தியமென வுணர்ந்தவர்கள் காலை 3 அல்லது 4 மணிக்குள் சென்று பார்க்க அந்த சலம் உறைந்து தடித்து இருக்கும். இவற்றைச் சிப்பி யைக் கொண்டாவது அல்லது தகரத் தகடுகளைக் கொண் டாவது வாரி வாரி ஒரு சுத்தமான குவிந்த பேசினிலிட் டுக் கைக்கொண்டு பிசைந்தாவது அல்லது மூங்கில் குச்சி மத்தினால் கடைந்தாவது எடுக்கக் குழம்பைப் போலிருக் கும். இதைச் சீசாவில் விட்டு அடைத்து வைக்கவும். இது

இரண்டாவது தரமாகும். இதைத் தினந்தோறும் 3-நாள் வரையில் ரவியில் வைத்துவர உருகி மேல்பாகத்தில் சல ரூபமாகவும் அடியில் மண் உப்புக் கலந்த மட்டியாகவும் நிற்கும். மேல் தெளிந்துள்ள சலத்தை மாத்திரம் சர்வ ஜாக்கிரதையாக வேறு சீசாவில் வடித்துக் கொள்ளவும். இந்தச் சலத்தை விட்டுவிட்டால் எந்தத் தொழிலும் ஆகாது.

இதன் பெருமையை ஔவையார் புகழ்ந்து கூறியதாவது :—

*சனிநீருக் கொப்பான காசி தீர்த்தம்*
*தனையறியார் பாவிகளாம் தேசந் தோறும்*
*பனிநீரும் செயநீரும் வாழும் வீட்டைப்*
*பகுத்தறியா மானிடரைச் சேர வேண்டாம்*
** அணிநீரும் † திருநீரும் ‡ உன்னி லுண்டு*
*அந்தநீ ராடாதா ரசட்டு மாடே*
*சனியான நீரையுண்டு ஸ்நானம் செய்தால்*
*கசமால சனியனுமே யகலு வானே.*

பூமியில் சனிக்கும் நீர் என்பது ஒன்றுண்டு. அது சர்வ பாவங்களையும் நிவர்த்திக்கும் என்று நம்பிக்கை கொண்ட காசி தீர்த்தத்திற்கு ஒப்பாகும். இதனை ஊழ் வினையில் ஆழ்ந்தவர்கள் அறிய மாட்டார்கள். யாரொருவர் பனிநீரும் செயநீரும் ஒற்றுமைப் பட்ட இடத்தைக் கண்டிலரோ அவர்களிடம் சேர வேண்டாம். அந்த நீரைக் கொண்டு பரிசுத்தமாகாதவர்கள் அசட்டு மாடாவார்கள். சனித்த நீர் எதுவென்று கண்டறிந்து அதைக்கொண்டு சரக்குகள் சுறுக்கோ அல்லது அரைப்போ பெறுமானல் தோஷங்கள் அற்றுப் புனிதமாகும் என்று ஆத்திச் சூடியில் கூறப்பட்டுள்ளது.

---

* அழகு பொருந்திய நீர், † தெய்வீகமான நீர், ‡ நினைக்கு மிடத்து.

## தீட்சைக்குச் சுண்ண நீர்

### இதுவே சுத்த ஜலம்

*சுண்ண நீரது பின்னமில்லை சுருக்கான வழியது*
*மண்ணிலே யோக சித்தியொடு வாத வைத்தியம் சித்தியாம்*
*கண்ணிலே மைபோட்ட கசடருக்குக் கிடைக்காது*
*விண்ணிலே யிருந்து விளையாடும் ஆகாச மாண்டே.*

—பஞ்சரத்தினம் - 500.

சுண்ணும்பு நீரில் இருக்கிறது சுருக்கமான வழி. அதில் எவ்விதக் குற்றமும் வராது. யோகம் வாதம் வைத்தியம் எல்லாம் சித்தியாகும். இது ஆகாசத்திலிருந்து வந்து விளையாடும். கண்ணில் மைபோட்டு மறைக்கப் பட்டவர்களுக்கு அதாவது அறிவு கெட்டவர்களுக்கு சரக்கு இன்னதென்று புலப்படாது என்பதாம்.

இதன் உபயோகத்தைப் பற்றிச் சோற்றுப்பு, தீட்சை, பூநீறு தீட்சை முதலியவற்றைக் கூறிய இடங்களில் நன்கு விபரித்துள்ளேன்.

*பனிவீசு மாசிதனில் பங்குனியி விறங்கும்*
*தனியாகச் சுத்தசலந் தன்னை - பனியதுநீர்*
*வெண்ணிறமாய் நின்றதொரு மேதினிபீங் கானதிலும்*
*நண்பெறவுஞ் சுத்தசல நாட்டு.*

—ஞானவெட்டி.

இதனையே சுத்த சலம் என்று தீட்சைக்கு எடுத்துக் கொள்ளக் கூடாது. வேண்டுமானல் சுண்ணும்பைக் கரைப்பதற்குச் சேர்த்துக் கொள்ளலாம். அநேகர் சுத்திக் கிரமத்திற்கு இந்தப் பனி சலத்தை கொண்டு கெட்டுப் போய் இருக்கின்றார்கள். இதற்குக் கைப்பையும் கசிவையும் நீக்க சக்தியில்லை.

## செயநீர்

*மதியினூ லுதித்த சூதம் வாரிவிந்து சாரயாம்*
*அதித மூலநாத சோதியந்த காரசுந் தரம்*
*விதியினூ லிசைந்தமுரி வேதசார நாவிடை*
*அதிகார மோரிடை யளந்துபார் கணக்கிதே.*

—ஞானவெட்டி

" தனது சொருபத்தை வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளாதவரும், நமது அறிவுக்கு எட்டாதவருமாகிய கடவுள் விதித்த கட்டளைக்கு இணங்கிச் சந்திரனுடைய திருநடனத்தால் ஊற்றாக ஓடிச் சாரமென்று பேர் மேவிய அமுரி நான்கு எடைக்குக் காரமென்ற அண்டக்கல் சுண்ணம் ஒரு எடைக் கூட்டுவதாம்" இது அதிகக் காரமுடைய செயநீர் ஆகும். இந்த ரகசியத்தைச் சித்தர்கள் மறைத்துள்ளனர். இதை விட்டால் வேதையில்லை. சுண்ணப் போக்கிற்குக் கூறப்பட்ட மூலிகை ஜெயநீர்களெல்லாம் இதனையே குறிப்பிடும். சாதாரண மூலிகைகளாலும் கருமானத்தினுலும் ஒன்றும் ஆகாது என்று பல விடங்களில் கூறி இருக்கின்றனர். இதனை அடியிற் காண்க.

*மூலிகை யைத்தொட்டு முக்கால் சுறுக்கிடவும்*
*கேலியது யெய்துமெனுங் கேள்விக்காண்—மூலிகையால்*
*பட்டுப் புகைந்தவிடும் பார்சரக் கத்தனையுந்*
*தொட்டாலுங் கெட்டுவிடுஞ் சொல்.* —ஞானவெட்டி

*வாதிகளுங் கூடி மயங்கித் தழைகளினீர்*
*வேதை யிருக்குதென்ற வீண்பாடு—வாதி*
*மலைகள் குகைதிரிந்து வைத்திருந்த தெல்லாம்*
*அலைந்துசுட்டு வீணாக்கி னர்.*

*அண்ட மாவது கோழியி னண்டமோ*
*பிண்ட மாவது தன்தலைப் பிண்டமோ*

வண்டல் ரெண்டையும் கண்டறி யாதவர்
கண்டபோ தல்லவோ காண்பது சொர்ணமே.

## முப்பு முடிவுரை

இதுவரையில் அறுதி உப்பு, ஆதியுப்பு, சமாதியுப்பு என்ற மூன்றையும், தீட்சை செய்யவேண்டிய கிரமத்தையும், அரைப்பதற்கு உரித்தான கடுங்கார ஜெயநீரையும் வைத்து ஊதிக் காரமேற்றுவதற்குப் பொருத்தமான பஞ்சசுண்ணக் குகையையும் கூறியுள்ளேன். அறிவாளர்கள் எவ்விதத்திலும் முப்பை முடித்துக்கொள்வார்கள்.

முப்புவில் அறுதியுப்பு ஒன்றே மூலமாக நின்றது. இதனின் கசிவு கைப்பு முதலியவற்றை நீக்கிக் காரமேற்றும் பொருட்டே ஆதியுப்பு.சமாதியுப்பு இவ்விரண்டையும் இம்முறையில் சேர்க்கப்பட்டுள்ளது என்று கவனத்தில் வைக்கக் கடவர்.

இதுவரையிலும் கூறப்பட்ட உண்மை அகஸ்தியர் முப்புச் சூத்திரம் 50-ல் நன்கு விளங்கும்

பாரென்ன வுவருப்பைக் கொண்டு வந்து
பரிவாகச் சுத்தசலந் தன்னி லிட்டுச்
சீருடனே கலக்கியே தெளிய வைத்துத்
தெளிவாகக் காய்ச்சிநன்றாய் வற்றி னக்கால்
நீரிலே மறுபடியும் விட்டுக் கிண்டி
நிலையாகத் தெளியவைத்து இறுத்துக் கொண்டு
வாருமுடன் காய்ச்சியே வற்ற வைத்து
வாகாக விப்படியே காய்ச்சு காய்ச்சே.

காய்ச்சுகின்ற முறைக்கெல்லாம் சுத்தசலம் விட்டுக்
கலக்கியே தெளியவைத்துக் காய்ச்சுக் காய்ச்சு
ஆச்சிந்த வுப்பதுதான் வெளுத்துப் போகும்
அப்புறத்தே வைத்துவினி யறையக் கேளு

வாய்ச்சதொரு கறியுப்பை வாரிக் கொண்டு
மானிடர்கள் கூட்டுமுப்பின் மார்க்கங் கேளு
பாய்ச்சிந்த படிசுத்த சலத்தை விட்டுப்
பரிவாகத் தெளிவிடுத்துப் பத்துமுறை காய்ச்சே.

முறையாக நிலவுப்பைச் சொல்லக் கேளு
மூதண்ட பிரமாவின் விந்தும் பின்னை
அறையான பூமியதி னூத மாச்சு
ஆதியுப்பு சிவமென்று மிதற்கே பேரு
மறைவாக வொளித்துவைத்தார் நூல்க ளெல்லாம்
மார்க்கமெல்லாம் சொல்லுகிறேன் வரிசையாக
நிறையாகக் கல்லுப்பாய் வளர்ந்த தப்பா
நீற்றியே தின்பவர்க்குச் சுண்ணாம் பாச்சே.

சுண்ணமென்று லோகத்தோர் சுட்டு நீற்றிச்
சுபமாகத் தாம்பூலம் தின்பார் கேளே
சுண்ணாம்புக் கல்லென்று மிதற்கே பேரு
சுந்தரமாய் விபூதியு மிதற்கே பேரு
எண்ணமுள்ள சுண்ணமப்பா காரச் சுண்ணம்
இயல்பான கல்லுப்பு சுண்ண மாச்சு
தண்ணிலே போட்டவுடன் நீறிப் போச்சு
சவர்க்கார குருவாச்சு சார்ந்து பாரே.

ர்வாக விதைமறைத்தார் சித்த ரெல்லாம்
சமுசயங்க ளில்லையப்பா வெளியாய்ச் சொன்னேன்
ரான கல்லுதான் துய்ய வெள்ளை
ஜெகத்திலிந்தக் கல்லுதான் மெத்தவுண்டு
ரன கல்லொன்று மாகா தப்பா
நிர்மலமாய் வெள்ளைக்கல் பிரம கற்பம்
ர்வாக வதையெடுத்தஃ தமுரிக் குள்ளே
அப்பனே புவர்மண்ணைக் கரைத்துக் கொள்ளே.

கொள்ளவே யதிலிந்தக் கல்லைப் போட்டுக்
குமுறவே காய்ச்சிவிடு கட்டிப் போகும்
வெள்ளையாய்ச் சுண்ணக்கல் கட்டிப் போச்சு
வேதாந்த மூர்த்தியென்று மிதற்கே பேரு
கல்லென்ற கல்லதனை யண்ட நீரால்
கருவாக அரைத்ததனை வில்லை யாக்கி
உள்ளபடி சொல்லுகின்றேன் உலையி லூத
உத்தமனே சுண்ணும்பா மூறைத்து மூதே.

ஊதிடவே சுண்ணமுமாஞ் சலத்தை வாரு
ஓகோகோ நீர்வற்றும் நீறிப் போகும்
வாதிடவே பீங்கானில் வைத்து நீற்று
வளமான சலம்போல நிறைய விட்டு
ஆதியா மண்டலமே வைத்தா யானல்
அதன்மேலே உப்புவந்து படரும் பாரு
சோதியா முப்பதனை வழித்து வாங்கிச்
சுகமாகப் பலமொன்று தூக்கிக் கொள்ளே.

இவ்விதமாக முடிவுபெற்ற மூன்று உப்பையும் உற படுத்த எடை அளவும், காரமேற்றுவதற்கு கற்பூரம் வீரம் கூட்ட வேண்டிய விதிமுறையும் அடியிற் காண்க.

தூக்கியே வகையொன்று பலமொன் றாகச்
சுகமாகச் சூடனெரு பலமுங் கூட்டி
நோக்கியே அண்டநீர் விட்டே யாட்டு
நுணுக்கமாய் வில்லைசெய்தஃ துலர வைத்துத்
தாக்கியே யுலர்ந்தபின்பு ஓடு மூடிச்
சாதகமாய்ச் சீலைமண்ணுஞ் சாத்திக் கொண்டு
பாக்கியே முழப்புடத்தில் நீறிப் போகும்
பண்பாக விதையெடுத்துப் பகரக் கேளே.

கேளப்பா வீரமொரு கழஞ்சு கூட்டிக்
கிருபையுள்ள புனுகதிலே கழஞ்சு கூட்டி
நாளப்பா பூரமொரு கழஞ்சு கூட்டி
நாட்டிலுள்ள சம்பழச்சா றிட்டு ஆட்டித்
தானப்பா வில்லைசெய்து ரவியிற் போடு
சாதகமாய் முழப்புடத்திற் போட்டு வாங்கு
வேளப்பா சுண்ணமது கடுங்கார மாச்சு
வெகுசுறுக்குப் பூநீறு குருவி தன்றே.

## முப்பு

### வசிஷ்டர் வைத்திய சூத்திரம் - 206

நலமான முப்பூவைச் சித்த ரெல்லாம்
ரசவாதஞ் செய்வதற்கோர் விதம தாகப்
புலமாகச் சொல்லிவிட்டார் பூமி தன்னில்
புத்திகெட்ட மனிதரப்பா செய்து பார்த்துப்
பலமான தில்லையென்று விட்டு விட்டார்
பரிகாசப் பேச்சாச்சிப் பாரைச் சூழ்ந்த
சலமான சமுத்திரத்தை புண்ட நாதன்
தட்சண மூர்த்திசொன்ன திட்டந் தானே.

திட்டமுள்ள சித்தருக்கும் முனிவருக்கும்
தேவருக்கும் ரிஷிகளுக்கும் மனுட ருக்கும்
அட்டதிக்கும் போற்றுகுரு நாத னப்பா
ஆதிமுனி அகத்தீச ரைம்ப துக்குள்
வெட்டவெளி யாயுரைத்தார் முப்பூ தன்னை
விபரமாய் நான்பார்த்தேன் சூட்ச மாக
விட்டகுறைக் காரனென்றே யென்னைச் சொன்னார்
விருதான முப்பூவின் விபரம் பாரே.

பார்தனிலே உவருப்பைக் கொண்டு வந்து
பாண்டத்தி லளந்திட்டு நாலு பங்கு
சீர்பெறவே சுத்தசலந் தன்னை விட்டுச்
சிறப்பாகக் கலக்கியதைத் தெளிவி றுத்துப்
பேர்பெறவே அடுப்பேற்றி வற்றக் காய்ச்சிப்
பிலமான உப்பெடுத்துப் பின்னுஞ் சுத்த
நீர்தனையே யிருபங்கு கூடச் சேர்த்து
நிசமாகப் பத்துமுறை காய்ச்சி வாங்கே.

வாங்கியதோ ருவருப்புச் சுண்ணந் தன்னை
வளமான பரணியிலே பதனஞ் செய்து
தீங்கில்லாக் கறியுப்புத் தன்னை வாங்கித்
திறமான மணியதனைத் தெரிந்தெ டுத்துப்
பாங்காய்நீ யிரட்டிசலந் தனிற்க ரைத்துப்
பார்தெளித்துப் பத்துமுறை முன்போ லாக
நீங்காமற் காய்ச்சியதை யெடுத்துக் கொண்டு
நிண்ணயஞ்சேர் கல்லுப்பு நிலையைக் காணே.

காணவே கல்லுப்பென் றிதனை விற்பார்
கடலிலே பாறைக்குள் வளர்ந்த உப்பு
தோணவே பளிங்குக்கல் போலி ருக்கும்
துவர்ப்புடனே புளிப்பிருக்கும் மருந்துக் காகா
தாணுவென்ற ஈசன்விந்து பூமி நாதம்
தவளநிறப் * பருவதம்போல் வளர்ந்தி ருக்கும்
நீணிலத்தி லதைவெட்டித் தானெ டுத்தால்
நிசமான வயிரம்போல் மின்னும் பாரே.

---

* இந்தக்கல் திருநெல்வேலியில் கிடைக்கும். இதற்கு பளிங்குக் கோட்டைக்கல் என்பர். இதைச் சுண்ணம்பாக நீற்றி எல்லா காரியங்களுக்கும் உபயோகப் படுத்துவதுண்டு.

மின்னியே அடுக்கடுக்கா யிருக்கு மப்பா
 மேதினியி லதைநீற்றிச் சுண்ணும் பாக்கிப்
பன்னிரண்டு சூரியனு முதித்தாப் போலப்
 பளிங்குபோல் வெளுத்திருக்குங் கற்சுண் ணும்பு
தன்னிலே சலம்விட்டே உலகத் தோர்கள்
 தாம்பூலந் தனிற்றேய்த்து அருந்து வார்கள்
உன்னிதஞ்சே ரடுக்குக்கல் தனையெ டுத்து
 உவர்மண்ணை அமுரியிலே கலக்கி டாயே.

கலக்கியே தெளிவிருத்துக் கல்லைப் .போட்டுக்
 காய்ச்சிட்டே யடுக்குக்கல் கட்டிப் போகும்
துலக்கமா யதையெடுத்துக் கல்வத் திட்டுச்
 சூரணித்து அண்டநீர் தன்னு லாட்டிப்
பிலக்கவே வில்லைசெய்து காய்ந்த பின்பு
 பிரபலமா யுலையிலிட்டிங் கூதும் போது
நலக்கவே வெளுத்துநல்ல சுண்ணும் பாக்கி
 நலமாகச் சுத்தசலம் விட்டு நீற்றே.

நீற்றியே சுத்தசலம் தன்னை வார்த்து
 நிண்ணயமாய் மண்டலந்தான் பதனஞ் செய்து
பார்த்திடவே தண்ணீர்க்கு மேலே தானும்
 படர்ந்திருக்குங் கல்லுப்பு வெண்மை யாகப்
பூத்திருக்குங் கல்லுப்பை அறிந்தெ டுத்துப்
 புகழான உவருப்பு கறியுப் புந்தான்
சேர்த்தியாம் வகையொன்று பலமொன் றப்பா
 நிசமான பூரமொரு பலமுங் கூட்டே.

கூட்டவே வகைநாலுங் கல்வத் திட்டுக்
 கோழிமுட்டை வெண்கருவா லாட்டி வாங்கி
வாட்டமற ரவியுலர்த்திக் காய வைத்து
 வளமான வோட்டிலிட்டு ஓடு மூடி

நாட்டமுடன் சீலைமண் ணஞ்சுஞ் செய்து
நலமாக முழப்புடத்திற் ரூக்கி நீத்தித்
தேட்டமுட னதையெடுத்து வைத்துக் கொண்டு
திறமாகப் பின்னுமொரு முறைதான் செய்யே.

செய்வதென்ன சவ்வீரம் புனுகும் பூரம்
சேர்த்திடுவாய் வகையொன்றுக் கொருக ழஞ்சு
வையவே கல்வத்தி லிட்டுக் கொண்டு
நல்லெலுமிச் சம்பழத்தின் சாற்ரு லாட்டு
உய்யவே வில்லைசெய்து ரவியில் வைத்து
உலர்ந்தபின்பு முன்போல ஓட்டில் வைத்து
வெய்யமுழப் புடத்திலிடச் சுண்ண மாகும்
விள்ளாதே முப்பூவின் குருவி தாமே.

## இதன் மகிமை

குருவான உவருப்புக் கணேச னுகும்
கூறியவக் கல்லுப்பு பிரம னுகும்
கருவான கறியுப்பு விஷ்ணு வாகும்
கருத்தான பூரமது ருத்திர னுகும்
மருவான புனுகுமகேஸ் வரன தாகும்
வண்மைசதா சிவமேசவ் வீர மாகும்
உருவான எலுமிச்சங் கனியே பிண்டம்
ஓகோகோ கோழிமுட்டை அண்டந் தானே.

## குரு சேராத மருந்து பயனில்லை

அண்டபிண்டம் நிறைந்தபொருள் முப்பு வப்பா
அரும்பிணிகள் தீர்க்கவொரு குருவு மாச்சி
அண்டபிண்டம் நிறைந்தபொரு ளிதனைத் தொட்டு
ஆடலாம்வெகுகோடி வித்தை தன்னைக்
கண்டகண்ட விதமாக வுலகு தன்னிற்
கருவறிந்து மருந்துசெய்யத் தெரியா மற்றூன்

கொண்டகடை மருந்துகளைத் தானே வேண்டிக்
 கொண்டுபோய்ப் பலமருந்துங் கொடுப்பார் தானே.

கொடுப்பார்கள் குருவில்லா மருந்து தன்னைக்
 கொடுத்தக்காற் பிணிதீர மாட்டா தப்பா
கெடுப்பதொழி மூதோர்கள் சொன்ன நூலைக்
 கேளாமற் பலவிதமாய் வயித் தியர் தான்
துடுக்கான மருந்துகளைக் கொடுத்தா ரானல்
 தூலவுடல் தன்னைவிட்டுச் சூட்சம் போகும்
அடுப்புத்தீ யணைத்திடலாம் வயித்தி யோர்கள்
 அறியாமற் கொடுத்தமருந் தாறுத் தீயே.

ஆறுத்தீ யாகில்வெகு கோடி பாவம்
 ஆதிசிவ னருளாலே தீர வேண்டும்
பேறுக வேண்டுமென்றால் வயித்தி யோர்க்குப்
 பின்னைமக ரில்லையிந்நூல் பார்த்தா ராகில்
கூறுக ரோமர்பதி னெட்டி னோடு
 கொங்கணரைஞ் ஞூறுமகத் தீசர் நூலும்
வேறுக வெண்ணமல் நூல்பார்த் தேயவ்
 விதஞ்செய்ய வியாதியில்லை விபரம் பாரே.

இங்குக் கூறப்பட்டுள்ள முப்பு முறை இரண்டு மூன்று உப்புக்களால் ஆக்கப்பட்டது.

அப்பு என்பது அறுதி உப்பு, ஆகாயம் என்பது ஆதி யுப்பு, பிருதிவி என்பது சமாதி உப்பு, இதனுடன் பஞ்ச பூத வகுப்பில் விடுபட்டுள்ள தேயு என்னும் வெடியுப் பையும் வாயு என்னும் படிகாரத்தையும் கூட்டிச் சில இடங்களில் சித்தர்கள் கூறி யிருக்கின்றனர் இதனால் எவ்வித சந்தேகங்களும் வேண்டாம்.

அகஸ்தியர் வாலைச் சூத்திரத்தில்,

எடுத்தக்கால் தீட்சைக்கு ஆதி யென்ன
ஏகாந்த * பிரணவநீ ரூட்ட வேண்டும்
குடித்தக்கால் பூதபஞ்சீ கரண பாகம்
கூட்டினு லப்போதே குருவு மாகும்
பிடித்தக்கால் நில்லாத சூத ராஜன்
புலிகண்ட ஆடதுபோல் பொசுங்கிப் போகும்
படித்தக்கால் என்னவுண்டு வுட்பூ ராயம்
பாராமல் சுட்டதெல்லாம் பாழ்கண் டீரே.

என்பதனுல் பஞ்சீகரண விதிப்படி கூட்டுவதும் விசேஷம்.

## கொங்கணர் முப்பு ஜெயநீர்

சொல்லும் பூநீர் துடியா மொருபலம்
புல்லு மேபடிக் கார மிருபலம்
வெல்லு மாமதி யுப்பு மிருபலம்
கொல்லு மேகறி யுப்பு சமனெடை.

எடுத்த வண்டக்கற் சுண்ண மிருபலம்
கொடுத்து மேயொன்ருய்க் கூடவே மாட்டு
தொடுத்து வெண்கரு வாலதை யரைத்துச்
சுடுத்துமே வில்லைப் பாங்கா யுலர்த்திடே.

உலர்த்திக் குக்குட மெழிலாகப் போட்டு
அலர்த்து மேசுண்ண மாகவே தானெடு
புலத்தியர் சொன்ன போக்கிது வாகவே
உலர்த்தா தெருக்கம் பாலதிற் போட்டிடே.

போட்டிட செயநீ ராகும்பா லெல்லாம்
மாட்டிடு வறுபத்து உபர சமும்
காட்டிச் சுண்ணங் கடினமகா வேதை
பூட்டினுர் கொங்கண நாயனுர் புகன்றதே.

---

* சுண்ணம்பு நீர்.

## வேறு முறை

பார்த்துமே சீனம் பகரும் வெடியுப்புக்
கோர்த்து விந்துடன் கூறும் சவுக்காரம்
ஆர்த்துக் கல்லுப்பு அரியதோர் வீரமும்
சேர்த்து முத்திட்சை சேர வெரித்திடே.

எரித்துக் கவசம் எழிலாகப் பூண்டிடக்
குறித்த சரக்கு அறுபதுங் கட்டிடும்
விரித்து செய்முறை விளங்கச் செப்பினும்
உரித்தே யானவர் உண்மையிற் கொஞ்சமே.

# கொங்கணர் வாதகற்ப சூத்திரம் - 120

## வேறு முறை

போச்சென்ற முப்பூவின் கருவைக் காணப்
புகலிப்போ சொல்லுகிறேன் மக்காள் நீங்கள்
ஆச்சென்ற உப்பென்ன வென்பா ராகில்
அவர்கையில் வாதமில்லை யறிந்து கொள்ளு
நீச்சென்ற உப்பைவிட்டால் வாத வேலை
நிலைக்கரிது நிலைக்கரிது நிலைக்க வென்றால்
ஓச்சென்ற வழியின்னால் சொல்ல வேணும்
உற்றபுவி தனில்விளைந்த உவர்தான் முப்பே.

உப்பான பூநீற்றைச் சலத்தில் கொட்டி
ஒளிவான தெளிவிறுத்துப் பஞ்சக் காய்ச்சல்
கொப்பான வெடியுப்புப் பலந்தானுலு
கூட்டதிலே சீனரெண்டு இந்து ரெண்டு
ஒப்பான சத்தியெட்டு சோட சந்தான்
உத்தமனே கல்வத்தி விட்டுக் கொண்டு
செப்பான வெண்கருவி லெருக்கம் பால்வார்
சிறந்தபழச் சாறூட்டி அரைத்துப் போடே.

போட்டலரக்கிற் சூடனொரு காசு போடு
புகழான சரக்கெல்லாம் சேர வொன்றாய்
நீட்டரைக்கிற் சாமம்ரெண்டுக் கதிகம் வேண்டாக்
நிலையான வில்லைசெய்து கொண்டு மக்காள்
காட்டரக்கில் ரவிதனிலே காயப் போடு
கனமான சுண்ணாம்புக் குள்ளே வைத்து
ஆட்டரைக்கி லடுப்பேற்றி யெரிப்பாய் சாமம்
அத்தோடே வாங்கிமெள்ளப் புடத்தைப் போடே.

புடமெடுத்து மூப்பூவைப் பார்த்தால் மக்காள்
புகழாகத் தந்தம்போல் வெளுத்துக் காணும்
குடமெடுத்த கொங்கை மின்னாள் மாலின்தேவி
குடிகொள்வா ளுன்முகத்தில் குறை யொன்றில்லை
தடமெடுத்த தலையாரி யிதுவே சேரில்
சரக்கான கள்ளரைத்தான் சுண்ணுஞ் சுண்ணும்
விடமெடுத்த சவுக்காரக் குருவி தாச்சு
வெள்ளாட்டுக் கெதிர்பட்ட வேங்கை யாச்சே.

---

# கியாழ இலம்பகம்

---

## 1. வாத சுரக் கியாழம்

சரக்கு:—

சிறுதேக்கு
திப்பிலி
கோஷ்டம்
திப்பிலிமூலம்
நற்சங்கன்மூலம்
நிலவேம்பு
பேரரத்தை
விஷ்ணுகிரந்தி
சுக்கு
செவ்வியம்
சிறுகாஞ்சொறிவேர்
சித்திரமூலம்
வெள்ளருகு
முருங்கைவேர்
சதகுப்பை
பெருங்காஞ்சொறிவேர்

இவைகள் வகைக்குப் பலம்-[illegible].

செய்பாகம் :—இங்குக் கூறப்பட்ட பதினாறு சரக்கு களையும் நன்ருய் இடித்து எட்டுப்பாகமாகப் பங்கிட்டு வைத்துக்கொள்க. வேண்டும்போது ஒரு பாகத்தை ஒரு பழகிய புதுச்சட்டியில்போட்டு ½-படி தண்ணீர்விட்டு 30-நாழிகை ஊறினபின் அடுப்பிலேற்றி வாய்மூடிச் சிறு தீயாக எரித்து ஆழாக்காகச் சுண்டக்காய்ச்சி வடித்து வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை மூன்று பாக மாகப் பங்கிட்டு நான்கு மணி நேரத்திற்கு ஒருமுறை கொடுத்துக்கொண்டு வருக. இப்படி மூன்றுநாள் ஒன்பது வேளை கொடுப்பது அவசியமாகும்.

தீரும் வியாதி :—வாத சுரம் குணமாகும்.

பத்தியம் :—பார்லி அரிசி கஞ்சி, கோதுமை நொய் கஞ்சிக் கொடுக்கலாம். ரோகிக்குக் கப சம்பந்த மில்லா திருப்பின் மேற்படி கஞ்சிகளில் பசுவின் பாலைக் கூட்டிக் கொள்ளலாம்.

## 2. பித்தசுரக் கியாழம்

சரக்கு :—

| | |
|---|---|
| விலாமிச்சு | சிறுகாஞ்சொறி |
| வில்வவேர் | பாதிரிவேர் |
| அதிமதுரம் | செவ்வல்லி |
| கோஷ்டம் | நன்னாரி |
| நில ஆவாரை | சீரகம் |
| கொத்துமல்லிவிதை | தும்பை |
| பேரீச்சங்காய் | யானைத் திப்பிலி |
| நெல்லிவற்றல் | சுக்கு |

இவைகள் வகைக்குப் பலம் - ½.

(16)

செய்பாகம் :—இங்குக் கூறப்பட்ட பதினாறு சரக்கு களையும் நன்றாய் இடித்து எட்டுபாகமாகப் பங்கிட்டு வைத் துக் கொள்க. வேண்டும்போது ஒரு பாகத்தை ஒரு பழ கிய புதுச்சட்டியில் போட்டு $\frac{1}{2}$ - படி கொதிக்கின்ற தண் ணீர் விட்டு 30 - நாழிகை ஊறவிட்டு அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து ஆழாக்காகச் சுண்டக் காய்ச்சி வடி கட்டி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை மூன்று வேளை யாகப் பங்கிட்டு நான்குமணி நேரத்திற்கு ஒருமுறை கொடுத்துக் கொண்டு வருக. இப்படி மூன்றுநாள் ஒன் பது வேளை கொடுப்பது அவசியமாகும்.

தீரும் வியாதி :—பித்த சுரம் நீங்கும்.

பத்தியம் :—பார்லி அரிசி, கோதுமை நொய் முதலிய வற்றின் கஞ்சி ஆகும்.

## 3. வேறு முறை

சரக்கு :—

| | |
|---|---|
| காவுஸ்பான் இலை | சோம்பு |
| அதிமதுரம் | சுக்கு |

இவைகள் வகைக்குப் பலம் - $\frac{1}{4}$.

செய்பாகம் :—மேற் கூறப்பட்ட நான்கு சரக்குகளை யும் நன்றாய் இடித்து, ஒரு பழகின புதுச்சட்டியில் போட் டுக் கால்படித் தண்ணீர்விட்டு அடுப்பிலேற்றி அரைக் கால் படி அளவிற்குச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி வைத் துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை மூன்று வேளை யாகப் பங்கிட்டு வைத்துக்கொண்டு, கொடுக்கும்பொழுது ஒவ்வொரு பாகத்திலும் மயிலிறகைச் சுட்டுக் கரியாக்கி,

இரண்டொரு குன்றியெடை தேன் விட்டுக் குழைத்துக் கியாழத்தில் கலக்கிக் கொடுக்கவும். இவ்வாறு தினம் மூன்று வேளை மூன்று நாள் கொடுக்க வேண்டும்.

தீரும் வியாதி :—இதனுல் பித்த சுரம் நீங்கும்.

பத்தியம் :—பார்லி அரிசி, கோதுமை நொய் முதலியவற்றின் கஞ்சியே சிறந்த பத்தியமாகும்.

## 4. சிலேத்துமசுரக் கியாழம்

சரக்கு :—

| | |
|---|---|
| சுக்கு | திப்பிலி |
| கிராம்பு | சிறுகாஞ்சொறிவேர் |
| அக்கராகாரம் | கறிமுள்ளி |
| கடுக்காய் | ஆடாதோடை |
| கற்பூரவள்ளி | திராட்சைப்பழம் |
| கண்டங்கத்திரி | |

இவைகள் வகைக்குப் பலம் - 1.

செய்பாகம் :—மேற் கூறப்பட்ட பதினொரு சரக்குகளையும் நன்ருய் இடித்து 10-பாகமாகப் பங்கிட்டு வைத்துக் கொள்க. வேண்டும்போது ஒரு பாகத்தை ஒரு பழகிய புதுச்சட்டியில் போட்டு ½- படி கொதிக்கின்ற தண்ணீரை விட்டு 2 - 3 மணிநேரம் ஊறினபின் அடுப்பிலேற்றி வாய்மூடிச் சிறுக எரித்து அரைக்கால் படி அளவிற்குச் சுண்டக்காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை மூன்று பாகமாகப் பங்கிட்டு நான்கு மணி நேரத்திற்கு ஒருமுறை கொடுத்து வருக. இப்படி 3-நாள் கொடுப்பது அவசியமாகும்.

தீரும் வியாதி :—சிலேத்தும சுரம் நீங்கும்.

பத்தியம் :—பார்லி அரிசி, கோதுமை நொய்க் கஞ்சி களே சிறந்த பத்தியமாகும். பால் சேர்க்கக் கூடாது.

## 5. வேறு முறை

சரக்கு :—

| | |
|---|---|
| சிறுகாஞ்சொறி | மஞ்சிஷ்டி |
| செங்கழுநீர்க்கிழங்கு | கோஷ்டம் |
| மரமஞ்சள் | ஆடாதோடை |
| தேவதாரு | நிலவேம்பு |
| சீந்தில்கொடி | பேய்ப்புடல் |
| கறிமுள்ளி | வட்டத்திருப்பி |
| திப்பிலி | மிளகு |
| சுக்கு | நெற்பொரி |
| தான்றிக்காய் | கோரைக்கிழங்கு |
| மைசாட்சி | கண்டங்கத்திரி |

இவைகள் வகைக்குப் பலம்-½.

செய்பாகம் :—மேற்கூறப்பட்ட இருபது சரக்குகளை யும் நன்ருய் இடித்துப் பத்து பாகமாகப் பங்கிட்டு வைத் துக் கொள்ளவும். வேண்டும்போது ஒரு பாகத்தைப் பழகிய புதுச்சட்டியில் போட்டு ½-படி கொதிக்கின்ற தண் ணீரை விட்டு 2, 3-மணி நேரம் ஊறின பின் அடுப்பி லேற்றி வாய்மூடிச் சிறு தீயாக எரித்து அரைக்கால் படி அளவிற்குச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை மூன்று பாகமா கப் பங்கிட்டு நான்குமணி நேரத்திற்கு ஒரு முறையாகக் கொடுக்கவும். இப்படி மூன்று நாள் ஒன்பது வேளை கொடுப்பது அவசியமாகும்.

தீரும் வியாதி :—சிலேத்தும சுரம் நீங்கும்.

பத்தியம் :—பார்லி அரிசி, கோதுமை நொய்க் கஞ்சி களே சிறந்த பத்தியமாகும். பால் சேர்க்கக் கூடாது.

குறிப்பு :—மேற்கூறப்பட்ட வாத, பித்த, சிலேத்தும சுரங்களுக்குக் கியாழத்தைக் கொடுக்கும்போது சுரம் கடினமானதாகத் தோற்றப்படின் சுரரோகத்தைப் பரிகாரம் செய்யக்கூடிய ஏதேனும் ஒரு மாத்திரை செந்தூரம் முதலியவற்றை முதலில் தேனில் கொடுத்துப் பின்னர்க் கியாழத்தைக் கொடுத்து வருதல் அதிக நன்மையைத் தரும்.

## 6. சர்வ சுரத்திற்கு

### அடை கியாழம்

சரக்கு :—1

| | |
|---|---|
| சிற்றுமுட்டி | பேராமுட்டி |
| பற்பாடகம் | சிறுகாஞ்சொறி |
| செங்கழுநீர்ப்பூ | முத்தக்காசு |
| மலைதாங்கி | வெட்டிவேர் |
| சோற்றுகற்றுழைச்சருகு | மூக்குறட்டை |
| சீந்தில்கொடி | பேய்ப்புடல் |

இவைகள் வகைக்குப் பலம்-2.

சரக்கு :—2

| | |
|---|---|
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | கருஞ்சீரகம் |
| கடுக்காய் | கிராம்பு |
| கோஷ்டம் | நற்சீரகம் |
| சண்பகப்பூ | செவ்வியம் |
| சிறுதேக்கு | கிச்சிலிக்கிழங்கு |
| அதிமதுரம் | விழலரிசி |

| | |
|---|---|
| வெட்பாலையரிசி | இலவங்கப்பட்டை |
| கடுகுரோகணி | தனியா |

இவைகள் வகைக்குக் கழஞ்சு-1.

செய்பாகம் :—முதலாவது அங்கத்தில் கூறப் பட்ட பன்னிரண்டு சரக்குகளையும் நன்கு இடித்து ஒரு குடிநீர்ப் பாண்டத்தில் போட்டு நான்குபடித் தண்ணீரை விட்டு அதனில் இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட் டுள்ள பதினெட்டுச் சரக்குகளையும் இடித்து ஒரு மெல்லிய சீலையில் தளர்ச்சியாக முடிச்சுக் கட்டிப் போட்டு அடுப்பி லேற்றிச் சிறு தீயாக எரித்து ஒருபடி அளவிற்குச் சுண் டக் காய்ச்சி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—வேண்டும்போது முன் சித்தப்படுத் திய கியாழத்தைச் சிறிது நெருப்பனலில் வெதுப்பி வேளைக்கு இரண்டு அவுன்ஸ் வீதம் வடிகட்டித் தினம் மூன்று வேளை கொடுக்கவும். இந்தக் குடிநீர்ப் பாண் டத்தை ஒவ்வொரு பொழுதும் சிறிது நெருப்பனலில் வெதுப்பி வடித்து எடுத்துக் கொள்ளவும். தண்ணீர் சுண்டச் சுண்ட அப்போதைக்கப்போது சிறிது தண்ணீர் கூட்டிக் காய்ச்சிக் கொள்ளவும். சில பண்டிதர்கள் இந்தக் கியாழத்தைக் கொடுக்கும்பொழுது சீலையில் முடிச்சுக் கட்டியுள்ள கற்கத்தில் வேளைக்கு ½-வராகனெடை வீதம் மெழுகுவண்ணமரைத்து அப்போதைக்கப்போது கொடுக் கும் கியாழத்தில் கூட்டிக் கலந்து கொடுப்பதுண்டு.

தீரும் வியாதி:—இந்தக் கியாழம் சர்வ சுரங்களை யும் நீக்குவதில் பிரசித்தி பெற்றது.

பத்தியம் :—பார்லி அரிசி, கோதுமை நொய்க் கஞ்சி களே சிறந்தது.

சோ - இராமன்



## 7. சர்வசுரக் கியாழம்

சரக்கு :—

| | |
|---|---|
| சிறுதேக்கு | நிலவேம்பு |
| திப்பிலி | கோஷ்டம் |
| கோரைக்கிழங்கு | சிறுகாஞ்சொறிவேர் |
| பற்பாடகம் | சீந்தில்கொடி |
| கண்டங்கத்திரிவேர் | சுக்கு |

இவைகள் வகைக்குப் பலம் - ½.

செய்பாகம் :—இங்குக் கூறப்பட்ட பத்துச் சரக்குகளையும் ஒருமிக்கச் சேர்த்து இடித்து ஆறுபாகமாகப் பங்கிட்டு ஒரு பாகத்தைப் பழகிய புதுச்சட்டியில் போட்டு ½ - படித் தண்ணீர்விட்டு அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து அரைக்கால் படி அளவிற்குச் சுண்டி வரும்போது வடிகட்டி வைத்துக் கொள்ளவும்.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை வேளைக்கு இரண்டு அவுன்ஸ் வீதம் தினம் மூன்றுவேளை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—வாத பித்த சிலேத்தும தொந்த சுரங்கள் குணமாகும்.

பத்தியம் :—பார்லி அரிசிக்கஞ்சி தவிர வேறொன்றும் ஆகாது.

## 8. வேறு முறை

சரக்கு :—

| | |
|---|---|
| கிராம்பு | அதிமதுரம் |
| கோஷ்டம் | பேய்ப்புடல் |
| சுக்கு | நிலவேம்பு |
| சிற்றரத்தை | பற்பாடகம் |
| தேவதாரு | காஞ்சொறிவேர் |

இவைகள் வகைக்கு பலம் - ½.

**செய்பாகம் :—** இங்குக் குறிப்பிட்டுள்ள பத்துச் சரக்குகளையும் நன்ருய் இடித்து ஆறு பாகமாகப் பங்கிட்டு அதனில் ஒரு பாகத்தை ஒரு பழகிய புதுச்சட்டியில் போட்டு ½-படித் தண்ணீர் விட்டு அடுப்பில் வைத்துச் சிறுக எரித்து அரைக்கால்படி அளவிற்குச் சுண்டி வரும் போது வடிகட்டி வைத்துக் கொள்ளவும்.

**பிரயோகம் :—** இந்தக் கியாழத்தை வேளைக்கு இரண்டு அவுன்ஸ் வீதம் தினம் மூன்று வேளை கொடுக்கவும். இப்படி இரண்டு மூன்று நாள் கொடுத்தல் வேண்டும்.

**தீரும் வியாதி :—** பலவிதமான தொந்த சுரங்கள் நீங்கும். பத்தியம் பார்லி அரிசிக்கஞ்சி தவிர வேருென்றும் ஆகாது.

## 9. வேறு முறை

சரக்கு :—

1 தூதுவளை
2 நிலவேம்பு
3 ஆடாதோடை
4 பற்பாடகம்
5 சிற்ருமுட்டி
6 வேப்பம்பட்டை
7 மாதுளம்வேர்
8 பேய்ப்புடல்
9 கண்டங்கத்திரி
10 கோரைக்கிழங்கு
11 விஷ்ணுகிரந்தி
12 சீந்தில்கொடி
13 பேராமுட்டி
14 முசுமுசுக்கை
15 தும்பை
16 நாய்த்துளசி

இவைகள் வகைக்குப் பலம்-1.

17 கண்டுபாரங்கி
18 சுக்கு
19 தேசாவரம்
20 தாளிசப்பத்திரி
21 சிற்றரத்தை
22 திப்பிலி

இவைகள் வகைக்கு வராகனெடை-3.

**செய்பாகம் :—** மேற்குறிப்பிட்ட இருபத்திரண்டு சரக்குகளையும் நன்ருய் இடித்துப் பன்னிரண்டு பாகமாகப் பங்கிட்டு வைத்துக்கொள்ளவும். வேண்டும்போது ஒரு பங்கு சூரணத்தை ஒரு பழகிய குடிநீர்ப் பாண்டத்தில் போட்டு ஒரு படித் தண்ணீரைவிட்டு 2 - 3 - மணி நேரம் ஊறினபின் அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்து அரைக்கால்படி அளவிற்குச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்ளவும்.

**பிரயோகம் :—** இந்தக் கியாழத்தை மூன்று பாகமாகப் பங்கிட்டு நான்குமணி நேரத்திற்கு ஒருமுறை கொடுத்து வருக. இப்படி 3-நாள் 9-வேளை கொடுப்பது அவசியமாகும்.

**தீரும் வியாதி :—** சர்வ சுரமும் நீங்கும்.

**பத்தியம் :—** பார்லி அரிசி, கோதுமை நொய்க் கஞ்சிகளே சிறந்தது.

## 10. அஸ்திசுரக் கியாழம்

சரக்கு :—

| | |
|---|---|
| சீந்தில்கொடி | பேய்ப்புடல் |
| முத்தக்காசு | பற்பாடகம் |
| சுக்கு | கடுகுரோகணி |
| வெட்பாலையரிசி | |

இவைகள் வகைக்குக் கழஞ்சு-1. (5.1 கிராம்).

**செய்பாகம் :—** மேற்கூறப்பட்ட ஏழு சரக்குகளையும் நன்ருய் இடித்து ஒரு பழகிய மட்பாண்டத்தில் போட்டு ¼-படித் தண்ணீரைவிட்டு அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து அரைக்கால்படி அளவிற்குச் சுண்டிவரும் சமயம் வடித்து வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை மூன்று பாகமாகச் செய்து நான்குமணி நேரத்திற்கு ஒருமுறை கொடுக்கவும். இப்படித் தினம் மூன்று வேளையாகச் சில தினம் கொடுத்து வருதல் வேண்டும்.

தீரும் வியாதி :—அஸ்திசுரம், நீடித்த மாலைசுரம்.

பத்தியம் :—எளிதில் ஜீரணிக்கக்கூடிய அன்னம்.

## 11. சந்நி சுரத்திற்குக் கியாழம்

சரக்கு :—

| | |
|---|---|
| தூதுவளைவேர் | கொடிவேலிவேர் |
| மாவிலிங்கம்பட்டை | சுக்கு |
| மிளகு | திப்பிலி |
| சிற்றுமுட்டி | பேராமுட்டி |
| நெருஞ்சில்வேர் | பற்பாடகம் |
| எருக்கம்வேர் | மூத்தக்காசு |
| பாதிரிவேர் | |

இவைகள் வகைக்குப் பலம் - $\frac{1}{2}$.

செய்பாகம் :—மேற்குறிப்பிட்ட பதின்மூன்று சரக்குகளையும் ஒருமிக்கச் சேர்த்து நன்கு இடித்து ஆறு பாகமாகப் பங்கிட்டு வைத்துக்கொள்க. வேண்டும்போது ஒரு பாகத்தைப் பழகிய மட்பாண்டத்தில் போட்டு $\frac{1}{2}$-படித் தண்ணீரை விட்டு அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து $\frac{1}{8}$-படி யளவிற்குச் சுண்டக் காய்ச்சி ஆறவிட்டுப் பிசைந்து வடிகட்டி வைத்துக்கொள்க.

பிரயோகம் :—முன் சித்தப்படுத்திய கியாழத்தை மூன்று பாகமாகப் பங்கிட்டு நான்கு மணி நேரத்திற்கு ஒரு முறையாகக் கொடுத்துவருக. இப்படி 3-நாள் கொடுப்பது அவசியமாகும்.

தீரும் வியாதி :—சந்நிபாதசுரம் நிவர்த்தியாகும்.

பத்தியம் :—பார்லிக்கஞ்சி தவிர வேறொன்றும் ஆகாது.

## 12. தாகசுரத்திற்குக் கருக்குக் கியாழம்

சரக்கு :—

| | | |
|---|---|---|
| விலா இலை | கைப்பிடி | 1 |
| ஆடாதோடா இலை | ,, | 1 |
| அரசங்கொழுந்து | ,, | 1 |
| ஆற்றுமணல் | படி | ¼ |
| திராட்சைப்பழம் | வராகனெடை | 1 |
| அதிமதுரம் | ,, | 1 |

செய்பாகம் :—மேற்குறிப்பிட்டவைகளை யெல்லாம் ஒரு பழகிய மட்பாண்டத்தில் போட்டு அடுப்பிலேற்றி எரித்துக் கருகின சமயம் 1-படி தண்ணீர்விட்டுக் கால்படி அளவிற்குச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை மூன்று பாகமாகப் பங்கிட்டு நான்குமணி நேரத்திற்கு ஒருமுறை கொடுத்து வருக- குணம் ஏற்படுவதற்குத் தாமதப்பட்டால் மீண்டும் ஒருமுறை கியாழமிட்டு நான்குமணி நேரத்திற்கு ஒருமுறை இரவு காலத்திலும் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—சுரத்தின்பேரில் எத்தகைய கடினமுள்ளதாக விருப்பினும் குணமாகும்.

பத்தியம் :—பார்லிக்கஞ்சி தவிர வேறொன்றும் ஆகாது

## 13. வேறு முறை

சரக்கு:—

| | | |
|---|---|---|
| கறுப்புக்கம்பளி | கைப்பிடி | 1 |
| கேழ்வரகு | ,, | 1 |
| ஆலம்பழுப்பு | ,, | 1 |

செய்பாகம் :—மேற்கூறப்பட்ட மூன்று சரக்குகளை யும் ஒரு பழகிய புதுச்சட்டியில் போட்டு அடுப்பில் வைத்து எரித்து யாவும் கருகினவுடன் ஒரு வராகனெடை ஓமத் தைப் போட்டு வெடிக்க விட்டு ஒரு படி தண்ணீர் விட்டுச் சிறுக எரித்து $\frac{1}{4}$-படி அளவிற்குச் சுண்டி வருஞ் சமயம் வடிகட்டி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை நான்கு பாக மாகப் பங்கிட்டு மூன்று மணி நேரத்திற்கு ஒருமுறை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—சுரத்தின்மேல் கண்ட கடுந்தாகம் நீங்கும்.

பத்தியம் :—பார்லி அரிசிக்கஞ்சி தவிர வேறொன்றும் ஆகாது.

## 14. சுரத்தின்மேல் கண்ட தாகத்திற்கு கியாழம்

சரக்கு :—

| | |
|---|---|
| வில்வ இலை | ஏழிலைப்பாலைவேர் |
| அதிமதுரம் | கொத்துமல்லிவிதை |
| வெட்டிவேர் | பச்சைப்பயறு |
| கோஷ்டம் | |

இவைகள் வகைக்குப் பலம் - $\frac{1}{4}$.

செய்பாகம் :—மேற்கூறப்பட்ட ஏழு சரக்குகளையும் நன்கு இடித்து ஒரு பழகின குடிநீர்ப் பாண்டத்தில் போட்டு ½ படித் தண்ணீர்விட்டு அடுப்பில் வைத்துச் சிறுக எரித்து அரைக்கால்படி அளவிற்குச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை மூன்று பாக மாகப் பங்கிட்டு நான்கு மணி நேரத்திற்கு ஒருமுறை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—சுரத்தின்மேல் கண்ட தாகம் அடங்கும்.

பத்தியம் :—பார்லிக்கஞ்சி தவிர வேறு ஆகாது.

## 15. தோஷ சுரத்திற்குக் கியாழம்

சரக்கு :—

| | |
|---|---|
| திப்பிலி | ஏலம் |
| நெற்பொறி | அதிமதுரம் |
| கோஷ்டம் | ஏழிலைப்பாலைவேர் |
| திராட்சைப்பழம் | |

இவைகள் வகைக்குப் பலம் - ¼.

செய்பாகம் :—ஒரு பழகிய புதுச்சட்டியில் இரண்டு மூன்று மயிலிறகின் கண்களைப் போட்டு அடுப்பில் வைத்து எரித்துக் கருகினவுடன் மேற் குறிப்பிட்ட ஏழு சரக்குகளையும் ஒன்று மிரண்டுமாக இடித்துப் போட்டு ½-படித் தண்ணீர்விட்டு அரைக்கால் படி அளவிற்குச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்ளவும்.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை வேளைக்கு இரண்டு அவுன்ஸ் வீதம் தினம் 2-வேளை அல்லது 3-நாள் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—தாகம், விக்கல், வாய் குமட்டல் முதலிய தோஷங்களை யடைந்துள்ள சுரம் குணமாகும்.

பத்தியம் :—பார்லி அரிசிக் கஞ்சி தவிர வேறொன் றும் ஆகாது.

## 16. தருணசுரக் கியாழம்

சரக்கு :

| | |
|---|---|
| திப்பிலி | அதிமதுரம் |
| பற்பாடகம் | நன்னாரிவேர் |
| கோஷ்டம் | காஞ்சொறிவேர் |
| சிறுதேக்கு | கோரைக்கிழங்கு |
| தேவதாரு | பேய்ப்புடல் |
| மிளகு | சுக்கு |

இவைகள் வகைக்குப் பலம் - ¼.

செய்பாகம் :—இங்குக் கூறப்பட்ட பன்னிரண்டு சரக்குகளையும் நன்கு இடித்து மூன்று பாகமாகப் பங் கிட்டு அதனில் ஒரு பாகத்தை ஒரு பழகிய புதுச்சட்டியில் போட்டு ½ - படித் தண்ணீர் விட்டு அரைக்கால்படி அள விற்குச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை வேளைக்கு இரண்டு அவுன்ஸ் வீதம் தினம் 3-வேளை இரண்டு மூன்று நாள் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—பலவிதமான தொந்த சுரங்கள் குணமாகும்.

பத்தியம் :—முன் முறையில் கூறப்பட்டதே யாகும்.

## 17. குளிர் சுரத்திற்கு கியாழம்

சரக்கு :—

| | |
|---|---|
| ஆடாதோடை | சிறுவழுதுணை |
| தூதுவளை | பங்கம்பாளை |

இவைகள் வகைக்குக் கைப்பிடி - 1.

| | |
|---|---|
| முத்தக்காசு | பற்பாடகம் |
| சந்தனத்தூள் | நன்னாரிவேர் |

இவைகள் வகைக்குப் பலம் - ¼.

செய்பாகம் :—இவைகளை யெல்லாம் இடித்து ஒரு பழகிய புதுச்சட்டியில் போட்டு ½ - படித் தண்ணீர் விட்டு அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து ¼ - படி அளவிற்குச் சுண்டிவருஞ் சமயம் வடிகட்டி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை நான்கு பாகமாகப் பங்கிட்டு மூன்றுமணி நேரத்திற்கு ஒருமுறை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—இப்படி இரண்டு தினம் கொடுக்கக் குளிர் சுரம் நிவர்த்தியாகும்.

பத்தியம்:—சுரம் உள்ளவரையில் அன்னம் ஆகாது. பார்லி கஞ்சி, கோதுமை நொய்க்கஞ்சி முதலியவைகளே அதிகச் சிறந்தது.

## 18. வேறு முறை

சரக்கு :—

| | |
|---|---|
| நுணா ஈர்க்கு | கைப்பிடி 1 |
| முருங்கை ஈர்க்கு | ,, 1 |
| சிற்றரத்தை | பலம் ½ |
| பேரரத்தை | ,, ½ |

| | | |
|---|---|---|
| ஓமம் | பலம் | $\frac{1}{2}$ |
| செங்கல் சிட்டம் | ,, | $\frac{1}{2}$ |
| சுக்கு | ,, | $\frac{1}{2}$ |
| நாயுருவி | ,, | $\frac{1}{2}$ |

செய்பாகம் :—இவைதம்மை யிடித்து ஒரு பழகிய மட்பாண்டத்தில் போட்டு $\frac{1}{2}$ - படித் தண்ணீர் விட்டு அடுப்பில் வைத்துச் சிறுக எரித்து $\frac{1}{4}$ - படி அளவிற்குச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை நான்கு பாக மாகப் பங்கிட்டு மூன்றுமணி நேரத்திற்கு ஒருமுறை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—இப்படி இரண்டு மூன்று தினம் கொடுக்கக் குளிர் சுரம், மாறல் சுரம் குணமாகும்.

பத்தியம் :—சுரமுள்ளவரையில் அன்னம் ஆகாது கஞ்சிகளே சிறந்த பத்தியமாகும்.

## 19. பாண்டு, நீர்க்கோவை, மகோதரம் முதலியவற்றிற்கு அடைகியாழம்

சரக்கு :—

| | | |
|---|---|---|
| சிறுகீரைவேர் | பலம் | 10 |
| சுரைக்கொடி | ,, | 10 |
| கரிசலாங்கண்ணி | ,, | 10 |
| நீர்முள்ளி சமூலம் | ,, | 10 |
| கீழ்காய் நெல்லி | ,, | 10 |
| நெருஞ்சி சமூலம் | ,, | 10 |
| சுத்திமண்டூரம் | ,, | 20 |

செய்பாகம்:—இவற்றையெல்லாம் நன்றாய் இடித்து ஒரு குடி நீர்ப்பாண்டத்தில் போட்டு எட்டுப்படித் தண்

ணீர் விட்டு அடுப்பிலேற்றிச் சிறுக எரித்து இரண்டுபடி அளவிற்கு வருஞ்சமயம் கீழிறக்கி ஆறவிட்டு வாய் மூடி வைத்து விடுக.

பிரயோகம் :—வேண்டும்போது இந்தக் கியாழத்தைச் சிறிது நெருப்பனலில் வெதுப்பி வேளைக்கு 3-அவுன்ஸ் வீதம் வடிகட்டித் தினம் இருவேளையாகக் கொடுத்துவருக. குடிநீர்ப்பாண்டத்தில் நீர் சுண்டச் சுண்டக் கொஞ்சம் சுத்த சலம்விட்டு அடுப்பில் வைத்துச் சில நிமிஷம் சூடாக்கி வைத்துக்கொள்ளவும். இப்படிச் சில தினம் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—பாண்டு, நீர்க்கோவை, மகோதரம்.

பத்தியம் :—வெள்ளாட்டுப் பாலன்னம், வேண்டுமாயின் சிறிது வெள்ளைச் சர்க்கரை கூட்டிக்கொள்ளவும்.

## 20. சோகை, காமாலை, நீர்க்கோவை, மகோதரம் வீக்கம் முதலியவற்றிற்குக் கியாழம்

சரக்கு :—

நீர்முள்ளிவேர்
விழுதிவேர்
பூவரசம்பட்டை
சிவப்பு காஞ்சொறிவேர்
நாவல்துளிர்
சிறுகீரைவேர்
ஊஞ்சல்பட்டை
கீழ்காய் நெல்லிவேர்
கோவைத்தண்டு
கரிசலாங்கண்ணி
சிறுபீளைவேர்
செப்பு நெருஞ்சில்வேர்
நில ஆவாரை

இவைகள் வகைக்குப் பலம்-6.

கடுக்காய்
கருஞ்சீரகம்
சிறுதிப்பிலி
கடுகுரோகணி
காட்டுச்சீரகம்

இவைகள் வகைக்கு வராகனெடை-6.

செய்பாகம் :—மேற்குறிப்பிட்ட சரக்குகளை யெல்லாம் நன்கு இடித்து ஆறுபாகமாகப் பங்கிட்டு வைத்துக் கொள்க. வேண்டும்போது ஒரு பாகத்தை ஒரு பழகிய புதுச்சட்டியில் போட்டு 4-படி தண்ணீர்விட்டு அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்து ½-படி அளவிற்குச் சுண்டின சமயம் கீழிறக்கி ஆறவிட்டுப் பிசைந்து வடிகட்டி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை மூன்று பாகமாகப் பங்கிட்டு நான்கு மணி நேரத்திற்கு ஒரு முறை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—சோகை, காமாலை, வீக்கம், நீர்க்கோவை, பாண்டு, மகோதரம், பிலீகம், வயிற்றுப் பொருமல், மேற்சுவாசம் முதலியவைகள் குணமாகும்.

பத்தியம் :—பார்லிக்கஞ்சி.

குறிப்பு :—பிணி கடினமான நிலைமையில் இருப்பின், இக்கியாழத்தைக் கொடுப்பதற்குமுன் ஒவ்வொரு வேளையும் அயக்காந்த செந்தூரம், காந்த செந்தூரம், மண்டூரச் செந்தூரம் முதலியவற்றைத் தேனில் கொடுப்பது அதிக நன்மையைத் தரும்.

## 21. மஞ்சட்காமாலைக்குக் கியாழம்

சரக்கு :—

கீழ்காய் நெல்லிவேர்
சிறுநெருஞ்சில்வேர்
சீரகம்
பேய்ப்புடல்
வில்வவேர்
சிறுகீரைவேர்
கரிசலாங்கண்ணி
வெண்மிளகு
சோம்பு

இவைகள் வகைக்குக் கழஞ்சு-1.

செய்பாகம் :—இவை தம்மை இடித்து ஒரு பழகிய மட்பாண்டத்தில் போட்டு ¼-படித் தண்ணீர்விட்டு அடுப்பில் வைத்துச் சிறுக எரித்து அரைக்கால் படி அளவிற்குச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை வேளைக்கு 2-அவுன்ஸ் வீதம் நான்கு மணி நேரத்திற்கு ஒரு முறை கொடுத்து வருக. இப்படித் தினந்தோறும் புதியதாகக் கியாழமிட்டு 3-நாள் கொடுப்பது அவசியமாகும்.

தீரும் வியாதி :—மஞ்சட்காமாலை குணமாகும்.

பத்தியம் :—பால்சாதம்.

## 22. மேகவாயுவிற்குக் கியாழம்

சரக்கு :—

| | |
|---|---|
| நில ஆவாரை | பறங்கிச்சக்கை |
| சிற்றரத்தை | கடுகுரோகணி |
| சுக்கு | பேரரத்தை |
| சவுரிக்கொடிவேர் | மல்லிகைவேர் |
| முல்லைவேர் | புனல்தண்டு |
| குமிழம்பட்டை | நிலப்பனங்கிழங்கு |

இவைகள் வகைக்குப் பலம் - 1.

செய்பாகம் :—இவை தம்மை நன்கு இடித்து, எல்லாம் உறவான பதத்தில் ஆறு பாகமாகப் பங்கிட்டு வைத்துக் கொள்க. வேண்டும்போது ஒரு பாகத்தை ஒரு பழகிய குடிநீர்ப் பாண்டத்தில் போட்டு ½-படித் தண்ணீர் விட்டு அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்து அரைக்கால் படி அளவிற்குச் சுண்டின சமயம் கீழிறக்கி ஆறவிட்டுப் பிசைந்து வடிகட்டி வைத்துக் கொள்ளவும்.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை இருவேளையாகப் பங்கிட்டு அந்தி சந்தி கொடுக்கவும். இப்படிச் சில தினம், கொடுத்து வருதல் வேண்டும்.

தீரும் வியாதி :—கை கால் பிடிப்பு, முடக் குடைச்சல், வீக்கம் தீரும்.

பத்தியம் :—புளி தள்ளி இச்சாபத்தியம்.

## 23. வேறு முறை

சரக்கு :—

| | |
|---|---|
| பறங்கிச்சக்கை | சுக்கு |
| திப்பிலி | சிற்றரத்தை |
| கோஷ்டம் | சித்திரமூலம் |
| பிரப்பங்கிழங்கு | சோம்பு |
| சிறுவழுதுணைவேர் | தான்றிக்காய் |
| நெல்லிவற்றல் | பேரரத்தை |
| அக்கரகாரம் | அதிமதுரம் |
| சிறுகீரைவேர் | செவ்வியம் |
| கண்டுபாரங்கி | புனல்தண்டு |
| வால்மிளகு | கொததுமல்லிவிதை |
| சங்கம்வேர் | சிவனார்வேம்பு |
| கடுக்காய் | கண்டங்கத்திரி |

இவைகள் வகைக்குப் பலம் - ½.

செய்பாகம் :—இவைகளை யெல்லாம் ஒருமிக்கச் சேர்த்து இடித்து ஆறுபாகமாகப் பங்கிட்டு வைத்துக் கொள்க. வேண்டும்போது ஒரு பாகத்தை ஒரு பழகிய மட்பாண்டத்தில் போட்டு ½-படித் தண்ணீர் விட்டு அடுப்பில் வைத்துச் சிறுக எரித்து அரைக்கால் படி அளவிற்குச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்க.

**பிரயோகம் :—**இந்தக் கியாழத்தை வேளைக்கு இரண்டு அவுன்ஸ் வீதம் நான்கு மணி நேரத்திற்கு ஒரு முறை கொடுத்து வருக. இப்படி 3-நாள் கொடுப்பது அவசியமாகும்.

**தீரும் வியாதி :—**மேக வாயுவினு லுண்டான கை கால் பிடிப்பு, வீக்கம், வலி, குடைச்சல் முதலியவை குண மாகும்.

**பத்தியம் :—**புளி தள்ளி இச்சாபத்தியம்

## 24. சூலைக்குக் கியாழம்

**சரக்கு :—**

| | |
|---|---|
| சிவனார்வேம்பு | நற்சங்கம்வேர் |
| கொளுஞ்சிவேர் | சித்திரமூலம்வேர் |
| அசுவகந்தி | வெள்ளருகு |
| சங்கங்குப்பிவேர் | பிரப்பங்கிழங்கு |
| பூவரசம்பட்டை | சுக்கு |
| வாய்விளங்கம் | காட்டுச்சீரகம் |

இவைகள் வகைக்குப் பலம்-1.

**செய்பாகம் ;—**இவைதம்மை நன்கு இடித்து எல்லாம் உறவான பதத்தில் ஆறு பாகமாகப் பங்கிட்டு வைத்துக்கொள்க. வேண்டும்போது ஒரு பாகத்தைப் பழகிய புதுச்சட்டியில் போட்டு ஒருபடித் தண்ணீர்விட்டு அடுப்பிலேற்றி அதனில் ¼-பலம் பறங்கிச்சக்கையை இடித்துச் சீலையில் கிழிகட்டிப் போட்டுச் சிறுக எரித்து ¼-படி அளவிற்குச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி எடுத்துக் கொள்ளவும். பிறகு கிழிகட்டிப் போட்டுள்ள பறங்கிச் சக்கையை மெழுகுவண்ணம் அரைத்து முன் சித்தப் படுத்தி வைத்துள்ள கியாழத்தில் உறவாகும்படி கலக்கி விடவும்.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை நன்ருய்க் கலக்கி மூன்று பாகமாகப் பங்கிட்டு நான்குமணி நேரத்திற்கு ஒருமுறை கொடுத்து வருக. இப்படிச் சில தினம் கொடுப்பது அவசியமாகும்.

தீரும் வியாதி :—இதனுல் பதினெட்டு விதமான சூலைகளும் குணமாகும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 25. அண்டவாயுவுக்குக் கியாழம்

சரக்கு :—

| | |
|---|---|
| புனல்தண்டு | திருகுக்கள்ளிவேர் |
| தழுதாழை | சிறுதுத்தி |
| முடக்கத்தான் | வேப்பம்பட்டை |
| சங்கங்குப்பிவேர் | உத்தாமணி |
| வெண்ணெச்சி | பிரப்பங்கிழங்கு |
| குதிரைக்குளம்படியிலை | வெள்ளுள்ளி |

இவைகள் வகைக்குப் பலம்-1.

செய்பாகம் :—இவை தம்மை நன்ருய் இடித்து ஆறு பாகமாகப் பங்கிட்டு ஒரு பாகத்தை ஒரு பழகிய புதுச் சட்டியில் போட்டு ½-படித் தண்ணீர்விட்டு அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்து அரைக்கால் படி யளவாகச் சுண்டக்காய்ச்சி வடிகட்டி வைத்துக்கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை வேளைக்கு இரண்டு அவுன்ஸ் வீதம் நான்கு மணி நேரத்திற்கு ஒருமுறை கொடுத்துவருக. இப்படி 6-நாள் கொடுக்கவேண்டியது அவசிய மேற்படும்.

தீரும் வியாதி :—அண்டவாயு குணமாகும்.

பத்தியம் :—புளி தள்ளி இச்சாபத்தியம்.

## 26. வாயுவுக்குக் கியாழம்

சரக்கு :—

| | |
|---|---|
| கொடிவேலிவேர்ப்பட்டை | பறங்கிச்சக்கை |
| பிரப்பங்கிழங்கு | சுக்கு |

வகைக்குப் பலம் - ¼.

செய்பாகம்:—இவற்றை யெல்லாம் நன்ருய் இடித்து ஒரு புதுச்சட்டியில் போட்டு ½-படி தண்ணீர்விட்டு அடுப்பி லேற்றிச் சிறு தீயாக எரித்து அரைக்கால் படி அளவிற் குச் சுண்டி வருஞ்சமயம் வடிகட்டி வைத்துக்கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை மூன்று பாக மாகப் பங்கிட்டு நான்கு மணி நேரத்திற்கு ஒரு முறை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—தேகத்தில் ஓடி ஓடி உபத்திரவம் செய்கின்ற வாதம், தேகக்கடுப்பு, கைகால் குடைச்சல் குணமாகும்.

பத்தியம் :—புளிதள்ளி இச்சாபத்தியம்.

## 27. அஜீரண பேதிக்குக் கியாழம்

சரக்கும் செய்பாகமும் :—ஒரு பழகிய புதுச்சட்டி யை அடுப்பில் வைத்து எரித்துச் சூடேறிய சமயம் ஒரு வராகனெடை ஓமத்தைப் போட்டு வறுக்க வெடி கிளம் பும் அச்சமயம் சுட்டு எடுத்த வசம்பு வராகனெடை-1, தேறின மிளகு வராகனெடை 1½ வீதம் பொடித்துப் போட்டு அதனுடன் ஒரு பிடி அன்னக்காடியிலுள்ள சோறுகூட்டி ½-படித் தண்ணீர்விட்டுச் சிறுக எரித்து அரைக்கால படி அளவிற்குச் சுண்டி வரும்போது வடி கட்டி வைத்துக்கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை ஒரே வேளையாக உள்ளுக்குக் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—அஜீரணம் நீங்கும், பேதி கட்டும்.

பத்தியம் ;—அரருட்மாவு கஞ்சி கொடுத்தல் நலம். பேதி நின்று இருபத்துநான்கு மணிநேரம் சென்றபின் இலகுவாக ஜீரணிக்கக் கூடிய அன்னங் கூட்டவும்.

## 28. உஷ்ண பேதிக்குக் கியாழம்

சரக்கும் செய்பாகமும் :—ஒரு பழகிய புதுச்சட்டியை அடுப்பில் வைத்துச் சூடேறின சமயம் ஒரு வராகனெடை வசம்பு துண்டைப் போட்டுக் கருகிச் சாம்பலாக்கி அதனில் ஒரு பிடி நுணா இலையைப் போட்டுக் காந்தாமலும் கருகாமலும் வறுத்து ஒரு வராகனெடை ஓமத்தைப் போட்டுக் கிண்டிப் படபடவென்று வெடி கிளம்பும்போது ½ - படித் தண்ணீர் விட்டுச் சிறு தீயாக எரித்து அரைக்கால் படி அளவிற்குச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை ஒரே வேளையாகக் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—உஷ்ண வாயுவினால் படபடவென்று சப்தத்துடன் இரைந்து பேதியாவதைக் குணப்படுத்தும்.

பத்தியம் :—அரருட்மாவு கஞ்சி ஆகும். பேதி நின்று இருபத்து நான்கு மணி நேரம் சென்றபின் இலகு போஜனம் செய்யலாம்.

## 29. சீதபேதிக்குக் கியாழம்

சரக்கு :—

| | |
|---|---|
| வட்டத்திருப்பி | போஸ்தக்காய் |
| சிறுநாகப்பூ | அதிவிடயம் |
| கடுக்காய்ப்பூ | |

இவைகள் வகைக்கு வராகனெடை - $1\frac{1}{2}$.

செய்பாகம் :—ஒரு பழகிய புதுச்சட்டியை அடுப்பில் வைத்துச் சிறுக எரித்து ஒரு மயிலிறகின் கண்ணைப் போட்டுக் கருக்கி அதில் மேற்கூறப்பட்ட ஐந்து சரக்குகளையும் ஒன்றிரண்டாக இடித்துப் போட்டு $\frac{1}{4}$ - படித் தண்ணீர்விட்டு அரைக்கால்படி அளவிற்குச் சுண்டிவருஞ் சமயம் வடிகட்டி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை இருபாகமாகப் பங்கிட்டு அந்தி சந்தி கொடுக்கவும்.

தீரும் வியாதி :—இப்படி மூன்று நான்கு முறை கொடுத்து வருவதற்குள் சீதபேதி குணமாகும்.

பத்தியம் :—மோர் சாதம், பால் சாதம் ஆகும், வியாதி குணமானபின் சில நாள் காரத்தை மட்டுப்படுத்தி அன்னம் கொள்ள வேண்டும்.

## 30. இரத்தக் கக்கலுக்குக் கியாழம்

சரக்கும் செய்பாகமும் :—அவல் அரக்கை ஒரு பலம் எடைக்கு ஒரு பழகிய புதுச்சட்டியில் போட்டு $\frac{1}{2}$ - படித் தண்ணீர் விட்டு அடுப்பில் வைத்து எரித்து அரக்கு கறுத்தவுடன் திப்பிலி, சீரகம், கிராம்பு வகைக்குக் கால் வராகனெடையாகப் பொடித்துப் போட்டு அரைக்கால்படி அளவிற்குச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை மூன்று பாக மாகப் பங்கிட்டு நான்குமணி நேரத்திற்கு ஒருமுறை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—இரத்தம் கக்கல், வாந்தி முதலி யவை குணமாகும்.

பத்தியம் :—இச்சா பத்தியம்.

## 31. இரத்த பேதிக்குக் கியாழம்

சரக்கும் செய்பாகமும் :—ஒரு பழகிய புதுச் சட்டி யை அடுப்பில் வைத்து எரித்து அதில் $\frac{1}{4}$ பலம் மிளகைப் போட்டு வறுத்துச் சாம்பலாக்கி அதனில் $\frac{1}{4}$-பலம் தனியா அரைக்கால் பலம் கறிவேப்பிலை ஈர்க்கு போட்டுக் காந்தா மலும் கருகாமலும் வறுத்து $\frac{1}{4}$-படித் தண்ணீர் விட்டு சிறு தீயாக எரிக்கவும். அச் சமயம் மேல் தோல் சீவி சுத்தப்படுத்திய சுக்கை சிறிது சலம் விட்டுக் கெட்டிப் பதமாக அரைத்துச் சிறு கழற்சிக்கொட்டைப் பிரமாணம் மூன்று உருண்டைகள் செய்து போட்டுக் கியாழம் அரைக்கால்படி அளவாக சுண்டிவரும் சமயம் கீழிறக்கி ஆறவிட்டு வெந்துள்ள உருண்டைகளை எடுத்து வைத் துக்கொண்டு கியாழத்தை வடிகட்டிக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை மூன்று பாக மாகப் பங்கிட்டு நான்கு மணி நேரத்திற்கு ஒருமுறை கியாழத்தையும் உருண்டைகளிலொன்றையும் கொடுத்து வருக. இப்படிச் சில வேளை கொடுத்து வருதல் பூரண சுகத்திற்கு இடமாகும்.

தீரும் வியாதி :—இரத்தபேதி குணமாகும்.

பத்தியம் :—காரசாரமற்ற இலகு போஜனம் கூட் டவும்.

## 32. கெர்ப்பிணிகளுக்கு மாதவிலக்கத்தைப்போல் உதிரம் காணில் கியாழம்

சரக்கு :—

வல்லாரை இலை
வெள்ளை வெங்காயம்
சீரகம்
இவைகள் வகைக்குப் பலம்-1.

செய்பாகம் :—இவைகளைச் சிதைத்து ஒரு பழகிய புதுச்சட்டியில் போட்டு ½-படித் தண்ணீர்விட்டு அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்து ¼-படி அளவிற்குச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி வைத்துக்கொள்ளவும்.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை மூன்று பாகமாகப் பங்கிட்டு நான்குமணி நேரத்திற்கு ஒருமுறை கொடுத்து வருக.

தீரும் வியாதி:—கெர்ப்பமாக இருக்கும்போது அதிக உஷ்ணத்தினால் காணுகின்ற உதிரப்போக்கை நிறுத்தும்.

பத்தியம் :—காரசாரமற்ற ஆகாரம் கொள்வதுடன் படுக்கையில் இருக்கவேண்டும். தேகத்தை எவ்விதத்திலும் அலட்டக்கூடாது.

## 33. பிரசவித்த ஸ்திரீகளுக்கு அழுக்கு வெளிப்படக் கியாழம்

சரக்கு :—

| | |
|---|---|
| மூங்கில் இலை | நாயுருவி |
| வாழையிலைச்சருகு | முள்ளுக்கீரைத்தண்டு |

வகைக்குப் பலம்-½.

செய்பாகம்:—மேற்கூறப்பட்ட சரக்குகளை நன்றாய் இடித்து ஒரு பழகின புதுச்சட்டியில் போட்டு ½-படித் தண்

ணீர் விட்டு அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து அரைக் கால் படி அளவிற்குச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை இரு வேளையாகப் பங்கிட்டு அந்தி சந்தி கொடுக்கவும். இப்படி 2, 3-நாள் கொடுப்பது அவசியமாகும்.

தீரும் வியாதி :—பிரசவித்த பின்பு அழுக்குத் தங்கியிருக்குமாயின் அதனை வெளிப்படுத்தும்.

பத்தியம் :—ரொட்டி, காப்பி.

## 34. வெகுமூத்திரத்திற்குக் கியாழம்

சரக்கு :—

| | |
|---|---|
| ஆவாரம்வேர்ப்பட்டை | கடற்றேங்காய் |
| சரக்கொன்றைவேர்ப்பட்டை | கோஷ்டம் |
| நாவல்வேர்ப்பட்டை | மருதம்பட்டை |

இவைகள் வகைக்குப் பலம்-¼.

செய்பாகம் :—இங்குக் குறிப்பிட்டுள்ள ஆறு சரக்குகளையும் நன்றாய் இடித்து ஒரு பழகிய குடிநீர்ப் பாண்டத்தில் போட்டு ஒருபடி தண்ணீர்விட்டு அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்து அரைக்கால் படி அளவிற்குச் சுண்டக் காய்ச்சி வடித்து வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தை வேளைக்கு இரண்டு அவுன்ஸ் வீதம் நான்குமணி நேரத்திற்கு ஒரு முறை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—மதுமேகம், நீரிழிவு குணமாகும்.

இந்தக் கியாழத்தைக் கொடுப்பதற்குக் கால்மணி நேரத்திற்கு முன் தனி அப்பிரகச் செந்தூரத்தையாவது

அல்லது அப்பிரகச் செந்தூரத்துடன் சிறிது காந்தச் செந்தூரம் கூட்டியாவது கொடுத்துவர அதிக நன்மையைத் தரும்.

பத்தியம் :—இனிப்புப் பண்டங்களைத் தள்ளி இச்சா பத்தியமாக இருத்தல் வேண்டும்.

## 35. பித்தத்தாலுண்டான தேக எரிச்சலுக்குக் கியாழம்

சரக்கு :—

| | |
|---|---|
| அத்திப்பட்டை | ஓதியம்பட்டை |
| நாவல் பட்டை | நெருஞ்சில்வேர் |
| கீழ்காய்நெல்லிவேர் | பொன்னுங்காணி |
| சிற்ருமுட்டி | பேராமுட்டி |
| இலவமரவேர் | நெற்பொரி |
| ஓரிலைத்தாமரை | ஆவாரம்வேர் |
| சீரகம் | விளாம்பிசின் |

இவைகள் வகைக்குப் பலம் - 1.

செய்பாகம் :—இங்குக் கூறப்பட்ட பதிஞன்கு சரக்குகளையும் ஒருமிக்கச் சேர்த்து இடித்து எட்டுப் பாகமாகப் பங்கிட்டு வைத்துக்கொண்டு வேண்டும்போது ஒரு பாகத்தை ஒரு பழகிய புதுச்சட்டியில் போட்டு ½-படித் தண்ணீர் விட்டு அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து அரைக்கால் படி அளவிற்குச் சுண்டி வரும்போது கீழிறக்கி ஆறவிட்டுப் பிசைந்து வடிகட்டி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தில் வேளைக்கு இரண்டு அவுன்ஸ் வீதம் நான்கு மணி நேரத்திற்கு ஒரு முறை கொடுத்துக் கொண்டு வருக.

தீரும் வியாதி:—பித்தத்தாலுண்டான தேக எரிச்சல், நமைச்சல், பித்தத்தாலெழுந்த தழும்பு குணமாகும்.

பத்தியம் :—பித்தத்தை விருத்தி செய்யக் கூடிய பண்டங்களைத் தள்ளி இச்சா பத்தியமாக இருத்தல் வேண்டும்.

## 36. வேறு முறை

சரக்கு :—

| | |
|---|---|
| நெல்லிவற்றல் | வில்வப்பழத்தின் ஓடு |
| சீரகம் | சுக்கு |
| சிற்றுமுட்டி | நெற்பொறி |

இவைகள் வகைக்குப் பலம் - $\frac{1}{4}$.

செய்பாகம்:—இங்குக் கூறப்பட்ட ஆறு சரக்குகளையும் நன்ருய் இடித்து ஒரு பழகிய புதுச்சட்டியில் போட்டு $\frac{1}{2}$ - படித் தண்ணீர் விட்டு அடுப்பில் வைத்துச் சிறுக எரித்து அரைக்கால் படி அளவிற்குச் சுண்டி வரும் போது கீழிறக்கி ஆறவிட்டு வடிகட்டி வைத்துக் கொள்க.

பிரயோகம்:—இந்தக் கியாழத்தில் வேளைக்கு இரண்டு அவுன்ஸ் வீதம் நான்கு மணி நேரத்திற்கு ஒரு முறை கொடுத்து வருக. இவ்வாறு மூன்று நாள் அப்போதைக்கப்போது புதியதாகக் கியாழமிட்டுக் கொடுப்பது ஆவசியமாகும்.

தீரும் வியாதி :—பித்த சம்பந்தமான தேக எரிச்சல், தேகத்திலுண்டான நமை தடிப்புக் குணமாகும்.

பத்தியம் :—முன் முறையில் கூறப்பட்டதே யாகும்.

## 37. சுவுாசகாசத்திற்குக் கியாழம்

சரக்கு :—

| | |
|---|---|
| கருங்காஞ்சொறிவேர் | கண்டங்கத்திரிவேர் |
| மிளகரணைவேர் | முள்காரைவேர் |
| பிரண்டைவேர் | விழுதிவேர் |
| ஆடாதோடைவேர் | கருஞ்சீரகம் |

இவைகள் வகைக்கு வராகனெடை - 1.

செய்பாகம் :—இங்குக் கூறப்பட்ட எட்டு சரக்கு களையும் நன்கு இடித்து ஒரு புதுச்சட்டியில் போட்டு ¼ - படித் தண்ணீர் விட்டு அடுப்பில் வைத்துச் சிறுக எரித்து வீசம்படி யளவாகச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தில் வேளைக்கு ஒரு அவுன்ஸ் வீதம் நான்கு மணி நேரத்திற்கு ஒரு முறை கொடுத்து வருக. இவ்வாறு 3-நாள் ஒன்பது வேளை கொடுப்பதற்குள் மிகுந்த குணத்தைக் கொடுக்கும்.

தீரும் வியாதி :—சுவாசகாசம், இருமல் குணமாகும்.

பத்தியம் :—சீதள பண்டம் நீக்கி இச்சாபத்தியமாக அன்னம் கொள்வது சாலச் சிறந்தது.

இந்தக் கியாழத்தைக் கொடுப்பதற்குக் கால்மணி நேரத்திற்கு முன் ஒவ்வொரு தடவையும் ஒரு குன்றி யெடை சிங்கி பற்பத்துடன் ½ - குன்றி பவளபற்பம் கூட்டித் தேனில் மத்தித்துக் கொடுத்து வருதல் அதிக நன்மையைத் தரும்.

## 38. சீதள இருமலுக்குக் கியாழம்

சரக்கும் செய்பாகமும் :—முசுமுசுக்கையிலை, தே
பிலை, புழுங்கலரிசி வகைக்கு ஒரு கைப்பிடி அளவு ஒ
புதிய சட்டியில் போட்டு அடுப்பில் வைத்து எரித்து
கருகின சமயம் மத்துக்கொண்டு கடைந்து சாம்
லாக்கி அதனில் சுக்கு, சிற்றரத்தை, மிளகு வகைக்கு
ஒரு வராகனெடையாகப் பொடிசெய்து போட்டு ½-படித்
தண்ணீர்விட்டு அரைக்கால்படி அளவிற்குச் சுண்டக்
காய்ச்சி வடிகட்டி வைத்துக்கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தில் வேளைக்கு
இரண்டு அவுன்ஸ் வீதம் தினம் 3-வேளைக் கொடுத்து
வருக.

தீரும் வியாதி :—சீதள சம்பந்தமான இருமல் குண
மாகும்.

பத்தியம் :—கபத்தை விருத்தி செய்யக்கூடிய பண்
டங்களைத் தள்ளி இச்சா பத்தியமாக அன்னம் கொள்ளவ்
வேண்டும்.

## 39. வேறு முறை

சரக்கு :—

| | |
|---|---|
| அறுகங்கட்டை | |
| தூதுவளை | மிளகு |
| பிரண்டை | சங்கம்வேர் |
| சுக்கு | கடுக்காய் |
| இம்புராவேர் | ஆதண்டம்வேர் |
| | ஆடாதோடைவேர் |

இவைகள் வகைக்குப் பலம் ½.

செய்பாகம் :—மேற் கூறப்பட்ட சரக்குகளை யெல்
லாம் ஒரு மிக்க இடித்து ஒரு பழகிய புதுச்சட்டியில்

போட்டு ½-படித் தண்ணீர் விட்டு அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்து அரைக்கால் படி அளவிற்குச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்ளவும்.

**பிரயோகம் :—**இந்தக் கியாழத்தில் வேளைக்கு இரண்டு அவுன்ஸ் வீதம் தினம் 3-வேளை கொடுக்கவும் இப்படி மூன்று நாள் கொடுத்தல் நன்று

**தீரும் வியாதி :—**சீதள சம்பந்தமான இருமல் குண மாகும்.

**பத்தியம் :—**முன் முறையில் கூறப்பட்டதே யாகும்.

## 40. உஷ்ணவறட்சியினுல் காணும் இருமலுக்குக் கியாழம்

**சரக்கும் செய்பாகமும் :—**அதிமதுரம், கொட்டை நீக்கிய பேரீச்சங்காய், சிற்றரத்தை, சுக்கு இவைகளை வகைக்கு ஒரு பலம் வீதம் நன்கு இடித்து நான்கு பாக மாகப் பங்கிட்டு வைத்துக்கொள்ளவும். வேண்டும்போது ஒரு பாகத்தை சீலையில் தளர்ச்சியாகக் கிழிகட்டி ஒரு பழகிய புதுச்சட்டியில் போட்டு அரைக்கால் படி பசுவின் பாலையும் அரைக்கால்படித் தண்ணீரையும் விட்டு அடுப்பி லேற்றி எரித்துத் தண்ணீர் சுண்டிப் பால் இருக்கும் அள விற்குக் கீழிறக்கி ஆறவிட்டு முடிச்சை நீக்கிவிட்டு போதிய அளவு சீனுக் கற்கண்டுத்தூள் போட்டுக் கலக்கி வைத்துக்கொள்க.

**பிரயோகம் :—**இந்தக் கியாழத்தை ஒரே தடவையா கக் காலையில் கொடுக்கவும். இப்படியே மாலையிலும் ஒரு வேளை கொடுக்கவும். இவ்வாறு இரண்டு மூன்று நாள் உட்கொள்வது அவசியமாகும்.

தீரும் வியாதி:-உஷ்ணத்தினுல் புகைந்து புகைந்து வரும்படியான வறட்டு இருமலைக் குணப்படுத்தும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 41. உஷ்ணத்தினு லுண்டான வயிற்று வலிக்குக் கியாழம்

சரக்கும் செய்பாகமும் :—அறுகம்வேர், நெருஞ்சில் வேர், முருங்கை ஈர்க்கு இம்மூன்றையும் வகைக்கு ஒருகைப் பிடி அளவிற்த எடுத்துப் பொடியாக நறுக்கி ஒரு பழகின புதுச்சட்டியில் போட்டு அடுப்பில் வைத்து எரித்து இளம் வறுப்பாக வறுத்து அதனில் சீரகம், மிளகு, கசகசா வகைக்கு 2-வராகனெடையாக இடித்துப் போட்டு ஒரு படித் தண்ணீர்விட்டு அரைக்கால் படி அளவிற்தச் சுண்டக்காய்ச்சி வைத்துக்கொள்க.

பிரயோகம் :—முன் சித்தப்படுத்தியுள்ள கியாழத் தைத் தாளக்கூடிய சூட்டில் $1\frac{1}{4}$-வராகனெடை பசுவின் வெண்ணெய் கூட்டிக் கலக்கி ஒரே வேளையாகக் கொடுக் கவும்.

தீரும் வியாதி:—உஷ்ணத்தினு லுண்டான வயிற்று வலி, வயிற்றுக்கடுப்பு குணமாகும். இப்படி மூன்று நாள் கொடுக்க தேகக் காங்கை குணமாகும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 42. வெட்டை என்னும் சூட்டிற்குக் கியாழம்

சரக்கும் செய்பாகமும் :—இளநீர் படி-3, எலுமிச்சம் பழச்சாறு படி-1, கற்சுண்ணும்புத் தெளிவுநீர் படி - $\frac{1}{2}$, சோற்றுக் கற்றாழைச்சாறு பலம்-6, இவைகளை யெல்லாம்

ஒருமிக்கக் கலந்து ஒரு பழகிய புதுச்சட்டியில் விட்டு அதனில் சீரகம், ஏலக்காய், அரிசி வகைக்குப் பலம்-½ ஆக இடித்துப் போட்டு மெல்லிய சீலையால் வாய் மூடிக் கட்டி ஈரமணலின்பேரில் வைத்து விடவும். இப் பாண்டம் 10-நாள் வரையில் இரவு காலத்தில் பனியிலும் பகல் காலத்தில் நிழலிலுமாக இருக்க வேண்டும்.

பிரயோகம் :—முன் சித்தப்படுத்திய ஊறல் கியாழத்தை வேளைக்கு அரைக்கால் படி வீதம் அந்தி சந்தி வடிகட்டிக் கொடுத்துக் கொண்டு வருக.

தீரும் வியாதி :—நீரெரிச்சல், இரத்தப் பிரமேகம், சீழ்ப்பிரமேகம், உள்ளெரிவு, நீர்க்கடுப்பு முதலிய பல ரோகங்கள் தீரும்.

பத்தியம் :—காரசாரமற்ற அன்னம் கொள்ளல் வேண்டும்.

## 43. குழந்தைகட்குச் சுரக் கியாழம்

சரக்கு:—

நல்லதுளசி
நாய்த்துளசி
முசுமுசுக்கை

இவைகள் வகைக்குப் பலம் - ½.

சிறுதேக்கு
தாளிசபத்திரி
சுக்கு
சிற்றரத்தை
திப்பிலி

இவைகள் வகைக்கு வராகனெடை - 1.

செய்பாகம் :—இவை தம்மை இடித்து ஆறு பாகமாக்கி ஒரு பங்கைப் பழகிய புதுச்சட்டியில் போட்டு ஆறு அவுன்ஸ் தண்ணீர் விட்டு அடுப்பிலேற்றி இரண்டு அவுன்ஸ் அளவாகக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்க.

**பிரயோகம் :**—இந்தக் கியாழத்தை நான்கு பாக மாகப் பங்கிட்டு மூன்று மணி நேரத்திற்கு ஒருமுறை கொடுத்து வருக.

**தீரும் வியாதி :**—குழந்தைகளுக்குக் காணுகின்ற சுரம் போகும்.

**பத்தியம் :**—பாலுண்ணும் குழந்தைகட்குக் கொடுக் கும்போது தாய் சீதளப் பண்டங்களை நீக்கி இச்சா பத்தியமாக இருத்தல் வேண்டும். இந்தக் கியாழத்துடன் சுரத்தை நீக்கக்கூடிய ஏதேனும் ஒரு மாத்திரையைச் சேர்த்துக் கொடுப்பது நன்று.

## 44. குழந்தைகளுக்கு மாந்தக் கியாழம்

**சரக்கு :**—

| | |
|---|---|
| வசம்பு சுட்டகரி | சடாமாஞ்சி |
| பூண்டு | சுக்கு |
| திப்பிலி | மிளகு |
| ஓமம் | கருஞ்சீரகம் |
| வட்டத்திருப்பி | சிற்றரத்தை |
| நிலவேம்பு | சுட்டெடுத்த ஆமை ஓடு |

இவைகள் வகைக்கு வராகனெடை - 1.

**செய்பாகம் !**—மேற் குறிப்பிட்ட சரக்குகளை யெல் லாம் நன்கு இடித்து ஒருமிக்கக் கலந்தபின் இரு பாக மாகப் பங்கிட்டு அதனில் ஒரு பாகத்தைப் பழகிய புதுச் சட்டியில் போட்டு ¼-படித் தண்ணீர் விட்டு அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்து வீசம் படி அளவிற்குச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்க.

**பிரயோகம் :**—குழந்தைகளுக்கு வேளைக்கு 1, 2 தேக்கரண்டி வீதம் தினம் 3-அல்லது 4-வேளை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—மாந்தம் என்று பொதுவாகக் கூறப்பட்ட வயிற்றுக் கழிச்சல், செரியாமை, சுரம், கபத்திநுபரி குணமாகும். இப்படித் தினம் புதியதாகக் கியாழமிட்டு 2, 3-நாள் கொடுக்க வேண்டும்.

பத்தியம்:—பாலுண்ணும் குழந்தைகளுக்குக் கொடுக்கும்போது தாய் புளி தள்ளி இச்சாபத்தியமாக அன்னங் கொள்ள வேண்டும்.

## 45. வேறு முறை

சரக்கு :—

| | |
|---|---|
| நிலத்துளசி | நல்ல துளசி |
| காவட்டம்புல் | சிற்றுமுட்டி |
| பேராமுட்டி | பெருங்கிழங்கு |
| சூரியகாந்தி | விஷ்ணுகிரந்தி |
| கோரைக்கிழங்கு | சீக்கிரான்பட்டை |

இவைகள் வகைக்கு வராகனெடை - 1.

செய்பாகம் :—இங்குக் குறிப்பிட்டுள்ள பத்துச் சரக்குகளையும் நன்றாய் இடித்து ஒரு பழகிய புதுச்சட்டியில் போட்டு $\frac{1}{4}$-படித் தண்ணீர்விட்டு அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்து வீசம் படி அளவிற்குச் சுண்டி வரும்போது வடிகட்டி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தைக் குழந்தைகட்கு வேளைக்கு 1-2 தேக்கரண்டி அளவு 3-மணி நேரத்திற்கு ஒரு முறை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—குழந்தைகட்குக் காணுகின்ற மாந்தம் குணமாகும்.

பத்தியம் :—முன் முறையில் கூறப்பட்டதேயாகும்.

மாந்தம்

## 46. வேறு முறை

சரக்கு :—

| | |
|---|---|
| ஆடாதோடை | பேய்ப்புடல் |
| சீந்தில்கொடி | பற்பாடகம் |
| கண்டங்கத்திரி | நிலவேம்பு |
| சுக்கு | |

இவைகள் வகைக்கு வராகனெடை-2.

செய்பாகம் :—இவற்றை யெல்லாம் இடித்து ஒரு பழகிய புதுச்சட்டியில் போட்டு ½-படித் தண்ணீர் விட்டு அடுப்பில் வைத்துச் சிறுக எரித்து வீசம் படி அளவிற்குச் சுண்டின சமயம் வடிகட்டி எடுத்துக் கொள்க.

பிரயோகம் :—குழந்தைகளுக்கு இந்தக் கியாழத்தில் வேளைக்கு 1 - 2 தேக்கரண்டி அளவு தினம் 3 - 4 வேளை கொடுத்து வருக. இப்படி 2 - 3 நாள் கொடுக்க வேண்டும்.

தீரும் வியாதி :—சர்வ மாந்தம் குணமாகும்.

பத்தியம் :—முன் முறையில் கூறப்பட்டதே யாகும்.

வேறு முறை

## 47. பேதி, வாந்தி, அஜீரணம், விக்கல் மிகுந்திருப்பின்

சரக்கும் செய்பாகமும் :—ஒரு ஆமணக்கு இலையுடன் சிறிது உப்புக் கூட்டி இடித்து ஒரு பழகிய புதுச்சட்டியில் போட்டு அதனில் வட்டத்திருப்பி, வசம்பு, மயிலிறகு, கறுப்புப்பட்டுத் துணி, மிளகு வகைக்கு ஒரு வராகனெடை நறுக்கிப்போட்டு அடுப்பில் வைத்து எரித்து எல்லாம் கருகின சமயம் ½-வராகனெடை கருஞ்சீரகம் போட்டுப் படபடவென்று வெடிக்கும்போது சுக்கு, சிற்றரத்தை

வகைக்கு ½-வராகனெடையாகப் பொடித்துப் போட்டு ½-படித் தண்ணீர்விட்டு வீசம்படி யளவிற்குச் சுண்டி வரும்போது வடிகட்டி வைத்துக்கொள்க.

**பிரயோகம் :—** இந்தக் கியாழத்தைக் குழந்தைகட்கு வேளைக்கு 1 - 2 தேக்கரண்டி அளவு தினம் 3 - 4 வேளை கொடுத்து வருக-

**தீரும் வியாதி :—** மாந்த சுரமும் அதன் நிமித்தம் ஏற்பட்ட பல தோஷங்களும் நிவர்த்தியாகும்.

**பத்தியம் :—** முன் முறையில் கூறப்பட்டதேயாகும்.

## 48. மாந்தக் கியாழம்

**சரக்கு :— 1**

| | |
|---|---|
| மிளகு | ஓமம் |
| சுட்டவசம்பு | கம்மாறு வெற்றிலை |

இவைகள் வகைக்கு வராகனெடை - 2.

**சரக்கு :— 2**

கருஞ்சீரகம் வராகனெடை - 1.

**செய்பாகம் :—** முதலாவது அங்கத்தில் கூறப்பட்ட நான்கு சரக்குகளையும் ஒரு புதுச் சட்டியில் போட்டு அடுப்பில் வைத்து எரித்துச் சாம்பலானவுடன் இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்ட சரக்கைப் போட்டு வெடிக்கவிட்டு ½-படித் தண்ணீர் விட்டு வீசம்படி அளவிற்குச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்க.

**பிரயோகம் :—** இந்தக் கியாழத்தைக் குழந்தைகளுக்கு வேளைக்கு இரண்டு தேக்கரண்டி அளவு தினம் 3 - 4 வேளை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—குழந்தைகளுக்கு இயற்கையாகக் காணுகின்ற மாந்தம் பேதி குணமாகும். அத்தருணம் சுரம் இருந்தால் ஏதேனும் சுரத்தை நீக்கத்தக்க மாத்திரை, செந்தூரம் முதலியவற்றை தேனில் கொடுத்து அப்பால் இந்தக் கியாழத்தைக் கொடுக்கவும்.

பத்தியம் :—குழந்தையின் தாய் இச்சாபத்தியமாக இருத்தல் வேண்டும்.

## 49. வேறு முறை -மாந்தம்

சரக்கு :—

| | |
|---|---|
| நிலத்துளசி | நல்லதுளசி |
| தூதுவளை | ஆடாதோடை |
| விஷ்ணுகிரந்தி | கஞ்சாங்கோரை |
| ஈயக்கொழுந்து | |

இவைகள் வகைக்கு ஓர் கைப்பிடி.

செய்பாகம் :—இவற்றைப் பிட்டுகட்டி அவித்துச் சாறு பிழிந்து வடிகட்டி வைத்துக் கொள்ளவும்.

பிரயோகம் :—வேளைக்கு ஒரு தேக்கரண்டி அளவு, சுரத்தை நிவர்த்திக்கக் கூடிய மாத்திரை செந்தூரம் முதலியவற்றிற்கு அனுபானமாகத் தினம் 3-வேளை கொடுத்துவர விரைவில் குணமாகும்.

பத்தியம் :—முன் முறையில் கூறப்பட்டதே யாகும்.

## 50. வேறு முறை

சரக்கு :—

உத்தாமணிக்கொடி யிலை ஒரு பிடி

| | |
|---|---|
| சுக்கு | சடாமாஞ்சில் |
| விளாம்பழத்தோடு | சுட்டவசம்பு |
| உள்ளி | மிளகு |

சுட்ட ஆமை ஓடு சீரகம்
ஓமம்

இவைகள் வகைக்கு வராகனெடை - 2.

செய்பாகம் :—இவைதம்மை இடித்து ஒரு பழகின சட்டியில் போட்டு ½-படித் தண்ணீர்விட்டு அடுப்பில் வைத்துச் சிறுக எரித்து வீசம்படி அளவிற்குச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தைக் குழந்தைகளுக்குக் காணும் மாந்த ரோகத்திற்கு வேளைக்கு இரண்டு தேக்கரண்டி வீதம் தினம் மூன்று வேளை கொடுக்கவும். இன்னும் இதனுடன் தகுந்த மாத்திரை செந்தூரம் முதலியவைகளையும் தேனில் கொடுத்து வரலாம். இதனால் நோய் விரைவில் குணப்படும்.

பத்தியம் :—முன் முறையில் கூறப்பட்டதே யாகும்.

## 51. தாபசுரக் கியாழம்

சரக்கு :—

| | |
|---|---|
| வில்வவேர்பட்டை | சிற்றுமுட்டிவேர்பட்டை |
| பேருமுட்டிவேர்ப்பட்டை | கோரைக்கிழங்கு |
| நெற்பொரி | விலாமிச்சம்வேர் |
| கோஷ்டம் | அதிமதுரம் |
| தனியா | ஏலம் |
| கிராம்பு | சந்தனத்தூள் |
| சுக்கு | திப்பிலி |

இவைகள் வகைக்கு வராகனெடை - 2.

செய்பாகம் :—இவைதம்மை இடித்து ஒரு பழகின மண்சட்டியில் போட்டு ½-படித் தண்ணீர் விட்டு அடுப்பிலேற்றி எரித்து வீசம்படியாகச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கியாழத்தைக் குழந்தைகளுக்கு இரண்டு தேக்கரண்டி வீதம் தினம் 3-வேளை கொடுக்கவும். பெரியவர்களுக்கு இந்தக் கியாழத்தை வேளைக்கு 1-அவுன்ஸ் வீதம் தினம் 3-வேளை கொடுக்கவும்.

தீரும் வியாதி :—தாகம், நாவறட்சி, வாந்தி குணமாகும்.

பத்தியம் :—முன் முறையில் கூறப்பட்டதே யாகும்.

குறிப்பு :—இதனுடன் சுரத்தைப் பரிகரிக்கத் தக்க ஏதேனும் மாத்திரை அல்லது செந்தூரம் கொடுத்தல் நன்று.

## 52. பித்தவாந்திக்குக் கியாழம்

சரக்கு :—1

| | |
|---|---|
| மிளகு | வட்டத்திருப்பி |
| பூண்டு | சுட்டவசம்பு |
| குட்டிவிளாயிலை | நாயுருவிக்கதிர் |

இவைகள் வகைக்கு வராகனெடை - 2½.

சரக்கு :—2

| | |
|---|---|
| காரைவேர்ப்பட்டை | பாதிரிவேர்ப்பட்டை |
| விடத்தாரிவேர்ப்பட்டை | |

இவைகள் வகைக்கு வராகனெடை - 2½.

சரக்கு ;—3

| | |
|---|---|
| ஓமம் | சீரகம் |

இவைகள் வகைக்கு வராகனெடை - 1.

செய்பாகம் :—முதலாவது அங்கத்தில் கூறப்பட்ட ஆறு சரக்குகளையும் ஒரு புதுச்சட்டியில் போட்டு அடுப்

பில் வைத்து எரித்துச் சரக்குகள் கருகினவுடன் இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள மூன்று பட்டைகளையும் சிறு துண்டுகளாக நறுக்கிப் போட்டு வறுத்துப் பொன்மேனியாக வரும்போது மூன்ருவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள இரண்டு சரக்குகளையும் போட்டு வெடிக்க விட்டு ½-படித் தண்ணீர் விட்டு வீசம்படி அளவிற்கு வரும்போது வடிகட்டி வைத்துக்கொள்க.

**பிரயோகம் :—**இந்தக் கியாழத்தைக் குழந்தைகளுக்கு வேளைக்கு இரண்டு தேக்கரண்டி அளவு தினம் 3-வேளை கொடுக்கவும். பெரியவர்களுக்கு இந்தக் கியாழத்தை வேளைக்கு ஒரு அவுன்ஸ் வீதம் தினம் 3-வேளை கொடுக்கவும்.

**தீரும் வியாதி :—**சுரத்தின்பேரில் காணும் இருமல், வாந்தி, ஓக்காளம் தீரும். சுரம் கடுமையாக இருந்தால், இதனுடன் தக்க செந்தூரம் அல்லது மாத்திரை கூட்டவும்.

**பத்தியம் :—**நோய்க்கு ஏற்றவாறு கஞ்சி புனல்பாகம் நன்று.

## 53. பித்த சீதளத்திற்கு அடைகியாழம்

**சரக்கு :—**

1 சுக்கு
2 சீரகம்
3 தனியா
4 மிளகு
5 சன்னராஷ்டகம்

இவைகள் வகைக்குப் பலம் - ¼.

6 பறங்கிச்சக்கை பலம் - 1½.

**செய்பாகம் :—**இவைகளையெல்லாம் இடித்து ஒரு தடிநீர்ப் பாண்டத்தில் போட்டு ஒருபடித் தண்ணீர்விட்டு அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்து வீசம்படி அளவிற்கு இறக்கி ஆற விடுக.

| | |
|---|---|
| புனல்தண்டு | கொடிவேலிவேர் |
| சங்கம்வேர் | ஓமம் |
| கிராம்பு | செவ்வியம் |

இவைகள் வகைக்குப் பலம் - 1.

செய்பாகம் :—இவைகளை யெல்லாம் ஒன்றிர
மாக இடித்து ஒரு பழகின மட்பாண்டத்தில் போட்டு
படித் தண்ணீர்விட்டு அடுப்பில் வைத்துச் சிறுக எரி
¼ - படி அளவிற்குச் சுண்டி வரும்போது கீழிறக்கி
விடுக.

பிரயோகம்:—இந்தக் கியாழத்தை வேளைக்கு 1
அவுன்ஸ் வீதம் தினம் மூன்று வேளை 3-5-நாள் கொ
வும். கியாழம் சுண்டச் சுண்டச் சிறிது தண்ணீர்வி
தினந்தோறும் வெதுப்பி வடித்து எடுத்துக் கொள்ள

தீரும் வியாதி ;—பித்த சுரம், வாத பித்த
சிலேத்தும பித்த சுரம் தீரும்.

பத்தியம் :—கஞ்சி தவிர வேறொன்றும் ஆகாது.

## சூரண இலம்பகம்

### 1. முள்ளங்கிச் சூரணம்

| | | | | |
|---|---|---|---|---|
| சரக்கு :— | i | முள்ளங்கிக் கிழங்கு | | 25 |
| | | கறிவேப்பிலை பலம் | | 2 |
| | | இஞ்சி | ,, | 2 |
| | | பிரண்டை | ,, | 5 |
| | | பெருங்காயம் | ,, | 1 |
| | ii | ஓமம் | ,, | 2 |
| | | சீரகம் | ,, | 2 |
| | | தனியா | ,, | 2 |

மயக்

| | | | |
|---|---|---|---|
| iii | சோற்றுப்பு | ,, | 1 |
| | இந்துப்பு | ,, | 1 |
| | சோடா உப்பு | ,, | 1 |
| iv | எருமைத்தயிர் படி | | 2 |

கிழை

சர செய்பாகம் :—முதல் அங்கத்தில் கூறப்பட்ட முள் ங்கிக் கிழங்குகளை வில்லை வில்லையாக அரிந்தும், இஞ் மேல்தோல் சீவிச் சிறு துண்டுகளாக நறுக்கிக் கறி பிலையுடன் கூட்டி நெய்விட்டு வதக்கியும், பெருங் த்தைப் பொரித்தும், பிரண்டையின் கணுக்களை நீக் சிறு துண்டுகளாக நறுக்கி நெய்விட்டு வதக்கியும் ந்துக் கொள்க.

இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்ட சரக்குகளை த்துச் சூரணம் செய்து வைத்துக் கொள்க.

மூன்ருவது அங்கத்தில் கூறப்பட்ட உப்பு இனங் களைப் பொடித்து வைத்துக்கொள்க.

அப்பால் ஒரு பழகிய வாயகன்ற புதுச்சட்டியிலாவது அல்லது எனுமில்ட் பேசினிலாவது நான்காவது அங்கத் தில் கூறப்பட்ட எருமைத் தயிரைவிட்டு முன் சித்தப் படுத்தி வைத்துள்ள மூன்று அங்கத்தின் சரக்குகளையும் போட்டுப் பிசறி ஒரு இரவு வைத்திருந்து மறுநாள் பேசி னில் தயிருடன் கரைந்து உள்ளதுபோக மிகுதியுள்ள சரக்குகளையெல்லாம் பிழிந்து பிழிந்து எடுத்துக் கோப் பைத் தட்டுகளில் போட்டுப் பரப்பி வெயிலில் உலத்துவ துடன் பேசினில் உள்ள தயிரையும் சுண்டும்படி வெயி லில் வைக்கவும். மாலைப் பொழுதில் தட்டுகளில் உள்ள சரக்குகளை மீண்டும் பேசினில் உள்ள தயிரில் போட்டு அன்று இரவு வைத்து மறுநாள் முன்போல் சரக்குகளைப் பிழிந்தெடுத்துத் தட்டுகளில் பரப்பி உலர்த்துவதுடன் தயிரையும் வெயிலில் சுண்டும்படி வைக்கவும். இவ்வாறு

தினந்தோறும் செய்து எல்லாம் நீர் சுண்டி சுக்குபோல் காய்ந்தபின் இடித்து மிருதுவாக இருக்கும்படி சூரணம் செய்து வைத்துக்கொள்க.

பிரயோகம் :—வேண்டும்போது இந்தச் சூரணத்தில் திரிகடிப் பிரமாணம் புளிப்பு மோரில் போட்டுக் கலக்கி தினம் இருவேளை கொடுக்கவும்.

தீரும் வியாதி :—உஷ்ணவாயு, அஜீரணம், பேதி குன்மம், வயிற்றுவலி, பித்தவாயு முதலியவைகள்.

பத்தியம் :—இச்சாபத்தியமாக நோயின் தன்மைக் கேற்றவாறு எளிதில் ஜீரணிக்கக்கூடிய உணவு அல்லது மோர்சாதம் ஆகும்.

## 2. சர்வ மூலத்திற்குக் கருணைக்கிழங்குச் சூரணம்

சரக்கு :—

| | |
|---|---|
| கருணைக்கிழங்கு | காட்டுக்கருணைக்கிழங்கு |
| தூதுவளைவேர் | மருட்கிழங்கு |
| பிரண்டைவேர் | ஆவாரைவேர் |
| மிளகரணைவேர் | அறுகங்கட்டை |
| நீர்முள்ளிவேர் | |

செய்பாகம் :—இங்குக் கூறப்பட்ட ஒன்பது சரக்குகளையும் நன்கு உலர்த்தித் தனித்தனியாக இடித்துச் சீலையில் அரித்துச் சமன் அளவாகக்கூட்டி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தச் சூரணத்தில் வேளைக்குத் திரிகடிப் பிரமாணம் காலை மாலையாக இருவேளையும் தேனில் நாற்பது நாள் கொடுத்து வருக.

தீரும் வியாதி ;—சர்வ மூலரோகமும் குணமாகும்.

பத்தியம் :—அதிக காரசார மல்லாததும், எளிதில் சறிக்கற்பாலதுமான ஆகாரம் உட்கொள்வதுடன் ச்சாபத்தியமாக இருத்தல் வேண்டும்.

## 3. சீதபேதிக்குச் சூரணம்

ரக்கு :—

| | |
|---|---|
| கடுக்காய்ப்பூ | வராகனெடை 1 |
| கிராம்பு | ,, 1 |
| இலவங்கப்பட்டை | ,, 1 |

செய்பாகம் :—மேற்கூறப்பட்ட மூன்று சரக்குகளை ம் பொன்மேனியாக வறுத்து இடித்துச் சூரணம் செய்து றுபாகமாகப் பங்கிட்டு வைத்துக்கொள்க.

பிரயோகம் :—வேண்டும்போது இச் சூரணத்தில் ரு பாகத்தைப் பசுவின் வெண்ணெயில் மத்தித்துத் னம் மூன்றுவேளை இரண்டுநாள் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—இரத்தங் கொட்டல், சீதபேதி, சீத த்தபேதி, கிராணி முதலியவைகள் குணமாகும்.

இந்தச் சூரணத்தைக் கொடுக்கும்போது நாகபற்பம் ட்டிக் கொடுத்தல் சாலச் சிறந்தது.

பத்தியம் :—இச்சாபத்தியமாக இருப்பதுடன் கார ர மற்றதாகவும் எளிதில் ஜீரணிக்கக் கூடியதாகவும் ருக்க வேண்டும்.

## 4. திராட்சாதி சூரணம்

க்கு :—

| | | |
|---|---|---|
| திராட்சைப்பழம் | கச்சூர்க்காய் | ற் டு |
| நெல்லிவற்றல் | அதிமதுரம் | ாடு |
| ஏலம் | திப்பிலி | மாக. |

தினந்தோறும் செய்து எல்லாம் நீர் சுண்டி சுக்குபோல் காய்ந்தபின் இடித்து மிருதுவாக இருக்கும்படி சூரணம் செய்து வைத்துக்கொள்க.

பிரயோகம் :—வேண்டும்போது இந்தச் சூரணத்தில் திரிகடிப் பிரமாணம் புளிப்பு மோரில் போட்டுக் கலக்கி தினம் இருவேளை கொடுக்கவும்.

தீரும் வியாதி :—உஷ்ணவாயு, அஜீரணம், பேத குன்மம், வயிற்றுவலி, பித்தவாயு முதலியவைகள்.

பத்தியம் :—இச்சாபத்தியமாக நோயின் தன்மைக் கேற்றவாறு எளிதில் ஜீரணிக்கக்கூடிய உணவு அல்லது மோர்சாதம் ஆகும்.

## 2. சர்வ மூலத்திற்குக் கருணைக்கிழங்குச் சூரணம்

சரக்கு :—

| | |
|---|---|
| கருணைக்கிழங்கு | காட்டுக்கருணைக்கிழங்கு |
| தூதுவளைவேர் | மருட்கிழங்கு |
| பிரண்டைவேர் | ஆவாரைவேர் |
| மிளகரணைவேர் | அறுகங்கட்டை |
| நீர்முள்ளிவேர் | |

செய்பாகம் :—இங்குக் கூறப்பட்ட ஒன்பது சரக்குகளையும் நன்கு உலர்த்தித் தனித்தனியாக இடித்துச் சீலையில் அரித்துச் சமன் அளவாகக்கூட்டி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தச் சூரணத்தில் வேளைக்குத் திரி கடிப் பிரமாணம் காலை மாலையாக இருவேளையும் தேனில் நாற்பது நாள் கொடுத்து வருக.

தீரும் வியாதி ;—சர்வ மூலரோகமும் குணமாகும்.

பத்தியம் :—அதிக காரசார மல்லாததும், எளிதில் சறிக்கற்பாலதுமான ஆகாரம் உட்கொள்வதுடன் ச்சாபத்தியமாக இருத்தல் வேண்டும்.

## 3. சீதபேதிக்குச் சூரணம்

ரக்கு :—

| | | |
|---|---|---|
| கடுக்காய்ப்பூ | வராகனெடை | 1 |
| கிராம்பு | ,, | 1 |
| இலவங்கப்பட்டை | ,, | 1 |

செய்பாகம் :—மேற்கூறப்பட்ட மூன்று சரக்குகளை ம் பொன்மேனியாக வறுத்து இடித்துச் சூரணம் செய்து ந்றுபாகமாகப் பங்கிட்டு வைத்துக்கொள்க.

பிரயோகம் :—வேண்டும்போது இச் சூரணத்தில் ரு பாகத்தைப் பசுவின் வெண்ணெயில் மத்தித்துத் னம் மூன்றுவேளை இரண்டுநாள் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—இரத்தங் கொட்டல், சீதபேதி, சீத த்தபேதி, கிராணி முதலியவைகள் குணமாகும்.

இந்தச் சூரணத்தைக் கொடுக்கும்போது நாகபற்பம் ட்டிக் கொடுத்தல் சாலச் சிறந்தது.

பத்தியம் :—இச்சாபத்தியமாக இருப்பதுடன் கார ர மற்றதாகவும் எளிதில் ஜீரணிக்கக் கூடியதாகவும் ருக்க வேண்டும்.

## 4. திராட்சாதி சூரணம்

க்கு :—

| | | |
|---|---|---|
| திராட்சைப்பழம் | கச்சூர்க்காய் | ற் |
| நெல்லிவற்றல் | அதிமதுரம் | ்டு |
| ஏலம் | திப்பிலி | ாடு |
| | | மாக. |

சிறுபீளைவேர் சந்தனத்தூள்
தனியா வெள்ளரிவிதை
நாட்டுக்கல்நார்

செய்பாகம்:—முதலில் நாட்டுக்கல்நாரைச் சுத்த சலம் விட்டு அலம்பி ரவியில் காயப்போட்டு நன்றாய் உலர்ந்த சமயம் ஒரு இரும்புக் கடாயில் போட்டு அடுப்பில் வைத்து எரித்து வறுக்கவும். இந்தக் கல்நார் நன்ருய் வெளுத்து வந்த சமயம் ஆறவிட்டு எடுத்துக் கொள்ளவும். பின்னர் இந்தக் கல்நார் எடைக்கு மேற்கூறப் பட்ட ஒவ்வொரு சரக்கையும் எடுத்துக் கல்லுரலிலிட்டு நன்கு இடித்துச் சூரணம் செய்து வைத்துக் கொள்க.

பிரயோகம்:—இந்தச் சூரணத்தில் வேளைக்குத் தி கடிப் பிரமாணம் அந்தி சந்தி அரிசி கழுவி யெடுத்த நீரி போட்டுக் கொடுக்கவும். இப்படி 10-அல்லது 20-நா கொடுப்பது நன்று.

தீரும் வியாதி:—நீர்க்கடுப்பு, நீர் எரிச்சல், நீர்க்கட் முதலியவை தீரும்.

பத்தியம்:—அதிக காரசார மில்லாத ஆகாரம் உட்கொள்ளல் வேண்டும். பாலும் நீரும் கலந்து எவ்வ வுக்கெவ்வளவு உட்கொள்ளுகின்றனரோ அவ்வளவுக் க வளவு நீரை மிகுதியாகப் பெருக்கி யுட்சூட்டைத் தணித் நன்மை தரும்.

## 5. குன்மத்திற்கு இலவணச் சூரணம்

சரக்கு:—

| | | | | |
|---|---|---|---|---|
| சோற்றுப்பு | பலம் | 16 | வெடியுப்பு | பலம் |
| வளையலுப்பு | ,, | 4 | சவுட்டுப்பு | ,, |
| இந்துப்பு | ,, | 8 | எலுமிச்சம் உப்பு | ,, |
| கறுப்பு உப்பு | ,, | 2 | கல்லுப்பு | ,, |
| முள்ளங்கி உப்பு | ,, | 4 | புளித்தமோர் | படி |

செய்பாகம் :—இங்குக் கூறப்பட்ட 10-சரக்குகளில் 4 இனங்களை நன்கு இடித்து ஒரு பேசினில் போட்டுப் த்த மோர் விட்டுக் கரைத்து ஒரு நாள் இரவும் பகலும் த்துவிடுக. மறுநாள் தும்மட்டிக்காயைக் கொண்டு து மேல்தோல் சீவிச் சிதைத்துப் பிழிந்தெடுத்த சாறு ம-8 விட்டுக் கலக்கி அடுப்பில் வைத்துச் சிறு தீயாக த்துக் கெட்டிப் பதம் வரும்போது பீங்கான் தட்டு ல் வழித்துவிட்டு ரவியில் நன்குலர்த்தி இடித்துச் ணம் செய்துக் கொள்க.

பிரயோகம் :—வேண்டும்போது இந்தச் சூரணத்தில் அல்லது 3-குன்றி யெடை தினம் இருவேளை வாயில் ட்டுக் கொண்டு சிறிது சலத்துடன் விழுங்கச் செய்ய . இப்படி 20-நாள் வரையில் கொடுக்க விசேஷ குணத் தக் கொடுக்கும். இப்படிக் கொடுப்பதில் ஆறுநாள் ன்றபின் ஸ்நானம் செய்விக்க வேண்டும். அன்று நந்தை நிறுத்தி வைக்கவும். வயிற்றுவலி அதிகமாக பத்திரவம் செய்தால், அன்று மாலையில் மாத்திரம் ஒரு வளை கொடுக்கவும். இப்படியே இருபதுநாள் மருந்து ட்செல்ல வேண்டும். இதற்த இடையில் உடலில் சிறு யர்க்குறு போல் உண்டாயின், உடனே மருந்தை றுத்தி விடவும். மருந்து சாப்பிட ஆரம்பித்த இரண் டாரு நாளிற்குப் பின் சிலருக்கு இரண்டொரு தடவை லம் அதிகமாகப் போகும் குற்றமில்லை.

தீரும் வியாதி :—அட்ட குன்மம்.

பத்தியம் :—காரசாரமான பதார்த்தங்களை நீக்கி ளிதில் ஜீரணிக்கக் கூடிய கஞ்சியையாவது, புனற் ரகத்தையாவது பால் சேர்த்துப் பருகுக. பிணி நடு லைமையிலிருப்பின் இருமுறை வடித்த அன்னத்தோடு ாரம் அதிகமாகச் சேர்க்காமல் இச்சா பத்தியமாக ருக்க வேண்டும்.

## 6. ஈளைகாசத்திற்குச் சூரணம்

சரக்கு :—

| | | | | |
|---|---|---|---|---|
| பறங்கிச்சக்கை | பலம் | 3 | குப்பைமேனி இலைச் சூரணம் | பலம் |
| சிறுநாகப்பூ | ,, | 6 | கோஷ்டம் | ,, |
| கிராம்பு | ,, | 1 | ஜாதிபத்திரி | ,, |
| ஜாதிக்காய் | ,, | 1 | கிராம்பு | ,, |
| தான்றிக்காய்த்தோல் | ,, | 1 | விளாம்பிசின் | ,, |
| பற்பாடகம் | ,, | 1 | பூண்டு | ,, |
| வசம்பு | ,, | 1 | ஓமம் | ,, |
| கோரோசனை | ,, | ½ | | |

செய்பாகம் :—இவைகளை யெல்லாம் இடித்துப் கான் தட்டுகளில் போட்டுப் பரப்பி ரவியில் வைத்து ருய் உலர்த்தவும். மீண்டும் காய்ந்த பதத்தில் இடித் சூரணம் செய்து வைத்துக்கொள்க.

பிரயோகம் :—வேளைக்குத் திரிகடிப் பிரமாண அந்தி சந்தி ஒரு மண்டலம் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—ஈளை, காசம், இருமல் முதலியன தீரும்.

பத்தியம் :—பிணிக்கேற்றவாறு புளியைத் தள் யும் சேர்த்தும் இச்சாபத்தியம் கோடல் நலம்.

## 7. பாஸ்கர லவணச் சூரணம்

சரக்கு :—

| | | | | |
|---|---|---|---|---|
| கறி உப்பு | பலம் | 4 | கருப்பு உப்பு | பலம் |
| இந்துப்பு | ,, | 1 | பிடாலவணம் | ,, |
| சயிந்த லவணம் | ,, | 1 | இலவங்கப்பட்டை | ,, |
| ஏலம் | ,, | ¼ | மாதுளம்பழத்தோடு | ,, |
| மிளகு | ,, | ½ | சீரகம் | ,, |

| | | | |
|---|---|---|---|
| சுக்கு | பலம் ½ | திப்பிலி | பலம் 1 |
| திப்பிலி மூலம் | „ 1 | தனியா | „ 1 |
| கருஞ்சீரகம் | „ 1 | இலவங்கப்பத்திரி | „ ½ |
| தாளிசப்பத்திரி | „ 1 | சிறுநாகப்பூ | „ 1 |
| காய்ந்தசுக்காங்கீரை | 1 | | |

**செய்பாகம்:**—இங்குக் கூறப்பட்ட பத்தொன்பது க்குகளில் உப்பு வகைகளைத் தனியாக அரைத்தும், றவைகளை இடித்துச் சூரணித்தும் ஒருமிக்கக் கலந்து ற்று நுழையாத கல்கார்க்கிட்ட சீசாவில் போட்டு பத்துக்கொள்ளவும்.

**பிரயோகம்:**—ஆகாரம் உட்கொள்வதற்கு அரை ணி நேரத்திற்கு முன், தினம் இருவேளை கால் ரூபாய் டை வீதம் புளிப்பு மோரிலாவது அல்லது வெந்நீரிலா து போட்டுக் கலக்கிக் கொடுக்கவும். இப்படி 20-நாள் காடுக்கவேண்டும்.

**தீரும் வியாதி:**—பித்தவாயு, அஜீரணம், பேதி, பரி ாமசூலை, வயிற்றுப் பொருமல், பசியின்மை.

**பத்தியம்:**—இச்சாபத்தியத்துடன் வாயு பண்டங் களைத் தள்ளி ஆகாரஞ் செய்தல் நன்று.

## 8. இலகு ஏலாதிச் சூரணம்

ருக்கு:—

| | | |
|---|---|---|
| ஏலம் | வராகனெடை | 64 |
| சுக்கு | „ | 32 |
| கூகைமாவு | „ | 16 |
| தாளிசப்பத்திரி | „ | 8 |
| சிறுநாகப்பூ | „ | 4 |
| மிளகு | „ | 2 |
| கிராம்பு | „ | 1 |

**செய்பாகம் :**—மேற்கூறப்பட்ட ஏழு சரக்குகளை இடித்துச் சூரணம் செய்து மொத்த எடைக்கு வெள்ளை சருக்கரை கூட்டி வைத்துக்கொள்ளவும்.

**பிரயோகம் :**—இந்தச் சூரணத்தை வேளைக்குத் கடிப் பிரமாணம் அந்தி சந்தி இருபது நாள் கொடு வேண்டும்.

**தீரும் வியாதி :**—பித்தசம்பந்தமான பல பிணிக மேகஊறல், அரிகிரந்தி, பெரும்பாடு, எலும்புருக்கி மு யவை தீரும்.

**பத்தியம் :**—நோயின் வன்மை, மென்மைக் கிசை வாறு பித்தத்தை விருத்தி செய்யக்கூடிய பதார்த் களைத் தள்ளி இச்சா பத்தியமாக இருத்தல் வேண்டும்.

## 9. மகா ஏலாதிச் சூரணம்

சரக்கு :—

| | |
|---|---|
| ஏலம் | இலவங்கப்பட்டை |
| மஞ்சள் | அதிமதுரம் |
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | மோடி |
| செவ்வியம் | சிற்றரத்தை |
| சந்தனத்தூள் | சாதிக்காய் |
| சாதிப்பத்திரி | கிராம்பு |
| தகரவிதை | வால்மிளகு |
| திராட்சைப்பழம் | கச்சூர்க்காய் |
| தாமரைக்கிழங்கு | கொத்துமல்லி விதை |
| நெல்லிவற்றல் | நெற்பொரி |
| பருத்திவிதைப்பருப்பு | மாதுளம்வேர்ப்பட்டை |
| வில்வப்பழத்தின் ஓடு | நிலப்பனங்கிழங்கு |

| | |
|---|---|
| நன்னாரிவேர் | அமுக்கராவேர் |
| முத்தக்காசு | சீந்தில் சர்க்கரை |

**செய்பாகம் :—**இங்குக் கூறப்பட்ட முப்பது சரக்கு களையும் வகைக்குக் கால்பலம் விதம் நன்கு இடித்துச் ணம் செய்து மொத்த எடைக்கு வெள்ளைச் சர்க்கரை ட்டி வைத்துக்கொள்க.

**பிரயோகம் :—**வேண்டும்போது இந்தச் சூரணத்தில் ளைக்குத் திரிகடிப் பிரமாணம் அந்தி சந்தி நோய் நக்கு ஏற்றவாறு முலைப்பால், தேன், எலுமிச்சம்பழச் று, மாதுளம்பழச்சாறு முதலியவற்றில் ஏதேனுமொன் அனுபானம் செய்து கொடுத்துக்கொண்டு வருக.

**தீரும் வியாதி :—**தேக எரிவு, தாகம், மயக்கம், பித் தலைவலி, அஸ்திசுரம், வாயு, விஷசுரம், ஈளை, இருமல், ிற்றுப்பிசம், நெஞ்செரிவு.

**பத்தியம் :—**பித்தத்தை விருத்திசெய்யும் பண்டங் ளைத் தள்ளி இச்சாபத்தியமாக ஆகாரம் உட்கொள்ள ண்டும்.

## 10. தாளிசப்பத்திரிச் சூரணம்

ங்கு :—

| | | | |
|---|---|---|---|
| ஏலம் | கிராம்பு | | |
| ஜாதிக்காய் | சாதிப்பத்திரி | | |
| வால்மிளகு | இலவங்கப்பட்டை | | |
| வாய்விளங்கம் | தனியா | | |
| சீரகம் | திப்பிலி | | |
| கோஷ்டம் | அக்கராகாரம் பலம் | | 2½ |
| கடுக்காய் | தான்றிக்காய் | ,, | ½ |
| நெல்லிவற்றல் | சடாமாஞ்சில் | ,, | ½ |
| சோம்பு | இவைகள் வகைக்கு | ,, | ½ |
| | | ,, | ½ |
| | ம்பு | ,, | ½ |

விராகன்எடை 2.

தாளிசப்பத்திரி வராகனெடை - 17.

**செய்பாகம் :—** இங்குக் கூறப்பட்ட பதினெட் சரக்குகளையும் நன்கு உலர்த்திப் பொன்மேனியாகச் சி நெருப்பனலில் வெதுப்பி இடித்துச் சூரணம் செ மொத்த எடையில் அரைபாகம் வெள்ளைச் சர்க்க கூட்டி வைத்துக்கொள்க.

**பிரயோகம் :—** வேண்டும்போது இந்தச் சூரணத் வேளைக்குத் திரிகடிப் பிரமாணம் அந்தி சந்தி கொடுத் கொண்டு வருக.

**தீரும் வியாதி :—** காசம், க்ஷயம், கைகால் எ தாகம், விக்கல், சுரம், அஸ்திவெட்டை, வாந்தி, அ சகம், நெஞ்செரிவு, குன்மம், காமாலை.

**பத்தியம் :—** நோயின் நிலைமைக்கேற்ற பெ யறிந்து புளிசேர்த்தும் சேர்க்காமலும் இச்சாபத்திய இருத்தல் வேண்டும்.

## 11. அசுவக்கெந்திச் சூரணம்

சரக்கு :—

| | |
|---|---|
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | சாதிக்காய் |
| இலவங்கப்பத்திரி | அதிமதுரம் |
| கிராம்பு | கடுகுரோகணி |
| ரோசாணி ஓமம் | |

தாமலை.
நெல்லிவற் ஒன்பதும் வகைக்குப் பலம் - ½.
பருத்திவிதை,
வில்வப்பழத்த — அமுக்கராவேர் சூரணம் பலம் - 9.

—மேற் கூறப்பட்ட பத்து சரக்கு
லில் வெதுப்பி ஆறவிட்டு இடி

ணம் செய்து இவற்றின் மொத்த எடைக்கு வெள்ளைச் க்கரை கூட்டி வைத்துக்கொள்க.

பிரயோகம் :—இந்தச் சூரணத்தை வேளைக்குத் திரி ப் பிரமாணம் அந்தி சந்தியாக இருபொழுதும் டுத்து வருக.

தீரும் வியாதி :—எலும்புருக்கி, பித்தப்பாண்டு முத ரோகங்களுக்கு எருமையின் இனிப்பு மோரிலும், எலி பின் விஷத்திற்கு இளநீரிலும், ஜெந்துக்களின் விஷத் து வேப்பெண்ணெயிலும், ஈளை-சோகை முதலியவற் கு வெள்ளாட்டு அமுரியிலும், பெரும்பாடுக்கு எள் ண்ணெய் வெல்லத்திலும், விரியன் பாம்புக்கடிக்கு நீரிலும், அஷ்டகுன்மம் - வாயு - அரோசகம் - சோபை - லை முதலியவற்றிற்குப் பழச்சாற்றிலும், சூலைரோகத் ச் சிறுமக்கள் அமுரியிலும், மலட்டு ரோகத்திற்குப் யிலைச்சாறுடன் நல்லெண்ணெய், பாகலிலைச்சாறு த்தூள் கூட்டியக் கலவையிலும் அனுபானம் து கொடுத்துக் கொண்டு வருதல் சாலச் சிறந்தது.

பத்தியம் :—இச்சா பத்தியமாக இருப்பதுடன் ன் வன்மை மென்மைக் கேற்றவாறு புளி தள்ளா ஆகாரம் உட்கொள்ளலாம்.

## 12. திப்பிலிச் சூரணம்



ந :—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பிலி | பலம் | 5 | சுக்கு | பலம் | $2\frac{1}{2}$ |
| கு | ,, | $\frac{1}{2}$ | வால்மிளகு | ,, | $\frac{1}{2}$ |
| காய் | ,, | $\frac{1}{2}$ | நெல்லிவற்றல் | ,, | $\frac{1}{2}$ |
| றிக்காய் | ,, | $\frac{1}{2}$ | நற்சீரகம் | ,, | $\frac{1}{2}$ |
| ந்சீரகம் | ,, | $\frac{1}{2}$ | ஏலம் | ,, | $\frac{1}{2}$ |
| ரத்தை | ,, | $\frac{1}{2}$ | கிராம்பு | ,, | $\frac{1}{2}$ |

| | | | | |
|---|---|---|---|---|
| இலவங்கப்பட்டை | பலம் | ½ | தாளிசப்பத்திரி | பலம் |
| ஓமம் | ,, | ½ | குரோசாணி ஓமம் | |
| சித்திரமூலவேர்ப்பட்டை | | ½ | சோம்பு | ,, |

இலவங்கப்பத்திரி பலம்-½.

செய்பாகம் :—மேற் கூறப்பட்ட பத்தொன் சரக்குகளையும் பொன்மேனியாக வாசனை கிளம்ப வறு இடித்துச் சூரணம் செய்து வைத்துக் கொள்க.

பிரயோகம் :—வேண்டும்போது திரிகடிப்பிரமா அந்தி சந்தி தேனில் மத்தித்துக் கொடுத்துக் கொ வருக.

தீரும் வியாதி :—இருமல், ஈளை, சுவாசகாசம்.

பத்தியம் :—குளிர்ச்சியான பண்டங்களைத் த இச்சா பத்தியமாக ஆகாரம் உட்கொள்ளவும்.

## 13. வேறு முறை

சரக்கு :—

| | | | | |
|---|---|---|---|---|
| திப்பிலி | பலம் | 3 | சிற்றரத்தை | பலம் |
| மிளகு | கழஞ்சு | 3 | வால்மிளகு | கழஞ் |
| ஏலம் | ,, | 3 | இலவங்கப்பட்டை | |
| இலவங்கப்பத்திரி | ,, | 3 | கடுக்காய் | ,, |
| அதிமதுரம் | ,, | 3 | தான்றிக்காய் | ,, |
| நெல்லிவற்றல் | ,, | 3 | சாதிப்பத்திரி | ,, |
| சாதிக்காய் | ,, | 3 | வாய்விளங்கம் | ,, |
| கிராம்பு | ,, | 3 | தனியா | ,, |
| குரோசானி ஓமம் | ,, | 3 | தாளிசப்பத்திரி | ,, |
| செவ்வியம் | ,, | 3 | சிறுதேக்கு | ,, |
| நற்சீரகம் | ,, | 3 | கருஞ்சீரகம் | ,, |
| கூகைநீறு | ,, | 3 | மோடி | ,, |

அமுக்கரா வேர் கழஞ்சு-3.

**செய்பாகம் :—** மேற்கூறப்பட்ட சரக்குகள் இருபத்தைந்தையும் நன்ருக உலர்த்தி இடித்துச் சூரணம் செய்து வைத்துக் கொள்க.

தூதுவளை, கண்டங்கத்திரி, கரிசாலை இவற்றை நன்கு உலர்த்தித் தனித்தனியாக இடித்துச் சூரணம் செய்து இம்மூன்றையும் சமனெடையாகக் கலந்து அதனில் $\frac{1}{4}$-படி அளவிற்கு எடுத்து அதனுடன் முன் சித்தப்படுத்திய சூரணத்தைக் கலந்து மொத்த யெடைக்கு அரைப்பாகம் வெள்ளைச் சர்க்கரை கூட்டி ஒருமித்து உறவாகும்படி கலந்து வைத்துக் கொள்க.

**பிரயோகம் :—** வேண்டும்போது இந்தச் சூரணத்தை வேளைக்குத் திரிகடிப் பிரமாணம் அந்தி சந்தி கொடுத்து வருக.

**தீரும் வியாதி :—** ஈளை, இருமல், சயம், அரோசகம், வாந்தி, குடல் புரட்டல், வாயு, வயிற்றுநோய், கோழை வாந்தி.

**பத்தியம் :—** புளிப்பு நீக்கி இச்சாபத்தியம்.

## 14. சுவாசகுடோரி சூரணம்

சரக்கு :—

| | |
|---|---|
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | சிற்றரத்தை |
| அக்கராகாரம் | வால்மிளகு |
| மோடி | பொரித்த வெங்காரம் |

இவைகள் வகைக்குப் பலம் - $\frac{1}{2}$.

தாளிசப்பத்திரி ,, 8.

**செய்பாகம் :—** பொரித்த வெங்காரம் நீங்கலாக மற்றச் சரக்குகளைச் சிறிது இளம் வறுப்பாக வறுத்து இடித்

துச் சீலையில் அரித்துப் பொரித்து வைத்துள்ள வெங்காரத்துடன் கூட்டிக் கல்வத்திலிட்டு நன்றாய்க் கலக்கும் பொருட்டு அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—வேண்டும்போது இந்தச் சூரணத்தில் வேளைக்குத் திரிகடிப் பிரமாணம் பிணிக்கேற்றவாறு தேன். இஞ்சிச்சாறு நெய் முதலிய அனுபானங்களில் கொடுத்து வருக. இதனுடன் கபத்தைப் பரிகரிக்கக் கூடிய செந்தூரம், பற்பம் கூட்டிக் கொடுக்கப் பெரிதும் பயன் தரும்.

தீரும் வியாதி :—ஈளை, இருமல், கோழைவாந்தி, மேல்மூச்சு, காசம் முதலியவை தீரும்.

பத்தியம் :—கபத்தை விருத்தி செய்யும்படியான பதார்த்தங்களைத் தள்ளித் தக்க உணவு உண்க.

## 15. நீர் - மலக்கட்டுக்கு நெரிஞ்சிமுள் சூரணம்

சரக்கு :—

| | | |
|---|---|---|
| வால்மிளகு | பலம் | ½ |
| இரேவல்சின்னி | ,, | ½ |
| பொரித்த வெங்காரம் | ,, | ½ |
| வெடியுப்பு | ,, | ½ |
| சிறுநாகப்பூ | ,, | ½ |
| ஏவாச்சாரம் | ,, | ½ |
| சுத்திபூநீறு | ,, | ½ |
| சிறுநெருஞ்சிமுள் | ,, | 3½ |

செய்பாகம் :—உப்புத் தினுசுகள் நீங்கலாக மற்றச் சரக்குகளை நன்றாய் இடித்துக் கல்வத்திலிட்டு உப்பு இனங்களைக் கூட்டி நன்கு அரைத்துச் சீசாவில் பத்திரப் படுத்துக.

**பிரயோகம் :—**இந்தச் சூரணத்தை வேளைக்கு 5-முதல் 10-குன்றி எடை தினம் 3- அல்லது 4 வேளை வெந்நீர், இளநீர் முதலியவற்றில் கொடுத்து வருக.

**தீரும் வியாதி ;—**நீர்க்கட்டு, நீர் எரிச்சல், நீர்க்கடுப்பு முதலியவைகள் போம். சிறுநீரை அளவுக்கு மிஞ்சி வெளிப்படுத்தும் வெள்ளை ரோகத்தில் இந்தச் சூரணத்தை முதலில் கொடுத்தால் குண்டிக்காய், மூத்திரப்பை, நீர்த்தாரை முதலியவற்றைச் சுத்தப்படுத்தி அங்குள்ள விரணங்களை ஆற்ற உதவி செய்யும். பின் வெள்ளைக்கு உரிய எந்த மருந்துகொடுத்தாலும் நற்பயனை யளிக்கும்.

**பத்தியம் :—**காரசாரமில்லாத ஆகாரமே உட்கொள்ள வேண்டும். மோர்சாத முண்ணுதல் அதிக உத்தமம். நீரும் பாலும் கலந்து அடிக்கடி உட்கொண்டுவரின் அதிகமாகச் சிறுநீரை வெளிப்படுத்தும். நீரிலுள்ள வண்டல்கள் யாவும் வெளியாகும்.

## 16. தாதுவிருத்திக்கு நிலப்பனைச் சூரணம்

சரக்கு :—

| | | |
|---|---|---|
| நிலப்பனங்கிழங்கு | பலம் | 1 |
| சீந்தில்சர்க்கரை | ,, | 1 |
| நெருஞ்சிமுள் | ,, | 1 |
| பெரும்பூனைக்காலிவித்து | ,, | 1 |
| நெல்லிவற்றல் | ,, | 1 |
| முள்ளிலவம்பிசின் | ,, | 1 |
| கற்கண்டு | ,, | 1 |

**செய்பாகம் :—**கற்கண்டையும் சீந்தில் சர்க்கரையையும் நீக்கி மற்ற ஐந்து சரக்குகளையும் நன்றாய் உலர்த்தி நன்கு இடித்துச் சூரணம் செய்து கல்வத்திலிட்

டுக் கற்கண்டையும் சீந்தில் சர்க்கரையையும் கூட்டி அரைத்து மிருதுவான பதத்தில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—** இந்தச் சூரணத்தில் வேளைக்குத் திரிகடிப் பிரமாணம் அந்தி சந்தி பாலில் கலந்தாவது அல்லது பசுவின் நெய்யில் மத்தித்தாவது சிலநாள் கொடுத்து வருக.

**தீரும் வியாதி :—** தாது பலவீனம், ஸ்திரீகளுக்குக் காணும் வெள்ளை, ஒழுங்கீனமான வீட்டுவிலக்கு குணமாகும்.

**பத்தியம் :—** இச்சாபத்தியமாக நல்ல ஆகாரங்களை வேளை தவருமல் சாப்பிடுவதுடன், காரத்தைக் கூடிய வரையிலும் குறைத்துக்கொள்ள வேண்டும்.

## 17. விஷாமிர்தச் சூரணம்

சரக்கு :—

1 அழிஞ்சில்பட்டை
2 நஞ்சுமுறிச்சான்கொடி
3 குப்பைமேனி
4 கோடகசாலை
5 ஆடுதீண்டாப்பாளை
6 கோபுரந்தாங்கி
7 பெருங்கிழங்கு

**செய்பாகம் :—** இங்குக் கூறப்பட்ட ஏழு மூலிகைகளையும் நன்ருய் உலர்த்தித் தனித்தனி இடித்துச் சூரணம் செய்து சமனெடையாகக் கலந்து பேய்ச்சுரைக் குடுக்கையிலாவது அல்லது காற்று நுழையாத கல்கார்கிட்ட சீசாவிலாவது அடைத்து வைத்துக் கொள்க.

**பிரயோகம் :—** இந்தச் சூரணத்தில் வேளைக்குத் திரிகடிப் பிரமாணம் அந்தி சந்தி ரோகியின் வாயில் போட்டுச் சிறிது சலம் விட்டு விழுங்கும்படி செய்க. இப்படி சில தினம் கொடுத்து வருவது அவசியமாகும்.

கொட்டு.



தீரும் வியாதி :—நாய், பூனை, எலி, பெருச்சாளி, ,ரான், வண்டு, பாம்பு முதலியவற்றின் கடி அல்லது காட்டு முதலியவற்ருல் இரத்தத்தில் விஷமேறி உண் ாகும் அரிப்பு, தடிப்பு, வீக்கம், வலி மூர்ச்சை முதலிய வைகள் குணமாகும்.

பத்தியம் :—விஷதோஷத்தின் வன்மை மென்மை றிந்து உப்பு, காரம், புளிப்பு, சேர்த்தும் சேர்க்காமலும் ஆகாரம் கொடுத்து வருக. ஒருமுறை 7 அல்லது 5 நாளிற் நக் குறையக் கூடாது. இப்படி 2 - 3 முறை கொடுப் பதற்குள் ரோகி சுகத்தை யடைவர்.

## 18. தயிர்சுண்டி சுக்குச் சூரணம்

இரண்டு படி புளித்த எருமைத் தயிரில் ஏழு பலம் சாற்றுப்பைப் போட்டுக் கரைத்து அதில் தோல்சீவிய தேர்ந்த சுக்கு பலம் பத்தைப் போட்டு ஓர் இரவு ஊறின பின் சுக்கு துண்டுகளை எடுத்து இரவிமுகத்தில் வைத்து உலர்த்தவும். அன்று இரவு இந்தச் சுக்குத் துண்டுகளை மற்படி உப்பிட்ட தயிரில் போட்டு ஊற விடவும். இப் படித் தயிரெல்லாம் சுக்குடன் சுண்டி வறண்டிருக்கும் போது இடித்துச் சூரணம் செய்து வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தச் சூரணத்தைத் திரிகடிப் பிர மாணம் அந்தி சந்தி மோரில் போட்டுக் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—பசியின்மை, அஜீரணம், புளியேப் பம், வயிற்று இரைச்சல், வயிற்று உப்பிசம், உஷ்ண பேதி இவைகள் தீரும்.

பத்தியம் :—மோர்சாதம்.

## 19. அதிமதுரச் சூரணம்

சரக்கு :—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அதிமதுரம் | பலம் | 1 | ஏலக்காய்வித்து | பலம் | 1 |
| நற்சீரகம் | ,, | 1 | நெற்பொறி | ,, | 1 |
| சாதிகோஷ்டம் | ,, | 1 | சீனிசர்க்கரை | ,, | 5 |

செய்பாகம் :—முற் கூறப்பட்ட நான்கு சரக்குகளை யும் இளஞ்சூட்டில் வறுத்து நெற்பொரியைக் கூட்டி இடித்துச் சூரணம் செய்து சர்க்கரையைக் கூட்டிக் கலந்து வைத்துக் கொள்க.

பிரயோகம் :—திரிகடிப் பிரமாணம் அந்தி சந்தி நாற்பது நாள் சாப்பிட்டு வருக.

தீரும் வியாதி ;—வாந்தி, குமட்டல், அரோசகம் கைகால் எரிச்சல், மயக்கம், வாய்நீர் கசப்பு முதலிய பித்த சம்பந்தமான பல பிணிகள் குணமாகும்.

பத்தியம்:—ரோகத்தின் வன்மை மென்மைக் கேற்ற வாறு பித்தத்தை விருத்தி செய்யக் கூடிய பண்டங் களைத் தள்ளி மற்றவைகளைக் கூட்டிக் கொள்ளவும்.

## 20. வேறு முறை

சரக்கு :—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அதிமதுரம் | பலம் | 3 | திப்பிலி | பலம் | 2 |
| உலர்த்திய இஞ்சி | ,, | 2 | சீரகம் | ,, | 2 |
| ஏலம் | ,, | 1 | | | |

செய்பாகம் :—இங்குக் கூறப்பட்ட ஐந்து சரக்கு களையும் நன்கு இடித்துச் சூரணம் செய்து வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தச் சூரணத்தில் வேளைக்கு திரி கடிப் பிரமாணம் தினம் இருவேளை சிறிது நாட்டுச்சர்க்க ரை கூட்டிக் கலந்து கொடுத்து வருக.

தீரும் வியாதி :—விக்கல், வாந்தி, பித்தம், வயிற்றுரிச்சல், மயக்கம், அதிக தாகம் முதலியவைகள் குணமாகும்.

பத்தியம் :—இச்சா பத்தியமாக அன்னங் கொள்ளல் வேண்டும்.

## 21. வாய்விளங்கச் சூரணம்

சரக்கு:—

| | | |
|---|---|---|
| வாய்விளங்கம் | பலம் | 1 |
| சுக்கு | ,, | 1 |
| ஓமம் | ,, | 1 |
| மிளகு | ,, | 1 |
| சீமை நிலாவாரை | ,, | 2 |

செய்பாகம் :—சீமை நிலாவாரையை இடித்துச் சூரணஞ்செய்து மூன்றுமுறை பசுவின் பாலில் வைத்துப் பிட்டுபோல் அவித்து உலர்த்தி யெடுத்த சூரணத்துடன் மிகுதியுள்ள சரக்குகளின் சூரணத்தைக் கூட்டி நன்றாய் உறவாகும்படி கலந்து வைத்துக்கொள்க.

பிரயோகம் :—இந்தச் சூரணத்தில் வேளைக்குத் திரிகடிப் பிரமாணம் தினம் 2, 3-வேளை சிறிது நாட்டுச் சர்க்கரை கூட்டிக் கொடுக்கவும்

தீரும் வியாதி :—வாயு, பித்தம், உஷ்ணம், வயிற்றுப் பொருமல், கபரோய், விக்கல், வாந்தி, உடம்பெரிவு, சுவாசம், காசம், மலபந்தம்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 22. இருமலுக்கு திரிபலாதிச் சூரணம்

சரக்கு :—

தான்றிக்காய்த்தோல்
நெல்லிப்பருப்பு
சிறுதேக்கு
சடாமாஞ்சி
சாதிகோஷ்டம்
வழுதணேவேர்
கண்டங்கத்திரிவேர்ப்பட்டை
இந்துப்பு
கடுக்காய்த்தோல்
கற்கடகசிங்கி
திப்பிலி
சுக்கு
மிளகு
தாதுவளேவேர்ப்பட்டை
பூனைக்காஞ்சொறி வேர்ப்பட்டை
நெற்பொரி

செய்பாகம் :—இங்குக் கூறப்பட்ட பதினாறு சரக்குகளில் இந்துப்பு நெற்பொரி நீங்கலாக உள்ள சரக்குகளை இளஞ் சூட்டில் வெதுப்பி எல்லாவற்றையும் ஒருங்குகூட்டி இடித்து வஸ்திரகாயம் செய்து வைத்துக்கொள்க.

பிரயோகம் :—இந்தச் சூரணத்தை வேளைக்குத் திரிகடிப் பிரமாணம் அந்தி சந்தி தேனில் மத்தித்து சாப்பிட்டு வருக.

தீரும் வியாதி :—சீதள சம்பந்தமான ஈளை, காசம், இருமல்.

பத்தியம் :—வாயு, சீதளமுள்ள பதார்த்தங்களைத் தள்ளி இச்சாபத்தியமாக இருத்தல் வேண்டும்.

## 23. மேனி இலவணச் சூரணம்

சரக்கு :—

| | | |
|---|---|---|
| சுக்கு | பலம் | 10 |
| இந்துப்பு | ,, | 10 |
| சோற்றுப்பு | ,, | 10 |
| பெருங்காயம் | ,, | 5 |
| ஓமம் | ,, | 10 |

செய்பாகம் :—ஒரு சட்டியில் பெருஞ்சுக்குத் துண்டுளைப் போட்டு மிதக்கக் குப்பைமேனி இலைச்சாறு விட்டு ஊறவைக்கவும். மறுநாள் காலையில் முன்விட்ட சாற்றை வடித்துவிட்டு முன்போல் புதிய குப்பைமேனி இலைச்சாறு மூழ்கவிட்டு வைக்கவும். இவ்வாறு 18-நாள் செய்து 19-வது நாள் அச்சுக்குத் துண்டுகளை இரண்டு மூன்று நாள் நிழலில் காயவைத்துப் பின்பு வெயிலில் இரண்டொரு நாள் காயவிட்டுப் பத்திரப்படுத்துக. அப்பால் சோற்றுப்பையும் இந்துப்பையும் கல்வத்தில் போட்டுக் குப்பைமேனி இலைச்சாறு விட்டுக் குழம்பு பதமாக அரைத்து வைத்துக்கொள்ளவும். ஒரு குடைக்கம்பியை ஒருபுறம் ஊசிபோல் தேய்த்து அதனில் இரண்டு மூன்று சுக்குத் துண்டுகளைக் குத்தி அவற்றிற்கு முன் சித்தப் படுத்திய உப்புக் குழம்பைத் தழும்பப் பூசிக் கரி நெருப் பனலில் வாட்டவும். உப்பு சிடுசிடுப்புக் காணும்போது சுக்குத் துண்டுகளைக் கம்பியைவிட்டு நீக்கி ஒருபுறம் வைத்துக்கொள்க. இப்படியே எல்லாச் சுக்குத் துண்டுகளையும் கம்பியில் செருகி மேலே தழும்ப உப்புக்குழம்பை அப்பி நெருப்பில் வாட்டி எடுத்துக்கொள்ளவும். இதற்கு மேல் ஓமத்தைப் பொன்மேனியாக இளஞ்சூட்டில் வறுத்துப் பெருங் காயத்தை வாசனை கிளம்பச் சுட்டு எடுத்தும் ஆறவிட்டு முன்முடித்த சுக்குத் துண்டுகளுடன் கூட்டி இடித்துச் சீலையில் அரித்து வைத்துக் கொள்க.

பிரயோகம்:—வேளைக்குத் திரிகடிப்பிரமாணம் காலை மாலைக் கொடுத்துச் சிறிது தண்ணீர் விழுங்கச் செய்க.

தீரும் வியாதி:—எத்தகைய கொடிய வற்றுவலி குன்மம் சூதகவாயு முதலியவைகளும் குணமாகும்.

பத்தியம்:—எளிதில் ஜீரணிக்கக் கூடிய இலகு போஜனம், மோர் சாதம் கொடுக்கவும்.

# 24. வாய்நீர் சுரப்புண்டாக்க அதிமதுரச் சூரணம்

சரக்கு :—

| | |
|---|---|
| அதிமதுரம் | சுக்கு |
| அக்கராகாரம் | சீரகம் |
| நெற்பொரி | ஏலம் |

இவைகள் வகைக்குக் கழஞ்சு - 1.

செய்பாகம் :—மேற்கூறப்பட்ட ஆறு சரக்குகளை யும் இடித்துச் சூரணம் செய்து கல்வத்தில் போட்டு அதனில் ¼-கழஞ்சு மயிலிறகு கருக்கின சாம்பலையும் 1 - குன்றி யெடை கஸ்தூரியையும் கூட்டி நன்கு அரைத் துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—வேண்டும்போது ஒரு கழஞ்சு யெடை சூரணத்தைத் தேன் விட்டுக் குழைத்து வைத்துக் கொண்டு ¼-மணி நேரத்திற்கு ஒருமுறை ஒரு விரலில் வழித்து நாவில் தடவிக்கொண்டு வருக.

தீரும் வியாதி :—நாவறட்சியை நீக்கி நீர்ச்சுரப்பை யுண்டாக்கும். சீதளத்தைக் கண்டிக்கும்.

பத்தியம் :—கஞ்சி சம்பந்தமான ஆகாரமே உத் தமம்.

# 25. சிகாமணிச் சூரணம்

சரக்கு :—1,

| | | |
|---|---|---|
| அறுகம்வேர் | பலம் | 4 |
| நாட்சென்ற வேப்பம்பட்டை | „ | 4 |
| நற்சங்கன்வேர்ப்பட்டை | „ | 4 |

க்கு :—2.

| | |
|---|---|
| சுக்கு | வால்மிளகு |
| ஓமம் | வாய்விளங்கம் |
| நற்சீரகம் | பறங்கிச்சக்கை |
| திப்பிலி | குரோசாணிஓமம் |
| மிளகு | கடுகுரோகணி |
| பூலாங்கிழங்கு | அக்கராகாரம் |
| அரத்தை | |

இவைகள் வகைக்குப் பலம் - ¾.

ரக்கு :—3.

| | |
|---|---|
| சிறுதேக்கு | கருஞ்சீரகம் |
| கிராம்பு | இலவங்கப்பட்டை |
| ஜாதிக்காய் | ஜாதிபத்திரி |
| ஏலம் | கோஷ்டம் |

இவைகள் வகைக்குக் கழஞ்சு - ½.

செய்பாகம் :—முதலாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள மூன்று சரக்குகளைச் சிறு துண்டுகளாக நறுக்கி ஒரு மட்பாண்டத்தில் போட்டு மூழ்கப் பசுவின் பால் விட்டு அடுப்பில் வைத்துப் பால் சுண்டக்காந்தாமல் எரித்து ரவியில் நன்ருய் உலர்த்தி அதனுடன் இரண்டாவது மூன்ருவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள சரக்குகளைச் சேறிது இளஞ்சூட்டில் வெதுப்பிக் கூட்டி இடித்து மெல்லிய சீலையில் அரித்துச் சமனெடை வெள்ளைச் சர்க்கரை கூட்டி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தச் சூரணத்தில் வேளைக்குத் திரிகடிப்பிரமாணம் அந்தி சந்தி 20-நாள் சாப்பிட்டு வருக.

தீரும் வியாதி:—வாதரோகமும் குடைச்சலும் குணமாகும். பசி தீபனத்தை அதிகப்படுத்தும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 26. குழந்தைகளுக்கு மாந்தச் சூரணம்

சரக்கு :—2

| | |
|---|---|
| சிறுதேக்கு | வாய்விளங்கம் |
| வால்மிளகு | கடுகுரோகணி |
| சுக்கு | ஏலம் |
| திப்பிலி | கிராம்பு |
| தான்றிக்காய் | தக்கோலம் |
| போஸ்தக்காய் | இவைகள் சமனெடை |

செய்பாகம் :—மேற்குறிப்பிட்ட சரக்குகளைச் சிறிது இளஞ்சூட்டில் வெதுப்பி வாசனை கிளம்பும்போது ஆற விட்டு இடித்து மெல்லிய சீலையில் அரித்துப் பத்திரப் படுத்துக.

பிரயோகம் :—குழந்தைகளின் பருவத்திற்கு ஏற்ற படி 1-2 குன்றி எடை வெந்நீர் முலைப்பால் போன்ற ஏதேனும் ஒன்றில் கலக்கித் தினம் இருவேளை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—சகல மாந்தமும் குணமாகும் மலத்தை வெளியாக்கும். ஒரு சமயம் பேதி இருப்பினும் இரண்டொருமுறை மலத்தைத் தள்ளி பிறகு மலத்தைக் கட்டும்.

பத்தியம் :—குழந்தைகட்கு உண்டான இயற்கை ஆகாரம் கொடுக்கவும்.

## 27. ஜீவரக்ஷாமிர்த சூரணம்

சரக்கு :—1

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கறியுப்பு | பலம் | 10 | இந்துப்பு | 1 | பலம் |
| நவாச்சாரம் | ,, | 1 | கல்லுப்பு | 1 | ,, |
| ஓமச்சூரணம் | ,, | $\frac{1}{4}$ | விலாமிச்சம்வேர் சூரணம் | | ,, |
| மிளகுச் சூரணம் | | $\frac{1}{4}$ | | | |

க்கு :—2

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பண்மிளக்கு வராக | | | அனிசூன்வராகனெடை | ,, | 1 |
| னெடை | ,, | 2 | அப்திமூன் | ,, | 1½ |
| டாமாஞ்சில் | ,, | 1¼ | பொரித்த பெருங்காயம் | ,, | 1¼ |
| ற்சீரகம் | ,, | 1¼ | சோம்பு | ,, | 1¼ |
| பிளப்பு சீரகம் | ,, | 1¼ | இலவங்கப்பட்டை | ,, | 1 |
| சுக்கு | ,, | 1 | அதிமதுரம் | ,, | 1 |

**செய்பாகம் :**—முதலாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள ஏழு சரக்குகளையும் கல்வத்தில் போட்டு நன்கு அரைத்து அதனுடன் இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள பதினொரு சரக்குகளையும் இடித்து வஸ்திர காயம் செய்து போட்டு ஒரு சாமம் அரைத்து ஜாடியில் போட்டு வாய் மூடிக்கொண்டு அடைத்து வாய்க்குச் சீலை கட்டித் தானிய புடத்தில் ஒரு வாரம் வைத்து எடுத்துக் கொள்ளவும்.

**பிரயோகம் :**—இந்தச் சூரணத்தைப் போஜனத்திற்குப் பின் திரிகடிப் பிரமாணம் வாயில் போட்டுக் கொண்டு சிறிது சலம் சாப்பிடவும்.

**தீரும் வியாதி :**—இது உண்ட உணவை எளிதில் ஜீரணிக்கும்படி செய்யும். ஜடராக்கினியை யுண்டாக்கி வயிற்றிலுள்ள வாயுவைக் கண்டிக்கும். ஈரல் குலையில் காணும் நோய்களுக்கு இந்தச் சூரணம் அதிக நன்மையைத் தரும். சிறிய அளவாகச் சிற்றுண்டிக்குமுன் சாப்பிட்டுவரக் கண் புகைச்சல் நீங்கும். அரை வேக்காடு கோழிமுட்டையுடன் கொள்ளத் தாதுவிருத்தி யுண்டாகும். தேனில் கொள்ள நீர்க்கோவை விலகும்.

## 28. சீதபேதிக்குச் சூரணம்

சரக்கு :—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 சாதிக்காய் | பலம் | ½ | 7 வசம்பு சுட்டகரி | பலம் | |
| 2 ஜாபத்திரி | ,, | ½ | 8 மிளகு சாம்பல் | ,, | |
| 3 மாசிக்காய் | ,, | ½ | 9 ஆமை ஓடு பற்பம் | ,, | |
| 4 கிராம்பு | ,, | ½ | 10 கோஷ்டம் | ,, | |
| 5 அதிவிடயம் | ,, | ½ | 11 அதிமதுரம் | ,, | |
| 6 கடுக்காய்ப்பூ | ,, | ½ | 12 இலவங்கப்பட்டை | ,, | |

செய்பாகம் :—மேற் கூறப்பட்ட பன்னிரண்டு சரக்குகளில் இடித்து சூரணஞ் செய்யவேண்டியவைகளைச் சூரணித்து மற்றச் சரக்குகளுடன் கூட்டிக் கல்வத்தில் போட்டு நன்ருய் அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக

பிரயோகம் :—வேண்டும்போது இந்தச் சூரணத்தில் வேளைக்குத் திரிகடிப் பிரமாணம் பெரியவர்களுக்குத் தினம் மூன்றுவேளை நெய்யில் கொடுக்கவும். குழந்தைகளாக இருப்பின் 2 - 3 குன்றி எடை கொடுக்கவும். நோய் கடினமானதாக இருந்தால் ஒரு பலம் சுத்தமான கசகசா வையும் 20-30 புளியங்கொட்டை மேற்ருேலையும் தட்டை அம்மிக் கல்லில் வைத்துப் பசுவின் பால்விட்டு நன்ருய் அரைத்து வைத்துக்கொள்ளவும். அப்பால் இரண்டரைப் பலம் பனங்கற்கண்டைத் தண்ணீர் விட்டுக் கரைத்து வடிகட்டி ஒரு இரும்புக் கடாயில் விட்டு அடுப்பிலேற்றி எரித்து அதில் முன் அரைத்து வைத்துள்ள கசகசாவை போட்டுக் கிளறி களிபோல் வருஞ்சமயம் சிறிது நெய் விட்டுக் கிளறி வழித்துக் கோப்பையில் வைத்துக்கொள்ளவும். பெரியவர்களுக்குக் கழற்சிக்கொட்டைப் பிரமாணம், குழந்தைகட்கு 2 - 3 கடலைப் பிரமாணம் லேகியத்தில் மேற்படி சூரணத்தைக் கொடுக்க விரைவில் குணமாகும்.

தீரும் வியாதி :—சீதபேதி, இரத்தபேதி, உஷ்ண சுபதி இவைகள் தீரும்.

பத்தியம் :—ரோகத்திற்கு ஏற்றவாறு அரருட்மாவு கஞ்சி, ஜவ்வரிசி கஞ்சி, மோர்சாதம் முதலியவற்றைக் கூட்டவும்.

## 29. சீதோபலாதி சூரணம்

சரக்கு :—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மூங்கிலுப்பு | தோலா | 4 | இலவங்கப்பட்டை | தோலா | 1 |
| கூகைமாவு | ,, | 4 | சீந்தில் சர்க்கரை | ,, | 4 |
| சிறுதிப்பிலி | ,, | 4 | கற்கண்டு | ,, | 20 |
| ஏலக்காய்வித்து | ,, | 2 | பூமாதுளம்பூ | ,, | 2 |

செய்பாகம் :—இங்கு கூறப்பட்ட எட்டுச் சரக்கு களில் இடிக்க வேண்டியவற்றை இடித்துச் சூரணம் செய்து மற்ற சரக்குகளுடன் கூட்டிக் கல்வத்தில் போட்டு நன்ருய் அரைத்து வைத்துக் கொள்க.

பிரயோகம்:—வேளைக்கு அரைக்கால் ரூபாய் எடை பசுவின்பாலில் போட்டுத் தினம் இரண்டு வேளை கொடுக் கவும்.

தீரும் வியாதி :—மேகசுரம், அஸ்திசுரம், க்ஷய ரோகத்தில் காணும் சுரம், பேதி, தேககாங்கை, சீதபேதி முதலியவைகள் குணமாகும்.

பத்தியம் :—காரசாரமில்லாத அன்னம் கொடுக் கவும்.

## 30. கிராணிகபாட சூரணம்

சரக்கு :—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கஞ்சா | கழஞ்சு | 1 | சாதிக்காய் | கழஞ்சு | 1 |
| அதிவிடயம் | ,, | 1 | ஜாபத்திரி | ,, | 1 |
| கிராம்பு | ,, | 1 | ஓமம் | ,, | 1 |

செய்பாகம் :—முதலில் கஞ்சாவைப் பாலில் அவித்துச் சுத்தி செய்து உலர்த்திக் கொள்ளவும். பின்னர் எல்லாச் சரக்குகளையும் ஒரு இரும்புக்கடாயில் போட்டு அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்து வாசனை கிளம்பும் சமயம் வேறு பாண்டத்தில் கொட்டி ஆறவிட்டு இடித்துச் சூரணம் செய்து வைத்துக் கொள்க.

பிரயோகம் :—பல மருந்துகளைக் கொடுத்துப் பேதி நிற்கவில்லை என்று தெரிந்த சமயம் மாதுளம்பிஞ்சு, பலாக்காய்ப்பிஞ்சு, பருத்திக்காய்ப்பிஞ்சு, வேப்பம்ஈர்க்கு, கறிவேப்பிலைஈர்க்கு, அத்திப்பிஞ்சு, கோரைக்கிழங்கு, வில்வவேர் முதலியவற்றை வகைக்கு கழஞ்சு-5 வீதம் சிதைத்து ஒரு கடாயில் போட்டு வறுத்துக் கறுகாமல் நீர்வற்றின சமயம் ஒரு குடிநீர்ப் பாண்டத்தில் போட்டு அதனுடன் 5-கழஞ்சு நெற்பொரி கூட்டி இரண்டு படித் தண்ணீர்விட்டு அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்துக் கால்படி அளவிற்கு வந்தவுடன் வடிகட்டி வைத்துக் கொள்ளவும். இந்தக் கியாழத்தில் வேளைக்கு 1½ அவுன்ஸ் வீதம் தினம் இரண்டு வேளை மேற்படி சூரணம் 3-குன்றியெடை போட்டுக் கலக்கிக் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—கிராணி-8, சன்னி-13, வயிற்றுவலி, ஊண்ரத்தக்கழிச்சல், ஒக்காளம், அதிசாரம், சீதபேதி முதலியவை தீரும்.

பத்தியம் :—அரரூட்மாவு கஞ்சி, ஜவ்வரிசிகஞ்சி, புனல்பாகம்.

## 31. திரிபலாதிச் சூரணம்

சரக்கு :—

சுத்திசெய்த சிவதைவேர்
கடுக்காய் நெல்லிக்காய்
தான்றிக்காய் வகைக்குப் பலம் - 1.

சுத்திசெய்த கோமூத்திரசிலாசத்து பலம் - ½.

**செய்பாகம் :**—மேற்கூறப்பட்ட சரக்குகளை யெல்லாம் தனித்தனி அடித்து வஸ்திரகாயம் செய்து கலந்து புட்டியில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :**—இந்தச் சூரணத்தைக் காலை நேரத்தில் தேக திடத்திற்கு ஏற்றவாறு ½ - 1 தோலா வெந்நீரில் கலக்கிக் கொடுக்கவும். 2 - 3 முறை பேதியாகும். சரிவர ஆகாவிட்டால் மறுமுறை சூரணத்தின் அளவை அதிகப்படுத்திக் கொள்க. ஒரு சமயம் பேதி அதிகமானால் மறுமுறை சூரணத்தின் அளவைக் குறைத்துக் கொள்க. இந்தப் பேதிச் சூரணம் மேக ரோகங்களை யுடையவர்கள் மாதம் ஒரு முறை அல்லது இரண்டு முறை சாப்பிட்டு வருதல் சாலச் சிறந்தது.

**தீரும் வியாதி :**—அதிமூத்திரம், மதுமூத்திரம், கட்டி முதலியவைகள் குணமாகும்.

**பத்தியம் :**—பேதியானபின் இச்சாபத்தியமாக அன்னங் கொள்ளலாம்.

## 32. பிரம்மியாதிச் சூரணம்

சரக்கு :—

வல்லாரையிலை உலர்ந்தது சுக்கு
வெட்பாலைவித்து திப்பிலி
வசம்பு

செய்பாகம் :—இங்குக் கூறப்பட்ட ஐந்து சரக்குகளையும் தனித்தனி இடித்துச் சூரணம் செய்து ஒருமிக்க கலந்து வைத்துக்கொள்க.

பிரயோகம் :—இந்தச் சூரணத்தில் வேளைக்குத் திரிகடிப் பிரமாணம் காலை மாலை தேனில் சாப்பிட்டு வருக.

தீரும் வியாதி:—தொண்டைக்கம்மல், தொண்டைக் கபம் முதலியவை தீரும்.

குறிப்பு :—இந்தச் சூரணம் விசேஷமாகப் பாடகர்களுக்குப் பெரிதும் நன்மையைத் தரும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 33. வியோசாதி சூரணம்

சரக்கு :—

| | |
|---|---|
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | ஓமம் |
| கடுக்காய் | நெல்லிவற்றல் |
| தான்றிக்காய் | கோரைக்கிழங்கு |

இவைகளின் தனித்தனிச் சூரணம் பலம்-½.

எஃகுச் செந்தூரம் பலம்-½.

செய்பாகம் :—இவைகளை யெல்லாம் ஒருமிக்கக் கல்வத்தில் போட்டு நன்கு கலக்கும்படி அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—வேண்டும்போது இந்தச் சூரணத்தில் திரிகடிப் பிரமாணம் தினம் இருவேளை தேன், நெய், மோர், வெந்நீர் முதலிய அனுபானங்களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—பாண்டு, காமாலை, சோபை, இருதய ரோகம், சொறி சிரங்கு, மூலம், அதிமூத்திரம் முதலியவைகள் குணமாகும்.

பத்தியம் :—புளிதள்ளி இச்சாபத்தியம்.

## 34, ஸாரஸ்வத சூரணம்

சரக்கு :—

| | |
|---|---|
| சுக்கு | வசம்பு |
| கறிமஞ்சள் | அதிமதுரம் |
| இந்துப்பு | கோஷ்டம் |
| ஓமம் | திப்பிலி |
| மரமஞ்சள் | சீரகம் |

இவைகள் வகைக்குப் பலம் - ½.

**செய்பாகம் :—** இங்தக் கூறப்பட்ட சரக்குகளையெல் லாம் நன்கு இடித்து வஸ்திரகாயம் செய்து சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—** இந்தச் சூரணத்தில் வேளைக்கு அரைக் கால் ரூபாய் எடை நெய்யில் தினம் ஒருவேளை காலை நேரத்தில் கொடுத்து வருக.

**தீரும் வியாதி :—** சில தினம் கொடுத்துவர மந்தபுத் தியை நீக்கி ஞாபகசக்தியை யுண்டாக்கும்.

**பத்தியம் :—** இச்சாபத்தியம்.

---

# மாத்திரை இலம்பகம்

## 1. பச்சைக் கற்பூர மாத்திரை

சரக்கு :—

| | |
|---|---|
| 1 சாதிக்காய் | 5 மிளகு |
| 2 சாபத்திரி | 6 வால்மிளகு |
| 3 தக்கோலம் | 7 ஏலம் |
| 4 கிராம்பு | |

இவைகள் வகைக்குப் பலம் 1

சாதிகோஷ்டம்
சந்தனத்தூள்
குங்குமப்பூ
கஸ்தூரி
பச்சைக்கற்பூரம்

இவைகள் வகைக்கு வராகனெடை - 1.

**செய்பாகம் :—** இங்குக் கூறப்பட்ட பன்னிரண்டு சரக்குகளில் சூரணிக்க வேண்டியவற்றைச் சூரணித்து மிகுதியுள்ள சரக்குகளுடன் கூட்டிக் கல்வத்தில் போட்டு இளநீர்த் தண்ணீர்விட்டு நன்கு அரைத்து மெழுகு பதத்தில் பயறு, உளுந்து, மிளகுப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—** தேனிலாவது இஞ்சி சுரத்திலாவது பெரியவர்களுக்கு வேளைக்கு மிளகு அளவுள்ள மாத்திரையைத் தினம் 2-3 வேளை கொடுத்து வருக. குழந்தைகளின் வயதுக்கு ஏற்றவாறு பயறு, உளுந்து அளவுள்ள மாத்திரையைத் தினம் இருவேளை கொடுத்து வருக.

**தீரும் வியாதி :—** சாதாரணமாகப் பெரியவர்களுக்குக் கொடுக்கும்போது சன்னி, சுரம், தாகம், சூலை, குரல் கம்மல், சயித்தியம் முதலியவைகள் குணமாகும். இன்னும் இந்த மாத்திரையைத் தாம்பூலத்துடன் சேர்த்துக் கொடுக்கப் பல்வலி, வாய்நாற்றம், பற்கூச்சம் குணமாகும்.

குழந்தைகளுக்குக் கொடுக்கும்போது மாந்தம், சுரம், வயிறுகொட்டல், வலி முதலியவைகள் குணமாகும்.

**பத்தியம் :—** நோயின் வன்மை மென்மைக்கிசைந்தவாறு சீதளம் மிகுந்திருப்பின் கஞ்சி பத்தியமும், சாதாரணமாக இருப்பின் இச்சாபத்தியமுமாக இருத்தல் வேண்டும்.

பாலுண்ணும் குழந்தைகளுக்குக் கொடுக்கும்போது தாய் புளிதள்ளி இச்சாபத்தியமாக இருத்தல் வேண்டும்.

## 2. வஜ்ஜிரகண்டி மாத்திரை

சரக்கு :—

| | | |
|---|---|---|
| இலிங்கம் | வராகனெடை | 8 |
| இரசகற்பூரம் | ,, | 1 |
| இரசசெந்தூரம் | ,, | 2 |
| வீரம் | குன்றியெடை | 4 |

செய்பாகம் :—இங்குக் கூறப்பட்ட நான்கு சரக்குகளையும் கிரமப்படி சுத்திசெய்து கல்வத்தில் போட்டு ஒரு சாமம் பழச்சாற்றிலும் ஒரு சாமம் இஞ்சிச் சாற்றிலும் அரைத்து மெழுகு பதமாகத் திரண்டு வரும்போது உளுந்து அளவுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலில் உலர்த்திச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்த மாத்திரையை வேளைக்கு ஒன்றுவீதம் தினம் இருவேளை நோய்களுக்கு ஏற்றவாறு அனுபானம் செய்து கொடுக்கவும்.

தீரும் வியாதி :—மேகக்குடைச்சல், விரைவாதம், வேகமுறுஞ் சுரம், புண்புரை, நடுக்கல் சுரம், தர்க சுரம், மூர்ச்சை, கணுவாதம், வெள்ளை, அரையாப்பு, கண்டமாலை, சன்னி-13.

பத்தியம் :—சிறுபயறு, முருங்கைப்பிஞ்சு, ஆட்டிறைச்சிவற்றல், துவரம்பருப்பு, அரைக்கீரை, பால்கஞ்சி, கோதுமைக்கஞ்சி ஆகும். முக்கியமாக நோய்களுக்கு ஆகாத பதார்த்தங்களைத்தள்ளி இச்சாபத்தியமாக அன்னங் கூட்டல் நன்று. இம்மருந்தைக் கொடுத்த பின் ஆரோக்கிய ஸ்நானம் செய்வதற்கு அடியில் கூறப்பட்ட தைலம் அதிக நன்மையைத் தரும்.

கால்படி நல்லெண்ணெயில், நுணப்பட்டை, துளசிப் பட்டை, வெள்ளைப்பூண்டு, மிளகு, மஞ்சள், கறிவேப்பிலை சரக்கு வகைக்குப் பலம் ¼-வீதம் இடித்துப்போட்டு அடுப்பில் வைத்து எரித்து கற்கம் சிவந்து வரும்போது கீழிறக்கி ஆறவிட்டு வடித்துச் சீசாவில் பத்திரப்படுத்துக. இந்தத் தைலத்தைச் சிரசிற் கிட்டு சிகைக்காய்கொண்டுதேய்த்து வெந்நீரில் ஸ்நானம் செய்ய வேண்டும். அன்று பகல் நித்திரை, அலைச்சல், திரிச்சல் கூடாது.

## 3. மாந்த மாத்திரை

சரக்கு :—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆமை ஓடு பற்பம் | பலம் | 1 | ஓமம் | பலம் | 1 |
| சுக்கு | ,, | 1 | கடுகுரோகணி | ,, | 1 |
| மிளகு | ,, | 5 | சுத்திவாளம் | ,, | 5 |
| கோஷ்டம் | ,, | 1 | | | |

செய்பாகம் :—இங்குக் கூறப்பட்ட ஏழு சரக்குகளில் இடிக்க வேண்டியவற்றை இடித்துச் சூரணம் செய்து, மற்றுமுள்ள சரக்குகளுடன் கூட்டிக் கல்வத்தில் போட்டு எலுமிச்சம்பழச்சாறு விட்டு 4-சாமம் நன்கு அரைத்து மெழுகுபத்மாகத் திரளும் சமயம் பயறு உளுந்தளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப் படுத்துக.

பிரயோகம் :—குழந்தைகளின் பருவத்திற்கு ஏற்றவாறு பயறு அல்லது உளுந்து அளவுள்ள மாத்திரையைத் தேன் இஞ்சி சுரசம் அல்லது இந்நூலில் கியாழ இலம்பகத்தில் கூறப்பட்டுள்ள ஏதாவது ஒரு மாந்தக் கியாழம் முதலியவற்றில் தினம் ஒருவேளை ஒன்றைவிட்டு ஒருநாள் வீதம் 3-முறை கொடுக்கவும்.

தீரும் வியாதி :—மாந்தம், சுரம், சன்னி, வலி, சலதோஷம் முதலியவைகள் குணமாகும்.

குறிப்பு :—பெரியவர்கள் கொள்ள விரும்பின் சுக்கு, மிளகு கியாழத்தில் தேகதிடத்திற்கு ஏற்றவாறு 4 - 5 மாத்திரையைப் பொடி செய்து போட்டு உட்கொள்ள 4 - 5 முறை பேதியாகும். சுரம், வாயு முதலியவைகள் குண மாகும். வெந்நீர் சாதம் சாப்பிட பேதி நிற்கும்.

பத்தியம் :—பெரியவர்களுக்குக் கொடுத்துப் பேதி யான பின் இச்சாபத்தியமாக அன்னம் கொள்ள வேண் டும். பாலுண்ணும் குழந்தைகட்குக் கொடுத்தபோது தாய் இச்சாபத்தியமாக அன்னம் கொள்ள வேண்டும்.

## 4. இருமல் மாத்திரை

சரக்கு :—

| | | |
|---|---|---|
| அதிமதுரத்தூள் | பலம் | 1 |
| வெண்மிளகுத்தூள் | ,, | 1 |
| பொரித்த எண்ணெய் வெங்காரம் | ,, | 1 |
| கழுவிச் சுத்தப்படுத்திய சோற்றுக்கற்றாழைச்சோறு | ,, | 3 |

செய்பாகம் :—இங்குக் கூறப்பட்ட நான்கு சரக்கு களையும் கல்வத்தில் போட்டு ஈரம் வற்றி மெழுகாகும்படி அரைத்துப் பட்டாணிப் பிரமாணம் மாத்திரைகள் செய்து உலர்த்திச் சீசாவில் பத்திரப் படுத்துக.

பிரயோகம் :—இம்மாத்திரையிலொன்றை 4-மணி நேரத்திற்கு ஒருமுறை வாயிலிட்டுச் சப்பி அதிலிருந்து கரைந்து வரும் திரவத்தை விழுங்கிக் கொண்டு வர வேண்டும்.

தீரும் வியாதி :—கப சம்பந்தமான பல இருமல்கள் தீரும்.

பத்தியம் :—சீதள பண்டங்களை நீக்கி மற்றவைகளை யுண்ணவும்.

## 5. காமகேசரிக் குளிகை

சரக்கு :—

| | |
|---|---|
| மதனகாமப்பூ | கிராம்பு |
| ஜாதிக்காய் | மராட்டிமொக்கு |
| முருங்கைவித்து | ஆலம்வித்து |
| அரசம்வித்து | அத்திவித்து |
| அதிமதுரம் | |

இவைகள் வகைக்குப் பலம் - $\frac{1}{2}$.

| | | |
|---|---|---|
| அபினி | பலம் | $\frac{1}{4}$ |
| சாம்பிராணிப்பதங்கம் | ,, | $\frac{1}{4}$ |
| தங்கச்செந்தூரம் | வராகனெடை | 1 |

செய்பாகம் :—இங்குங் கூறப்பட்ட பன்னிரண்டு சரக்குகளில் இடித்துச் சூரணம் செய்ய வேண்டியவற்றைச் சூரணித்து மிகுதியுள்ள சரக்குகளுடன் கூட்டிக் கல்வத்திலிட்டு முருங்கைப்பூச்சாறு விட்டு நான்கு ஜாமம் அரைத்துக் கடலைப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திச் சீசாவில் பத்திரப் படுத்துக.

பிரயோகம் :—இந்த மாத்திரை வேளைக்கு ஒன்றுகக் காலை மாலை காய்ச்சிய பசுவின்பாலில் தூள்செய்து போட்டுக் கலக்கி நாற்பது நாள் உண்டு வருக.

தீரும் வியாதி :—தாதுபலவீனம் குணமாவதுடன் திடமான தேகசத்தி உண்டாகும். கிரமமாக ஒரு மண்டலம் உட்கொள்ள சந்தர்ப்பப்படாவிடின் குறைந்தபட்சம் 7 - நாள் தொடர்ச்சியாக உட்கொள்ளவும்.

பத்தியம் :—மாத்திரை உட்கொள்ளும்போது புளி தள்ளி இச்சாபத்தியம்.

குறிப்பு :—அபினி சம்பந்தமான மாத்திரைகளைக் குறிப்பிட்ட அளவின்படி உட்கொள்ளும்போது சில பித்த

தேகிகளுக்கு மயக்கமுறச்செய்யும். ஆதலால் ஆரம்பத்தில் இரண்டு மூன்று தினம் அரை மாத்திரை யுட்கொள்ளவும். இதில் தேக சுபாவம் சிறிதும் மாறுபட்டில்லாவிடின் மறுமுறையுண்ணும்போது ஒரு மாத்திரையாகச் சாப்பிடலாம். இப்படி ஒரு முறை இரண்டு முறை சாப்பிட்டு குணம் சரிவர ஏற்படாவிடின், தேக சுபாவத்திற்கு ஏற்றவாறு அளவை அதிகப்படுத்திக்கொள்ளலாம்.

## 6. காச குலாந்தக மாத்திரை

சரக்கு :—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| இலிங்கம் | பலம் | $\frac{1}{4}$ | தாளகம் | பலம் | $\frac{1}{4}$ |
| மனோசிலை | ,, | $\frac{1}{4}$ | பொரித்த வெங்காரம் | | $\frac{1}{4}$ |
| கருநாபி | ,, | $\frac{1}{4}$ | சுக்கு | ,, | $\frac{1}{4}$ |
| மிளகு | ,, | $\frac{1}{4}$ | திப்பிலி | ,, | $\frac{1}{4}$ |

**செய்பாகம் :—**மேற்கூறப்பட்ட எட்டு சரக்குகளில் இடித்துச் சூரணம் செய்யவேண்டியவற்றைச் சூரணித்து, மற்றுமுள்ள சரக்குகளுடன் கல்வத்தில்போட்டு இஞ்சிச் சாறு விட்டு நான்கு சாமம் நன்ருய் அரைத்து மெழுகு பதத்தில் சிறு குன்றி அளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—**இம் மாத்திரையைத் தினம் இரு வேளையாக மூன்று அல்லது ஐந்து நாள் வரையில் சிற்றரத்தைக் கியாழம், முலைப்பால், இஞ்சிச்சாறு போன்ற அனுபானங்களில் கொடுத்து வருக.

**தீரும் வியாதி :—**சுவாசம், காசம், ஈளை, சுரம் முதலியவைகள் தீரும்.

**பத்தியம் :—**புளி தள்ளி இச்சாபத்தியமாக இருத்தல் வேண்டும்.

குறிப்பு :—இம்முறையில் வீரம் பலம் ¼ கூட்டிக் கொள்ளும்படி வீரமாமுனிவர் கூறி இருக்கின்றனர்.

இம்மாத்திரையைச் செய்யும்போது சரக்குச் சுத்தியை கவனத்தில் வைக்கவும்.

## 7. சஞ்சீவி மாத்திரை

சரக்கு :—

| | |
|---|---|
| இருவி | நாபி |
| தாளகம் | ரசம் |
| கந்தகம் | பொரித்த வெங்காரம் |
| தான்றிக்காய் | சுக்கு |
| மிளகு | திப்பிலி |

இவைகள் வகைக்குக் கழஞ்சு - 1

சுத்திசெய்த வாளம் ,, 5

செய்பாகம் :—இவைகளைக் கல்வத்தில் போட்டுக் கரிசாலைச் சாறுவிட்டுத் தினம் ஒன்றுக்கு ஒரு சாமம் ஏழுநாள் அரைத்து மெழுகுபதம் வருஞ்சமயம் பயறு, உளுந்து, மிளகு பிரமாணம் மாத்திரைகள்செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்த மாத்திரையைப் பெரியவர் களுக்காவது குழந்தைகளுக்காவது தினம் ஒருவேளை காலை நேரத்தில் கொடுக்கவேண்டும். பெரியவர்களுக்கு மிளகு அளவு உள்ளது ஒன்று போதுமானது. ஒரு வயது குழந்தைக்குப் பயறு அளவுள்ள மாத்திரை ஒன்று போது மானது இரண்டு மூன்று வயதுள்ள குழந்தைகளுக்கு உளுந்தளவுள்ள மாத்திரை ஒன்று போதுமானது. இத னால் 4 - 5 முறை பேதியாகும். மேற்கூறப்பட்ட அளவின் படி பேதி 4 - 5 முறை ஆகாவிடின் மறுமுறை கொடுக்கும் போது சிறிது அளவை அதிகப்படுத்திக் கொள்ள வேண்டும்.

**தீரும் வியாதி :—** சாதிக்காய்ச் சூரணத்திலாவது அல்லது கியாழத்திலாவது கொடுக்க மூலரோகம் குணமாகும். சுக்குக் கியாழத்தில் பேதி மாத்திரையாகக் கொடுக்கப் பல வியாதிகளை வரவொட்டாமல் தடுக்கும்.

பழச்சாற்றில் கொடுக்கப் பாம்பு விஷ மிறங்கும்.

முருங்கைப்பட்டைச் சாறு அல்லது கியாழத்தில் கொடுக்கச் சூலை நீங்கும்.

நொச்சியிலைச் சாற்றில் கொடுக்க வலி குன்மம் நீங்கும்.

அறுகங்கட்டைச் சாறு அல்லது கியாழத்தில் கொடுக்கப் பிரமேகம் குணமாகும்.

வெந்நீரில் கொடுக்கக் குளிர்சுரம் போம்.

பிரண்டைச் சாற்றில் கொடுக்கப் பழைய மலக்கட்டை வெளியாக்கும்.

சீந்தில்கொடிச் சாற்றில் கொடுக்க எரி குன்மம் குணமாகும். வெள்ளாட்டுப் பாலில் கொடுக்கக் கப சம்பந்தமான பிணிகள் போம்.

## 8. சங்கு மாத்திரை என்னும் பேதி மாத்திரை

சரக்கு :—

ஜாதிக்காய்
கிராம்பு
சுக்கு
கஸ்தூரிமஞ்சள்
பொரித்த பெருங்காயம்
ஓமம்
கருஞ்சீரகம்
திப்பிலி
சுட்ட வசம்பு

இவைகள் வகைக்குக் கழஞ்சு-1.

வெள்ளைக் காக்கட்டான் வேர்ப்பட்டை கழஞ்சு-9.

செய்பாகம் :—இவைகளை யெல்லாம் கல்வத்தில் போட்டு வெந்நீர்விட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகு பதத்தில் கடலைப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—ஒரு வருஷத்திற் குட்பட்ட குழந்தைகளுக்கு ½-மாத்திரை, ஒரு வயதுக்கு மேற்பட்ட குழந்தைகளுக்கு ஒரு மாத்திரை வீதம் தினம் இருவேளை 3 - 5 நாள் வெந்நீரில் கொடுக்கவும். இதனுல் இரண்டொரு தடவை மலம் போகும். அதிகமாகப் பேதியாஞல் சிறிது அளவைக் குறைத்துக் கொள்ளவும். மலம் சரிவர வெளிக் காணு விடின் சிறிது அளவை அதிகப்படுத்திக் கொள்ளவும்.

தீரும் வியாதி ;—நெஞ்சு, கபம், இருமல், கக்கல், மலக்கட்டு, சுழிகணங்கள், மலக்கிருமி, அள்ளுமாந்தம், சந்நி, தோஷம், சுரம், வலி, மாந்தம், வயிற்றுவலி முதலியவைகள் தீரும்.

பத்தியம் :—பாலுண்ணும் குழந்தைகட்குக் கொடுக்கும்போது தாய் புளிதள்ளி இச்சாபத்தியமாக இருத்தல் வேண்டும்.

## 9. ஜோதிரச மாத்திரை என்னும் பேதி மாத்திரை

சரக்கு :—

சுக்கு
மிளகு
திப்பிலி
கடுக்காய்
நெல்லிவற்றல்
தான்றிக்காய்
பொரித்த வெங்காரம்
வாலைரசம்
கெந்தி

இவைகள் வகைக்குப் பலம் - ¼.

சுத்திசெய்த வாளம் பலம் - ½.

**செய்பாகம் :—**இவற்றைக் கல்வத்தில் போட்டு பொற்றலைக் கையாந்தகரைச் சாறு வெள்ளைச்சாட்டர ணைச் சாறு முதலியவற்றால் ஒவ்வொரு சாமம் அரைத்து மெழுகுபதத்தில் கொத்துமல்லிவிதைப் பிரமாணம் மாத் திரைகள் செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—**பெரியவர்களுக்கு 7-அல்லது 8-மாத் திரையைப் பொடிசெய்து சுக்குக் கியாழத்தில் பனங்கற் கண்டு கூட்டி அதில் போட்டுக் காலை நேரத்தில் ஒரு வேளை கொடுக்கவும். குழந்தைகட்கு முன்போல் 2-3 மாத்திரை கொடுக்கவும். 4-5 முறை பேதியாகும். பேதி சரிவர ஆகாவிடின் மறுமுறை மாத்திரையின் அளவை அதிகப்படுத்திக் கொள்க.

**தீரும் வியாதி :—**வாயுக்களைக் கண்டிக்கும். சுரத் தின்பேரில் உள்ள மலசலக் கட்டை உடைக்கும். பேதி மாத்திரையாக 3-மாதத்திற்கு ஒருமுறை கொடுத்துவர எந்த வியாதியையும் வரவொட்டாமல் தடுக்கும்.

**பத்தியம் :—**பேதி 5-6 முறை ஆகியின்றவுடன் இச் சாபத்தியமாக ஆகாரம் உட்கொள்ளவும். சூப்பு, சாதம் பருப்பு ரச சாதம் உத்தமம்.

## 10. அக்கினி குமார மாத்திரை

சரக்கு:—

| | | |
|---|---|---|
| வாலைரசம் | வராகனெடை | 1 |
| கந்தகம் | ,, | 1 |
| பொரித்த வெங்காரம் | ,, | 1 |
| சங்கு பற்பம் | ,, | 1 |
| பலகறை பற்பம் | ,, | 1 |
| சுத்திசெய்த நாபி | ,, | 3 |
| வெண்மிளகு | ,, | 8 |

**செய்பாகம் :**—மேற் கூறப்பட்ட சரக்குகளைக் கல்வத்தில் போட்டு எலுமிச்சம்பழச்சாறுவிட்டு ஒருசாமம் நன்கு அரைத்து மெழுகுபதத்தில் மிளகு அளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :**—இந்த மாத்திரையை வேளைக்கு ஒன்ருக தினம் இருவேளை தேன், இஞ்சிசுரசம் முதலியவற்றில் கொடுக்கவும்.

**தீரும் வியாதி :**—அஜீரணம், சுரம், சந்நி, குன்மம் மகோதரம், பிரமேகம், வாந்திபேதி, காமாலை, பாண்டு, சோகை, சூலை, விஷசுரம் (டைபாயிட் சுரம்) முதலியவை தீரும்.

**பத்தியம் :**—ரோகத்திற்கு ஏற்றவாறு கடும்பத்தியமாகவாவது இச்சாபத்தியமாகவாவது வைத்தல் நன்று.

## 11. கப நிவாரண மாத்திரை
### (வெளிப் பிரயோகம்)

**சரக்கு :**—

வில்வமரவேர்ப்பட்டை சிற்ருமுட்டிவேர்ப்பட்டை
கற்பூரவள்ளி இலை அல்லது அதன் பட்டை

| | |
|---|---|
| நெற்பொரி | குங்குமப்பூ |
| கோரோசனை | தேவதாருகட்டை |
| * மனேசிலை | ஆடாதோடைவேர்ப்பட்டை |
| ஏலரிசி | முருங்கைவித்து |
| சீரகம் | |

**செய்பாகம் :**—இங்குக் கூறப்பட்ட பன்னிரண்டு சரக்குகளையும் ஒரு அளவாகக் கல்வத்தில் போட்டு முதலில் தும்பையிலைச் சாற்றிலும் பின்னுல் முலைப்பாலி

* மனேசிலைக்குச் சுண்ணும்பு அரைத்துக் கவசித்துச் சிறிது சுட்டு எடுத்துக் கொள்க.

லும் நன்கு அரைத்துத் தூதுளங்காய்ப் பிரமாணம் மாத்திரைகள் செய்து உலர்த்தி வைத்துக் கொள்ளவும்.

பிரயோகம் :—ரோகிக்குக் கபமானது நுரையீரலில் அதிகமாகச் சிக்குண்டு சுரம் தனியாமல் இருக்கும்போது சில மாத்திரையைத் தும்பையிலைச் சாற்றில் உரைத்து முலைப்பால் விட்டு குழைத்து மார்புக்குப் பூசவும் (நுரையீரலுக்குச் சமீபமாக) இப்படித் தினம் 2 - 3 வேளை பற்றிட்டுக் கொண்டுவரக் கபத்தை எளிதில் கரைத்து விடும். இந்த மாத்திரை ஆங்கில வைத்தியத்தில் ஆண்டிபிலாஜிஸ்டின் என்னும் களிம்பைவிடச் சிரேஷ்டமானது என்று அனுபவத்தில் கண்டிருக்கிறது.

## 12. கற்பூராதி மாத்திரை

### (வெளிப் பிரயோகம்)

சரக்கு :—

| | |
|---|---|
| பச்சைக்கற்பூரம் | வெண்சந்தனம் |
| செஞ்சந்தனம் | கிச்சிலிக்கிழங்கு |
| சகஸ்திரபேதி | கல்நார் |
| வெட்டிவேர் | சாதிகோஷ்டம் |

கண்டில் வெண்ணெய் (யானைக்குட்டி மலம்)

இவைகள் வகைக்கு வராகனெடை 1.

| | |
|---|---|
| அதிமதுரம் | வராகனெடை 3 |
| நெற்பொரி | ,, 6 |

செய்பாகம் :—இவைகளை யெல்லாம் இடித்துச் சூரணமாக்கிக் கல்வத்தில் போட்டு முலைப்பால் விட்டு அரைத்துக் கழற்சிக்காய்ப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப் படுத்துக.

பிரயோகம் :—அதிக சுரமாக இருக்கும்போதும், கடினமான தலைவலி நாவறட்சி உள்ளபோதும், கண்கள் சிவந்து தேகத்தில் எரிச்சல் மிகுந்து வாய்ப் பிதற்றும் போதும், தூக்கம் இல்லாமல் படுக்கையில் புரண்டு கொண்டிருக்கும்போதும், இந்த மாத்திரையில் அரைப் பாகம் முலைப்பாலில் உரைத்து நெற்றி கன்னம் முதலிய விடங்களில் பற்றிடுவதுடன் உச்சி மயிரை நீக்கிப் பற்றிடவும். உடனே சுரம் இரங்கும். நித்திரை யுண்டாகும். இவ்வாறு இருமுறை போடுவதற்குள் எதிர்பாராத சுகத்தைத் தரும். ஒருமுறை பற்று போட்டபின் மறுமுறை பற்று போடுவதாக இருப்பின் முலைப்பாலைக் கொண்டு சுத்தப்படுத்திவிட்டுப் பற்றுப் போடவும்.

## 13. தனகனக சௌராக்ஷதக் குளிகை

சரக்கு :—

| | |
|---|---|
| இலிங்கம் | வாலைரசம் |
| மிளகு | கந்தகம் |
| தாளகம் | கௌரி |
| பொரித்த வெங்காரம் | நாபி |

செய்பாகம் :—மேற் கூறப்பட்ட எட்டுச் சரக்குகளில் சுத்தி செய்ய வேண்டியவற்றை நன்கு சுத்தி செய்தும் இடித்துத் தூளாக்க வேண்டியவற்றைச் சூரணித்தும் வகைக்கு ஒரு வராகனெடை வீதம் கல்வத்தில் போட்டுச் சௌரிக்கொடிச்சாறு விட்டு 4-சாமம் அரைத்து மெழுகு பதம் வருஞ் சமயம் உளுந்தளவு மாத்திரைகள் செய்து உலர்த்திப் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—ஒரு மாத்திரையைச் தேனில் ஒரு பொழுதே கொடுக்கத் தக்கது. தேவையாயின் மறுநாட் காலையில் ஒரு மாத்திரை கொடுக்கலாம். நோய் எவ்வளச்ப்லப்பட்டிருப்பினும் இரு வேளைக்குள் குணமாகும்.

தீரும் வியாதி :—சுரம், சுரத்தோடம், சன்னி, சுரூாவறட்சி, வயிற்றுவலி, அதிசாரம், வாத பித்த சுஷய ரோகங்கள் முதலியவை தீரும்.

பத்தியம் :—பால் கஞ்சி, பாலன்னம்.

## 14. நன்னாரி மாத்திரை

சரக்கு :—

| | | |
|---|---|---|
| நன்னாரிவேர்ப்பட்டை | தோலா | 1 |
| சீரகம் | ,, | 1 |
| சோம்பு | ,, | 2 |
| ஏலக்காய் அரிசி | ,, | 1 |

செய்பாகம் :—இங்குக் கூறப்பட்ட நான்கு சரக்குகளையும் பொடித்துக் கல்வத்தில் போட்டுத் தோல் நீக்கி இடித்துப் பிழிந்தெடுத்த பச்சை நன்னாரி வேர்ப்பால் 6-7 அவுன்சுக்குக் குறையாமல் விட்டு அரைத்துப் பின்னர் செவ்வகத்திப் பூச்சாறு விட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகுபதம் வருஞ்சமயம் குன்றியளவு மாத்திரைகள் செய்து உலர்த்திப் பத்திரப்படுத்தவும்.

பிரயோகம் :—இந்த மாத்திரையை வேளைக்கு ஒன்றாக தினம் இருவேளை பால், இளநீர், நீராகாரம் முதலியவற்றில் பொடித்துப் போட்டுக் குடிக்கவும்.

தீரும் வியாதி :—மஞ்சட்காமாலை, வாயு, கைகால் எரிச்சல், கண்ணெரிச்சல், நீர் எரிச்சல், நீர்க்கட்டு தூக்கமின்மை முதலியவை தீரும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 15. ஏலாதி மாத்திரை

சரக்கு :—

| | | |
|---|---|---|
| சுத்திசெய்த பூரம் | வராகனெடை | 1 |
| ,, வாளம் | ,, | 2 |
| மொட்டு நீக்கிய கிராம்பு | ,, | 4 |
| ஏலக்காய் அரிசி | ,, | 8 |

செய்பாகம் :—மேற்கூறப்பட்ட நான்கு சரக்குகளை யும் கல்வத்தில் போட்டு சுத்த சலம்விட்டு நன்கு அரைத்து மெழுகு பதத்தில் பயறு அளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—குழந்தைகளின் பருவத்திற்கு ஏற்ற வாறு 1-2 மாத்திரை தினம் ஒருவேளை காலை நேரத்தில் துளசிச்சாறு, வெற்றிலைச்சாறு, மாசிப்பத்திரிச்சாறு, முலைப்பால், சுக்கு அல்லது மிளகு கியாழம் முதலியவற் றில் ஏதேனும் ஒன்றைச் சித்தப்படுத்தி அதனில் உரைத் துக்கொடுக்க இரண்டு மூன்று முறை பேதியாகும். பேதி அதிகமாயின் மாத்திரையின் அளவைக் குறைத்தும் பேதி இரண்டொரு முறை யாகாவிடின் சிறிது அளவை அதிகப் படுத்தியும் கொடுக்க வேண்டும்.

தீரும் வியாதி :—இந்த மாத்திரையை அடிக்கடி உபயோகித்துக் கொண்டுவரச் சொறி, சிரங்கு, சுரம், வாயு, மாந்தம் முதலியவைகள் தீரும். பெரியவர்களுக்கு 3-4 மாத்திரை வீதம் கொடுக்கலாம்.

பத்தியம் :—பேதியானபின் இச்சாபத்தியமாக அன் னம் கொள்ளவேண்டும். பாலுண்ணும் குழந்தைகட்கு கொடுக்கும்போது தாய் இச்சாபத்தியத்தை யனுசரிக்க வேண்டும்.

## 16. மருத்துவாமிர்தக் குளிகை

சரக்கு :—

அதிமதுரம்
ஏலம்
சகஸ்திரபேதி
மாசிக்காய்
இரசகற்பூரம் (பூரம்)
சாதிகோஷ்டம்
கோரோசனை
சண்பகமொட்டு
இலவங்கப்பத்திரி

இவைகள் வகைக்கு வராகனெடை - 1¼.

செய்பாகம் :—இங்குக் கூறப்பட்ட ஒன்பது சரக்குகளில் இடித்துச் சூரணம் செய்ய வேண்டியவைகளைச் சூரணித்து இரசகற்பூரத்தைச் சுத்திசெய்து எல்லாவற்றையும் கல்வத்தில் போட்டு வைத்துக்கொள்க. அப்பால் ½-பலம் வெட்டிவேர் ½-பலம் விலாமிச்சம்வேர் இவைகளைப் பஞ்சுபோல் நசுக்கி ஒரு பாண்டத்தில் போட்டு ½-படி சலம் விட்டு அடுப்பில் வைத்துச் சிறுக எரித்து வீசம்படி கண்டின சமயம் வடிகட்டி அதனில் துளசிச்சாறு, மாசிப்பத்திரிசாறு வகைக்கு 2 - 3 அவுன்ஸ் வீதம் விட்டுக் கலக்கி முன் சித்தப்படுத்தி வைத்துள்ள கல்வத்தில் கொஞ்சங் கொஞ்சமாக விட்டு 2-சாமம் அரைத்து மெழுகு பதமாகத் திரளும்போது வெந்தயம் அளவாக மாத்திரை கள் செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—குழந்தைகளின் பருவத்திற்கு ஏற்றவாறு 1-2 அல்லது 3-மாத்திரை வீதம் தினம் ஒருபொழுது 3-5 நாள் கொடுக்கவும். மாசிப்பத்திரி இலையை ஒரு கைப்பிடி அளவு ஒரு புதுச்சட்டியில் போட்டுச் சலசலப்பாக வறுத்துத் தண்ணீர்விட்டுக் காய்ச்சிய கியாழத்தில் கொடுக்கச் சிங்கு மாந்தக்கணை தீரும். இலவங்கப்பூவை வறுத்துச் சலம்விட்டுக் காய்ச்சிய கியாழத்தில் கொடுக்க மாந்தத்தில் காணும் பேதி குணமாகும். முலைப்பாலில்

கொடுக்க மேல்வயிறு பொருமி குடல் புரண்டு புரள
எழுந்து அடங்கும் குடல்படுவன் குணமாகும். இன்
இந்த மாத்திரையை மாசிப்பத்திரிச்சாறு, துளசிச்ச
வெற்றிலைச்சாறு, இஞ்சிச்சாறு முதலியவற்றில் ஏதே
ஒன்று சித்தப்படுத்தி அனுபானமாகப் புகட்டும்போ
சிங்கி, கணை, மாந்ததோஷம், சுரம், சந்நி மாந்தம், இழுப்
வலி முதலியவைகள் நிவர்த்தியாகும். இந்தச் சிங்கி ம
தக்கணை மகா கொடியது. இந்த நோய் 13-15 வய
வரையிலும் மக்களுக்குக் காண்பது உண்டு. இந்த நோ
காணும்போது நெஞ்சில் கபம், தாகம், நாவறட்சி, இரும
உதடு காய்ந்து கருகுதல், நாவில் வெண்மை அழுக்கு
படருதல், சுவாசம் அதிகப்படுதல், திடுக்கிட்டு வா
பிதற்றுதல், மந்தம்போல் கழிதல், முதலிய குறிகள் ஏ
படும். சரியான சிகிச்சை செய்யத் தவறின் ஆபத்
புண்டாக்கும்.

## 17. சர்வஜுர மாத்திரை

சரக்கு :—

| | |
|---|---|
| சங்குப்பாஷாணம் | கௌரி |
| தாளகம் | வாலைரசம் |
| கந்தகம் | இலிங்கம் |

கோரோசனை வகைக்கு வராகனெடை-1.

செய்பாகம் :—சங்குப்பாஷாணத்தை வெள்ளறு
அவுரி இலைச் சாறுகளால் ஒவ்வொரு சாமம் சுறுக்கு
கொடுத்தும், கௌரி பாஷாணத்தைச் சிறு பிள்ளைக
அமுரியில் ஒரு சாமம் சுறுக்குக் கொடுத்தும், மற்ற
சரக்குகளை ஏதேனும் ஒரு முறைப்படி சுத்தி செய்தும்
கல்வத்தில் போட்டுக் கொம்புப்பாகல் இலைச்சாறு விட்
நான்கு சாமம் கையோயாமல் அரைத்து மெழுகுபதமா
திரளும்போது வெந்தயம் அளவாக மாத்திரைகள் செய்
நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :**—நோயின் வன்மை மென்மைக் கேற்ற வாறு வேளைக்கு ஒரு மாத்திரை விதம் தேன், இஞ்சிரசம், முலைப்பால், வெற்றிலைச்சாறு முதலியவற்றில் அனுபானம் செய்து கொடுக்கவும். இரண்டு மூன்று மாத்திரைக்குள் குணப்படும். அதிக வேளை கொடுக்கக் கூடாது. சுரம் நின்றபின் ¼-பலம் மிளகைச் சட்டியிலிட்டு வறுத்துப் படி சலம்விட்டு ⅛-படி யளவிற்குக் காய்ச்சி வடிகட்டி இரண்டு வேளையாகப் பங்கிட்டுக் கொடுக்கவும். தேகம் வெகு ஆரோக்கியமாக இருக்கும். இந்த மாத்திரை அன்னத்துவேஷம், அரோசகம், வீக்கம் முதலியவற்றை யுண்டாக்காது. இந்த மாத்திரை செய்து ஒரு வருஷத்திற்குப் பழைமைபட்டிருப்பின் அதிக உத்தமம்.

**தீரும் வியாதி :**—நாட்பட்ட சுரம், விஷசுரம், மூன்றும் முறைசுரம், பட்சமாறல் சுரம், 3-மாதத்திற்கு ஒரு முறை வரும் மாறல் சுரம், ஆறுமாதத்திற்கு ஒருமுறை வரும் மாரல்சுரம், மாலைநீர் அருந்தினதால் வரும் குளிர் சுரம், நித்திய சுரம் முதலியவைகள் தீரும்.

**பத்தியம் :**—புளி, புகையிலை, நெய், கடுகு, பூண்டு, பெருங்காயம். வாத பதார்த்தம் தள்ளி அன்னம் கொடுக்கவும். விசேஷமாகப் பார்லி கஞ்சி, கோதுமை நொய்க் கஞ்சி, புனல்பாகம் இவைகளே சிறந்த பத்தியமாகும்.

## 18. உருத்திராக்ஷாதிக் குளிகை

சரக்கு:—

| | |
|---|---|
| உருத்திராட்சம் | துளசி இலை |
| சந்தனம் | கோரோசனை |
| கஸ்தூரி | புனுகு |
| குங்குமப்பூ | பச்சைக்கருப்பூரம் |
| அதிமதுரம் | நாயுருவி |
| வெட்டிவேர் | ஏலம் |

கிச்சிலிக்கிழங்கு
கருஞ்சீரகம்
சுக்கு
திப்பிலி
யானைப்பற்கொம்பு சீவல்
எருமைக் கொம்பு சீவல்
பெருங்காயம்
வாய்விளங்கம்
வசம்பு

சீரகம்
விலாமிச்சம்வேர்
மிளகு
காட்டு எருமைக்கொம்பு சீ
பசுவின் கொம்பு சீவல் [வ
மான் கொம்பு சீவல்
கிராம்பு
பெருங்கிழங்கு
பூண்டு

இவைகள் வகைக்கு வராகனெடை - 1.

செய்பாகம் :—மேற் கூறப்பட்ட முப்பது சரக்கு களில் இடித்து மிருதுவாக்க வேண்டியவைகளை இடித்து மிருதுவாக்கி மற்றச் சரக்குகளுடன் கூட்டிக் கல்வத்தில் போட்டு இஞ்சிச் சாறுவிட்டுத் தினம் ஒன்றுக்கு நான்கு சாமம் வீதம் இரண்டுநாள் அரைத்துக் குன்றிப் பிரமா ணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திச் சீசாவி பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—வேளைக்கு ஒரு மாத்திரையாக தினம் இருவேளை முலைப்பால், பழரசம், இஞ்சிச்சாறு முதலி வற்றில் கொடுத்து வருக. இந்த மாத்திரையைப் பழ சாற்றில் உரைத்து நாசியில் நசியம்போல் சொட்டு விட வும். இப்படி ஒரு நாளைக்கு 3-முறை விட அதிக நன்மை யைத் தரும்.

தீரும் வியாதி:—மதம், உன்மத்தம், பிரம்மராக்ஷசம், அபஸ்மாரம், பித்தாதிக்கம், சித்தப்பிரமை, பித்த சிலே துமம், வாதவெறி, வாத கோபம், வாந்தி முதலியவைகளைச் தீரும். கருப்ப ஸ்திரீகளுக்கும் கொடுக்கலாம்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

…ச் சரக்குடன் கூட்டிக் …ாதய மாத்திரை

சரக்கு :—

| | | |
|---|---|---|
| ரசகற்பூரம் | வராகனெடை | 1 |
| பொரித்த வெங்காரம் | ,, | ½ |
| கப்பு மஞ்சள் தூள் | ,, | 3 |

செய்பாகம் :—இவை தம்மைக் கல்வத்தில் போட்டு எலுமிச்சம் பழச்சாறுவிட்டு இரண்டு சாமம் நன்கு அரைத்து மெழுகுபதமாகத் திரளும்போது பயறு, உளுந்து அளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திச் சீசாவில் சத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்த மாத்திரையை வேளைக்கு ஒன்று வீதம் தினம் இருவேளை மூன்று நாள் தேனில் கொடுக்கவும், நோய் வலுத்திருப்பின் துளசிச்சாறு, கம்மாறு வெற்றிலைச்சாறு, இஞ்சிச்சாறு, முலைப்பால் முதலிய அனுபானங்களில் கொடுத்தல் மிக்க நலத்தைக் கொடுக்கும்.

தீரும் வியாதி :—குழந்தைகட்குக் காணும் சுரம், சலதோஷம், மாந்தம், இருமல், அஜீரணம் முதலியவை தீரும்.

பத்தியம்:—பாலுண்ணும் குழந்தைகட்குக் கொடுக்கும்போது தாய் இச்சாபத்தியமாக இருத்தல் நன்று. இன்னும் சீதள பண்டங்களை முற்றிலும் நீக்க வேண்டும்.

## 20. படிக்கார மாத்திரை

சரக்கு :—

படிக்காரம்
கப்பு மஞ்சள்

செய்பாகம் :—இரண்டு பலம் படிக்காரத்தை ஒன்று அல்லது இரண்டு துண்டாக பசுவின் பாலில் மூழ்க

நான்கு மணி நேரம் ஊறுசாயிப்
துடைத்து அதன் எடைக்கு தூள்
கூட்டிக் கல்வத்தில் போட்டு எலுமிச்சம்பழச்சாறு விட்டு
4-சாமம் அரைத்து மெழுகு பதமாகத் திரளும் சமயம்
மிளகு, பட்டாணிப் பிரமாணம் மாத்திரைகள் செய்து
நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—குழந்தைகளின் பருவத்திற்கு ஏற்ற
வாறு ஒரு வருஷத்திற்குட்பட்ட குழந்தைகட்கு மிளகு
அளவுள்ள மாத்திரையாகவும், ஒரு வருஷத்திற்கு மேற்
பட்ட குழந்தைகட்குப் பட்டாணி அளவுள்ள மாத்திரை
யாகவும், இன்னும் அதிகரித்த வயதுள்ள குழந்தைகட்கு
இரண்டு மாத்திரைகளாகவும் தேனில் அனுபானம்செய்து
தினம் மூன்று வேளை கொடுக்க வேண்டும்.

தீரும் வியாதி ;—பேதி, வாந்தி, மாந்தம், வயிற்றுப்
பொருமல், இருமல், உஷ்ணத்தினுலுண்டான வயிற்று
வலி, பேதி மருந்துகளினுலுண்டான வயிற்று சங்கடம்
முதலியவைகள் குணமாகும்.

பத்தியம் :—பாலுண்ணும் குழந்தைகட்குக் கொடுக்
கும்போது தாய் இச்சாபத்தியமாக இருத்தல் வேண்டும்.
கஞ்சி அருந்தக்கூடிய குழந்தையாக இருப்பின் அரருட்
மாவு கஞ்சி அதிக நன்மையைத் தரும்.

## 21. உத்தாமணி மாத்திரை

சரக்கு :—

திப்பிலி
கடுகு
ஓமம்
ஆமையோடு பற்பம்
பூண்டு
பொரித்த பெருங்காயம்
நாயுருவி விதை

செய்பாகம் :—மேற்கூறப்பட்ட ஏழு சரக்குகளை
இடித்துச் சூரணம் செய்ய வேண்டியவற்றைச் சூரணித்துச்

)ற்றச் சரக்குடன் கூட்டிக் கல்வத்தில் போட்டு உத்தா மணி(ப்)லைச்சாறு விட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகு பதத்தில் கடலைப் பிரமாணம் மாத்திரைகள் செய்துலர்த்திப் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—குழந்தைகட்கு வேளைக்கு ஒரு மாத்திரை வீதம் தினம் இருவேளை தேன் முலைப்பால் முதலிய அனுபானங்களில் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—பேதி, வாந்தி, அஜீரணம், மாந்தம், வயிற்றுப் பொருமல், நெஞ்சுக்கபம் முதலியவைகள் தீரும்.

பத்தியம் :—முன்முறையில் கூறியதேயாகும்.

## 22. விஷ்ணுசக்கர மாத்திரை

சரக்கு :—

நாபி
மனோசிலை
சூதம்
காந்தம்
கெந்தி

இவைகள் வகைக்கு வராகனெடை - 1.

கடுகுரோகணி
இந்துப்பு
அரிசித்திப்பிலி
சுக்கு
மிளகு

இவைகள் வகைக்கு வராகனெடை - 2.

செய்பாகம் :—மேற் கூறப்பட்ட பத்து சரக்குகளில் சுத்திசெய்ய வேண்டியவைகளைச் சுத்தி செய்தும், இடித்துச் சூரணம் செய்யவேண்டியவற்றைச் சூரணித்தும், ஒரு மிக்கக் கல்வத்தில் போட்டு எலுமிச்சம்பழச்சாறு விட்டு 2 - 3 சாமம் அரைத்து பயறு, உளுந்து அளவாக மாத்திரைகள் திரட்டி நிழலில் உலர்த்திப் படுத்துக.

பிரயோகம் :—இந்த மாத்திரையில் வேளைக்கு ஒரு மாத்திரை வீதம் தேன் இஞ்சிச்சாறு முதலியவற்றில் அனுபானம் செய்து கொடுக்கவும்.

தீரும் வியாதி :—கபாலசூலை, பீநசம், பித்தவாயு, வாதவலி, மகோதரம், கபம், சோகை, கழிச்சல், அதிசாரம், அதிக வியர்வை, சுரம், கண் - சிரசு - இடுப்பு முதலிய விடங்களில் பற்றிய வலி யாவும் தீரும்.

பத்தியம் :—புளி தள்ளி இச்சா பத்தியம்.

## 23. வேறு முறை

சரக்கு :—

| | |
|---|---|
| சூதம் | இலிங்கம் |
| நாபி | கெந்தி |
| அரிதாரம் | காந்தம் |
| மனோசிலை | |

இவைகள் வகைக்கு வராகனெடை - 1.

செய்பாகம் :—மேற்கூறப்பட்ட ஏழு சரக்குகளையும் கிரமப்படி சுத்தி செய்து கல்வத்தில் போட்டு எலுமிச்சம் பழச்சாறு விட்டு 2-சாமம் நன்கு அரைத்து மெழுகு பதத்தில் குன்றி அளவாக மாத்திரைகள் செய்துலர்த்திப் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இந்த மாத்திரையில் வேளைக்கு ஒன்று வீதம் காலை மாலை பொடித்துத் திரிகடுகு சூரணம் அல்லது தேன், இஞ்சி சுரசம் முதலியவற்றில் அனுபானம் செய்து கொடுக்கவும்.

தீரும் வியாதி :—சந்நி, பக்கசூலை, பலவித வாத ரோகங்கள், மூர்ச்சை, வலி முதலியவை குணமாகும்.

பத்தியம் :—புளி தள்ளி இச்சா பத்தியமாக இருத்தல் வேண்டும்.

## 24. பூர மாத்திரை

சரக்கு :—

| | |
|---|---|
| சுத்திசெய்த பூரம் | பலம் 1/4 |
| சுக்குத்தூள் | ,, 1/2 |
| பொரித்த வெங்காரம் | ,, 1/4 |
| ஆமையோடு பற்பம் | ,, 1/4 |
| சுத்திசெய்த வாளம் | ,, 1 |

செய்பாகம் :—இங்குக் கூறப்பட்ட ஐந்து சரக்குகளையும் கல்வத்தில் போட்டுச் சுக்குக் கியாழம் விட்டு 3-சாமம் வரையில் நன்கு அரைத்து மெழுகுபதம் வரும் போது பயறு உளுந்து அளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—குழந்தைகள் பருவத்திற்கு ஏற்றபடி 1 - 2 மாத்திரை தகுந்த அனுபானங்களில் கொடுக்க பேதியாகும்.

தீரும் வியாதி :—சர்வ மாந்தம் குணமாகும். இதனைக் குழந்தைகளுக்கு ஆரோக்கிய நிமித்தம் மலச்சிக்கலுண்டான சமயம் பேதி மாத்திரையாக உபயோகப் படுத்திவரப் பல நன்மையைத் தரும். எந்த நோய்களையும் அணுக வொட்டாது.

பத்தியம் ;—பாலுண்ணும் குழந்தைகட்குக் கொடுக்கும்போது தாய் புளி தள்ளி இச்சாபத்தியமாக இருத்தல் நன்று.

## 25. இலவங்காதி மாத்திரை

சரக்கு :—

| | |
|---|---|
| கிராம்புத்தூள் | வராகனெடை 1 |
| பூரம் | ,, 1 |
| இலிங்கம் | ,, 1 |
| இரசசெந்தூரம் | ,, 1 |

| | | |
|---|---|---|
| நெல்லிக்காய்கெந்தி | வராகனெடை | 1 |
| பொரித்த வெங்காரம் | ,, | 1 |
| சுத்திசெய்த வாளம் | ,, | 6 |

**செய்பாகம்:**—இங்குக் கூறப்பட்ட சரக்குகள் ஏழினையும் கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச் சாறு விட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகுபதம் திரளும்போது பயறு, உளுந்து, துவரைப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :**—குழந்தைகட்கு வயதுக்குத் தக்கபடி பயறு, உளுந்தளவு உள்ள மாத்திரையில் ஒன்றை தகுந்த அனுபானங்களில் கொடுக்க பேதியாகும்.

பெரியவர்களுக்குத் துவரைப் பிரமாணமுள்ள மாத்திரையில் ஒன்றைத் தகுந்த அனுபானங்களில் கொடுக்க பேதியாகும்.

**தீரும் வியாதி :**—குழந்தைகளுக்குக் காணுகின்ற மாந்தம், சுரம், வலி, சன்னி தோஷம் நீங்கும். பெரியவர்களுக்குக் காணுகின்ற வாத சீதளரோகம் குணமாகும்.

## 26. க்ஷயகுலாந்தக மாத்திரை

**சரக்கு :**—

| | |
|---|---|
| வாலைரசம் | கந்தகம் |
| இலிங்கம் | உருத்திராட்சம் |
| கருஞ்சீரகம் | கருநாபி |
| பவழபற்பம் | வெள்ளிபற்பம் |
| மான்கொம்பு பற்பம் | முத்து பற்பம் |
| அப்பிரக பற்பம் | பொரித்த வெங்காரம் |
| தங்கச் செந்தூரம் | தாம்பர செந்தூரம் |

வகைக்கு வராகனெடை - $\frac{1}{4}$.

**செய்பாகம் :—** இங்குக் குறிப்பிட்டுள்ள பதினான்கு சரக்குகளில் முதலில் வாலைரசம், சுத்திசெய்த கந்தகம் இலிங்கம் ஆக மூன்றையும் கல்வத்தில் போட்டு நன்கு அரைத்து ரசம் உருமாறிய பின் உருத்திராட்சம், கருஞ் சீரகம், சுத்திசெய்த கருநாபி முதலியவற்றின் சூரணத் தையும் மற்றுமுள்ள செந்தூர பற்பங்களையும் கூட்டிப் பழச்சாறு விட்டு ஒரு சாமம் நன்ருய் அரைத்துப் பச்சைப் பயறு அளவாக மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப் படுத்துக.

**பிரயோகம் :—** இந்த மாத்திரையை வேளைக்கு ஒன் ருகக் காலை மாலை தகுந்த அனுபானங்களில் கொடுத்து வருக.

**தீரும் வியாதி :—** க்ஷய சுரம், இருமல், இளைப்பு முதலியவைகள் நீங்கும்.

**பத்தியம் :—** இச்சாபத்தியமாக நல்ல ஆகாரம் கொள்ள வேண்டும்.

## 27. சடாதாரக் குளிகை

**சரக்கு :—**

| | |
|---|---|
| பூரணச்சந்திரோதயம் | இரசசெந்தூரம் |
| அப்பிரகச் செந்தூரம் | வெள்ளி பற்பம் |
| வெள்வங்க பற்பம் | பவழ பற்பம் |

இவைகள் வகைக்குக் கழஞ்சு - 1.

**செய்பாகம் :—** இங்குக் குறிக்கப்பட்டுள்ள ஆறு பற்பச் செந்தூரங்களைக் கல்வத்தில் போட்டு அதனுடன் ஒரு கழஞ்சு எடை வில்வமரத்தின் பட்டைச் சாம்பல் கூட்டி, விளாம்பிசினிட்டுக் கரைத்த நீரை விட்டு ஒரு சாமம் அரைத்துக் குன்றியளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேண்டும்போது இம் மாத்திரையில் வேளைக்கு ஒன்றாகத் தினம் இருவேளை பொடி செய்து பஞ்சகௌவிய லேகியத்திலாவது அல்லது பஞ்சகௌவிய கிருதத்திலாவது அனுபானம் செய்து 20 - 40 நாள் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—பெரும்பாடு, அஸ்திமேகம், மது மேகம், எலும்புருக்கி, க்ஷயம், ஸ்திரீகளுக்குக் காணும் வெள்ளை ஒழுக்கு, வெட்டைப் பிரமேகம் முதலியவைகள் குணமாகும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 28. மஹாவாத கேசரிக் குளிகை

சரக்கு :—

| | | |
|---|---|---|
| மஞ்சள் நிறமுடைய மூசாம்பரம் | தோலா | 8 |
| சடாமாஞ்சில் | வராகனெடை | 1 |
| அசாரூன் | ,, | 1 |
| ரூமிமஸ்தகி | ,, | 1 |
| குங்குமப்பூ | ,, | 1 |
| மிளகு | ,, | 1 |
| இலவங்கப்பட்டை | ,, | 1 |
| கிராம்பு | ,, | 1 |

செய்பாகம் :—மேற் குறிப்பிட்ட எட்டுச் சரக்குகளில் சூரணிக்க வேண்டியவைகளைச் சூரணித்து மற்றச் சரக்குகளுடன் கூட்டிக் கல்வத்தில் போட்டுச் சன்னமாக அரைத்து வைத்துக் கொள்க. அப்பால் ஒரு சிறு இரும்புக்கடாயில் 6-பலம் தேனை விட்டுக் காய்ச்சி அழுக்கு நீக்கி அதனில் முன் சித்தப்படுத்திய தூளைப் போட்டுக் கிளறி மெழுகுபதத்தில் ஆறவிட்டு வழித்துக் கல்வத்தில் போட்டு ½-வராகனெடை கஸ்தூரி கூட்டி அரைத்துக் குன்றியளவு மாத்திரையாகத் திரட்டி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்த மாத்திரையில் வேளைக்கு 1 - 2 தேக திடத்திற்கு ஏற்றவாறு தினம் இருவேளை 5-நாள் கொடுக்கவும்.

தீரும் வியாதி ;—காக்கைவலி, முகவாதம், பாரிச வாதம், பின்னிசிவு, சூதகவாயு, சூதகசன்னி, பிரசவ காலத்தில் உண்டான அழுக்கு முதலியவைகள் குண மாகும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 29. பிரசவ ரக்ஷாமிர்த மாத்திரை

சரக்கு :—

| | | |
|---|---|---|
| கஸ்தூரி | வராகனெடை | 1 |
| குங்குமப்பூ | ,, | 1 |
| கோரோசனை | ,, | 1 |
| பாலேந்திரபோளம் | ,, | 1 |
| காண்டாமிருகத்தின் ரத்தம் | ,, | 1 |
| மூசாம்பரம் | ,, | 2 |
| திப்பிலி | பலம் | $\frac{1}{4}$ |

செய்பாகம் :—இங்குக் கூறப்பட்ட சரக்குகளில் சூர ணிக்கத் தக்கவற்றைச் சூரணித்து மற்றச் சரக்குகளுடன் கூட்டிக் கல்வத்தில் போட்டு உயர்ந்த பிராந்தி விட்டு 2-சாமம் அரைத்துக் குன்றி அளவு மாத்திரை செய்து நிழ லில் உலர்த்திப் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—வேண்டியபோது வேளைக்கு ஒரு மாத் திரை வீதம் தினம் இருவேளை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—பிரசவித்த ஸ்திரீகளுக்கு, உதிரக் கட்டைத் தடையின்றி வெளிப்படுத்தும். எவ்விதப் பிணி யையும் வரவொட்டாது. பயமின்றி ரொட்டி பத்தியம் கொடுக்கலாம்.

## 30. அஷ்டபைரவ மாத்திரை

சரக்கு :—

| | |
|---|---|
| இரசம் | செந்தி |
| வீரம் | பூரம் |
| இலிங்கம் | நாபி |
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | சாதிக்காய் |
| ஜாதிப்பத்திரி | இலவங்கம். |

இவைகள் வகைக்கு வராகனெடை - 1.

வாளம் ,, 5

செய்பாகம் :—மேற்கூறப்பட்ட சரக்குகளில் சுத்தி செய்து அரைக்க வேண்டியவற்றை அரைத்தும் இடித்துச் சூரணிக்க வேண்டியவைகளை இடித்துச் சூரணித்தும் கல்வத்தில் போட்டுப் பழச்சாறு, முலைப்பால் முதலியவற்றால் இரண்டிரண்டு சாமமும், பொடுதலைச்சாறு, கரிசாலைச் சாறு, நாவல்பட்டைக் கியாழம் முதலியவற்றால் ஒவ்வொரு சாமமும் அரைத்து மெழுகு பதத்தில் பயறு, மிளகுப் பிரமாணமுள்ள மாத்திரைகளாய் செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்த மாத்திரையில் பயறளவு குழந்தைகளுக்கும் மிளகு அளவு பெரியவர்களுக்கும் முலைப்பால் தேன் முதலிய அனுபானங்களில் தினம் இருவேளை இருநாள் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—சுரம், சந்நி, தோஷம், இசிவு, வலி முதலியவைகள் தீரும்.

பத்தியம் :—பால்கஞ்சி, பார்லி கஞ்சி முதலியவைகள் தவிர வேறு ஆகாது.

## 31. ஆனந்தபைரவ மாத்திரை

சரக்கு :—

| | |
|---|---|
| கெந்தி | வாலைரசம் |
| மனோசிலை | வெங்காரம் |
| சுத்திநாபி | இலிங்கம் |

**செய்பாகம் :**—இங்குக் கூறப்பட்ட சரக்குகளில் நாபி நீங்கலாக உள்ள மற்றச் சரக்குகளை வகைக்கு ½-பலம் வீதம் எடுத்து முதலில் வாலைரசத்தையும் கந்தகத்தையும் கல்வத்திலிட்டு அரைத்து அதனுடன் மற்றச் சரக்குகளைக் கூட்டி குமரிச்சாற்றால் இரண்டு சாமம் அரைத்து உலர்த்திப் பொடிசெய்து ஏழுசீலை செய்த குப்பியில் போட்டு வாய்மூடிச் சீலைசெய்து வாலுகாயந்திரத்தில் வைத்து 4-சாமம் எரித்து ஆறவிட்டுக் குப்பியிலுள்ள மருந்தைச் சேதப்படாமல் சுரண்டி எடுத்து எடை தூக்கி ஐந்தில் ஒரு பங்கு நாபியைக் கூட்டி எலுமிச்சம்பழச்சாற்றால் ஒரு சாமம் அரைத்து மெழுகுபதத்தில் பயறு, உளுந்தளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :**—இந்த மாத்திரையைக் குழந்தைகட்கு வேளைக்குப் பயறு அளவாகவும், பெரியவர்களுக்கு 1 - 2 உளுந்தளவாகவும் தினம் இருவேளை இஞ்சிரசம் தேன் முலைப்பால் போன்ற அனுபானங்களில் கொடுத்து வருக.

**தீரும் வியாதி :**—சுரம், சன்னி, தோஷம், இசிவு முதலியவைகள் தீரும்.

**பத்தியம் :**—பால் கஞ்சி, பார்லி கஞ்சி தவிர வேறு ஒன்றும் ஆகாது.

## 32. எமதண்டக் குளிகை

சரக்கு:—

| | |
|---|---|
| வாலைரசம் | கந்தகம் |
| தாளகம் | கௌரிபாஷாணம் |
| வீரம் | பூரம் |
| மனோசிலை | வெள்ளைபாஷாணம் |
| இலிங்கம் | இரசசெந்தூரம் |
| பால்துத்தம் | காவிக்கல் |
| வெங்காரம் | கற்பூரம் |
| வெள்ளிப்பொடி | நாபி |
| அக்கராகாரம் | ஏலரிசி |
| கடுகுரோகணி | இலவங்கம் |
| கோஷ்டம் | சுக்கு |
| சோம்பு | திப்பிலி |
| கோரோசனை | |

இவைகள் வகைக்கு வராகனெடை - 1.

செய்பாகம் :—மேற்கூறப்பட்ட சரக்குகளில் சுத்தி செய்ய வேண்டியவைகளைச் சுத்தி செய்தும், சூரணிக்க வேண்டியவற்றை சூரணித்தும், கல்வத்தில் போட்டுக் கையாந்தகரைச் சாறுவிட்டு நான்கு சாமம் நன்றாய் அரைத்து மெழுகுபதம் கண்டு சிறு பயறு அளவு மாத் திரைகள் செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப் படுத்துக.

பிரயோகம் :—வேண்டும்போது இந்த மாத்திரை யில் ஒன்றைத் தேனில் அநுபானம் செய்து கொடுக்க வும். மீண்டும் கொடுக்க வேண்டியது அவசியம் ஏற்பட் டால் ஆறுமணிநேரம் சென்றபின் ஒரு மாத்திரை கொடுக் கவும். இந்த இருவேளையே போதுமானது.

தீரும் வியாதி :—சுரம், சன்னி, தோஷம், தன் சுபா வத்தைக் கெடுக்கும்படியான வாதரோகங்கள் எல்லாம்

குணமாகும். அந்திய காலத்தில் கட்டும் தொண்டைக் கபத்தையும் எளிதில் கரைத்து விடும்.

பத்தியம் :—பார்லி கஞ்சி, பால் தவிர வேறொன்றும் ஆகாது.

## 33. குங்குமப்பூ மாத்திரை

சரக்கு ;—

| | |
|---|---|
| சுக்கு | திப்பிலி |
| வெண்மிளகு | இலவங்கம் |
| ஓமம் | ஏலம் |
| கோஷ்டம் | வால்மிளகு |
| இலிங்கம் | வெங்காரம் |
| கோரோசனை | குங்குமப்பூ |
| சாம்பிராணிப்பதங்கம் | |

இவைகள் வகைக்கு வராகனெடை - 1.

செய்பாகம் :—மேற் கூறப்பட்ட சரக்குகளில் சூரணிக்க வேண்டியவற்றைச் சூரணித்து இதரச் சரக்குகளுடன் கல்வத்தில் போட்டு மூன்று அவுன்ஸ் கொதி நீரில் 3-குன்றி எடை குங்குமப்பூவைப் போட்டு 2 - 3 மணி நேரம் ஊறவிட்டுப் பிசைந்து வடிகட்டிக் கொஞ்சங் கொஞ்சமாக விட்டு அரைத்து மெழுகுபதத்தில் பயறு, உளுந்து அளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—வேண்டும்போது குழந்தைகளின் பருவத்திற்கு ஏற்றவாறு பயறு உளுந்தளவுள்ள மாத்திரைகளை வேளைக்கு ஒன்ருகத் தினம் இருவேளை தேன் முலைப் பால் முதலிய அனுபானங்களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—சுரம், சயித்தியம், சலதோஷம், மலச்சிக்கல், வியர்வை, சீதளம் முதலியவைகள் குணமாகும்.

## 34. சிரோரத்தன மாத்திரை

### (வெளிப் பிரயோகம்)

சரக்கு :—

| | | | | |
|---|---|---|---|---|
| கஸ்தூரிமஞ்சள் | பலம் 1 | வெங்காரம் | பலம் $\frac{1}{2}$ |
| சாம்பிராணி | ,, $\frac{1}{2}$ | மிளகு | ,, $\frac{1}{2}$ |
| சுக்கு | ,, $\frac{1}{2}$ | சாதிக்காய் | ,, $\frac{1}{2}$ |
| இலவங்கம் | ,, $\frac{1}{2}$ | கற்பூரம் | ,, $\frac{1}{4}$ |
| ஓமம் | ,, $\frac{1}{4}$ | பூசும் மஞ்சள் | ,, $\frac{1}{4}$ |

செய்பாகம் :—இவற்றையெல்லாம் சூரணித்துக் கல்வத்தில் போட்டு முலைப்பால் விட்டு அரைத்து மெழுகு பதத்தில் சுண்டக்காய்ப் பிரமாணம் மாத்திரைகள் செய்து உலர்த்தி வைத்துக்கொள்ளவும்.

பிரயோகம் :—வேண்டும்போது இதிலொரு மாத்திரையை முலைப்பாலில் இழைத்து நெற்றி, பொறி, கன்னம் முதலிய இடங்களில் தளமாகப் பூசிவரச் சீதளநீரை வற்றச்செய்து தலைவலி, தலைபாரம் முதலியவற்றைக் குணப்படுத்தும்.

பத்தியம் :—சீதள பண்டங்களையும் நோய்க்கு ஆகாத பண்டங்களையும் நீக்கவும்.

## 35. பாலசஞ்சீவி மாத்திரை

சரக்கு :—

சுக்கு
திப்பிலி
இலிங்கம்
மிளகு
வெங்காரம்

இவைகள் வகைக்கு வராகனெடை - 1.

செய்பாகம் :—இலிங்கத்தைச் சுத்திசெய்தும் வெங்காரத்தைப் பொரித்தும் மற்றச் சரக்குகளை இடித்துச்

சூரணித்தும் கல்வத்தில் போட்டுப் பழச்சாறுவிட்டு ஒரு சாமம் அரைத்துப் பயறு அளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—**இந்த மாத்திரையை வேளைக்கு ஒன்றாகக் குழந்தைகளுக்குத் தினம் இருவேளை மாசிப்பத்திரி பிட்டவியல் சாற்றில் கொடுத்து வருக.

**தீரும் வியாதி :—**சுரம், இருமல், தோஷம் குணமாகும்.

**பத்தியம் :—**தாய்ப்பால் அல்லது பசுவின் பால்.

## 36. பிரமானந்த பைரவ மாத்திரை

**சரக்கு :—**

| | |
|---|---|
| வெங்காரம் | கெந்தி |
| மனோசிலை | அரிதாரம் |
| நாபி | சுக்கு |
| இலிங்கம் | |

இவைகள் வகைக்கு வராகனெடை - 1.

**செய்பாகம் :—**இவற்றுள் சூரணிக்க வேண்டியவற்றைச் சூரணித்து மற்றுமுள்ள சரக்குடன் கூட்டிக் கல்வத்தில் போட்டு இஞ்சிச்சாறுவிட்டு இரண்டு சாமம் அரைத்துப் பயறு உளுந்து மிளகு அளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—**வேண்டும்போது குழந்தைகளின் பருவத்திற்கு ஏற்றபடி பயறு, உளுந்தளவு மாத்திரையாகவும், பெரியவர்களுக்கு மிளகு அளவாகவும், தேன் இஞ்சி சுரசம் முதலியவற்றில் தினம் இருவேளை கொடுத்துவருக.

**தீரும் வியாதி :—**சுரம், சந்நி, தோஷம் முதலிவைகள் குணமாகும்.

## 37. மகா வசந்த குசுமாகர மாத்திரை

சரக்கு :—

தங்கச்செந்தூரம்
அயச்செந்தூரம்
அப்பிரகச்செந்தூரம்
வெள்வங்கபற்பம்
நிமிளைச்செந்தூரம்
சுத்தி நாபி
முத்துப்பற்பம்
பவளபற்பம்
காந்தச்செந்தூரம்
தாம்பரச்செந்தூரம்
கெந்தகம்

இவைகள் வகைக்கு வராகனெடை - 1.

செய்பாகம் :—இவற்றைக் கல்வத்தில் போட்டுச் சோற்றுக் கற்றாழைச் சாறுவிட்டு நான்கு சாமம் அரைத்து வழித்துப் பொருத்தமான ஒரு ஜதை முத்துச் சிப்பியைக் கொண்டுவந்து ஒன்றுக்குள் அடக்கம் செய்து மற்றோர் சிப்பியால் மூடி, வாய் பொருத்தத்திற்கு வெங்காரமும் குன்றிமணிப் பருப்பும் கூட்டிப் பழச்சாற்றால் அரைத்துப் பூசிக் கவசமிட்டுச் சுண்ணும்புச் சீலைசெய்து வாலுகாயந்திரத்தில் வைத்து 2-3 சாமம் எரித்து ஆற விட்டுச் சிப்பியின்மேல் உள்ள கவசத்தை நீக்கி, சிப்பியுடன் கல்வத்தில்போட்டுச் செங்கழுநீர்ப்பூ, கோங்கு, இலவம்பூ, தாமரைப்பூ, பூமாதுளம்பூ இவற்றின் சாற்றாலும் வெட்டிவேர், விலாமிச்சம்வேர் முதலியவற்றின் கியாழங்களாலும் ஒவ்வொரு சாமம் அரைத்து, மருந்தின் மொத்த எடைக்கு எட்டிலொருபாகம் கஸ்தூரி, எட்டிலொருபாகம் குங்குமப்பூ, பதினாறில் ஒரு பாகம் பச்சைக் கற்பூரம் கூட்டி வெட்டிவேர்க் கியாழத்தில் பின்னும் ஒரு சாமம் அரைத்துக் குன்றி அளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்த மாத்திரையை வேளைக்கு ஒன்றாகத் தினம் இருவேளை தகுந்த அனுபானங்களில் கொடுக்கவும்.

**தீரும் வியாதி** :—சுரம், இருமல், நீரேற்றம், காசம், தொண்டைக்கம்மல், கபசுரம் முதலியவைகள் குண மாகும்.

**பத்தியம்** :—ரோகத்திற்கு ஏற்றவாறு கஞ்சி இனங் களைச் சேர்க்கவும்.

**குறிப்பு** :—இம் முறைகளில் சேர்க்க வேண்டிய பற்ப செந்தூரங்கள் எல்லாம் என்னால் வரைந்துள்ள நூல் களில் கண்டு செய்துக் கொள்ளவும்.

## 38. இலகுவசந்த குசுமாகர மாத்திரை

**சரக்கு** :—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| இலிங்கம் | பலம் | 1 | திப்பிலி | பலம் | 1 |
| இலவங்கம் | ,, | 1 | அக்கராகாரம் | ,, | 1 |
| கோஷ்டம் | ,, | 1 | குங்குமப்பூ வராகனெடை | | 1 |
| அதிமதுரம் | ,, | 1 | கோரோசனை | ,, | 1 |
| வெங்காரம் | ,, | 1 | பச்சைக்கற்பூரம் | ,, | 1 |

**செய்பாகம்** :—மேற்கூறப்பட்ட சரக்குகளில் சூர ணிக்க வேண்டியவைகளைச் சூரணித்து, மற்றச் சரக்கு களுடன் கல்வத்தில் போட்டு இஞ்சிச்சாறு முலைப்பால் ஆக ஒவ்வொன்றிலும் இரண்டிரண்டு நாள் அரைத்து மெழுகு பதத்தில் பயறு அளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்துக.

**பிரயோகம்**:—வேண்டும்போது இந்த மாத்திரையை வேளைக்கு ஒன்றாகத் தினம் இருவேளை இஞ்சிசுரசம், தேன், முலைப்பால் போன்ற அனுபானங்களில் கொடுத்து வருக.

**தீரும் வியாதி** :—பழைய சுரம், கபம், காசம், தாகம், தும்மல், ஏப்பம், சயித்தியம், தலைவலி, பிடரிவலி இவை கள் குணமாகும்.

பத்தியம் :—ரோகத்திற்கு ஏற்றவாறு எளிதில் ஜீர ணிக்கக் கூடிய ஆகாரம் கொடுக்கவும்.

## 39. இலிங்க மாத்திரை

சரக்கு :—

| | |
|---|---|
| இலிங்கம் | பலம் ½ |
| பச்சைப்பயிற்றின் பருப்பு | ,, ½ |

செய்பாகம் :—முதலில் இலிங்கத்தை ஒரு மண் ணோட்டில் வைத்து முருங்கையிலைச் சாற்ருல் இரண்டு சாமம் சுறுக்குக் கொடுத்துக் கல்வத்தில் போட்டுப் பச் சைப்பருப்பைக் கூட்டித் துளசிச் சாற்ருல் ஒரு சாமம் அரைத்து மெழுகுபதத்தில் உளுந்து அளவு மாத்திரைகள் செய்து உலர்த்திப் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—பெரியவர்களுக்கு 3-மாத்திரை வீத மும், குழந்தைகட்கு ஒரு மாத்திரை வீதமும், 10-வயதுக்கு மேற்பட்ட பிள்ளைகளுக்கு 2-மாத்திரை வீதமும் தினம் 2 அல்லது 3-வேளை தகுந்த அனுபானங்களில் கொடுத்து வரச் சர்வ சுரமும் நீங்கும்.

பத்தியம் :—கஞ்சி தவிர வேருென்றும் ஆகாது.

## 40. வேறு முறை

சரக்கு :—

| | |
|---|---|
| சுத்திசெய்த லிங்கம் | பலம் ½ |
| பொரித்த வெங்காரம் | ,, ½ |

செய்பாகம் :—இவ் விரண்டையும் கல்வத்தில் போட்டு தோல் உரித்த வெள்ளைப்பூண்டைக் கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டு மெழுகுபதமாக அரைத்துக் குன்றி அளவு மாத்திரை செய்து உலர்த்தி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—வேண்டும்போது ஒரு மாத்திரையை வாயில் போட்டுக்கொண்டு ஒரு வாய் சலத்துடன் விழுங்கவும். இப்படித் தினம் 3-வேளை உட்கொள்ள வேண்டும்.

தீரும் வியாதி :—சுவாசகாசத்தில் உண்டாகும் இறைப்பு உடனே குணமாகும். இன்னும் வயிற்றிலுள்ள வாயு, அது சம்பந்தமான பேதி, இடுப்புவலி, சுரம், சயித்தியம் முதலியன குணமாகும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

---

# இலேகிய இலம்பகம்

## 1. முள்ளங்கி லேகியம்

சரக்கு :—

| | | |
|---|---|---|
| முள்ளங்கிக் கிழங்கு | | 50 (கிழங்கு) |
| கடுக்காய்த்தோல் | பலம் | 5 |
| தான்றிக்காய்த்தோல் | ,, | 5 |
| மிளகு | ,, | 2½ |
| சீரகம் | ,, | 2½ |
| தனியா | ,, | 2½ |
| சோம்பு | ,, | 2½ |
| நெல்லிவற்றல் | ,, | 1¼ |
| சுக்கு | ,, | 1¼ |
| சிற்றரத்தை | ,, | 1 |
| கிராம்பு | ,, | ½ |
| ஏலம் | ,, | ½ |
| இலவங்கப்பட்டை | ,, | ½ |
| தேன் | ,, | 1¼ |

| | | |
|---|---|---|
| நெய் | பலம் | 4 |
| வெள்ளைச்சர்க்கரை | ,, | 20 |
| பசுவின் பால் | படி | $\frac{1}{2}$ |
| எலுமிச்சம்பழம் | | 12 (பழம்) |

செய்பாகம்:—மேற்கூறப்பட்ட சரக்குகளில் சூரணிக்கத் தக்கவைகளைச் சூரணித்து 12-எலுமிச்சம் பழத்தின் சாறுவிட்டுப் பிசரி வைத்துக்கொள்க. அப்பால் முள்ளங்கிக் கிழங்கைச் சிறு வில்லைகளாக அரிந்து இடித்துச் சாறுபிழிந்து அதனுடன் பாலைகூட்டி ஒரு வாயகன்ற மட்பாண்டத்தில் விட்டு அடுப்பிலேற்றிச் சிறுக எரித்து $\frac{1}{2}$-படி அளவிற்குச் சுண்டிவருஞ் சமயம் சர்க்கரையைக் கொட்டிக் கிண்டிப் பாகுபதம் வருஞ் சமயம் முன் சித்தப்படுத்தி வைத்துள்ள சூரணத்தைக் கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டுக் கிண்டிக் கீழிறக்கி நெய், தேன் விட்டுப் பிசரி வைத்துக்கொள்ளவும்.

பிரயோகம் :—இந்த லேகியத்தில் வேளைக்குச் சுண்டைக்காய் அளவு தினம் இருவேளை கொடுத்து உடனே காய்ச்சிய பசுவின் பாலை அருந்தச் செய்க.

தீரும் வியாதி :—பசியின்மை, வாந்தி, வயிற்று வலி, வயிற்றுப்பிசம்தீரும். இது குன்மரோகத்தில் காணும் வயிற்று வலிக்கு இன்றி யமையாததாகும்.

பத்தியம் :—எளிதில் ஜீரணிக்கக்கூடிய அன்னம் உட்கொள்ளவும்.

## 2. கண்டாத்திரி லேகியம்

சரக்கு :—(1) சுக்கு, மிளகு, திப்பிலி, சிற்றரத்தை, செவ்வியம், அதிமதுரம், சிறுதேக்கு, வாய்விளங்கம்

| | |
|---|---|
| கடுக்காய் | நெல்லிவற்றல் |
| தான்றிக்காய் | தனியா |
| சீரகம் | தாளிசப்பத்திரி |
| இலவங்கபட்டை | இலவங்கப்பட்டை |
| நெற்பொரி | |

இவைகள் வகைக்குக் கழஞ்சு - 3.

| | |
|---|---|
| சாதிக்காய் | சாதிபத்திரி |
| கிராம்பு | அதிவிடையம் |

இவைகள் வகைக்குக் கழஞ்சு - 2.

| | | | |
|---|---|---|---|
| (2) | நல்ல வெல்லம் | பலம் | 10 |
| | தேன் | ,, | 5 |
| | நெய் | ,, | 5 |
| (3) | இஞ்சி | ,, | 15 |

**செய்பாகம் :**—முதலாவது அங்கத்தில் கூறப்பட்ட இருபத்தோரு சரக்குகளை நன்கு இடித்துச் சூரணம்செய்து வைத்துக்கொள்க. அப்பால் மூன்றாவது அங்கத்தில் கூறப்பட்ட இஞ்சித் துண்டுகளை மேல்தோல் சீவிச் சிறு வில்லைகளாக அரிந்து வைத்துக்கொண்டு அதனை ஒரு இரும்புக்கடாயில் சிறிது பசுவின் நெய்விட்டு அடுப்பி லேற்றிச் சிறுக எரித்து சூடேறிய சமயம் போட்டு நீர் சுண்டிச் சிவந்து வரும் சமயம் கீழிறக்கி ஆறவிட்டு அம்மிக்கல்லில்வைத்து மிருதுவான பதத்திற்கு அரைத்து வைத்துக்கொள்க. இதற்குமேல் இரண்டாவது அங்கத் தில் கூறப்பட்ட நல்ல வெல்லத்தை ஒரு பாண்டத்தில் போட்டு ¼ - படித் தண்ணீர்விட்டுக் கரைத்து வடிகட்டி ஒரு இரும்புக்கடாயில் விட்டு அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்துப் பாகுபதம் வரும்போது முன் முடித்து வைத் துள்ள சூரணத்தையும் இஞ்சித்துகளையும் கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டுக் கிளறித் தேன் நெய் விட்டுப் பிசரி வைத்துக்கொள்ளவும்.

பிரயோகம் :—இந்த லேகியத்தில் வேளைக்குச் சிறு கொட்டைப்பாக்களவு அந்திசந்தி இருபொழுது கொடுத்து வருக.

தீரும் வியாதி :—இருமல், செரியாமை, வாந்தி, குரல் கம்மல், குன்மம், மலசலக்கட்டு, உட்சுரம், தாபசுரம், வயிற்றுப்பொருமல், அக்கினிமந்தம், மூலவாயு, கிராணி, பேதி முதலியவைகள் தீரும்.

பத்தியம் :—கைப்பு புளிப்பு நீக்கி இச்சாபத்தியமாக இருத்தல் வேண்டும்.

## 3. கூழ்ப்பாண்ட லேகியம்

சரக்கு :—

(1) மேல் தோல் சீவிக் கொப்பரை திருகும் பலகையில் திருகி எடுத்த கலியாணப் பூசினிக்காய் வீசை-1, சீனு கற்கண்டு வீசை-1, பசுவின் பால் படி-½, எட்டு பலம் நன்னாரிவேரை இடித்து ஒரு படித் தண்ணீரில் போட்டு ¼-படியாகக் காய்ச்சி வடித்த கியாழம், எட்டுப் பலம் கசகசாவைத் தண்ணீர்விட்டு அரைத்துப் பிழிந்தெடுத்த பால்.

(2) சீமை நீர்முள்ளிவிதை, திருநீற்றுப்பத்திரிவிதை, இலவங்கப்பட்டை, சீரகம், வால்மிளகு, ஜாதிக்காய் வகைக்குப் பலம்-1, இலேசாக அரிந்து இடித்த பேரீச்சங்காய் பலம்-4-

(3) வாதுமைப்பருப்பு, சாரப்பருப்பு, பிஸ்தாப்பருப்பு, அக்ரோட்பருப்பு வகைக்குப் பலம்-2.

செய்பாகம் :—முதலாவது அங்கத்தில் கூறப்பட்ட எல்லாவற்றையும் ஒரு இரும்புக்கடாயில் விட்டு அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து அடியிற் காந்தாமல் அடிக்கடி கிளறிக்கொண்டிருந்து கலியாணப் பூசினிக்காய் நீர்

சுண்டிக் கற்கண்டுப் பாகினைக் கலந்து பொன்னிறமாகவும் தந்துபதமாகவும் வருஞ்சமயம் கவனித்து அதனில் இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்ட சரக்குகளின் சூரணத்தையும் மூன்ருவது அங்கத்தில் கூறப்பட்ட பருப்பு இனங்களை வெந்நீரில் ஊறப்போட்டு மேல் தோல் நீக்கி மிருதுவாக அரைத்ததையும் ஒருமிக்கக் கலந்து தூவிக் கிண்டிப் பத்து பலம் தேன், பத்து பலம் நெய் கூட்டிப் பிசைந்து வைத்துக்கொள்க. சில சந்தர்ப்பம் இந்த லேகியத்தில் சிறிது ஈரப்பசை இருப்பதாக உணரின் இதனைக் கோப்பைத் தட்டுகளில் அடைபோல் தட்டி 2 - 3 நாள் ரவியில் காயவைத்துக் கல்லுரலிலிட்டுப் பூணில்லாத உலக்கையால் எல்லாம் கலக்கும்படி இடித்து எடுத்துக்கொள்ளவும். லேகியம் வறட்சியாக இருப்பின் இடிக்கும்போது போதிய நெய், தேன் கூட்டி இடிக்கவும். இந்த லேகியம் எளிதில் கெடாது. நீடித்துப் பயன்படும்.

பிரயோகம் :—வேளைக்கு ½-தோலா வீதம் தினம் இருவேளை கொடுக்கவும்.

தீரும் வியாதி :—தேகவறட்சி, எலும்புருக்கி, சிரங்கு, நீர்க்கடுப்பு, வெட்டை, பிரமேகம் தீரும். விந்தூறும், நல்ல வனப்பைத் தரும்.

பத்தியம்: —இச்சாபத்தியம்.

## 4. திப்பிலி லேகியம்

சரக்கு:—

| | | | | |
|---|---|---|---|---|
| 1. திப்பிலி | பலம் 3½ | சிற்றரத்தை | பலம் 2 |
| கண்டங்கத்திரி சமூலம் | ,, 2 | தூதுவளைச்சமூலம் | ,, 2 |
| கரிசாலைச்சமூலம் | ,, 2 | | |
| 2. மிளகு | | வால்மிளகு | |
| ஏலம் | | இலவங்கப்பத்திரி | |

இலவங்கப்பட்டை
கடுக்காய்
தான்றிக்காய்
சாதிப்பத்திரி
வாய்விளங்கம்
குரோசாணி ஓமம்
தாளிசபத்திரி
சிறுதேக்கு
மோடி

அதிமதுரம்
நெல்லிவற்றல்
சாதிக்காய்
கிராம்பு
தனியா
சீரகம்
செவ்வியம்
கூகைநீறு
அமுக்கராக்கிழங்கு

இவைகள் வகைக்குக் கழஞ்சு - 3.

3. சீனி சர்க்கரை வீசை-1.

செய்பாகம் :—முதலிரண்டு அங்கங்களில் கூறப்பட்டுள்ள சரக்குகளை நன்ருய் உலர்த்தி இடித்துச் சீலையில் சன்னமாக அரித்து வைத்துக் கொள்க அப்பால் சீனிசர்க்கரையை ஒரு பாண்டத்தில் போட்டு 1-படி சுத்த நீர்விட்டுக் கரைத்து வடித்து ஒரு பெரிய இரும்புக் கடாயில் விட்டு அடுப்பிலேற்றிச் சிறுதீயாக எரித்துப் பாகு பதம் வரும்போது முன் சித்தப்படுத்திய சூரணங்களைச் சிறுகத் தூவிக் கிண்டிக் கொடுத்துக் கீழிறக்கி ஆறவிடவும். இந்த லேகியத்திற்குப் போதிய அளவு தேனையும் நெய்யையுங் கூட்டி நன்கு இடித்துச் சாடியில் பத்திரப் படுத்துக.

பிரயோகம் :—வேளைக்குச் சுண்டைக்காய்ப் பிரமாணம் அந்தி சந்தி கொடுத்து வருக.

தீரும் வியாதி :—ஈளை, இருமல், காசம், க்ஷயம், அரோசகம், வாந்தி, குடல் புரட்டல், வாயு, வயிற்றுவலி முதலியவைகளாம்.

பத்தியம் :—கைப்பு புளிப்புத் தள்ளி இச்சா பத்தியம்.

## 5. கடுக்காய் லேகியம்

**சரக்கு :—**

(1) நூறு பலம் கடுக்காயை உடைத்துக் கொட்டை நீக்கி மேற்றோலை எடுத்து ஒரு பெரிய மட்பாண்டத்தில் போட்டு ஆறுபடி சுத்த நீர்விட்டு அடுப்பிலேற்றிச் சிறுக எரித்து ½ - படி அளவிற்குச் சுண்டி வரும்போது கீழிறக்கி ஆறவிட்டுப் பிசைந்து வடித்துக் கொள்ளவும்.

(2) சுத்திசெய்த சிவதைவேர், இஞ்சி (பொடியாக அரிந்து உலர்த்தியது) மிளகு, ஓமம், திப்பிலி, வாய்விளங்கம் வகைக்குப் பலம் ஒன்ருக ரவியில் உலர்த்தி இடித்துச் சன்னமாகச் சூரணம் செய்து வைத்துக் கொள்ளவும்.

(ப்) சீனிசர்க்கரை பலம் - 20.

**செய்பாகம் :—**முதலாவது அங்கத்தில் கூறப்பட்ட கியாழத்தை ஒரு இரும்புக்கடாயில் விட்டுச் சீனிச்சர்க்கரையைக் கொட்டிக் கரைத்து அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்துப் பாகுபதம் காணும்போது இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட்ட சூரணத்தைக் கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டுக் கிண்டிக் கீழிறக்கி ஆறவிட்டுப் போதிய அளவு நெய்விட்டுப் பிசைந்து பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—**வேளைக்கு 1 - 1½ கழற்சிக்காய் அளவு இரவு படுக்கைக்குப் போகும்போது உட்கொண்டு சிறிது காய்ச்சிய பசுவின் பாலை அருந்தக் காலையில் மலம் இளகலாகப் போகும். அல்லது காலை மாலை கழற்சிக்கொட்டைப் பிரமாணம் சாப்பிட்டுப் பசுவின் பாலை அருந்தவும். இதில் மலப்போக்கு அதிகப்பட்டால் ஒருவேளை லேகியமே போதுமானது.

**தீரும் வியாதி :—**அக்கினிமந்தம், சூலை, மலசலக்கட்டு, வாயு, மூலவாயு எல்லாம் குணமாகும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

குறிப்பு :—இந்த லேகியம் மலபந்தமுடையவர் களுக்கு அதிகச் சிறந்தது.

## 6. வில்வாதி லேகியம்

சரக்கு :—

வில்வவேர் (தோல் நீக்கியது) பலம் - 30.

| | |
|---|---|
| ஏலம் | கிராம்பு |
| சுக்கு | கடுக்காய் |
| மிளகு | நெல்லிவற்றல் |
| திப்பிலி | தான்றிக்காய் |
| மோடி | கோஷ்டம் |
| தனியா | சீரகம் |
| சிறுநாகப்பூ | இலவங்கப்பத்திரி |
| சித்திரமூலம் வேர் | |

இவைகள் வகைக்குப் பலம் - 1.

சர்க்கரை வீசை - 1.

செய்பாகம் :—முதலில் வில்வவேரைச் சிறு துண்டு களாக நறுக்கிப் பஞ்சுபோல் நசுக்கி ஒரு குடிநீர் பாண் டத்திலிட்டு, 16 - படி சலம்விட்டு அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்து 2 - படி அளவிற்கு வரும்போது கீழிறக்கி ஆறவிட்டுப் பிசைந்து வடிகட்டி எடுத்த கியா ழத்தில் சர்க்கரையைப் போட்டுக் கரைத்து அடுப்பிலேற் றிச் சிறு தீயாக எரித்துப் பாகுபதம் வரும்போது மிகுதி யுள்ள சரக்குகளை நன்கு இடித்துச் சூரணித்துப் போட் டுக் கிளறிக் கீழிறக்கிப் போதிய அளவு நெய் தேன் கூட் டிப் பிசைந்து வைத்துக்கொள்க.

பிரயோகம் :—இந்த லேகியத்தில் வேளைக்குக் கழற் சிக்கொட்டைப் பிரமாணம் காலை மாலை கொடுத்து வருக.

**தீரும் வியாதி :**—பாண்டு, காமாலை, சோபை, விக்கல், பித்தம், பயித்தியம், தேகபாரிப்பு, பலவிதபேதி, தேகநாற்றம், பழைய சுரம் இவைகள் குணமாகும்.

**பத்தியம் :**—இச்சாபத்தியம்.

## 7. வேறு முறை

**சரக்கு :—**

(1) மேல்தோல் நீக்கிய ஐந்து பலம் வில்வவேரைச் சிறு துண்டுகளாக நறுக்கிப் பஞ்சுபோல் இடித்து நசுக்கி ஒரு புதுப்பாண்டத்தில் போட்டு 8-படித் தண்ணீர் விட்டு அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்து, விட்ட தண்ணீர் அரைபாகத்திற்கு வரும்போது ஆற விடுக. மறுநாள் மீண்டும் இந்தக் கியாழத்தை அடுப்பிலிட்டு எரித்து ½-படி அளவிற்குச் சுண்டக் காய்ச்சிக் கீழிறக்கி ஆறவிட்டுப் பிசைந்து வடிகட்டிக் கொள்க.

(2) மிளகு, செவ்வியம் திப்பிலி

இவைகள் வகைக்குப் பலம் - 2.

ஏலம் இலவங்கப்பட்டை சுக்கு
சிறுநாகப்பூ தாளிசப்பத்திரி

இவைகள் வகைக்குப் பலம் - 1.

சாதிப்பத்திரி கிராம்பு

இவைகள் வகைக்குப் பலம் - ½.

(3)

| | | |
|---|---|---|
| சீனிசர்க்கரை | பலம் | 10 |
| பசுவின் நெய் | ,, | 5 |
| தேன் | ,, | 5 |

**செய்பாகம் :**—முதலாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள கியாழத்தில் சீனிசர்க்கரையைக் கூட்டிக் கரைத்து அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்துப் பாகு

பதம் வரும்போது இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்ட சரக்குகளின் சூரணத்தைக் கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டுக் கிண்டிக் கீழிறக்கித் தேன் நெய் கூட்டிப் பிசைந்து பக்குவப்படுத்துக.

பிரயோகம் :—இந்த லேகியத்தில் பாக்களவு அந்தி சந்தி இருவேளை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—குன்மம், காசம், கிராணி, அதி சாரம், சுரம், வாந்தி, பித்தம், இருமல், ஈளை, விக்கல், நெஞ்சு எரிவு, தேக எரிவு, விஷப்பாண்டு, தலைவலி, நீரேற்றம், வயிற்றுப்பிசம் முதலியவைகளாம்.

பத்தியம் :—கைப்பு புளிப்பு தள்ளி இச்சா பத்திய மாக இருத்தல் வேண்டும்.

## 8. மகா பறங்கிச்சக்கை லேகியம்

சரக்கு :—

(1) சுக்கு — மிளகு
திப்பிலி — கடுக்காய்
நெல்லிவற்றல் — தான்றிக்காய்
முத்தக்காசு — சிறுநாகப்பூ
இலவங்கப்பட்டை — இலவங்கப்பத்திரி
ஜாதிக்காய் — ஜாதிப்பத்திரி
ஏலம் — கிராம்பு
தனியா — சோம்பு
சிற்றரத்தை — வெட்டிவேர்
மோடி — சடாமாஞ்சில்
மராட்டிமொக்கு — கடுகுரோகணி

இவைகள் வகைக்குப் பலம் - ½.

சுத்திசெய்த பறங்கிச்சக்கை பலம் -11.

(2) வெள்ளைச்சர்க்கரை பலம் - 45.

**செய்பாகம் :—** இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட்ட சர்க்கரையை ஒரு இரும்புக்கடாயில் போட்டு 1 - 1¼ படி சலம் விட்டு கரைத்து அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்துப் பாகுபதம் வரும்போது, முதலாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள இருபத்துமூன்று சரக்குகளையும் நன்கு இடித்துச் சூரணம் செய்து கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டுக் கிண்டிக் கீழிறக்கி ஆறவிட்டுப் போதிய அளவு தேன் நெய்விட்டுப் பிசைந்து ஜாடியில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—** இந்த லேகியத்தைத் தினம் இரு வேளை கழற்சிக்கொட்டைப் பிரமாணம் கொடுத்து வருக.

**தீரும் வியாதி :—** புளியேப்பம், அதிக வியர்வை, பிரமை, தாகம், மூர்ச்சை, வயிற்றுப்பிசம், சூலை, ஒக்காளம், வாய்நீரூறல், கிருமிசேர்க்கை, அரோசகம் இன்னும் கப பித்த பிரகோபங்களா லுண்டான பல வியாதிகள் தீரும்.

**பத்தியம் :—** கைப்பு புளிப்புத் தள்ளி இச்சாபத்தியமாக அன்னங் கொள்ளவேண்டும்.

## 9. சீரக லேகியம்

**சரக்கு :—**

| | |
|---|---|
| கடுக்காய் | நெல்லிவற்றல் |
| தான்றிக்காய் | கோரைக்கிழங்கு |
| சீந்தில் சர்க்கரை | சிறுநாகப்பூ |
| இலவங்கப்பத்திரி | ஏலம் |
| கிராம்பு | தனியா |
| சுக்கு | திப்பிலி |
| பற்பாடகம் | வெட்டிவேர் |
| சிற்றாமுட்டி | சித்திரமூலம்வேர் |
| இலவங்கப்பட்டை | |

இவைகள் வகைக்குப் பலம்-½.

18 சீரகம் பலம் - 9.

(2) சர்க்கரை பலம் 34
பசுவின் நெய் ,, 5
தேன் ,, 2½

செய்பாகம் :—முதலாவது அங்கத்தில் கூறப்பட்ட பதினெட்டுச் சரக்குகளையும் நன்கு இடித்து வைத்துக் கொள்ளவும். இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்ட சர்க்கரையை ஒரு இரும்புக்கடாயில் போட்டு ஒரு படித் தண்ணீர் விட்டுக் கரைத்து அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்துப் பாகுபதம் வரும்போது முன் சித்தப்படுத்திய சூரணத்தைப் போட்டுக் கிண்டிக் கீழிறக்கி ஆறவிட்டுத் தேன் நெய் முதலியவற்றைக் கூட்டிப் பிசைந்து சாடியில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்த லேகியத்தில் வேளைக்குப் பாக்களவு தினம் இருவேளை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—பசியின்மை, பேதி, செரியாமை, உள்ளங்கால் உள்ளங்கைகளில் உண்டான எரிச்சல், இன்னும் பித்த சம்பந்தமான பல ரோகங்கள் தீரும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 10. அசுவகெந்தி லேகியம்

சரக்கு :—(1)

| | |
|---|---|
| சுக்கு | திப்பிலி |
| மிளகு | இலவங்கப்பட்டை |
| இலவங்கப்பத்திரி | ஏலம் |
| சிறுநாகப்பூ | தனியா |
| சாதிக்காய் | செஞ்சந்தனம் |
| கிச்சிலிக்கிழங்கு | தகரைவிதை |
| மூங்கிலுப்பு | கிராம்பு |
| மோடி | செவ்வியம் |

| | |
|---|---|
| வெட்டிவேர் | சித்திரமூலம்வேர் |
| திராட்சைப்பழம் | பேரீச்சங்காய் |

இவைகள் வகைக்குப் பலம்-½.

| | | |
|---|---|---|
| | சுத்திசெய்த அசுவகெந்தி | ,, 20 |
| (2) | வெள்ளைச் சர்க்கரை | ,, 50 |
| | பசுவின் பால் | படி 1½ |

**செய்பாகம் :**—முதலாவது அங்கத்தில் கூறப்பட்ட இருபத்தோரு சரக்குகளையும் நன்ருய் உலர்த்தி இடித்துச் சீலையில் அரித்து வைத்துக்கொள்க. அப்பால் ஒரு இரும்புக் கடாயில் வெள்ளைச் சர்க்கரையைப் போட்டுப் பால் விட்டுக் கரைத்து அடுப்பி லேற்றிச் சிறு தியாக எரித்துப் பாகுபதம் வரும்போது, முன் சித்தப்படுத்திய சூரணத்தைக் கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டுக் கிண்டி கீழிறக்கி ஆறவிட்டு லேகிய பதத்திற்குப் போதிய அளவு நெய் தேன் கூட்டிப் பிசைந்து சாடியில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :**—இந்த லேகியத்தை வேளைக்குக் கழற்சிக் கொட்டைப் பிரமாணம் அந்தி சந்தி இருவேளை கொடுத்து வருக. இதனுடன் நல்லபடி முடித்த அயச் செந்தூரம்கூட்டிக் கொடுப்பது அதிக நன்மையைத் தரும்.

**தீரும் வியாதி :**—க்ஷயரோகத்தினுல் தேகம் இளைத்தவர்களுக்கு நாளுக்கு நாள் புஷ்டியைக் கொடுக்கும், இன்னும் அவர்களுக்குச் சுறு சுறுப்பை யுண்டாக்கும். நல்ல பலத்தைக் கொடுக்கும். இந்த லேகியத்தை மலடிக்குக் கொடுக்க மக்கட்பேறு உண்டாக்கும். இன்னும் ஸ்திரீகள் பிள்ளைகளைப் பெறுவதினுலுண்டான துர்ப்பலத்தை நீக்கிச் சதா இளமைப் பருவத்தையே குறிப்பிடும்.

**பத்தியம் :**—இச்சாபத்தியம்.

12

## 11. வேறு முறை

### அசுவகெந்தி லேகியம்

| சரக்கு :—(1) | அமுக்கராக்கிழங்கு | பலம் | 16 |
| --- | --- | --- | --- |
| | சுக்கு | ,, | 8 |
| | மிளகு | ,, | 4 |
| | திப்பிலி | ,, | 2 |
| | ஏலம் | ,, | 1 |
| | சிறுநாகப்பூ | ,, | ½ |
| | கிராம்பு | ,, | ¼ |
| (2) | வெள்ளைச் சர்க்கரை | ,, | 30 |
| | தேன் பலம் | ,, | 15 |
| | நெய் | ,, | 15 |
| | பால் | படி | 2 |

செய்பாகம் :—முதலாவது அங்கத்தில் கூறப்பட்ட ஏழு சரக்குகளையும் உலர்த்தி நன்கு இடித்துச் சீலையில் அரித்துப் பத்திரப்படுத்துக.

இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்ட சர்க்கரையைப் பசுவின் பால் விட்டுக் கரைத்து வடித்து ஒரு இரும்புக் கடாயில் விட்டு அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்துப் பாகுபதம் வரும்போது முன் சித்தப்படுத்திய சூரணத்தைக் கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டுக் கிண்டிக் கீழிறக்கி ஆறவிட்டு நெய் தேன் கூட்டிப் பிசைந்து சாடியில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—வேளைக்குச் சுண்டைக்காய் அளவு தினம் இருவேளை கொடுக்கவும்.

தீரும் வியாதி :—இருமல், அக்கினிமந்தம், அஸ்தி சுரம் நீங்கும். இதனுடன் அயச்செந்தூரம் கூட்டிக்

கொடுக்கச் சிங்கத்திற்கு ஒப்பான பலத்தையும் இந்திர னுக்கு ஒப்பான அழகையும் கொடுக்கும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 12. காசகுடோரி லேகியம்

சரக்கு :—(1)

| | |
|---|---|
| சாதிகோஷ்டம் | தாளிசப்பத்திரி |
| சிற்றரத்தை | அதிமதுரம் |
| அக்கராகாரம் | கண்டுபாரங்கி |
| செவ்வியம் | சுக்கு |

இவைகள் வகைக்குப் பலம் ¼

மிளகு ,, ½

சரக்கு :—(2)

| | | |
|---|---|---|
| ஈயக்கொடிச்சாறு | ஆழாக்கு | 1 |
| தூதுவளைச்சாறு | ,, | 1 |
| நல்லசங்கன் இலைச்சாறு | ,, | 1 |
| கண்டங்கத்திரிச்சாறு | ,, | 1 |

சரக்கு :—(3)

| | | |
|---|---|---|
| கற்கண்டு | வீசை | ½ |
| பசுவின்பால் | படி | ½ |
| தேன் | பலம் | 5 |

செய்பாகம் :—முதலாவது அங்கத்தில் கூறப்பட்ட ஒன்பது சரக்குகளையும் உலர்த்தி நன்கு இடித்துச் சூர ணம் செய்து வைத்துக் கொள்க. அப்பால் கற்கண்டைப் பொடி செய்து ஒரு இரும்புக் கடாயில் போட்டுப் பசுவின் பாலை விட்டுக் கரைத்து இரண்டாவது அங்கத்தில் கூறப் பட்ட நான்கு திரவங்களையும் கூட்டி அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்துப் பாகுபதம் வருஞ்சமயம் முன் சித்தப்

படுத்திய சூரணத்தைக் கொட்டித் தேன்விட்டுக் கிண்டிக் கீழிறக்கி ஆறவிட்டு வழித்துக் கோப்பையில் பத்திரப் படுத்துக. இந்தப் பாகத்தில் நெய் சேர்க்க வேண்டிய தில்லை.

பிரயோகம் :—இந்த லேகியத்தில் வேளைக்குப் புளி யங்கொட்டைப் பிரமாணம் காலை மாலை இருநேரம் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—ஈளை, இருமல், சுவாசகாசம், தொண்டைக் கபம் இவைகள் தீரும்.

பத்தியம் :—புளி தள்ளி இச்சாபத்தியமாக ஆகாரம் உட்கொள்ளல் வேண்டும்.

## 13. இஞ்சி லேகியம்

சரக்கு :—(1)

மேல்தோல் சீவி உலர்த்திய இஞ்சி பலம் - 5

| | |
|---|---|
| திப்பிலி | கிராம்பு |
| ஏலம் | சீரகம் |
| மிளகு | ஜாதிக்காய் |
| ஜாதிப்பத்திரி | சாதிகோஷ்டம் |
| கடுக்காய் | தாளிசப்பத்திரி |
| சிறுநாகப்பூ | அதிமதுரம் |

இவைகள் வகைக்குப் பலம்-½.

சரக்கு :—(2)

| | |
|---|---|
| சர்க்கரை | பலம் 15 |
| தேன | ,, 6 |
| நெய் | ,, 5 |

செய்பாகம் :—முதலாவது அங்கத்தில் கூறப்பட்ட பதின்மூன்று சரக்குகளையும் நன்கு இடித்துச் சீலையில்

அரித்து வைத்துக்கொள்ளவும். இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்ட சரக்குகளில் சர்க்கரையைக் காலேயரைக் கால்படி சலம் விட்டுக் கரைத்து வடிகட்டி ஒரு இரும்புக் கடாயில் விட்டு அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்துப் பாகுபதம் வரும்போது, முன் சித்தப்படுத்திய சூரணத்தைக் கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டுக் கிண்டித் தேன் நெய்விட்டுக் கிளறி ஆறவிட்டு வழித்துச் சாடியில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்த லேகியத்தில் வேளைக்குக் கழற்சிக் கொட்டைப் பிரமாணம் அந்தி சந்தி இருநேரமும் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—பித்தவாயுவைக் குணப்படுத்தும். பேதியைக் கட்டும். ஜீவாக்கினியை விருத்திசெய்து நல்ல பசியை யுண்டாக்கும்.

பத்தியம் ;—பசித்த நேரத்தில் நல்ல ஆகாரத்தைக் கொள்ளவும்.

## 14. வேறு முறை

சரக்கு :—

| | | |
|---|---|---|
| மேல்தோல் சீவிய இஞ்சி | பலம் | 5 |
| சீரகம் | ,, | 2½ |
| திராட்சைப்பழம் | ,, | 2½ |
| கொட்டைநீக்கிய ஆல்பகோராப்பழம் | ,, | 5 |
| பனைவெல்லம் | ,, | 10 |

செய்பாகம் :—இஞ்சித் துண்டுகளை வில்லை வில்லையாக அரிந்து ஒரு கோப்பையில் போட்டு, அதனுடன் மண் கல் இல்லாதபடி புடைத்தெடுத்த சீரகத்தைப் போட்டு மூழ்க எலுமிச்சம்பழச்சாறு விட்டு உலர்த்தவும்.

இதற்குமேல் பொற்றலைக் கையாந்தகரை இலைச்சாறு
விட்டு உலர்த்தவும். இப்படி நன்ருய்க் காய்ந்துள்ள பக்கு
வத்தில் இடித்துச் சூரணம் செய்து கல்வத்தில் போட்டு
பனை வெல்லம் உட்பட விதை நீக்கிய திராட்சைப்பழத்
தையும், கொட்டை நீக்கிய ஆல்பகோராப்பழத்தையும்.
கொஞ்சங் கொஞ்சமாகக் கூட்டி அரைத்துக் கொண்டு
வருக. ஒருகால் லேகியபதத்திற்குப் பக்குவப் படாமலிருப்
பின், சிறிது தேன்கூட்டி லேகியபதத்திற்கு அரைத்துச்
சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்த லேகியத்தை வேளைக்கு கழற்சிக் கொட்டைப் பிரமாணம் காலை மாலை சாப்பிட்டு வருக.

தீரும் வியாதி :—வயிற்றில் கட்டிபோல் கிளம்புதலும் அது அடியிலிருந்து மார்புக்குக் கிளம்பி அடைத்தலும் குணமாகும். இன்னும் பித்தவாயு என்று சொல்லப்பட்ட ஏப்பம், நெஞ்செரிவு, வாய்குமட்டல், நாவில் நீர் சுரப்பு முதலியவைகள் குணமாகும்.

பத்தியம் :—பித்தத்தை விருத்தி செய்யும்படியான பண்டங்களை நீக்கி இச்சாபத்தியமாக இருத்தல்வேண்டும்.

## 15. நெல்லிக்காய் லேகியம்

| சரக்கு :—(1) | அதிமதுரம் | கூடைகீறு |
|---|---|---|
| | கொடிமுந்திரிப்பழம் | |
| | இவைகள் வகைக்குப் பலம் - 2. | |
| | பேரீச்சங்காய் | பலம் 3 |
| | திப்பிலி | ,, 3 |
| (2) | நெல்லிவற்றல் | பலம் 60 |
| | சர்க்கரை | ,, 25 |

செய்பாகம் :—இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்ட நெல்லிவற்றலை ஒன்றிரண்டாக இடித்து ஒரு குடி

நீர்ப் பாண்டத்தில் போட்டு 12-படித் தண்ணீர்விட்டு ஓர் இரவு ஊறவிட்டு, மறுநாள் அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து 1½ - படி அளவிற்குச் சுண்டக் காய்ச்சி வடித்து அதனில் சர்க்கரையைக் கூட்டிக் கரைத்து மீண்டும் அடுப்பிலேற்றிச் சிறுக எரித்துப் பாகுபதம் வருஞ்சமயம், முதலாவது அங்கத்தில் கூறியவைகளுள் இடித்துச் சூரணஞ் செய்ய வேண்டுவனவற்றை யிடித்துச் சூரணித்தும், மற்றவைகளை அம்மிக்கல்லில் வைத்து மிருதுவாக அரைத்தும், ஒருமிக்கப் போட்டுக் கிளறி ஆறவிட்டு லேகிய பதத்திற்குப் போதிய நெய் தேன் கூட்டிப் பிசைந்து சாடியில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்த லேகியத்தில் வேளைக்குக் கழற்சிக்கொட்டைப் பிரமாணம் காலை மாலை ஏழுநாள் அல்லது பத்துநாள் வரையில் கொடுக்கவும். இப்படி விட்டு விட்டு 20 - 40 நாள் கொடுக்க வேண்டியது அவசியமாகும்.

தீரும் வியாதி :—வாந்தி, பித்தம், காமாலை, பித்த பாண்டு, தேகவறட்சி, திமிர்வாயு, சோகை, நீர்ச்சுருக்கு, குன்மம், உடம்பெரிவு, நெஞ்சுத்துடிப்பு, கிருகிருப்பு முதலியவைகள் தீரும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 16. வேறு முறை

## நூஞணி நெல்லிக்காய் லேகியம்

சரக்கு :— (1)

| | | |
|---|---|---|
| நெல்லிக்காய் முறபா | தோலா | 15 |
| முள்திராட்சை (ஜரீஸ்பழம்) | ,, | 8 |
| குல்கந்து | ,, | 3 |
| கொட்டை நீக்கிய கடுக்காய் முறபா | | 5 |

சரக்கு :—(2)

| | | |
|---|---|---|
| மூங்கிலுப்பு | தோலா | 3 |
| ஜகர்மொகரயே கத்தாயி | ,, | 2 |

சரக்கு :—(3)

| | | |
|---|---|---|
| தனியா | தோலா | 3 |
| ஏலரிசி | ,, | 3 |
| ரூமிமஸ்தகி | ,, | 2 |
| துரிஞ்சிப்பழத்தோல் | ,, | 2 |
| கர்த்தே சமாக்-மேல் உமி | ,, | 2 |
| குலேகாவுஸ்பான் | ,, | 1½ |
| கஜ் | ,, | 1½ |
| தொக்மே கியாரின் | ,, | 3 |
| ஜாதிக்காய் | ,, | 1½ |
| தாளிசப்பத்திரி | ,, | 2 |
| தூதரி சுருக் | ,, | 1½ |
| பாமனே சுபேத் | ,, | 1½ |
| பரஞ்சிமிஸ்க் (துளசிவிதை) | ,, | 1½ |
| சந்தனத்தூள் | ,, | 3 |
| குங்குமப்பூ | மாஷா | 4 |

சரக்கு :—(4)

புளிப்புமா துளம்பழ சர்பத் (24-அவுன்ஸ்) 1 புட்டி.

செய்பாகம் :—முதலாவது அங்கத்தில் கூறப்பட்ட நான்கு சரக்குகளையும் கொட்டைகளில்லாதபடி கவனித்துக் கல்வத்தில் போட்டு நன்றாய் உறவாகும்படி அரைத்து வைத்துக் கொள்க. இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்ட இரு சரக்குகளையும் தனித்தனிக் கல்வத்தில் போட்டு மூன்று நாளிற்குக் குறையாமல் உயர்ந்த பன்னீர் விட்டு அரைத்து உலர்த்தி வைத்துக் கொள்க. மூன்றாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள சரக்குகளில் குங்குமப்பூ

ரூமிமஸ்தகி நீங்கலாக மற்றவைகளை இடித்துச் சூர ணித்து அதனுடன் குங்குமப்பூவையும் ரூமிமஸ்தகியை யும் கல்வத்திலிட்டு மிருதுவாக அரைத்துக் கூட்டி வைத் துக் கொள்க. அப்பால் நான்காவது அங்கத்தில் கூறப் பட்ட புளிப்பு மாதுளம்பழச் சர்பத்தை ஒரு இரும்பு கடா யில் விட்டு அடுப்பில் வைத்து எரித்துப் பாகுபதம் வரும் போது மூன்றாவது அங்கத்தில் சுத்தப்படுத்தி வைத் துள்ள சூரணத்தையும், இரண்டாவது அங்கத்தில் அரைத்துப் பொடிசெய்து வைத்துள்ளதையும் போட்டுக் கிளறி கீழிறக்கி ஆறவிட்டு வழித்துக் கல்வத்தில் போட்டு முதல் அங்கத்தில் அரைத்து வைத்துள்ள முறபா பழ இனங்களைப் போட்டு அரைத்து வழித்து ஜாடியில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்த லேகியத்தில் வேளைக்குக் கால் ரூபா எடை தினம் இருவேளை கொடுக்கவும்.

தீரும் வியாதி :—உஷ்ணவாயுவினால் காணுகின்ற பேதி, கிராணி, ஆசன எரிச்சலுடன் காணுகின்ற பேதி, அரோசகம், வாந்தி, பசியின்மை முதலியவைகள் குண மாகும்,

பத்தியம் :—இச்சாபத்தியம்.

(வேறு முறை)

## 17. யூனானி நெல்லிக்காய் லேகியம்

சரக்கு :—1

| | | |
|---|---|---|
| நெல்லிக்காய் முறபா | தோலா | 15 |
| விதை நீக்கிய கடுக்காய் முறபா | ,, | 5 |
| ஜெரீஷ்பழம் (முள் திராட்சை) | ,, | 5 |
| குல்கந்து | ,, | 2 |

சரக்கு :—2

| | | |
|---|---|---|
| மூங்கிலுப்பு | ,, | 1½ |
| ஜகர்மொகரயே கத்தாயி | ,, | 1½ |

சரக்கு:—3

| | | |
|---|---|---|
| ஏலரிசி | ,, | 1½ |
| வெப்பாலையரிசி | ,, | 1½ |
| தூதரி சுருக் | ,, | 1½ |
| குலே காவுஸ்பான் | ,, | 1 |
| பாஞ்சுமிஸ்க் (துளசி விதை) | ,, | 1½ |
| பாமனேசுபேத் | ,, | 1½ |
| பாவுஜார் | ,, | 1 |
| காசினிவிதை | ,, | 1½ |
| சந்தனத்தூள் | ,, | 1½ |
| துரிஞ்சிப்பழத்தோல் | ,, | 1½ |

சரக்கு:—4

| | | |
|---|---|---|
| மாதுளம்பழச் சர்பத்து | புட்டி | 1 |
| நாட்டுசர்க்கரை | பலம் | 15 |

**செய்பாகம் :—** இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்ட இரண்டு சரக்குகளையும் தனித்தனிக் கல்வத்தில் போட்டு மும்மூன்று நாளிற்குக் குறையாமல் பன்னீர் விட்டு அரைத்து உலர்த்திப் பொடிசெய்து கல்வத்திலிட்டு முதலாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள நான்கு சரக்குகளையும் கூட்டி மெழுகுவண்ணம் அரைத்து வைத்துக் கொள்க. அப்பால் ஒரு மட்பாண்டத்தில் நான்காவது அங்கத்தில் கூறப்பட்ட நாட்டு சர்க்கரையைப்போட்டுப் போதிய அளவு பன்னீர்விட்டுக் கரைத்து வடிகட்டி ஒரு இரும்புக் கடாயில்விட்டு அடுப்பிலேற்றிச் சிறுக எரித்துப் பாகுபதம் வருவதற்கு முன்னதாகவே மாதுளம்பழச் சர்பத்தைக் கூட்டிப் பின்னும் சிறிது எரித்துப் பாகுபதம்

கண்டவுடன் மூன்ருவது அங்கத்தில் குறிப்பிட்ட பத்துச் சரக்குகளையும் சூரணித்துப் போட்டுக் கிண்டிக் கீழிறக்கி ஆறவிட்டு முன் சித்தப்படுத்திய முறபாக் கலவையைக் கூட்டிப் பிசைந்து சாடியில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—**இந்த லேகியத்தில் வேளைக்கு கால் ரூபாய் எடை வீதம் தினம் இருவேளை கொடுத்து வருக.

**தீரும் வியாதி :—**உஷ்ணத்தினுல் வரும் சுரம், மார்பு சூடு, ஈரல்சூடு, இருதயத்துடிப்பு, இரைச்சலுடன் காணும் பேதி, காமாலே, அரோசகம், வாந்தி, விக்கல், மயக்கம் இவைகள் குணமாகும்.

**பத்தியம் :—**இச்சாபத்தியம்.

## 18. சாலாமிசிறி லேகியம்

### யூனனி முறை

சரக்கு :—

(1) ஊப்கலான்
தொக்மே கவல்
தொக்மே குல்பா
தொக்மே தர்பூஜ்
தால்மகாணு
சிறுநெருஞ்சிமுள்
மூங்கிலுப்பு
சுக்கு
ஜாதிக்காய்
நிலப்பனங்கிழங்கு
தொக்மே சல்கம்
தொக்மே காவுச்
தொக்மே காஜர்
தொக்மே காசினி
அலீம்
ரோஜாப்பூ
சீந்தில்சர்க்கரை
ஏலரிசி
மாசிக்காய்

இவைகள் வகைக்குப் பலம் ¼.

| | | |
|---|---|---|
| சாலாமிசிரி | பலம் | 5 |
| சபேத்மிசிரி | ,, | 1¼ |

| | | |
|---|---|---|
| (2) வாதுமைப்பருப்பு | ,, | $2\frac{1}{2}$ |
| சாரப்பருப்பு | ,, | $1\frac{1}{4}$ |
| (3) சீமைப்பூங்காவி | ,, | $1\frac{1}{4}$ |
| கற்கண்டு | ,, | 20 |
| நெய் | ,, | $7\frac{1}{2}$ |
| தேன் | ,, | 5 |

**செய்பாகம்** :—முதலாவது அங்கத்தில் குறிப்பிட்ட இருபத்தோரு சரக்குகளை நன்கு உலர்த்தி இடித்துச் சூர ணம் செய்து வைத்துக் கொள்க. இரண்டாவது அங்கத் தில் கூறப்பட்ட இரண்டு பருப்பு இனங்களையும் கொதிக் கும் வெந்நீரில் போட்டு சிறிது ஊறினவுடன் மேற்ருேல் நீக்கிச் சுத்தப்படுத்தி அம்மிக்கல்லிலிட்டு மிருதுவாக அரைத்து வைத்துக் கொள்ளவும். இதற்குமேல் ஒரு பாண்டத்தில் கற்கண்டையும் சீமைப்பூங்காவித்தூளை யும் போட்டு $\frac{3}{4}$-படித் தண்ணீர்விட்டுக் கரைத்து வடிகட்டி ஓர் இரும்புக் கடாயில் விட்டு அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்துப் பாகுபதம் வரும்போது முன் சித்தப்படுத்தி வைத்துள்ள சூரணத்தைக் கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டுக் கிண்டிக் கீழிறக்கி ஆறவிட்டு நெய் தேன் கூட்டிப் பிசைந்து சாடியில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம்**:—இந்த லேகியத்தில் வேளைக்குக் கொட் டைப் பாக்களவு காலை மாலை சாப்பிட்டுப் பசுவின் பால் அருந்தவும்.

**தீரும் வியாதி** :—இடுப்புவலி, தாதுநஷ்டம் தீரும். மலச்சிக்கல் இல்லாமல் வெளிப்படுத்தும். நீடித்துச் சாப் பிட நல்ல தேஜசும் பலமும் உண்டாகும்.

**பத்தியம்** :—பத்தியமில்லை, ஆனல் சக்தி மிஞ்சும் வரையில் போகம் கூடாது.

## 19. குமரி லேகியம்

**சரக்கு :—**

(1) மேல்தேசல் சீவித் துண்டு துண்டாக அரிந்து ஏழு முறை சுத்த சலம்விட்டுக் கழுவி எடுத்த சோற்றுக் கற்றாழை வீசை-2.

(2) கொதிக்கிற சலத்திற் சிறிது நேரம் ஊறப்போட்டு மேல்தோல் நீக்கிய வாதுமைப்பருப்பு, அக்ரோட் பருப்பு, சாரப்பருப்பு, பிஸ்தாப்பருப்பு வகைக்குப் பலம்-1, தோலுரித்த சுரைப்பருப்பு, முலாம் விதைப் பருப்பு வகைக்குப் பலம்-½, இவற்றைத் தட்டை அம்மிக்கல்லிலிட்டு மெழுகுவண்ணம் அரைத்து எடுத்துக் கொள்ளவும்.

(3) வால்மிளகு, ஜாதிக்காய், ஜாதிப்பத்திரி, தாளிசப் பத்திரி, மிளகு, மோடி, கிராம்பு, இலவங்கப்பட்டை, இலவங்கப்பத்திரி, மூங்கிலரிசி, ஆலம்விதை, அத்தி விதை, அரசம்விதை, பூனைக்காலிவித்து, சீமைநீர் முள்ளிவிதை, பருப்புக்கீரைவிதை வகைக்குப் பலம்-½ சாலாமிசிரி பலம்-2 இவை தம்மை நன்கு இடித்துச் சன்னமாகச் சூரணம் செய்து வைத்துக் கொள்க.

(4) குல்கந்து பலம்-5, விதை இல்லாத திராட்சைப்பழம் பலம்-10, குங்குமப்பூ வராகனெடை-½, பச்சைக்கற் பூரம் குன்றி எடை-3 ஆகக் கல்வத்தில் போட்டு மெழுகுப் பதமாக அரைத்து வைத்துக் கொள்க.

(5) சீனுகற்கண்டு வீசை - 1½.

**செய்பாகம் :**—ஒரு பெரிய இரும்புக் கடாயில் கற் கண்டைத் தூள் செய்து போட்டு அதனில் முதல் அங்கத்தில் சித்தப்படுத்தி வைத்துள்ள சோற்றுக் கற்றாழையைப் போட்டு ½-படி சுத்தமான பன்னீர் விட்டுக் கலக்கி அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து

அடியிற் காந்தாமல் அடுத்தடுத்துக் கிளறிக்
கொண்டு வருக. எப்பொழுது சோற்றுக்கற்றாழை
நீர் சுண்டி கற்கண்டுப் பாகினைக் கிரகித்துப் பொன்னிற
மாக மாறுதல் அடைவதுடன் கற்கண்டுப் பாகும் தந்து
பதத்திற்குக் காணுகின்றதோ அச்சமயம் வரிசைக் கிரம
மாக இரண்டாவது மூன்றுவது அங்கத்தில் கூறப்பட்ட
வைகளைப் போட்டுக் கிண்டி ஆறவிட்டு கோப்பைத் தட்டு
களில் அடைபோல் தட்டி 2-3 நாள் ரவியில் வைத்து
சிறிதும் ஈரமில்லாத சந்தர்ப்பத்தில் நான்காவது அங்கத்
த்ல கூறப்பட்ட குல்கந்துக் கலவையைக் கூட்டி கைவிர
லில் ஒட்டாத பதத்திற்கு வேண்டிய அளவு நெய் தேன்
சேர்த்து இடித்து ஜாடியில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்—இந்த லேகியத்தை தினம் இருவேளை கழற்சிக்கொட்டைப் பிரமாணம் அந்தி சந்தி சாப்பிட்டு வருக.

தீரும் வியாதி:—தேகவறட்சி, எலும்புருக்கி, வெட்டை, மேககாங்கை, தாதுநஷ்டம், ஸ்திரீகளுக்கு உண்டாகின்ற கர்ப்பாசயப்பலவீனம், வீட்டுவிலக்க ஒழுங்கீனம் குணமாகும்.

## 20. கிராணி கபாட லேகியம்

சரக்கு:—(1)

| | |
|---|---|
| சாதிக்காய் | சாதிப்பத்திரி |
| அதிமதுரம் | சீரகம் |
| ஓமம் | குரோசாணி ஓமம் |
| வாய்விளங்கம் | மோடி |
| அதிவிடயம் | பொரித்த காயம் |
| சுக்கு | திப்பிலி |
| மிளகு | கோஷ்டம் |

இவைகள் வகைக்குப் பலம் - ½.

(2) அபினி குன்றி எடை 15
சுத்தமான எள்ளு பலம் 2
பனைவெல்லம் ,, 3

செய்பாகம் :—முதலாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள பதினுன்கு சரக்குகளையும் நன்கு இடித்துச் சூரணம் செய்து வைத்துக்கொள்க. அப்பால் எள்ளை நன்ருய்க் கழுவித் தேய்த்து மேல்தோல் போகப் புடைத்து எடுத்து ஒரு இரும்பு உரலிலாவது அல்லது கல்லுரலிலாவது போட்டுப் பனைவெல்லத்தைக் கூட்டி இடிக்கவும். அப்போது அபினியைச் சிறிது சிறிதாகக் கிள்ளிப்போட்டு இடித்து எல்லாம் உறவான பதத்தில் முதலாவது அங்கத்தில் சித்தப்படுத்திய சூரணத்தையிட்டு இடிக்கவும். இவைகள் யாவும் ஒருமித்தபின் கல்வத்திலிட்டு தேன் விட்டு அபினி கலந்து நன்ருய் உறவாகும் பரியந்தம் அரைத்து வழித்து எடுத்துக்கொள்க.

பிரயோகம் :—இந்த லேகியத்தில் வேளைக்கு ஒரு வராகனெடை காலை மாலை கொடுத்து வருக. இன்னும் அயக்காந்த செந்தூரம் கூட்டிக் கொடுக்க நற்பயனைத் தரும்.

தீரும் வியாதி :—ஆறுவகைக் கிராணி, வயிற்றில் சஞ்சரிக்கும் வாயு.

பத்தியம் :—கைப்பு, புளிப்பு தள்ளி இச்சாபத்தியம்.

## 21. சீரகாதி லேகியம்

சரக்கு :—

| | |
|---|---|
| நற்சீரகம் | கருஞ்சீரகம் |
| குரோசாணி ஓமம் | மிளகு |
| சதகுப்பை | திப்பிலி |
| பெருங்காயம் | ஓமம் |

வாய்விளங்கம் கிராம்பு
சாதிக்காய் சிற்றரத்தை
வெள்ளைப்பூண்டு

இவைகள் வகைக்குப் பலம் - ½.

செய்பாகம் :—இவற்றை யெல்லாம் பொன்மேனி யாக இளஞ்சூட்டில் வறுத்து இடித்து மெல்லிய சீலையில் அரித்து எடுத்த சூரணத்துடன் சமன் பனைவெல்லம் கூட்டி நன்ருய் இடித்து லேகிய பதத்திற்கு எடுத்துக் கொள்ளவும்.

பிரயோகம் :—இந்த லேகியத்தை வேளைக்கு கழற்சிக்கொட்டை அளவு காலை மாலை கொடுத்து வருக.

தீரும் வியாதி :— உஷ்ணவாயுவினுல் வயிற்றில் இரைச்சல் உண்டாகிப் படபடவென்ற சப்தத்துடன் காணும் பேதியைக் குணப்படுத்தும். அஜீரணத்தை ஒழித்து நல்ல பசியை யுண்டாக்கும்.

பத்தியம் :—வாயு பண்டங்களைத் தள்ளி இச்சாபத்தியமாக அன்னங் கொள்ளவும். பேதி வலுத்திருந்தால் மோர் அன்னம் கூட்டவும்.

## 22. பஞ்சகவ்விய லேகியம்

சரக்கு :—

(1) பசுவின் பால் படி 1 தயிர் படி 1
சாணம் ,, 1 கோநீர் ,, 1
இளநீர் ,, 2

(2) சாம்பல் பூசணிக்காய் சீந்தில்தண்டு சூரணம்
அசுவகந்தி சூரணம் இஞ்சிச் சூரணம்
கருவேலங்காய்ச் சூரணம் கருவேலம்பூச் சூரணம்

இவைகள் வகைக்குப் பலம் - 5.

(3) அதிமதுரம் சிறுதேக்கு
கோஷ்டம் இந்துப்பு
வாய்விளங்கம் தனியா
விழலரிசி வாலுளுவையரிசி
வெட்பாலையரிசி வசம்பு
பூண்டு தேவதாரு
சதகுப்பை சிற்றரத்தை
சந்தனம் கருஞ்சீரகம்
கரும் பூலாப்பட்டை நன்னாரி
பொன்முசுட்டை நெல்லிமரவேர்
சாரணைவேர் கீழ்க்காய் நெல்லிவேர்
நிலப்பனைக்கிழங்கு துத்திவேர்
கடுகுரோகணி பெருங்குரம்பை
அதிவிடயம் ஜாதிக்காய்
இலவங்கப்பத்திரி சுக்கு
மிளகு திப்பிலி
வில்வவேர்ச்சாம்பல் கடுக்காய்
நெல்லிவற்றல் தான்றிக்காய்

இவைகள் வகைக்குக் கழஞ்சு - 1.

சரக்கு :—4.

| | |
|---|---|
| கற்கண்டு | வீசை 1 |
| தேன் | பலம் 10 |
| ஆவின் நெய் | வீசை $\frac{1}{2}$ |

**செய்பாகம் :—**முதலில் ஒருபடி அளவு பசுவின் சாணத்தில் இரண்டுபடி இளநீரை விட்டுக் கரைத்து வடிகட்டி தயிர், பால், கோநீர் கூட்டி ஒரு பழகிய மட்பாண்டத்தில் விட்டு அதனில் 3-வது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள முப்பத்தாறு சரக்குகளையும் நன்கு இடித்துச் சூரணம் செய்து போட்டு அடுப்பில் வைத்துச் சிறு தீயாக

எரித்து ஒருபடி அளவிற்குச் சுண்டி வரும்போது வடிகட்டிக் கற்கண்டுச் சூரணத்தைப் போட்டுக் கரைத்து மீண்டும் அடுப்பில் வைத்து எரித்துப் பாகுபதம் வரும்போது 2-வது அங்கத்தில் கூறப்பட்டுள்ள சூரணத்தைக் கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டு ஆவின் நெய், தேன் கூட்டிக் கிண்டிக் கீழிறக்கி ஆறவிட்டு ஜாடியில் அடைத்து வாய் மூடிச் சீலையால் கட்டி ஏதேனும் ஒரு தானியத்தில் ஒரு மண்டலம் வைத்து எடுத்துக் கொள்ளவும். இந்த லேகியத்தை உபயோகிக்கும் ரோகிக்கு மலபந்தம் இருந்தால் போதிய அளவு நெய்யிற்குப் பதிலாகச் சிற்றாமணக்கெண்ணெயை இதில் கூட்டிப் பிசைந்து கொள்ளலாம்.

பிரயோகம் :—இந்த லேகியத்தை வேளைக்கு ஒரு நெல்லிக்காய் அளவு தினம் இருவேளை ½ - 1 மண்டலம் கொடுத்து வருக. இதனுடன் சடாதார செந்தூரம் கூட்டிக் கொடுத்துவர அதிக நன்மையைத் தரும்.

தீரும் வியாதி :—தீராத பெரும்பாடு, அஸ்திமேகம், அல்குல் வழியாய் வடியும் சீழ் ரத்தம், சூதகவாயுவினால் வயிற்றில் கண்ட வலி, அடிவயிற்றில் பொருமலுடன் சஞ்சரிக்கும் வாய்வு, குன்மம், முதலியவற்றுடன் மேகத்தை முற்றிலும் குணப்படுத்தும். இந்த லேகியத்தைப் பொதுவாக எல்லா ரோகங்களுக்கும் சடாதார செந்தூரத்துடன் கொடுக்கும்படியாக ஆன்றோர் கூறி இருக்கின்றனர்.

## 23. மூதண்ட லேகியம்

சரக்கு :—1.

| | | |
|---|---|---|
| அறுசம்வேர் | பலம் | 16 |
| பசுவின்பால் | படி | ½ |
| கற்கண்டு | பலம் | 7½ |
| வெள்ளைச்சர்க்கரை | ,, | 7½ |

| | | |
|---|---|---|
| தேன் | ,, | $7\frac{1}{2}$ |
| நெய் | ,, | $7\frac{1}{2}$ |
| பேரீச்சங்காய் | ,, | 1 |
| திராட்சைப்பழம் | ,, | 1 |

சரக்கு :—2.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மிளகு | பலம் | $\frac{1}{2}$ | சுக்கு | பலம் | $\frac{1}{2}$ |
| திப்பிலி | ,, | $\frac{1}{2}$ | தாளிசப்பத்திரி | ,, | $\frac{1}{2}$ |
| சீரகம் | ,, | $\frac{1}{2}$ | அதிமதுரம் | ,, | $\frac{1}{2}$ |
| கசகசா | ,, | $\frac{1}{2}$ | நிலப்பனங்கிழங்கு | ,, | $\frac{1}{2}$ |
| பூமிசர்க்கரைக்கிழங்கு | ,, | $\frac{1}{2}$ | சோம்பு | ,, | $\frac{1}{2}$ |
| தனியா | வராகனெடை | 2 | அரத்தை | வராகனெடை | 2 |
| வாலுளுவையரிசி | ,, | 2 | நெல்லிவற்றல் | ,, | 2 |
| சிறுதேக்கு | ,, | 2 | சன்னலவங்கப்பட்டை | | 2 |
| கிரும்பு | ,, | 2 | * கல்மதம் | ,, | 2 |
| வால்மிளகு | ,, | 2 | ஜாதிக்காய் | ,, | 2 |
| ஜாதிபத்திரி | ,, | 2 | கடுக்காய் | ,, | 2 |
| தான்றிக்காய் | ,, | 2 | கருஞ்சீரகம் | ,, | 2 |
| மாசிக்காய் | ,, | 2 | சடாமாஞ்சில் | ,, | 2 |
| அக்கராகாரம் | ,, | 2 | கோஷ்டம் | ,, | 2 |

செய்பாகம் :—முதலாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள அறுகம்வேரை மண் தூசி முதலியவைகள் இல்லாமல் சலம்விட்டு அலம்பி நீர்வடியும் பொருட்டு ஒரு ஓலைப் பாயின்பேரில் பரப்பி ஒருமணி நேரம் சென்ற பின் எடுத்துச் சிறு துண்டுகளாக நறுக்கிப் பஞ்சுபோல் சிதைத்து ஒரு குடிநீர்ப் பாண்டத்தில் போட்டு 8-படித் தண்ணீர் விட்டு அடுப்பில் வைத்துச் சிறு தீயாக்கி எரித்து ஒருபடி அளவிற்குச் சுண்டின சமயம் கீழிறக்கி ஆறவிட்டுப்

---

* இந்தக் கல்லைப் பன்னீர் விட்டு 3-நாள் அரைத்து உலர்த்திக் கூட்டுக.

சைப் பழத்தையும் அரைத்துப் போட்டுக் கலக்கிப் பசு வின் பாலைச் சேர்த்து ஒரு பெரிய இரும்புக் கடாயில்விட்டு கற்கண்டைப் பொடித்து வெள்ளைச் சர்க்கரையுடன் கலந்து போட்டுக் கரைத்து அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து பாகுபதம் வருஞ்சமயம் இரண்டாவது அங்கத் தில் குறிப்பிட்டுள்ள சரக்குகளைச் சிறிது நெருப்பனலில் வாசனை கிளம்ப வறுத்து ஆறவிட்டு இடித்து மெல்லிய சீலையில் அரித்துப் போட்டுக் கிளறிக் கீழிறக்கித் தேன் நெய் கூட்டிக் கிண்டி அதில் குங்குமப்பூ கோரோசனை முப்பு வகைக்கு ஒரு வராகனெடை வீதம் அரைத்துப் போட்டுப் பிசைந்து நன்றாய் உறவாகும்படி கல்லுரலில் நெய்யைத் தடவிப்போட்டுக் கடப்பாறை கொண்டு புரட் டிப் புரட்டிக் கொடுத்து இடித்து ஜாடியில் பத்திரப் படுத்துக.

பிரயோகம் :—இந்த லேகியத்தில் வேளைக்குக் கழற் சிக்கொட்டைப் பிரமாணம் அந்தி சந்தி கொடுத்து வருக.

தீரும் வியாதி :—பித்தவாயு, அதிசாரம், சூலை பிடிப்பு, அஸ்திசுரம், இருமல், சுவாசம், தொண்டை கட்டு, நீர்க்கட்டு, நீரடைப்பு, மஞ்சளித்த சிறுநீர், கபா குத்து, சோபை, பிடரிவலி, க்ஷயம், காசம், வறட்டு இரு மல், சில்விஷம், பிரமேகம், நீர்க்கோவை, தாகம், நேத்திர பிணி, தாதுநஷ்டம், எரிகுன்மம், வயிற்று ரணம், குடல் ரணம், பெரும்பாடு, அண்டவாதம் முதலிய பல பிணிகள் குணமாகும். இன்னும் அந்தந்த ரோகங்களுக்குப் பயன் படும்படியான பற்ப செந்தூரங்களை அறிவாளர்கள் கூட் டிக் கொடுக்கும்போது அளவற்ற நற்குணத்தை விரைவி லுண்டாக்கும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 24. காஜர் என்னும் மஞ்சள் முள்ளங்கி லேகியம்

(பூ ஜனிசொ)

சரக்கு :—

(1) 15-பலம் மஞ்சள் முள்ளங்கிக் கிழங்கை வில்லை வில்லைகளாக அரிந்து பசுவின் பாலிலிட்டு வேக வைத்துப் பால் சுண்டின சமயம் பிங்கான் தட்டு களில் போட்டுப்பரப்பி வெயிலில் சுக்குப்போலுலர்த்தி இடித்துச் சூரணம் செய்து வைத்துக்கொள்க.

(2) இரண்டுபடி பசுவின் பாலை ஒரு ஈயம் பூசிய வாய் அகன்ற பாண்டத்தில் விட்டு அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்து ஜல்லிக்கரண்டி கொண்டு அடி காந்தாமல் கிளறிக் கொடுத்து வந்து நன்ருய்ச் சுண்டி லேகியப் பதமாகக் காணும் பாற்சுண்டியை எடுத்து வைத்துக் கொள்ளவும்.

(3) இருபத்தைந்து கோழி முட்டைகளை வேகவைத்துத் தோலுரித்து மேலுள்ள வெண்கருவை நீக்கி வெந் துள்ள மஞ்சட்கருவை எடுத்து வைத்துக்கொள்க.

(4) ஆலமரத்தின் விழுதுகளின் நுனிகளிலுள்ள இளங் குருத்துக் குச்சிகளை கிள்ளிச் சேகரம் செய்து இடித் துச் சாறுபிழிந்து அதில் எட்டு ரூபாய் எடை ஜவ் வரிசியைப் போட்டு ஊறவைத்து உலர்த்தி இயந்தி ரத்தில் போட்டு அரைத்து மாவு பதத்தில் எடுத்து வைத்துக்கொள்க.

(5) எட்டு ரூபாய் எடையுள்ள கொப்பரைத் தேங்காயைக் கொண்டுவந்து மேலுள்ள மெல்லிய தோலைச்சீவி சன்னமாய்ப் பொடியாகும் பொருட்டு துருவிப் பலகை யால் துருவி எடுத்து வைத்துக்கொள்க.

(6) வாதுமைப்பருப்பு, அக்ரோட்பருப்பு வகைக்கு எட்டு ரூபாய் எடை வீதம் கொதிக்கின்ற ஜலத்தில் போட்டு

ஊறவிட்டு மேல்தோல் நீக்கி அம்மிக்கல்லில் வைத்து நன்ருய் அரைத்து வைத்துக் கொள்க.

(7) கொட்டைப்பாக்கு, பேரீச்சங்காயின் கொட்டை ஆக இவ்விரண்டையும் வகைக்கு இரண்டு தோலா வீதம் லேகியம் செய்வதற்கு இரண்டு தினத்திற்கு முன்ன தாகவே ஒவ்வொன்றுக்கும் போதிய அளவு தண்ணீர் விட்டு ஊறவைத்து அம்மிக்கல்லில் வைத்து மைபோல் கெட்டிப் பதமாக அரைத்து ஒவ்வொன்றை யும் அடை தட்டி நெய்யில் காந்தாமலும் கருகாமலும் ரொட்டிபோல் நீர் சுண்டச் சுட்டு எடுத்து அரைத்து வைத்துக் கொள்ளவும்.

(8) எட்டு ரூபாய் எடை வறுத்த கடலையைப் பொட்டு இல்லாமல் ஆய்ந்து இரும்பு உரலிலிட்டு இடித்துச் சல்லடைக்கொண்டு சலித்து மாவாக எடுத்து வைத் துக் கொள்க.

(9) உலர்ந்த சீமை தண்ணீர்விட்டான்கிழங்கு தோலா-10, ஏலரிசி தோலா-2, குங்குமப்பூ தோலா-½, இவற்றுள் தண்ணீர்விட்டான் கிழங்கை இடித்துச் சூரணித்தும் மற்ற இரு சரக்குகளைக் கல்வத்திலிட்டு அரைத்தும் ஒருமிக்கக் கூட்டிக் கலந்து வைத்துக் கொள்க.

(10) கற்கண்டு பலம்-30, நெய் பலம்-12, தேன் பலம்-6.

**செய்பாகம் :—** மேற் கூறப்பட்ட ஒன்பது அங்கங் களிலுமுள்ள சரக்குகளை யெல்லாம் ஒரு பெரிய பேசினி லாவது அல்லது ஈயம் பூசிய பெரிய தட்டிலாவது போட்டு நன்ருய் உறவாகும்படி பிசரி வைத்துக் கொள்ளவும். இதற்குமேல் ஒரு பெரிய இரும்புக் கடாயை அடுப்பில் வைத்து பத்தாவது அங்கத்தில் குறிப்பிட்ட கற்கண் டைப் பொடி செய்துபோட்டு ஒரு படித் தண்ணீர் விட்டுச்

சிறு தீயாக எரித்துப் பாகுபதம் வரும்போது முன் சித்தப் படுத்திய சூரணத்தைக் கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டுக் கிளறி அதில் தேனையும் நெய்யையும் விட்டு உறவாகும்படி நன்ருய்க் கிண்டிக் கீழிறக்கி ஆறவிட்டுத் தட்டுகளில் போட்டு அடை தட்டி இரண்டு மூன்றுநாள் கடும் ரவியில் வைக்கவும். அப்பால் இந்த லேகியத்துடன் ½-வராகனெடை தங்கச் செந்தூரத்தையும் 1-வராகனெடை வெள்ளிப் பற்பத்தையும் கூட்டிப் பிசைந்து கல்லுரலிற்கும் உலக்கைப்பூணுக்கும் நெய் தடவி இந்த லேகியத்தை விட்டுப் புரட்டிப் புரட்டி இடித்து நன்ருய் உறவான பதத்தில் சாடியில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—**இந்த லேகியத்தில் வேளைக்கு ½-ரூபாய் எடை தினம் இருவேளை சாப்பிட்டுப் பால் அருந்தவும். இப்படி 40-நாள் சாப்பிட நரம்புக்கூடுகளுக்குப் பலம் உண்டாகி தாது அளவுக்கு மிஞ்சிச் சிற்றின்பத்தில் கிளர்ச்சியை யுண்டாக்கும். இளைத்த சரீரம் பெருக்கும். நல்ல தேஜசு உண்டாக்கும்.

**குறிப்பு :—**இந்த லேகியத்தில் தங்கச்செந்தூரம், வெள்ளிபற்பம் சேர்த்திடிக்காமல் தனி லேகியத்தைக் கொடுக்கும்போது அரிசி எடை தங்கச்செந்தூரமும் துவரம்பருப்பளவு வெள்ளிப்பற்பமும் கூட்டிக் கொடுக்கலாம். க்ஷயரோகிகளுக்குத் தங்கசெந்தூரம் அரிசிப் பிரமாணமும் முத்துபற்பம் துவரம்பருப்புப் பிரமாணமும் கூட்டிக் கொடுத்தல் அதிக நன்மையைத் தரும். மேகவெட்டை யுடையவர்களுக்கு வெள்வங்கபற்பம் வேளைக்கு ½-குன்றிப் பிரமாணம் கூட்டிக் கொடுத்தல் நன்று.

**பத்தியம் :—**நல்ல ஆகாரம் பசித்த நேரம் உட்கொள்க.

---

# மெழுகு இலம்பகம்

## 1. யானைக்காலுக்கு மேகசிந்தாமணி மெழுகு

சரக்கு :—

1. கஸ்தூரிமஞ்சள் பூவரசம்பட்டை
அழிஞ்சில்பட்டை சதுரக்கள்ளிவேர்ப்பட்டை
கொம்புக்கள்ளி மரப்பட்டை

இவைகள் வகைக்குப் பலம் - $2\frac{1}{2}$.

எருக்கம்பட்டை சிவனார்வேம்பு
சித்திரமூலம்வேர்ப்பட்டை பறங்கிச்சக்கை
கடுக்காய் கடுகுரோகணி
நிலாவாரை காக்கட்டான் வித்து

இவைகள் வகைக்குப் பலம் - $1\frac{1}{4}$.

கருஞ்சீரகம் கார்போக அரிசி
வால்மிளகு முருங்கைவிதை
காட்டுச்சீரகம்

இவைகள் வகைக்குப் பலம்-$\frac{1}{2}$.

2. வீரம் பூரம்
இரசம் இலிங்கம்
இரசசெந்தூரம்

இவைகள் வகைக்கு (20-குன்றி) கழஞ்சு-$\frac{1}{2}$.

**செய்பாகம் :**—இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள ஐந்து சரக்குகளையும் முறைப்படி சுத்திசெய்து கல்வத்தில் போட்டு நன்கு அரைத்து மிருதுவான பதத்தில், முதலாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள பதினெட்டு சரக்குகளையும் நன்கு உலர்த்தி இடித்துச் சூரணம்செய்து

சீலையில் அரித்துக் கூட்டித் தேன் துளித் துளியாய்விட்டு மெழுகுபதத்திலேயே இரண்டு சாமம் அரைத்து வழித்து வைத்துக்கொள்க.

பிரயோகம் :—இந்த மெழுகில் தினம் இருவேளை இரண்டு கடலைப் பிரமாணம் உருட்டி வெல்லத்தில் வைத்துக் கொடுக்கவும். இப்படி ஒருமுறை 10-நாள் கொடுத்து இரண்டொரு தினம் விட்டு, ஏதேனும் ஒரு தைலத்தைக் கொண்டு ஸ்நானம் செய்விக்கவும். மீண்டும் ஒருவாரம் மருந்தில்லாமல் விட்டு வைத்து முன்போல் ஒரு முறை 10-நாள் கொடுக்கவும். இவ்வாறு 20-40 நாள் கொடுக்க வேண்டியது அவசியமாகும்.

தீரும் வியாதி :—யானைக்கால் சுரம், அதனால் ஏற்பட்ட கால் வீக்கம், இரண்டு மூன்று மாதத்திற்குள் பூரணமாகக் குணமாகும். இதுவுமல்லாமல் மேகசம்பந்தமான கிரந்தி, அரையாப்பு, கருமேகம், செம்மேகம், விரணம், வாயு சம்பந்தமான அண்டவாயு, குத்தல், குடைச்சல், முடக்கு, வலி, இசிவு, கபாலசூலை, குன்மம் முதலியவைகள் குணமாகும்.

பத்தியம் :—மருந்து சாப்பிடும்போது இச்சா பத்தியம். மருந்தை நிறுத்தி வைத்துள்ளபோது இஷ்ட போஜனம்.





## 2. இலிங்க மெழுகு

சரக்கு :—

- முலைப்பாலில் சுத்தி செய்த இலிங்கம்
- சாம்பிராணி
- சுக்கு
- திப்பிலி
- ஏலம்
- மிளகு
- தாளிசப்பத்திரி
- இலவங்கப்பட்டை
- கிராம்பு

வகைக்குச் சமனெடை

செய்பாகம் :—மேற்கூறப்பட்ட ஒன்பது சரக்கு களில் இடித்துச் சூரணம்செய்ய வேண்டியவற்றைச் சூர ணித்து மற்றுமுள்ள சரக்குகளுடன் கூட்டிக் கல்வத்தில் போட்டு தேன் துளித் துளியாக விட்டு மெழுகு பதத்தி லேயே நன்கு அரைத்து வாயகன்ற சீசாவில் பத்திரப் படுத்துக.

பிரயோகம் :—வேளைக்கு 1-2 குன்றிப் பிரமாணம் தினம் இருவேளை 3 - 5 நாள் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—முறை சுரம், சுரம், சயித்தியம், தேகவலி, வாயு முதலியவைகள்.

பத்தியம் :—ரோகத்தின் வன்மை மென்மைக் கேற்ற வாறு கஞ்சி புனல்பாகம் கொடுக்கவும்.

## 3. நமனுச மெழுகு

சரக்கு :—

| | |
|---|---|
| இலிங்கம் | தாளகம் |
| மிருதார்சிங்கி | மனோசிலை |
| கௌரி | வெள்ளை பாஷாணம் |
| வாலைரசம் | கந்தகம் |
| வீரம் | பூரம் |
| மயில்துத்தம் | |

இவைகள் வகைக்கு வராகனெடை - 1.

வாளம் ,, 11.

செய்பாகம் :—மேற்கூறப்பட்ட பன்னிரண்டு சரக்கு களையும் ஏதேனும் ஒரு முறைப்படி சுத்திசெய்து கல்வத் தில் போட்டு ஆறுமாதத்திய அன்னக்காடியை கொஞ்சங் கொஞ்சமாக விட்டு நான்கு சாமம் அரைத்து ஒரு முழ வெள்ளைச் சீலையில் தடவித் திரித்துக் காயவைத்து

வளையமாகச் சுருட்டிக் கட்டிப் பத்துப் பலம் பசுவின் நெய்யில் சுவறத் தோய்த்துக் காற்று இல்லாத இடத்தில் கம்பி கொண்டு தொங்கக் கட்டிக் கொளுத்தி விடவும். அந்தச் சீலை வளையம் பற்றி எரிய எரிய நெய் சொட்டும் அத்தருணம் அடியில் ஒரு வாயகன்ற கோப்பைத் தட்டை வைத்துச் சொட்டுகின்ற நெய்யைச் சேதப்படாமல் சேகரப்படுத்துவதுடன் மிகுதியுள்ள நெய்யை யெல்லாம் சிறு கரண்டிகொண்டு அள்ளிச் அள்ளிச் சீலை வளையத்தின் மேல் விட்டுவர நெய் எல்லாம் எரிந்து சொட்டும். இப்படிச் செய்தது ஒரு மடக்கு ஆகும். மீண்டும் வாயகன்ற கோப்பையிலுள்ள நெய்யை யெல்லாம் வேறு கோப்பையில் வடித்து வைத்துக்கொண்டு மேற்படி * சீலை வளையத்தின்பேரில் சுவறவிட்டுக் கொளுத்தி முன்போல் அடியில் கோப்பைத் தட்டை வைத்துச் சொட்டுகின்ற நெய்யை யெல்லாம் முன்போல் சேகரிக்கவும். இப்படி மூன்று மடக்கு ஆன பின் நெய்யை மெல்லிய சீலையில் தூசி தும்புகள் இல்லாமல் வடிகட்டிச் சீசாவில் பத்திரப்படுத்தவும். வேண்டும்போது ஒரு கல்வத்தில் மூன்று பலம் பனைவெல்லத்தைப் போட்டு ஒரு வராகனெடை சுக்குத்தூள், ஒரு வராகனெடை முன் முடித்த சுடர்த் தைலம் ஒரு வராகனெடை கற்பூரம் கூட்டி அரைத்து மெழுதுபதத்தில் ஒரு வாயகன்ற சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு ¼ - ½ சுண்டைக்காய் அளவு தேக திடத்திற்கு ஏற்றவாறு தினம் இருவேளை 5 - நாள் கொடுக்கவும். இப்படி மாதந்தோறும் 5 - நாள் ஆக 3 - மாதம் கொடுக்க வேண்டும்.

---

* சீலை வளையமானது தீய்ந்து சாம்பலாகிவிடின். மீண்டும் முன்போல் ½-முழச் சீலையைத் திரிபோல் சுருட்டிக் கட்டி முன் சொட்டியுள்ள தைலத்தில் சுவறத் தோய்த்துக் கொளுத்தவும்.

தீரும் வியாதி :—குன்மம், சூதகவாயு, திமிர்வாதம், குடல்வாதம், பாரிசவாதம் முதலியவை தீரும்.

பத்தியம் :—மருந்து கொள்ளும்போது பசுவின்பால், பசுவின் நெய், பச்சைப்பயறு, வறுத்த உப்பு ஆகும். மற்றவைகள் கூடாது. மருந்து விட்டு மறுபத்தியம் 5 - நாள் ஆனபின் விளக்கெண்ணெய் இட்டு ஸ்நானம் செய்து இச்சாபத்தியமாக ஒரு வாரமிருந்து பின் எல்லாம் கூட்டிக் கொள்ளலாம். ஆனால் சில காலம் காரத்தை அதிகமாகக் குறைத்துக் கொள்ள வேண்டும். 3 - மாதம் வரையில் மதுபானம் பெண் போகம் ஆகாது. காலை மாலை அதிகச் சிரமப்படாமல் கொஞ்சந் தூரம் நடந்து வருதல் சாலச்சிறந்தது.

## 4. கவுசிகர் சௌபாக்கிய குழம்பு என்னும் மெழுகு

சரக்கு :—

| | |
|---|---|
| 1 கடுக்காய் | 7 கடுகு |
| 2 இந்துப்பு | 8 பொரித்த பெருங்காயம் |
| 3 பொரித்த வெங்காரம் | 9 சூதம் |
| 4 மனோசிலை | 10 திப்பிலி |
| 5 அரிதாரம் | 11 சீரகம் |
| 6 கடுரோகணி | 12 நாபி |

இவைகள் வகைக்கு வராகனெடை - 1

13 வாளம் „ 12

செய்பாகம் :—முதலில் வாளத்தைக் கிரமப்படி சுத்திசெய்து இளஞ்சூட்டில் வெதுப்பி வைத்துக்கொண்டு மற்றப் பன்னிரண்டு சரக்குகளில் சுத்திசெய்ய வேண்டியவற்றைச் சுத்தி செய்து நன்கு இடித்துச் சூரணம் செய்து

ஒருமிக்கக் கலந்து கல்வத்தில் போட்டு உத்தாமணி இலைச்சாறு விட்டு ஓர்நாள் கையோயாமல் அரைத்து மெழுகுபதமாக இருக்கும்போது ஐந்து வராகனெடை தென்னங் குடுக்கைக் கரியையும், ஐந்து வராகனெடை பனங்கருப்பட்டியையும் சேர்த்துத் தேங்காய்ப்பால்விட்டு மெழுகுபதமாக அரைத்து வழித்து வைத்துக் கொள்க.

**பிரயோகம் :—** தினம் ஒருவேளை காலைநேரத்தில் 2-குன்றி எடை கொடுக்க 5 - 6 முறை பேதியாகும். இன்றேல் தேகத்திடத்திற்கு ஏற்றவாறு அளவை அதிகப் படுத்தியும் பேதி அதிகமாயின் அளவைக் குறைத்தும் கொடுக்க வேண்டியது பண்டிதர்களின் கடமையாகும். இது பேதியாகும் மெழுகு ஆதலால் அடுத்து 3-தினத் திற்கு மேல் கொடுக்கக் கூடாது. தேகம் துர்ப்பலமா யிருப்பின் ஒன்றைவிட்டு ஒருநாள் 2 - 3 முறை பேதி யாகும்படி குறைந்த அளவில் கொடுத்து வருக இப்படி 3-முறை கொடுப்பது நலம்.

**தீரும் வியாதி :—** இந்த மெழுகினுல் தீராத வியாதி கிடையாது. கஷ்ட சாத்தியமென்று கைவிட்ட காலத்தில் எந்த நோயாய் இருந்தாலும் இந்த மெழுகை மூன்று நாள் கொடுத்து இரண்டொரு நாள் கழிந்தபின் நோய்க்கேற்ற எந்த மருந்தைக் கொடுத்தாலும் வசப்படும். இதைப் பண்டிதர்கள் கவனத்தில் வைக்க வேண்டும். சுருக்க மாகச் சில நோய்களுக்கு அனுபானம் அடியிற் காண்க.

சந்நி தோஷங்களில் நாவில் உண்டாகும் வெள்ளை யக்கரம், கருத்த அக்கரம், முள்ளெழுந்தோஷம் முதலிய வற்றிற்கு 1 - ½ குன்றி எடை நாவில் தேய்த்து வெந்நீர் அருந்தக் கொடுக்கவும்.

சந்நி, சுரம், குளிர்சுரம் முதலியவற்றிற்கு :—வெந்நீர், கடுக்காய் கியாழம், சுக்குக் கியாழம், சீரகக் கியாழம், ஏலம்

மிளகுக் கியாழம் இவற்றில் சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு அனுபானம் செய்து கொடுக்கவும்.

வயிற்றுவலி வயிற்று உப்பிசம் முதலியவற்றிற்கு:— கொன்றைக் கொழுந்தும் கடுக்காய்ப்பொடியும் கூட்டி யரைத்துச் சிற்றாமணக்கெண்ணெயிற் கலக்கி அதில் இந்த மெழுகை அனுபானம் செய்து கொடுக்கவும்.

இருமல், உளமாந்தை, வாந்தி முதலியவற்றிற்கு :— ஊஞ்சல் பட்டையை அரைத்து மோரில் கலக்கி அதில் மெழுகை அனுபானம் செய்து கொடுக்கவும்.

கக்கல், இருமல் முதலியவற்றிற்கு :—சிற்றாமணக் கெண்ணெயில் முலைப்பால் கூட்டிக் கலக்கி அதில் மெழுகை அனுபானம் செய்து கொடுக்கவும்.

குட்டம், விப்புருதிவாயு முதலியவற்றிக்கு :—பறங்கிச் சக்கை சூரணம் கூட்டிக் கொடுக்கவும்.

ஈளை, இருமல், இரைப்பு முதலியவற்றிற்கு :— ஆடா தோடை சிற்றரத்தை இவ்விரண்டையும் அரைத்துக் காய்ச்சிய பசுவின் பாலில் கரைத்துச் சிறிது சூடாக இருக்கும்போது பசுவின் வெண்ணெய் சிறிது கூட்டி அதில் இந்த மெழுகை அனுபானம்செய்து கொடுக்கவும்.

விப்புருதிநோய் பதின்மூன்றுக்கும் :— தூதுவளைச் சாற்றில் அனுபானம் செய்து கொடுக்கவும்.

சுவாசகாசத்திற்கு :—உசிலைப்பட்டையின் சாற்றில் அனுபானம் செய்து கொடுக்கவும்.

சத்தி குன்மத்திற்கு :—தகரை இலைச்சாற்றில் கொடுக்கவும்.

அஸ்தி குன்மத்திற்கு :—சிற்றாமணக்கெண்ணெயில் கொடுக்கவும்.

பித்த குன்மத்திற்கு :—புளியாரைச்சாற்றில் கொடுக்கவும்.

வாத குன்மத்திற்கு :—வல்லாரைச்சாற்றில் கொடுக்கவும்.

எரி குன்மத்திற்கு :—இளநீர் சீரகம் நெய் பால் கூட்டி அதனில் இம் மெழுகைக் கொடுக்கவும்.

வலி குன்மத்திற்கு :—சிற்றாமணக் கெண்ணெயிற் கொடுக்கவும்.

அண்டவாதத்திற்கு :—வெள்ளாட்டுப் பால் அல்லது வெள்ளாட்டு வெண்ணெயில் அனுபானம் செய்து கொடுக்கவும்.

சூலைவலி, எரிச்சல், குண்டிக்காய் நோய் முதலியவற்றிற்கு :—காய்ச்சிய ஆவின்பால் நெய் சர்க்கரை கூட்டி அதில் மெழுகை அனுபானம் செய்து கொடுக்கவும்.

குட்டரோகங்களுக்கு :—காய்ச்சிய பசுவின் நெய்யில் கற்கண்டைத் தூள்செய்து போட்டு அதில் இம் மெழுகை அனுபானம் செய்து கொடுக்கவும்.

சூதகவாயுவுக்கு :—சுக்குக் கியாழத்தில் சீரகப் பொடியைப் போட்டாவது அல்லது வெள்ளைப்பூண்டு, சுக்கு, மிளகு, சீரகம் கூட்டிச் செய்த கியாழத்திலாவது இந்த மெழுகைக் கொடுக்கவும்.

சூலை ரோகத்திற்கு :—பறங்கிச்சக்கை சூரணத்தில் நெய்விட்டுப் பிசரி அதில் இம்மெழுகை அனுபானம்செய்து கொடுக்கவும்.

மூலரோகத்திற்கு :—மூலைப்பால் சிற்றாமணக்கெண்ணெய்கூட்டி அதில் இம் மெழுகைக் கொடுக்கவும்.

மூலவாயுவுக்கு :—பால் நெய் மோர் முதலியவற்றில் கொடுக்கவும்.

இரத்த மூலத்திற்கு :—பன்றி நெய்யில் கொடுக்கவும்.

மூலக்கிராணிக்கு :—பசுவின் பால் நெய் இவற்றில் கொடுக்கவும்.

சீழ் மூலத்திற்கு :—செம்மறி ஆட்டுக் கொழுப்பு உருக்கின நெய்யில் அனுபானம் செய்து கொடுக்கவும்.

மூலத்தினுல் முக்கல், கடுப்பு, முளைவளர்தல், ஆசனம் தாமரைபூப்போல் விரிதல் முதலியவற்றிற்கு :—இந்த மெழுகைச் சீலையில் தடவி திரியாகச் சுருட்டிக் கொளுத்தி அதிலிருந்து வரும் புகையை ஆசன வாய்க்குக் காட்டவும்.

ஆண்குறியின் முனையில் வருகிற தாமரைச்சிலந்தி, பவுத்திரம் கண்டமாலை, அக்குள் சிலந்தி, தொண்டைச் சிலந்தி, தொப்புட்புண், மார்பு ஆணி, ஸ்திரீகள் தனத்தில் கிளைக்கும் புண், முதுகில் வரும்படியான பிளவை, அரையான், தொடைவாழை, புத்து, பாதத்தில் வரும்படியான மேகரணம், சதா கச்சையை அணிந்துள்ள ஆருதரணம் முதலியவற்றிற்கு:—இந்த மெழுகைச் சீலையில் தடவித் திரியாகச் சுருட்டிக் கொளுத்தி அதிலிருந்து கிளம்பும் புகையை நோயுள்ள இடத்தில் படும்படியாகச் செய்யவும்.

மூக்கு நீர்வடிதல், முகவாதம், பீநசம், மண்டையிடி, கபால சூலை முதலியவற்றிற்கு:—முன்போல் திரிசெய்து கொளுத்திப் புகையை நாசியினிடமாக உள்ளுக்குச் செலுத்தவும்.

நாப்புண், பல்லரணை, கன்னக்கிரந்தி, பல்வலி, தொண்டைப் புண் முதலியவற்றிற்கு.— முன்போல் புகையை வாயினிடமாக உள்ளுக்குச் செலுத்தவும்.

மலம் சலம் அடைத்து வேதனை மிகுந்தால்:—அரைக் கால்படி உத்தாமணியிலைச் சாற்றில் கொடுக்கவும் அல் லது தலைமயிர் சுட்ட சாம்பலில் கொடுக்கவும்.

கருங்குட்டம் கைகால் குறைதல் முதலியவற் றிற்கு:—கரு நொச்சியிலைச் சாற்றில் கொடுப்பதுமின்றி இந்த மெழுகைச் சிறிது சாற்றில் கரைத்து மேல்ரணத் திற்குப் போடவும்.

பலவிதக் குட்டத்திற்கு:—தென்னம் வெல்லத்தில் வைத்துக் கொடுக்கவும்

காமாலை, சோகை, மகோதரம், பாண்டு முதலியவற் றிற்கு:—ஆமணக்கெண்ணெயிற் சிறிது கோமயம் கூட்டி அதில் இம்மெழுகை அனுபானம் செய்து கொடுக்கவும்.

பலவித விஷங்களுக்கு:—கடுக்காய் பொடியைச் சிறிது ஆமணக்கெண்ணெயிற் கூட்டிக் கலந்து இம் மெழுகை அனுபானம் செய்து கொடுக்கவும்.

வலி, சன்னி, வாதரோகம் முதலியவற்றிற்கு:—தழு தாழைச் சாற்றில் கொடுக்கவும்.

சந்து சூலை, சர்வாங்கவாதம் முதலியவற்றிற்கு:— கழுதை நீரில் கொடுக்கவும்.

கடுரமான வாதரோகங்களுக்கு;—கழுதைச் சாணப் பாலில் கொடுக்கவும்.

சன்னி 13-க்கு இஞ்சிச்சாறு அல்லது சுக்குக் கியாழத் தில் கொடுக்கவும்.

விப்புருதி நான்கு வகைகள் தீர:—முருக்கிலைச் சாற் றில் கொடுக்கவும்.

வெறிநாய், எலி கடிகட்கு:—எருக்கிலைச்சாற்றில் கொடுக்கவும்.

நீர்வண்டு, பொன்வண்டு, ஆறுகால் வண்டு பூவண்டு முதலிய பல விஷங்களுக்கு:—எருக்கிலைச் சாற்றில் கொடுக்கவும்.

செம்மூக்கன், கொம்பேறி, வீரியன், மண்டலி முதலிய விஷங்களுக்கு:—பயறு அளவு மெழுகைக் கண்களுக்குக் கலிக்கந் தீட்டி எருக்கிலைச்சாற்றில் அனுபானம் செய்து கொடுக்கவும்.

நாகத்தின் விஷத்திற்கு:—முன்போல் கலிக்கமிட்டு உத்தாமணி இலைச்சாற்றில் கொடுக்கவும்.

இந்த மெழுகால் வயிற்றுவலி பேதிகண்டால்:—மோர் சாதம், கிராம்பு ஆவாரைப்பட்டைக் கியாழம் கொடுக்கவும்.

பத்தியம் :—நோயின் வன்மை மென்மைக் கேற்றவாறு கடும்பத்தியம், இச்சாபத்தியமாக இருத்தல் நன்று.

## 5. விஷாமிர்த மெழுகு

சரக்கு :—

| | |
|---|---|
| வாலைரசம் | கந்தகம் |
| அரிதாரம் | நிர்விஷம் |
| இந்துப்பு | கருஞ்சீரகம் |
| பொரித்த பெருங்காயம் | மனோசிலை |
| நாபி | நவாச்சாரம் |

இவைகள் வகைக்குப் பலம் 1

சுத்திசெய்த வாளம் ,, 10

**செய்பாகம்:**—மேற்கூறப்பட்ட பத்து சரக்குகளில் சுத்தி செய்ய வேண்டியவைகளைச் சுத்தி செய்தும், இடித்துச் சூரணம் செய்ய வேண்டியவற்றை நன்கு இடித்துச் சூரணம் செய்தும், ஒருமிக்க எல்லாச் சரக்குகளையும் கல்வத்தில் போட்டு உத்தாமணி இலைச் சாறுவிட்டு 2-3 சாமம் அரைத்து கல்வத்தோடு காயவிடவும். அப்பால் தேங்காய்ப்பால் விட்டு நெய் கக்காத பதமாகவும் மெழுகுபதமாகவும் இருக்கும்படி அரைத்து வழித்து வாயகன்ற சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :**—ஒரே வேளை காலை நேரத்தில் தேக திடத்திற்கு ஏற்றவாறு 1-1¼ மிளகு பிரமாணம் பனை வெல்லத்தில் வைத்துக் கொடுக்கவும். இதனுல் 4-5 முறை பேதியாகும். சரிவரப் பேதி யாகாவிடின் மறுநாள் அளவை அதிகப்படுத்திக் கொள்ளவும். பேதி அதிகமானுல் சிறிது குறைத்துக் கொள்ளவும். இந்த மெழுகைத் தொடர்ச்சியாக மூன்று நாள் கொடுக்க வேண்டும்.

**குறிப்பு :**—பாம்பு கடியால் மெய்ம்மறந்து சுவரணை அற்று இருக்கும்போது உச்சியைச்சிறிது கீறி இந்த மெழுகைத் தேய்க்கவும். முலைப்பாலில் உரைத்துக் கண்களுக்குக் கலிக்க மிடவும். சிறிது தெளிவடைந்த பின் இம் மெழுகை உள்ளுக்குக் கொடுக்கவும்.

**தீரும் வியாதி :**—சர்வ வாதம், பாம்புகடி, நாய்கடி எலிக்கடி, பூரான்கடி, சிறுபாம்புகடி, வண்டு, குளவி முதலியவற்றின் விஷம், முதலியவைகள் குணமாகும். இந்த மெழுகை ஏறத்தாழ கௌசிகர் மெழுகுபோல் உபயோகப்படுத்தலாம்.

**பத்தியம் :**—புளி தள்ளி இச்சாபத்தியமாக இருத்தல் வேண்டும்.

## 6. வாலைரச மெழுகு

**சரக்கும் செய்பாகமும் :—** ஒரு வாயகன்ற சட்டியில் நான்கு விரற்கடை உயரம் மணல் கொட்டிப் பரப்பி நடுவில் ஒரு பெரிய வில்வப்பழம் அளவுள்ள புதிய குடுவையை ஒரு விரற்கடை ஆழம் பதியும்படி நடுவில் அழுத்தி அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரிக்கவும். அத்தருணம் குடுவையில் ஒரு பலம் வாலைரசத்தை விட்டுச் சூடு எட்டிய சமயம் ஆறு பலம் சுத்தி செய்த கந்தகத்தைப் பொடி செய்து வைத்துக்கொண்டு கொஞ்சங் கொஞ்சமாக குடுவைக்குள் தூவி வருக. இப்படிக் கைவசமுள்ள எல்லாக் கந்தகப் பொடியையும் போட்டபின் உருகி ரசத்தின்மேல் கவர்ந்து கொள்ளும். இந்தக் குடுவையை நன்ருய் ஆற விட்டுக் குடுவையின் அடிப்பாகத்தில் கம்பி ஆணி கொண்டு துவாரம் செய்யக் கீழ்த் தங்கியுள்ள ரசமெல்லாம் வெளியாகும். இதைச் சேதப்படாமல் எடுத்து வைத்துக் கொள்க. அப்பால் குடுவையை உடைத்து உள்ளே சோதித்துப் பார்த்து அங்கு மிங்கும் கந்தகத்தின் இடையில் சிக்கியுள்ள ரசத்தைச் சேதப்படாமல் சேகரித்து எல்லா ரசத்தையும் எடை போட்டு அந்த எடைக்கு மூன்று எடை விடதாரிப்பட்டைச் சூரணம் கூட்டிக் கல்வத்தில் போட்டுப் பவழமல்லி இலைச்சாறு கொஞ்சங் கொஞ்சமாக விட்டு அரைக்கவும். இப்படி ரசத்தின் பளபளப்பு மாறிக் கறுப்பு நிறமாக மாறுதல் அடையும் வரையில் நான்கு சாமத்திற்குக் குறையாமல அரைத்து வில்லை தட்டி நிழலில் காய வைக்கவும். சில சந்தர்ப்பம் அரைப்புக் குறைவாய் தளுக்குத் தோற்றப்படின் 2 - நாள் கூட அதிகமாக அரைப்பது அவசியமாகும். இவ்வாறு உலர்த்தி எடுத்த அடையைக் கல்வத்தில் போட்டுச் சுயமான தேன் விட்டு நான்கு சாமம் மெழுகு பதத்திலேயே அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—வேண்டும்போது இந்த மெழுகைத் தேக திடத்திற்கு ஏற்றவாறு வேளைக்கு 1-2 குன்றிப் பிரமாணம் வெல்லத்தில் வைத்து அந்தி சந்தி 3 - 5 நாள் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—வாதரோகம் கைகால், பிடிப்பு, கணுச்சூலை, கீல்களிலுண்டான வீக்கம். குடைச்சல், மேக ரணம், தாதுபலவீனம் முதலியவைகள் குணமாகும்.

பத்தியம் :—இச்சா பத்தியமாக அன்னங் கொள்வதில் கூடிய வரையிலும் காரத்தைக் குறைத்துக் கொள்ள வேண்டும். பசுவின் பால் நெய் இவற்றை தாராளமாகச் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

## 7. திரிசூத மெழுகு

சரக்கு :—

| | |
|---|---|
| 1 வீரம் | 5 இலிங்கம் |
| 2 பூரம் | 6 கிராம்பு |
| 3 ஏலம் | 7 சுக்கு |
| 4 வாளம் | |

இவைகள் வகைக்கு வராகனெடை - 1

8 சித்திரமூலம் வேர்ப்பட்டை பலம் - 1

செய்பாகம் :—மேற் கூறப்பட்ட எட்டுச் சரக்குகளில் சுத்தி செய்ய வேண்டியவற்றைச் சுத்தி செய்தும் இடித்துச் சூரணம் செய்ய வேண்டியவைகளைச் சூரணித்தும் ஒருமிக்கக் கல்வத்தில் போட்டு தேன்விட்டு 2-3 சாமம் நன்கு அரைத்து மெழுகுபதத்தில் வழித்து வாயகன்ற சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :**—இந்த மெழுகில் வேளைக்கு 1 - 1½ மிளகு அளவு * காலை மாலை பனவெல்லத்தில் வைத்து 5-நாள் கொடுக்கவும்.

**தீரும் வியாதி :**—வாயு, சந்நி, பக்கசூலை குணமாகும். இந்த மெழுகை முன்போல் ஏழுநாள் கொடுக்க மேகவாயு, விரைவாதம், தேகவலி, இடுப்புவலி, ஜிக்குவா வாதம், கபாலசூலை குணமாகும். இப்படியே நீடித்துக் கொடுக்க நாட்பட்ட பாரிசவாதம் குணமாகும். இந்த மெழுகை 3 - 4 மிளகளவு பனைவெல்லத்தில் வைத்துத் தினந்தோறும் காலையில் ஒரே வேளையாகக் கொடுத்துப் பசுவின்பாலில் எலுமிச்சம்பழ ரசம்விட்டு முறியாததற்கு முன் அருந்தக் கொடுக்கவும். இப்படி ஏழுநாள் கொடுக்க மகோதரம் குணமாகும். இரண்டு மிளகளவு வெல்லத்தில் வைத்துக் காலையில் ஒருவேளை கொடுக்க வயிற்றுப் பொருமல் தீரும். இதை மூன்றுநாள் கொடுக்க வயிற்று நோய், பிரசவசன்னி, அழுக்குத் தங்குதலாலுண்டான சூதகசன்னி, தமரகவாயு, மேல்சுவாசம் குணமாகும். இந்த மெழுகைக் கடுகு, பயறு அளவு பாலடையின் முனையில் வைத்து முலைப்பால் விட்டுக் கை குழந்தைகட்குப் புகட்ட அள்ளுமாந்தம், கர்ப்பவாயு, வலி முதலியவைகள் குணமாகும். நோய் குணப்பட்டு இரண்டொரு நாள் ஆனபின் ஓமத்தைப் பால்விட்டு அரைத்துச் சிரசிற்கு இட்டு ஸ்நானம் செய்து, அன்று இரவு படுக்கைக்குப் போகும்போது அரைப்பலம் மிளகை ஒரு பாண்டத்தில் போட்டுக் கருக்கி ¼-படி சலம்விட்டு ⅛-அல்லது வீசம்படியாகச் சுண்டக் காய்ச்சி வடிகட்டிச் சிறிது சர்க்கரை கூட்டிச் சாப்பிடவும். பின்பு இஷ்ட போஜனம்.

---

* மலப்போக்கு அதிகமாக இருப்பின், ஒருவேளை மெழுகே போதுமானது.

பத்தியம் :—மருந்து சாப்பிடும்போது அத்திப்பிஞ்சு, முருங்கைப்பிஞ்சு, துவரம்பருப்பு, பச்சைப்பயறு, மிளகு, சீரகம், வெள்ளாட்டு இறைச்சி, நெய் முதலியவைகள் கூட்டிக் கொள்ளவும். பூண்டு, கடுகு, நல்லெண்ணெய், புளி முதலியவைகள் முக்கியமாக ஆகாது. பாலுண்ணும் குழந்தைகட்குக் கொடுக்கும்போது தாய் இப்பத்தியத்தை அனுசரிக்க வேண்டும்.

## 8. முசாம்பர மெழுகு

சரக்கு :—

| | | |
|---|---|---|
| கரியபோளம் | வராகனெடை | 1 |
| பாலேந்திரபோளம் | ,, | 1 |
| மிளகு | பலம் | $\frac{1}{4}$ |
| கறிமஞ்சள் | ,, | $\frac{1}{4}$ |
| கருஞ்சீரகம் | ,, | 1 |
| கடுகு | ,, | 1 |
| பனைவெல்லம் | ,, | 4 |

செய்பாகம் :—பனைவெல்லம் நீங்கலாக மற்றச் சரக்குகளை ஒரு மட்பாண்டத்தில் போட்டு அடுப்பில் வைத்து இளஞ்சூட்டில் கைவிரல் தாளக்கூடிய சூட்டில் வெதுப்பி ஆறவிட்டு இடித்துக் கல்வத்தில் போட்டு அதனுடன் பனைவெல்லம் கூட்டி அரைக்கவும். மெழுகு பதத்திற்குப் போதிய பசை ஏற்படாத சமயம் நல்ல தேனைத் துளித் துளியாக விட்டு மெழுகு பதத்திலேயே இரண்டொரு மணிநேரம் அரைத்து வழித்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—வேளைக்கு இரண்டு கடலைப் பிரமாணம் காலை மாலை 5-நாள் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—ஸ்திரீகளுக்கு மாத விலக்குக் காலத்தில் உண்டாகும் வயிற்றுவலி, அழுக்குச் சரியாக வெளிக்காணுமை குணமாகும். இந்தப் பிரயோகம் 5-மாதம் வரையில் வீட்டு விலக்கத்தில் கொடுக்கவும். சந்தான சித்தியுண்டாகும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 9. கஸ்தூரி மெழுகு

சரக்கு :—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கஸ்தூரி | வராகனெடை | $\frac{1}{4}$ | கோரோசனை | வராகனெடை | $\frac{1}{2}$ |
| குங்குமப்பூ | ,, | 1 | சாம்பிராணிப்பதங்கம் | ,, | $\frac{3}{4}$ |
| பச்சைக்கற்பூரம் | ,, | $\frac{1}{2}$ | ரசசெந்தூரம் | ,, | 1 |
| புனுகு | ,, | $\frac{1}{8}$ | சவ்வாது | ,, | $\frac{1}{8}$ |
| கிராம்பு | ,, | $\frac{1}{2}$ | திப்பிலி | ,, | $\frac{1}{2}$ |
| மிளகு | ,, | $\frac{1}{2}$ | அரத்தை | ,, | $\frac{1}{2}$ |
| கண்டுபாரங்கி | ,, | $\frac{1}{2}$ | தாளிசப்பத்திரி | ,, | $\frac{1}{2}$ |
| அதிமதுரம் | ,, | $\frac{1}{2}$ | அக்கராகாரம் | ,, | $\frac{1}{2}$ |

செய்பாகம் :—மேற்கூறப்பட்ட பதினாறு சரக்குகளில் சூரணிக்க வேண்டியவற்றைச் சூரணித்து மற்றச் சரக்குகளுடன் கூட்டிக் கல்வத்தில் போட்டு சண்பகப்பூ, ஜடாமாஞ்சி, சந்தனத்தூள் வகைக்கு $\frac{1}{2}$-வராகனெடையாகக் கூட்டிக் கியாழமிட்டு வடித்து அதனைக் கொஞ்சங் கொஞ்சமாக விட்டு இரண்டு சாமம் அரைத்து கல்வத்தோடு காயவிடுக. அப்பால் நன்றாய்ச் சுரண்டித் தேன் விட்டு மெழுகுபதமாக அரைத்து வழித்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—வேளைக்குப் பயறு, உளுந்துப் பிரமாணம் தினம் இருவேளை கொடுக்கவும். அதிக நாள் கொடுக்கக் கூடாது. அதிக உஷ்ணத்தை யுண்டாக்கும்.

**தீரும் வியாதி** :—சன்னி, சுரம், சயித்தியம் முதலிய சீதள சம்பந்தமான பல ரோகங்கள் குணமாகும்.

**பத்தியம்** ;—இச்சாபத்தியம்.

## 10. இராமபாண மெழுகு

**சரக்கு** :—

| | | | |
|---|---|---|---|
| 1 | இந்துப்பு | கழஞ்சு | 3 |
| 2 | சுத்தி வாளம் | ,, | 6 |
| 3 | பொரித்த பெருங்காயம் | ,, | 1 |
| 4 | சுத்தி வீரம் | ,, | 1 |

**செய்பாகம்** :—மேற்கூறப்பட்ட நான்கு சரக்குகளைக் கல்வத்திலிட்டு நன்கு அரைத்து அதனை ஓர் முற்றின தேங்காயின் குடுமியை நீக்கிக் கண் திறந்து அதிலுள்ள நீரைப் போக்கி உட்செலுத்தி வாய்க்கு மூங்கில் ஆப்பிட்டு மேலே 5-6 மண் சீலை செய்து ஈரம் வற்றச் சாம்பலில் புரட்டி 7-8 வறட்டியில் புட மிடவும். தேங்காய் ஓடு வெடித்து வாசனை கிளம்பும்போது புடத்திலிருந்து தேங்காயை எடுத்து ஆறவிட்டுக் கொட்டாங்கச்சியை நீக்கித் தேங்காய் உட்பட மருந்தை யெல்லாம் ஒரு சுத்தமான தட்டை அம்மிக்கல்லில் வைத்து மெழுகுபோல் அரைத்துச் சேதப்படாமல் வழித்து மீண்டும் கல்வத்திலிட்டு மிருதுவாக இருக்கும் பொருட்டு நன்கு அரைத்து வாயகன்ற சீசா அல்லது கோப்பையில் அடக்கம் செய்து மேல் மூடியிட்டுப் பத்திரப்படுத்துக.

**பிரயோகம்** :—தினம் ஒருவேளை காலை நேரத்தில் ஒரு சிறு சுண்டைக்காயளவு பனைவெல்லத்தில் வைத்துக் கொடுக்கவும். இப்படித் தொடர்ச்சியாய் மூன்று நாள் கொடுக்க வேண்டும். இதில் பேதி அதிகமாயின் மறுமுறை சிறிது அளவைக் குறைத்தும், பேதி சரிவர 2-3

தடவைக்கு ஆகவில்லை யென்று உணரின், அளவைச் சிறிது அதிகப்படுத்தியும் கொடுப்பது பண்டிதர்களின் கடமையாகும்.

**தீரும் வியாதி :**—பாரிசவாதம், முகவாதம், கைகால் பிடிப்பு முதலிய பல வாத ரோகங்களும், மேகவாயு சம்பந்தப்பட்ட குடைச்சல், கணுவீக்கம், கணுச்சூலை முதலியவைகளும் குணமாகும்.

**பத்தியம் :**—புளிப்பு கைப்பு நீக்கி இச்சா பத்தியமாக இருத்தல் வேண்டும்.

## 11. கெந்தக மெழுகு

ஒரு பலம் கெந்தகத்தைக் கிரமப்படி ஏதேனும் ஒரு பாகப்படி சுத்திசெய்து கல்வத்தில் போட்டு வெள்ளை வெங்காயச் சாறுவிட்டு ஏழுநாள் அரைக்கவும். அதன் பின் சுண்ணும்பு நீக்கிய இஞ்சிச்சாறு விட்டு ஏழு நாள் அரைக்கவும். இது மெழுகுபதத்திற்கு வந்த சமயம் 1 - 1½ பலம் நல்ல வெல்லத்தைக் கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டு அரைத்து மெழுகுபதத்திற்கு வந்தவுடன் வழித்து வாயகன்ற சீசாவிலாவது கோப்பையிலாவது போட்டு வாய் மூடிப் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :**—இந்த மெழுகில் வேளைக்குக் கடலைப் பிரமாணம் அந்தி சந்தி 10 - 15 நாள கொடுக்கவும்.

**தீரும் வியாதி :**—புண், சொறி, சிரங்கு, கரப்பான், படை கிரந்தி, மேகப்புண் முதலிய தோல் சம்பந்தமான பல பிணிகள் நீங்கும்.

**பத்தியம் :**—புளிப்பு கைப்பு நீக்கி இச்சாபத்தியமாக அன்னம் கொள்ள வேண்டும்.

## 12. அம்பர் மெழுகு

### யூனானி முறை

சரக்கு :—

| | | |
|---|---|---|
| தும்மட்டிக்காய் (உலர்ந்த சதை) | தோலா | 3¾ |
| சக்மோனியா | ,, | 3¾ |
| ஷர்பியூன் | ,, | 3¾ |
| பெஸ்பாயிஸ் | ,, | 1¾ |
| அப்திமூன் | ,, | 1¾ |
| காட்டுவெங்காயம் (உலர்ந்தது) | ,, | 3¾ |
| கடுகுரோகணி | ,, | 3¾ |
| காரேகூன் | ,, | 3¾ |
| கமா தர்பூஜ் | ,, | 1¾ |
| பெரிய லவங்கப்பட்டை | ,, | 1¾ |
| தவனம் (உலர்ந்தது) | வராகனெடை | 4 |
| ஜராவந்தேலம்பி | ,, | 4 |
| ஜராவந்தேசோட்டி | ,, | 4 |
| வெண்மிளகு | ,, | 4 |
| தால் சின்னி | ,, | 4 |
| கறுப்பு மிளகு | ,, | 4 |
| ஜூன்னு | ,, | 4 |
| திப்பிலி | ,, | 4 |
| ஜாவுஷீர் | ,, | 4 |
| பித்தராசாலியூம் | ,, | 4 |
| கஸ்தூரி | ,, | ¾ |
| அம்பர் | ,, | ¾ |

**செய்பாகம் :**—இவைகளில் இடித்துச் சூரணிக்க வேண்டியவைகளை இடித்துச் சூரணித்துக் குழம்பாக இருக்கும் சரக்குகளுடன் ஒன்று சேர்த்துப் பிசரி இவை களின் மொத்த எடைக்கு மூன்று பங்குத் தேன் கூட்டி

மெழுகுபதத்திற்கு இருக்கும்படி அரைக்கவும். ஒரு சமயம் தேனின் திட்டம் குறைத்துக் கொள்வது முண்டு. சில சமயம் சிறிது அதிகப்படுத்திக் கொள்வது முண்டு. ஆகையால் பண்டிதர்கள் மெழுகுபதமாக அரைத்துக் கொள்வது கடமையாகும்.

பிரயோகம் :—தினம் ஒருவேளை ⅛-ரூபாய் எடை மெழுகை இரண்டு மூன்று பாகமாகப் பங்கிட்டு குல்கந் திற்குள்வைத்து ஒவ்வொன்றையும் விழுங்கும்படி கவனிக் கவும். இந்த மருந்திற்குக் கசப்பு சுவையுடைமையால் இந்த அனுபானத்தைக் கூறப்பட்டது. உடனே கறந்த பசுவின் பாலைச் சிறிது அருந்தும்படி கொடுக்கவும். இப்படி 3-5 நாள் கொடுக்க 2-3 தடவை பேதியாகும். அளவானது மலச்சிக்கல் இல்லாமல் 2-தடவை மலம் போனாலும் போதுமானது.

தீரும் வியாதி :—சர்வ வாதம், மூளை சம்பந்தமான வியாதிகள், பட்சவாதம், சர்ச்சுவாயு, ஜிக்வாவாதம், முக வாதம், மார்புநோய், இடுப்புவலி, கல்லீரலைப்பற்றிய பிணி தீரும். குணமேற்படாவிட்டால் ஒருவாரம் விட்டு மறு முறை கொடுக்க உடனே குணம் ஏற்படும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 13. பச்சைக்கற்பூர மெழுகு

சரக்கு :—

| | |
|---|---|
| வீரம் | பலம் ¼ |
| கந்தகம் | ,, ½ |
| பச்சைக்கற்பூரம் | தோலா ⅛ |

செய்பாகம் :—இங்குக் கூறப்பட்ட மூன்று சரக்கு களில் வீரத்துடன் கந்தகம் கூட்டிக் கல்வத்தில் போட்டு

மிருதுவாகும்படி ஒரு மணி நேரம் அரைத்து நன்ருய் உற வானபதத்தில் * 5-அவுன்ஸ் பசுவின் வெண்ணெய் கூட்டி 3-மணி நேரம் அரைத்து எல்லாம் நன்ருக உறவான சமயம் சிறிது சலம் விட்டு ½-மணி நேரம் அரைத்துக் கல்வம் நிறைய சலம்விட்டு மூங்கிற் குச்சியினுல் கிளறிக் கொடுத்து நன்ருய்த் தெளியும் வரையில் விட்டுவைத்துச் சலத்தை வடித்துவிடவும். மீண்டும் சிறிது சலம்விட்டு ½-மணி நேரம் அரைத்துக் கல்வம் நிறைபச் சலம்விட்டு மூங்கிற் குச்சியினுல் கிளறிக் கொடுத்து நன்ருய்த் தெளிந்தபின் சலத்தை வடித்துவிடவும். இவ்வாறு 10-முறை அரைத்து அரைத்துச் சலம்விட்டுக் கலக்கித் தெளியவிட்டு வடித்தபின் சிறிதும் சலம் இல்லாமல் கையால் உருட்டி எடுத்து மீண்டும் கல்வத்தில் போட்டுப் பச்சைக் கற்பூரம் கூட்டி அரைமணி நேரம் கலக்க அரைத்து வாயகன்ற சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :**—இந்த மெழுகில் பெரியவர்களுக்குப் பட்டாணி அளவாகத் தினம் இருவேளை சர்க்கரையில் புரட்டிக் கொடுக்கவும். குழந்தைகட்கு உளுந்து அல்லது மிளகு அளவு தினம் இருவேளை சர்க்கரையைப் புரட்டிக் கொடுக்கவும்.

**தீரும் வியாதி :**—குழந்தைகளுக்குக் காணும் வலி, இளம்பிள்ளை வாதம் குணமாகும்.

பெரியவர்களுக்குக் காணும் பாரிசவாதம், உதறு வாயு, வலி, மூர்ச்சை குணமாகும்.

கப சம்பந்தத்தினுல் பெரியவர்களுக்கும், குழந்தைகளுக்கும் நேரிடும் பல ரோகங்களுக்குக் கொடுக்கலாம்.

**பத்தியம் :**—புளி தள்ளி இச்சாபத்தியம்.

---

* 1 அவுன்ஸ் என்பது 2½-ரூபாய் எடை.

## 14. கற்பூர மெழுகு

**சரக்கு :—**

| | | |
|---|---|---|
| மாதுளம் வேர்ப்பட்டை | பலம் | 2 |
| வால்மிளகு | ,, | 2 |
| கற்பூரம் | ,, | 2 |
| கரும்பு வெல்லம் | ,, | 8 |
| கிராம்பு | ,, | 2 |

**செய்பாகம் :—**ஏழு எலுமிச்சம்பழத்திலிருந்து சாறு பிழிந்து ஒரு பழகின மண்ஞேட்டிலிட்டு அதில் கற்பூரத்தைப் பொடி செய்து போட்டு அடுப்பில் வைத்துச் சிறிது எரித்துச் சுண்டிக் குழம்பு பதம் வருஞ்சமயம் ஆற விட்டு வழித்து ஒரு சுத்தமான கல்வத்தில் போட்டு வெல்லம் நீங்கலாகச் சூரணிக்க வேண்டிய மூன்று சரக்குகளேயும் சூரணித்துப் போட்டு மெழுகுபதம் வரும்படி நன்கு அரைக்கவும். இம் மருந்து வறட்சி கண்டிருப்பின் கொஞ்சங் கொஞ்சமாக வெல்லத்தைக் கூட்டி அரைக்கவும். நல்ல மெழுகு ஆகும். இதை வழித்து வாயகன்ற சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம்:—**இந்த மெழுகில் வேளைக்கு 2 - 3 குன்றி அளவு தினம் இருவேளை கொடுத்து வருக.

**தீரும் வியாதி :—**ஜலதோஷம், சயித்தியம், நீர்ப் பீநசம், தும்மல், பசியின்மை, புளியேப்பம், தலைவலி முதலியவைகளும் சீதள சம்பந்தமான பல பிணிகளும் குணமாகும்.

**பத்தியம் :—**இச்சாபத்தியம் சீதள பண்டங்களை நீக்கி அன்னங் கொள்ளவும்.

## 15. கெந்தக மெழுகு

### (வேறு முறை)

பேயம் வாழைப்பழம் 100-கொண்டுவந்து மேற்றேல் நீக்கிப் பச்சை அரிசி நெல் உமியைப் போட்டுப் பிசைந்து பிசைந்து இளகின சமயம் தளர்ச்சியாக மெல்லிய சீலையில் முடிச்சுக் கட்டி தொங்கவிடச் சலம் சொட்டும். அடியில் ஒரு பாண்டத்தை வைத்துச் சேகரித்துக் கொள்ளவும். அல்லது விலவிலத்த கண்களையுடைய ஒரு உரப்பான சீலையைத் தேடி அதனிலிட்டுப் பிழிந்தாவது எடுத்துக் கொள்க. சுத்திசெய்த நான்குபலம் நெல்லிக்காய்க் கந்தகத்தைக் கல்வத்தில் போட்டு அப்பட்டமான தேங்காய்ப் பால் விட்டு 2-சாமம் மெழுகுபதத்தில் அரைத்துச் சுத்த சலம் விட்டுப் பிசைந்து பிசைந்து ஏழுமுறை அலம்பி எடுக்கவும். அப்பால் ஒரு பழகின வாயகன்ற மட்பாண்டத்தில் வாழைப்பழத்தின் சாறுவிட்டு அடுப்பில் வைத்துச் சிறுக எரித்து கிளறிக் கொடுத்துக் கொண்டு வர மெழுகு போலாகும். அப்போது அலம்பி வைத்துள்ள கந்தகத்தைக் கூட்டிக் கிளறிக் கொடுத்து யாவும் உறவாகி மெழுகுபதமாக இருக்கும்போது வழித்து ஆறவிட்டு வாயகன்ற கோப்பையில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—** வேளைக்கு இந்த மெழுகை 1 - 1½ குன்றி அளவு தினம் 2-வேளை சர்க்கரையில் கொடுக்கவும். ஒரு முறை 3-அல்லது 5-நாள் போதுமானது.

**தீரும் வியாதி :—** படர்தாமரை, சொறி, சிரங்கு மேகரணம் இவைகள் தீரும்.

**பத்தியம் :—** இச்சாபத்தியமாகப் புளி தள்ளி நெய் பால் மோர் அதிகம் சேர்த்துக் கொள்ளவும். இன்றேல் சரீரத்தில் நமைச்சல் உண்டாகும்.

## 16. சார மெழுகு

சரக்கு :—

| | | |
|---|---|---|
| சாரம் | பலம் | 3 |
| கொம்புக்கள்ளி மரப்பால் | ,, | 1 |
| சுத்தி வாளம் | ,, | 1 |
| சிற்ருமணக்குப் பருப்பு | ,, | 3 |

செய்பாகம் :—முதலில் சாரத்தைக் கல்வத்தில் போட்டுக் கொம்புக்கள்ளிப் பால் விட்டு அரைத்து அதன்பின் வாளமும் சிற்ருமணக்குப் பருப்பும் கூட்டி நன்கு அரைத்து மெழுகுபதத்தில் வழித்து வாயகன்ற புட்டியில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—தேக திடத்திற்கு ஏற்றவாறு 1 - 2 மிளகுப் பிரமாணம் பனைவெல்லத்தில் வைத்துக் காலை நேரத்தில் கொடுக்க 7 - 8 தடவை பேதியாகும். இந்த மெழுகால் பேதி அதிகமாயின் மறுநாள் அளவைக் குறைத்துக் கொள்க. பேதி சரிவர ஆகாவிடின் சிறிது அளவை அதிகப்படுத்திக் கொள்க.

தீரும் வியாதி :—இப்படிப் பேதி ஆவதினல் வாத நீரை வெளிப்படுத்தி கால்வீக்கம், அண்டவாதம், வயிற்றி லுள்ள கட்டி முதலியவைகளைக் கரைத்துவிடும். இன்னும் இந்த மெழுகு பாண்டு மகோதரம், சூதகவாயு முதலிய ரோகத்திற்கு அதிக நன்மையைத் தரும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 17. மூசாம்பர மெழுகு (வேறு முறை)

சரக்கு :—

| | | |
|---|---|---|
| அரபி மூசாம்பரம் | பலம் | ½ |
| இலவங்கப்பட்டைச் சூரணம் | ,, | ½ |
| சிவ்க்க வறுத்த அன்னபேதி | ,, | ½ |

**செய்பாகம் :—** இந்த மூன்று சரக்குகளையும் கல்வத்தில் போட்டு அப்பட்டமான தேன் துளித்துளியாகவிட்டு மெழுகுப் பதத்திலேயே ஒரு மணிநேரம் அரைத்து வாய கன்ற கோப்பையில் வழித்துப் போட்டு வாய்மூடி இட்டு வைத்துக்கொள்க.

**பிரயோகம் :—** இந்த மெழுகில் வேளைக்கு மலைத்துவரை அளவு காலை மாலை கொடுக்கவும். இந்த மெழுகை ஐந்து வேளைக்குமேல் கொடுக்க வேண்டியது அவசியம் ஏற்படாது.

**தீரும் வியாதி :—** சூதக வாயுவினால் வீட்டு விலக்கம் மாதந்தோறும் வராமல் தடைப்பட்டு இருந்தால் அந்தச் சமயத்தில் வேளைக்கு மலைத்துவரைப் பிரமாணம் காலை மாலையாக 5-வேளை கொடுப்பதற்குள் வீட்டு விலக்கம் ஏற்படும். அப்படி ஏற்படாவிடின் மருந்தை நிறுத்தி விடுக. எவ்விதத்திலும் மருந்துவிட்ட ஒரு வாரத்திற்குள் மாதவிடாய் காணும்.

ஸ்திரீகளுக்குப் பொதுவாக வீட்டு விலக்கம் வரும் போது வயிற்றுவலி மிகுந்திருப்பின் தினந்தோறும் காலை நேரத்தில் ஒரு வேளையாக மூன்றுநாள் கொடுக்க அச் சூதக வாயுவினால் ஏற்பட்ட வயிற்றுவலி நீங்கும். இன்னும் இந்தச் சிகிச்சையினால் கர்ப்பாசயத்தில் உள்ள கிருமிகள் சாகும். புத்திர சந்தானமும் உடனே சித்திக்கும்.

## 18. கஸ்தூரி மெழுகு

சரக்கு :—

| | |
|---|---|
| கஸ்தூரி | குங்குமப்பூ |
| கோரோசனை | பச்சைக்கற்பூரம் |
| ஜூன்னு | ஒட்டைகோரோசனை |
| கடுக்காய் | சிற்றரத்தை |

சுக்கு
வெண்மிளகு
அக்கராகாரம்
கோஷ்டம்
நாயுருவிச்சாம்பல்
முக்காவேளைச்சாம்பல்
திப்பிலி
அதிமதுரம்
ஜாதிப்பத்திரி
கருஞ்சீரகம்
கண்டங்கத்திரிச்சாம்பல்

இவைகள் வகைக்கு வராகனெடை - ½.

செய்பாகம் :—இவற்றுள் சூரணிக்க வேண்டியவை களைச் சூரணித்து மற்றச் சரக்குகளுடன் கூட்டிக் கல்வத் தில் போட்டு இஞ்சிச்சாறு விட்டு இரண்டு சாமம் அரைத்து நன்றாய் உலரவிட்டு அப்பட்டமான தேன்விட்டு மெழுகுபதமாக அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்த மெழுகைக் குழந்தைகளுக்குப் பயறு, உளுந்தளவாகவும், பெரியவர்களுக்கு மிளகு குன்றி அளவாகவும், தினம் இருவேளை முலைப்பால் தேன்போன்ற அனுபானங்களில் 2-3-நாள் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—சுரம், சந்நி, தலைவலி, சயித்தியம், தேகக்குடைச்சல், சூதகசந்நி, சுகசந்நி போன்ற பல பிணி கள் குணமாகும்.

பத்தியம் :—ரோகத்திற்கு ஏற்றவாறு ஆகாரம் கொடுத்தல் வேண்டும்.

## 19. அமிர்த நந்தி மெழுகு

(1) ஒரு மட்பாண்டத்தில் எருமைச்சாணியையும் புளியம் இலையையும் போட்டு 1-1½-படித் தண்ணீர்விட் டுக் கரைத்து அதில் 40-சேங்கொட்டையைப் போட்டு நீர் சுண்ட எரித்துத் தண்ணீர் விட்டு அலம்பிக் குமிழ் நீக்கி ஒவ்வொன்றையும் நான்கு துண்டுகளாகப் பிளந்து வைத்

துக்கொள்க. அப்பால் ஒரு இரும்புக்கடாயில் 12-ரூபாய் எடை பசுவின் நெய்யைவிட்டு அடுப்பில் வைத்துச் சேராங்கொட்டைத் துண்டுகளைப் போட்டுச் சிறு தீயாக எரித்துக் கொட்டைகளை இரும்புக் குச்சி கொண்டு கிள றிக் கொடுத்துக்கொண்டு வரக் கொட்டையிலுள்ள தைலம் எல்லாம் நெய்யினிடமாகக் கக்கிக் கொட்டைகள் இலேசாக மிதக்கும். அப்போது நெய் சிதறுமாகையால் சிறிது தூரத்தில் இருந்துகொண்டு ஜாக்கிரதையாகச் செய்யவும். இந்தக்கொட்டைகளை ஒரு கல்வத்தில் போட்டு மெழுகுவண்ணம் அரைக்கவும். மெழுகு ஆகப் போதிய திரவம் இல்லாவிட்டால் இதைப்போட்டுக் காய்ச்சிய நெய் யில் சிறிதுவிட்டு அரைக்கவும். மிகுதி நெய் இருப்பின் ஜாக்கிரதையாக வைத்துக்கொள்க.

(2) ஒரு மட்பாண்டத்தில் நாவல்மரத்தின் இலை யைப் போட்டுத் தண்ணீர்விட்டு அதனில் ¼-பலம் எட்டிக் கொட்டையைப் போட்டு நீர் சுண்ட எரித்துத் தோல்நீக்கி இரண்டிரண்டு துண்டாகப் பிளந்து அதிலுள்ள முளைகளை எடுத்துவிடவும். அப்பால் 4-ரூபாய் எடை பசுவின் நெய்யை விட்டு அடுப்பில் வைத்துக் கொட்டைகளைப் போட்டுச் சிறு தீயாக எரித்துப் பொன்மேனியாக வரும் போது கொட்டைகளை எடுத்துக் கல்வத்தில் போட்டு அதிலிருந்து கக்கிய நெய்யைவிட்டு மெழுகுவண்ணம் அரைக்கவும். இதில் நெய் மிகுதிப்பட்டால் எடுத்து வைத்துக் கொள்ளவும்.

(3) ஒரு படி பசுவின் பாலில் 4-பலம் பறங்கிச்சக்கை யைத் துண்டு துண்டாக நறுக்கிப்போட்டு நன்றாய் வேக வைத்துத் தண்ணீர்விட்டு அலம்பி எடுத்து உலர்த்தி இடித்துச் சூரணம் செய்துகொள்க.

(4) மயில்துத்தம், பால்துத்தம், வீரம், ரசம், பூரம், இலிங்கம், ரசசெந்தூரம், வெண்நாபி, மனோசிலை, கந்தகம்,

அரிதாரம், குதிரைப்பல் பாஷாணம், வெள்ளைப்பாஷாணம், கௌரி வகைக்கு வராகனெடை ¼-ஆக ஒரு வாயகன்ற கோப்பையில் போட்டு மூழ்க அவுரி இலைச் சாறு விட்டு மூன்றுநாள் ஊறவிட்டு நான்காவது நாள் அப்படியே அதிலுள்ள சாறுடன் கல்வத்திலிட்டு நன்றாய் அரைத்து மெழுகு பதத்தில் ஒரே வில்லையாகத் தட்டி ரவியில் வைத்து உலர்த்தவும். அதன்பின் அவுரி இலையை மெழுகுவண்ணம் அரைத்து மேற்படி வில்லைக்குக் கவசம் செய்து அதன்மேல் ஈஞ எருமைக் கடாரி சாணத்தை யப்பி அதன்மேல் இரண்டு மூன்று முறை சீலையைச் சுற்றி 10-வறட்டியில் புடமிடவும். எப்போது மருந்துப் புகை வருகின்றதோ அந்தச் சமயம் கவசத்தை வெளியே தள்ளி ஈரமண்ணைக்கொண்டு மேல் கொட்டிச் சூட்டை ஆற்றி விடவும். இதற்கு மேல் வில்லையை எடுத்து வைத்துக் கொள்க.

(5) சுக்கு, மிளகு, திப்பிலி, ஏலம், சிறுதேக்கு, தாளிசப்பத்திரி, பெருஞ்சீரகம், குரோசாணிஓமம், வாய் விளங்கம், அதிவிடயம், ஜாதிக்காய், ஜாதிப்பத்திரி, சீரகம், கருஞ்சீரகம், கிராம்பு, செவ்வியம், வால்மிளகு, சித்திர மூலம்வேர்ப்பட்டை, கண்டத்திப்பிலி, கசகசா, சடாமாஞ்சில், அக்கராகாரம் இவைகள் வகைக்கு வராகனெடை 1¼-ஆக இவற்றை இடித்து வஸ்திரகாயம் செய்து வைத்துக் கொள்க.

(6) பனைவெல்லம் பலம்-4, தேன் பலம்-5.

**செய்பாகம் :—**முதலாவது இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள சேங்கொட்டை, எட்டிக்கொட்டை முதலியவற்றின் மெழுகைக் கல்வத்தில் போட்டு அதனுடன் நான்காவது அங்கத்தில் சித்தப்படுத்தியுள்ள வில்லையையும் போட்டு அரைக்கவும். இவைகள் எல்லாம் நன்றாய் உறவான சமயம் மூன்றாவது அங்கத்தில் கூறப்

பட்டுள்ள பறங்கிச்சக்கை சூரணத்தையும் 5-வது அங்கத்தில் கூறப்பட்டுள்ள சூரணத்தையும் போட்டு அரைத்து இவைகள் யாவும் நன்ருய் உறவான சமயம் 6-வது அங்கத்தில் கூறப்பட்ட பனைவெல்லம், தேன், முன் மிகுதிப் பட்டுள்ள நெய் இவற்றைக் கொஞ்சங் கொஞ்சமாகச் சேர்த்து இரண்டொரு நாள் நன்ருய் அரைத்து இரு பாகமாகப் பங்கிட்டு வைத்துக் கொள்க.

ஒரு பாகத்தை அப்படியே தனி மெழுகாக வைத்துக் கொண்டு மற்ருேர் பாகத்தில் 2 - 3 வராகனெடை சுத்தி செய்த வாளம் கூட்டி நன்கு அரைத்துப் பேதி மெழுகாக வைத்துக் கொள்ளவும்.

பிரயோகம் :—இந்தப் பேதி மெழுகில் வேளைக்கு 1 – 1½ குன்றிப் பிரமாணம் வெல்லத்தில் வைத்துத் தினம் 1-வேளைக்கு காலையில் கொடுக்கவும். மாலைப்பொழுதில் சாதாரண மெழுகைக் கொடுக்கவும். பேதி இரண்டொரு தடவை ஆகாவிட்டால் தேகதிடத்திற்கு ஏற்றவாறு அதிகப்படுத்திக் கொள்ளவும். இந்த மெழுகைச் செய்தவுடன் உபயோகப்படுத்தக்கூடாது. 6-மாதம் சென்ற பின்னரே கொடுத்தல் நன்று. வருஷக்கணக்காக பழமைப் படின் எவ்விதக் குற்றங்களுமில்லாமல் சாந்தமாக வேலை செய்யும். இம் மருந்தை ஒருமுறை 5 - 7 நாள் கொடுக்க வேண்டு[illegible]. மறுபத்தியம் 3-நாள் இருக்கவேண்டும். மறுபடியும் [illegible]நந்து கொடுப்பது அவசியமாளுல் 10 - 15 நாள் சென்றப[illegible]ர் ஒருமுறை முன்போல் கொடுக்கவும். இப்படி 3 - 4 [illegible]றகளில் தீராதவியாதி இல்லை. மறுபத்தியம் இருந்து [illegible]ஸ்நானம் செய்வதாக இருந்தால் ஆகாசத்தாமரைத் தை[illegible]லம் வான்குமரித்தைலம் அல்லது சிற்றுமணக் கெண்ணெ[illegible]ய் கொண்டு செய்யவும்.

தீரும் வியாதி: —விஷக்கடியையும் அதளுல் சரீரத்தில் வியாபித்து உண்டான பல தோல் சம்பந்தமான

ரோகத்தையும் கண்டிக்கும். இன்னும் வாதம்-80, வெண் மேகம், அண்டவாதம், குஷ்டம், கிரந்தி, அரையாப்பு, லிங்கப்புற்று, யோனிப்புற்று, தொடைவாழை, முயல்வலி, காக்கைவலி, குமரகண்டவலி, சந்நி, சுரம், சூலை, பிடிப்பு, குடைச்சல், மேகரணம் முதலியவைகள் குணமாகும். நாவில் விரணம் உள்ளவர்களுக்கு மாத்திரம் கொடுக்கக் கூடாது.

**பத்தியம் :—** கடுகு, நல்லெண்ணெய், புளி, மீன், கருவாடு, இறைச்சி முதலியவற்றைத் தள்ளி இச்சாபத்தியமாக இருக்கவேண்டும். மறுபத்தியத்திலும் இவ்வாறே இருத்தல்வேண்டும்.

## 20. இலிங்க மெழுகு

ஒரு பச்சைத் தவக்களையைக் கொண்டுவந்து வாய் வழியாக ½-அல்லது 1-பலம் இலிங்கத்தைச் செலுத்தி வாயைத் தைத்துவிட்டு ஒரு இரும்புக்கடாயில் போட்டு மூழ்கப் பசுவின் நெய்விட்டு அடுப்பில் வைத்துச் சிறுக எரித்து நெய் எல்லாம் சுண்டித் தவளை நன்றாய் வெந்து கருகின சமயம் தவளையை எடுத்து உள்ளிட்ட லிங்கத்தை எடுத்து நன்றாய்த் துடைத்துச் சுத்தம்செய்து கல்வத்தில் போட்டுத் தேன் துளித் துளியாகவிட்டு மெழுகு பதத்திலேயே அரைத்து வழித்துச் சீசாவில் பத்திரப் படுத்துக.

**பிரயோகம் :—** வேளைக்குக் குன்றி அளவு தினம் இரண்டுவேளை வெல்லத்தில் வைத்து 5-நாள் கொடுக்கவும்.

**தீரும் வியாதி :—** பாரிசவாதம், முகவாதம் முதலியவைகள் குணமாகும்.

**பத்தியம் :—** புளிதள்ளி இச்சாபத்தியம்.

# கிருத இலம்பகம்

## 1. சந்தனாதிக் கிருதம்

சரக்கு:—1.

| | |
|---|---|
| சந்தனக்கட்டைச்சீவல் | பலம் 4 |
| சிற்றரத்தை | ,, 3 |
| மிளகு | ,, 2 |
| வில்வவேர் | ,, 1 |

சரக்கு :—2.

| | |
|---|---|
| ஆடாதோடைச்சாறு | படி $\frac{1}{4}$ |
| முசுமுசுக்கைச்சாறு | ,, $\frac{1}{4}$ |
| இஞ்சிச்சாறு | ,, $\frac{1}{4}$ |
| ஆவின் நெய் | ,, 1 |

சரக்கு :—3.

திப்பிலி
சுக்கு
கோஷ்டம்
கோரோசனை
அக்கராகாரம்
சீரகம்
பருத்திவிதைப்பருப்பு
கிராம்பு
நெல்லிவற்றல்
ஏலம்

இவைகள் வகைக்கு வராகனெடை - 2.

**செய்பாகம்:**—முதலாவது அங்கத்தில் கூறப்பட்ட சரக்குகளை நன்கு இடித்து ஒரு மட்பாண்டத்தில் போட்டு எட்டுபடி தண்ணீர்விட்டு அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து ஒருபடி அளவிற்குச் சுண்டின சமயம் வடிகட்டி ஆறவிட்டு அதனில் மூன்றுவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள சரக்குகளை இடித்துப் பசுவின் பால்விட்டு நெகிழ அரைத்துக் கலக்கி இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்

டுள்ள திரவங்களை விட்டு உறவாகும்படி கலக்கி அடுப்பி லேற்றிச் சிறு தீயாக எரித்து வண்டல் முதிர்ந்திருக்கக் கடுகுடனிறக்கி இரண்டு பலம் சீனி சர்க்கரை கூட்டிக் கலந்து வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கிருதத்தில் வேளைக்கு ஒரு தேக்கரண்டி வீதம் தினம் இருவேளை கலக்கி வண்டலுடன் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—இருமல், விக்கல், சுவாசம், மேகம், பித்தம், வாந்தி இவைகள் தீரும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 2. வேறு முறை

சரக்கு :—

| | | |
|---|---|---|
| சந்தனக்கட்டைச்சீவல் | சேர் | 4 |
| நன்னாரிவேர் | பலம் | 2 |
| அதிமதுரம் | ,, | 2 |
| பசுவின் நெய் | சேர் | 4 |

செய்பாகம் :—சந்தனக்கட்டைச் சீவலை ஒரு பெரிய மட்பாண்டத்தில் போட்டு ஆறுபடித் தண்ணீர் விட்டு அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து ¾-படி அளவிற்குச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி ஒரு கிருத பாண்டத்தில் விட்டு அதில் நன்னாரிவேர் அதிமதுரம் இவ்விரண்டையும் இடித்துத் துகளாக்கி அம்மிக்கல்லிலிட்டுப் பசுவின் பால் விட்டு நெகிழ அரைத்துக் கலக்கி நெய்யைக் கூட்டி அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்துப் பதமுறக் காய்ச்சி வடித்துப் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தக் கிருதத்தை வேளைக்கு 2 - 3 தேக்கரண்டி வீதம் அந்தி சந்தி சிறிது கற்கண்டுத்தூள் கூட்டிக் கலந்து கொடுத்து வருக.

தீரும் வியாதி :—வாய்ரணம், குடல்ரணம், நீர் தாரை, உள்ரணம், தேக எரிவு, உட்சூடு குணமாகும்.

பத்தியம் :—ஆகாரத்தில் காரத்தை மாத்திரம் கூடிய வரையில் குறைத்துக் கொள்ளவும்.

## 3. சீந்தல் கிருதம்

சரக்கு :—1.

சீந்தல்கொடி
வேப்பம்பட்டை
பேய்ப்புடல்

இவைகள் வகைக்குப் பலம்-10.

சரக்கு :—2.

பேய்ப்புடல்
மஞ்சள்
அகில்
கோரைக்கிழங்கு
கோஷ்டம்
ஏலம்
விலாமிச்சம்வேர்
மரமஞ்சள்
சந்தனம்
தேவதாரு
செஞ்சந்தனம்

இவைகள் வகைக்குக் கழஞ்சு-2.

சரக்கு :—3.

நெய் படி 1

செய்பாகம் :—முதலாவது அங்கத்தில் கூறப்பட்ட மூன்று சரக்குகளையும் இடித்துப் பஞ்சுபோல் நசுக்கி ஒரு குடிநீர்ப் பாண்டத்தில் போட்டு எட்டுபடித் தண்ணீர் விட்டு அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து ஒருபடி அள விற்குச் சுண்டி வரும்போது வடிகட்டி வைத்துக் கொள்க. இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்ட பதினொரு சரக்கு களையும் நன்ருய் இடித்து அம்மிக்கல்லில் வைத்துத் தண்

ணீர் விட்டு நெகிழ அரைத்து ஒரு கிருதப் பாண்டத்தில் போட்டு முன் சித்தப்படுத்திய கியாழத்தை விட்டு அதனில் நெய்யையும் கூட்டி அடுப்பிலேற்றிப் பதமுறக் காய்ச்சி வடித்துப் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இந்தக் கிருதத்தில் வேளைக்கு இரண்டு தேக்கரண்டி அளவு அந்தி சந்தி கொடுத்து வருக.

தீரும் வியாதி:—சொறி, சிரங்கு, புண், கருங்குட்டம் முதலிய தோல் சம்பந்தமான ரோகங்கள் தீரும்.

பத்தியம் —இச்சாபத்தியம்.

## 4. புளியாரைக் கிருதம்

சரக்கு ;—

| | |
|---|---|
| அதிவிடயம் | சுக்கு |
| மிளகு | திப்பிலி |
| இந்துப்பு | பெருங்காயம் |
| எவாச்சாரம் | சாதிக்காய் |
| வெட்பாலையரிசி | மோடி |
| கிராம்பு | மாதுளம்பூ |
| மரமஞ்சள் | |

இவைகள் வகைக்குக் கழஞ்சு - 1.

| | | |
|---|---|---|
| புளியாரைக்கீரைச்சாறு | படி | 2 |
| ஆவின் நெய் | ,, | 2 |
| தயிர் | ,, | 1 |

செய்பாகம் :—மேற்கூறப்பட்ட பதிமூன்று சரக்குகளையும் சூரணித்துச் சிறிது தயிர்விட்டு அரைத்து ஒரு கிருதப்பாண்டத்தில் போட்டு மிகுதியுள்ள தயிரையும்

புளியாரைக்கீரைச் சாற்றையும் நெய்யையும் விட்டுக் கலக்கி அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்துப் பதமுறக் காய்ச்சி வடித்துக்கொள்ளவும்

**பிரயோகம் :—** வேளைக்கு 2-3 தேக்கரண்டி வீதம் தினம் இருவேளை கொடுத்து வருக.

**தீரும் வியாதி ;—** ஆறுவிதமான கிராணி, மார்பு நோய் இவைகள் தீரும்.

**பத்தியம் :—** கைப்பு புளிப்பு நீக்கி அன்னங் கொள்ளவும்.

## 5. திப்பிலிக் கிருதம்

**சரக்கு :—**

திப்பிலி
வெட்பாலையரிசி
வில்வவேர்
கடுக்காய்
நெல்லிவற்றல்
விலாமிச்சம்வேர்
சண்பகப்பூ
கடுகுரோகணி
கீழ்காய்நெல்லி
வேப்பம்பட்டை
தான்றிக்காய்
ஆடாதோடை
திராட்சைப்பழம்
அதிவிடயம்

இவைகள் வகைக்கு வராகனெடை - 1.

**செய்பாகம் :—** மேற்கூறப்பட்ட பதினான்கு சரக்குகளையும் இடித்து மசிந்தசமயம் அம்மிக்கல்லில் வைத்துத் தண்ணீர் தெளித்து நெகிழ அரைத்து ஒரு கிருதபாண்டத்தில் போட்டு கால்படித் தண்ணீர்விட்டுக் கலக்கி எல்லாம் உறவானபின் ¼-படி பசுவின் நெய்விட்டு அடுப்பிலேற்றிச் சிறுக எரித்துப் பதமுறக் காய்ச்சி வடிகட்டி வைத்துக்கொள்க.

பிரயோகம் :—இந்தக் கிருதத்தில் வேளைக்கு 1 - 2 தேக்கரண்டி வீதம் தினம் இருவேளை கொடுக்கவும்.

தீரும் வியாதி :—சுரம், விக்கல், தேக உளைச்சல், அரோசகம், தலைநோய் இவைகள் தீரும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 6. செவ்வியக் கிருதம்

சரக்கு :—

| | |
|---|---|
| திப்பிலி | மிளகு |
| சுக்கு | வட்டத்திருப்பி |
| எவாச்சாரம் | தனியா |
| ஓமம் | மோடி |
| வில்வவேர்ப்பட்டை | கடுக்காய் |
| நெல்லிவற்றல் | தான்றிக்காய் |
| இந்துப்பு | பிடாலவணம் |
| சித்திரமூலம் | செவ்வியம் |

இவைகள் வகைக்குப் பலம் - ½

| | |
|---|---|
| பசுவின் நெய் | சேர் 4 |
| தயிர் | ,, 16 |

செய்பாகம் :—முற்கூறப்பட்ட பதினாறு சரக்குகளையும் சிறிது இடித்து அம்மிக்கல்லில் வைத்துச் சிறிது தயிர் விட்டு மெழுகுபதமாக அரைத்து மிகுதியுள்ள தயிரில் கலக்கி ஒரு கிருதப் பாண்டத்தில் விட்டுப் பசுவின் நெய் கூட்டி அடுப்பிலேற்றிச் சிறுதீயாக எரித்துப் பதமுறக் காய்ச்சி வடித்து வைத்துக்கொள்க.

பிரயோகம் :—வேளைக்கு 1 - 2 தேக்கரண்டி அளவு தினம் இருவேளை கொடுக்கவும்.

**தீரும் வியாதி** :—ஆசனம் வெளிப்படல், ஆசனவலி: மலச்சிக்கல், சீதகக்கசிவு தீரும். குடலுக்கு நன்மையைத் தரும்.

**பத்தியம்** :—காரசாரமற்ற அன்னம் கொள்ள வேண்டும்.

## 7. ஏலாதிக் கிருதம்

சரக்கு :—

(1) அத்திமரப்பட்டை ஆலமரப்பட்டை
அரசமரப்பட்டை இத்திமரப்பட்டை
வகைக்குப் பலம்-20.

(2) அதிமதுரம் கோஷ்டம்
சந்தனம் இலுப்பைப்பூ
தாமரைவளையம் செங்கழுநீர்க்கிழங்கு
வெள்ளறுகுவேர் பேரீச்சங்காய்
சிறுநாகப்பூ சண்பகப்பூ
இலவங்கப்பத்திரி கிச்சிலிக்கிழங்கு
நாணல் நன்னாரிவேர்
அல்லிக்கிழங்கு அசுவகெந்தி
அரசமரக்குச்சி ஆலங்குச்சி
ஏலம்
இவைகள் வகைக்குக் கழஞ்சு -1.

(3) தாழைவிழுதுச்சாறு படி 2
வெள்ளறுகுச்சாறு ,, 2
பசுவின் நெய் ,, 2

**செய்பாகம்** :—முதலாவது அங்கத்தில் கூறப்பட்ட நான்கு பட்டைகளை 50-வருடத்திற்கு மேற்பட்ட மரமாகப் பார்த்துச் செவ்வேறிய பட்டையாகக் கவனித்துப் பஞ்சுபோல் நசுக்கிப் பெரிய மட்பாண்டத்தில் போட்டு 16-படித் தண்ணீர் விட்டு அடுப்பிலேற்றிச் சிறுக எரித்து

இரண்டுபடி அளவிற்குச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்க. இரண்டாவது அங்கத்தில் கூறப் பட்ட பத்தொன்பது சரக்குகளையும் சிறிது இடித்துப் பசு வின்பால் விட்டு மெழுகு பதமாக அரைத்து வழித்து எடுத் துக் கொள்ளவும். அப்பால் ஒரு கிருத பாண்டத்தில் முன் சித்தப்படுத்திய கியாழத்தை விட்டு அதனில் அரைத்து வைத்துள்ள கற்கத்தைப் போட்டுக் கலக்கி மூன்றுவது அங்கத்தில் கூறப்பட்ட திரவங்களை விட்டு அடுப்பிலேற் றிச் சிறு தீயாக தினம் 2 - 3 மணிநேரம் எரித்து நான்கா வது நாள் பதமுறக் காய்ச்சி வடித்து வைத்துக் கொள் ளவும்.

பிரயோகம்:—இந்த ஏலாதிக் கிருதத்தை வேளைக்கு 1 - 2 தேக்கரண்டி அளவு தினம் இருவேளை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—ஈளை, எலும்புருக்கி, பித்தவறட்சி, காசம், உளமாந்தை.

பத்தியம் :—புளி தள்ளி இச்சாபத்தியமாக இருத்தல் வேண்டும்.

குறிப்பு :—இந்த பாகத்தில் நெய்யை நீக்கி நல்லெண் ணெய் கூட்டிச் செய்யும் சம்பிரதாயமும் உண்டு. இந்தத் தைலத்தில் ஸ்நானம் செய்து முன்முடித்த கிருதத்தை யுண்டுவர அதிக நன்மையைத் தரும்.

## 8. ஆடாதோடைக் கிருதம்

சரக்கு :—

1 அரிசித்திப்பிலி
2 சித்திரமூலம்வேர்
3 சுக்கு
4 சத்திச்சாரம்
5 ஆனைதிப்பிலி
6 இந்துப்பு
7 எவச்சாரம்

இவைகள் வகைக்குக் கழஞ்சு-1.

| | |
|---|---|
| ஆடாதோடைச்சாறு | படி 1 |
| ஆவின் பால் | ,, 1 |
| ஆவின் நெய் | ,, 1 |

**செய்பாகம் :—**மேற்கூறப்பட்ட முதலேழு சரக்கு களைச் சிறிது இடித்து அம்மிக்கல்லில் வைத்துப் பசுவின் பால் விட்டு நெகிழ அரைத்து வழித்து ஒரு கிருத பாண் டத்தில் போட்டுப் பசுவின் பாலையும் ஆடாதோடைச் சாற்றையும் விட்டுக் கலக்கி உறவான சமயம் பசுவின் நெய் கூட்டி அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்துப் பத முறக் காய்ச்சி வடித்து வைத்துக் கொள்க.

**பிரயோகம் :—**வேளைக்கு ஒரு தேக்கரண்டி வீதம் காலை மாலை இரு பொழுதும் கொடுத்து வருக.

**தீரும் வியாதி :—**நெஞ்சுவலி, கபச்சிக்கலால் உண் டான இரைப்பு, சுவாசகாசம், பித்தபாண்டு, உள்மூலம், வெளிமூலம், பழைய சுரம், அக்கினிமந்தம் முதலியவை கள் தீரும்.

**பத்தியம் :—**புளி தள்ளி இச்சாபத்தியமாக இருத்தல் நன்று.

## 9. தூதுளைக் கிருதம்

**சரக்கு :—**

| | | | |
|---|---|---|---|
| (1) | தூதுளைச்சமூலம் | பலம் | 20 |
| | கறிமுள்ளிவேர் | ,, | 10 |
| | கண்டங்கத்திரிவேர் | ,, | 10 |

பக் 244 "இரைப்பு" காச

(2)
| | |
|---|---|
| கடுக்காய் | நெல்லிவற்றல் |
| தான்றிக்காய் | சுக்கு |
| மிளகு | திப்பிலி |
| கோஷ்டம் | தாளிசப்பத்திரி |

சித்திரமூலம் நன்னாரிவேர்
சிறுநாகப்பூ

இவைகள் வகைக்கு கழஞ்சு - 1

சிறுகாஞ்சொறிவேர் ஆடாதோடைவேர்
அதிமதுரம் நற்சீரகம்
தேற்றான் விதை சடாமாஞ்சில்
செவ்வல்லிக் கொடி

இவைகள் வகைக்குப் பலம் - $\frac{1}{4}$.

முசுமுசுக்கைவேர் கண்டங்கத்திரி விதை

இவைகள் வகைக்கு பலம் - $\frac{1}{2}$.

| | | |
|---|---|---|
| ஆவின் நெய் | படி | 1 |
| ஆவின் பால் | ,, | 1 |
| இஞ்சிச்சாறு | ,, | |

செய்பாகம் :—முதலாவது அங்கத்தில் கூறப்பட்ட மூன்று சரக்குகளையும் பஞ்சுபோல் நசுக்கி ஒரு பெரிய பாண்டத்தில் போட்டு 8-படித் தண்ணீர் விட்டு அடுப்பி லேற்றிச் சிறு தீயாக எரித்து ஒருபடி அளவிற்குச் சுண் டின சமயம் வடிகட்டி வைத்துக் கொள்க.

இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்ட இருபது சரக்குகளையும் இடித்துச் சூரணித்து அம்மிக்கல்லில் வைத்துப் பசுவின்பால் விட்டு நெகிழ அரைத்து வழித்து எடுத்துக் கொள்க. அப்பால் ஒரு கிருத பாண்டத்தில் முன்சித்தப்படுத்திய கியாழத்தை விட்டு அதனில் பின் அரைத்து வைத்துள்ள கற்கத்தைப் போட்டுக் கலக்கி மூன்றாவது அங்கத்தில் கூறப்பட்ட திரவங்களை விட்டு அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்துப் பதமாகக் காய்ச் சிக் கடுகுடன் கீழிறக்கித் தேன் படி-$\frac{1}{8}$, சீனி சர்க்கரை பலம்-1 போட்டுக் கலக்கி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—வேளைக்கு 1 - 2 தேக்கரண்டி அளவு தினம் இருவேளை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—ஈளை, இருமல், காசம், சுவாசம், உப்பிசம், இரத்தகாசம் முதலியவைகள் தீரும்.

பத்தியம் :—சீதள பண்டங்களை நீக்கி இச்சாபத்திய மாக இருத்தல் நன்று.

## 10. சதாவரிக் கிருதம்

சரக்கு :—1.

| | |
|---|---|
| தண்ணீர்விட்டான் கிழங்குச் சாறு | சேர் 1 |
| பசுவின் நெய் | ,, 1 |
| பசுவின் பால் | ,, 10 |
| தண்ணீர்விட்டான் கிழங்கு | ,, ¼ |

செய்பாகம் :—முதலில் தண்ணீர்விட்டான் கிழங்கை மெழுகு வண்ணம் அம்மிக்கல்லில் வைத்து அரைத்து வழித்து ஒரு கிருத பாண்டத்தில் போட்டு மிகுதியுள்ள திரவங்களை விட்டுக் கலக்கி அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து பதமுறக் காய்ச்சி வடித்து வைத்துக் கொள்க.

பிரயோகம் :—வேளைக்கு இந்தக் கிருதத்தை 2 - 3 தேக்கரண்டி அளவு காலை மாலை இருபோது கொடுத்து வருக.

தீரும் வியாதி :—நீர்க்கடுப்பு, நீர்ச்சுருக்கு, எலும்புருக்கி, மேகசுரம், கைகாலெரிவு நீங்கும். தேகபுஷ்டி, தாது விர்த்தி யுண்டாகும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 11. அறுகம்வேர்க் கிருதம்

சரக்கு :—(1)

| | | |
|---|---|---|
| அதிமதுரம் | பலம் | 1 |
| சீரகம் | வராகனெடை | 2 |
| சாதிபத்திரி | ,, | 2 |
| விலாமிச்சம்வேர் | ,, | 2 |
| சிற்றுமுட்டிவேர் | ,, | 2 |
| வில்வவேர் | வராகனெடை | 2 |
| ஏலம் | ,, | 1 |
| கிராம்பு | ,, | 1 |
| மிளகு | ,, | 1 |
| கோஷ்டம் | ,, | 1 |

சரக்கு :—(2)

| | | |
|---|---|---|
| அறுகம்வேர்ச்சாறு | படி | 4 |
| ஆவின் நெய் | ,, | 1 |

செய்பாகம் :—முதலாவது அங்கத்தில் கூறப்பட்ட பத்து சரக்குகளையும் இடித்துச் சூரணித்து அம்மிக்கல்லில் வைத்துப் பசுவின்பால் விட்டு நெகிழ அரைத்து வழித்து ஒரு கிருதபாண்டத்தில் போட்டு இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்ட அறுகம்வேர்ச் சாற்றைவிட்டுக் கரைத்து உறவான சமயம் நெய்யைவிட்டு அடுப்பில் வைத்துச் சிறுக எரித்துப் பதமுறக் காய்ச்சி வடித்து வைத்துக்கொள்க.

பிரயோகம் :—வேளைக்கு 1 - 2 தேக்கரண்டி வீதம் தினம் இருவேளை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—பிரமேகம், தேக எரிவு, இரத்த பித்தரோகம், நீர்க்கடுப்பு, தாகம் முதலிய வெட்டை ரோகங்கள் தீரும். மருந்துகளின் வீரியம் தணியும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 12. கண்டங்காரிக் கிருதம்

சரக்கு :—(1)

| | |
|---|---|
| கண்டங்கத்திரி சமூலம் | பலம் 32 |
| வில்வவேர் | ,, 1 |
| அமுக்குருக்கிழங்கு | ,, 1 |
| ஆடாதோடை வேர் | ,, 1 |
| சங்கம்வேர் | ,, 1 |
| சிறுவழுதுணைவேர் | ,, 1 |
| பேய்ப்புடல் | ,, 1 |

சரக்கு :—(2)

தாளிசபத்திரி மிளகு
செவ்வியம்

இவைகள் வகைக்குக் கழஞ்சு - 3.

ஏலம் இலவங்கப்பத்திரி
இலவங்கப்பட்டை திப்பிலி
விலாமிச்சவேர் சிறுநாகப்பூ
சடாமாஞ்சில் கற்கடகசிங்கி

இவைகள் வகைக்குக் கழஞ்சு - 1.

சரக்கு :—(3)

| | |
|---|---|
| கலியாணப்பூசனிக்காய்ச்சாறு | படி 1 |
| ஆவின் பால் | ,, 1 |
| ஆவின் நெய் | ,, 1 |

செய்பாகம் :—முதலாவது அங்கத்தில் கூறப்பட்ட சரக்குகளை நன்கு இடித்து ஒரு பெரிய மட்பாண்டத்தில் போட்டு 16-படி தண்ணீர்விட்டு அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து 2-படி அளவிற்குச் சுண்டின சமயம் வடி கட்டி வைத்துக்கொள்க. இரண்டாவது அங்கத்தில்

கூறப்பட்ட சரக்குகளை இடித்துச் சூரணித்து அம்மிக் கல்லில் வைத்து ஆவின்பால் விட்டு மெழுகுபோலரைத்து ஒரு கிருதபாண்டத்தில் போட்டு முன் சித்தப்படுத்திய கியாழத்தை விட்டுக் கரைத்து மூன்ருவது அங்கத்தில் கூறப்பட்ட திரவங்களைக்கூட்டி அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்துப் பதமுறக் காய்ச்சி வடிகட்டி அதில் திப்பிலியையும் பேரீச்சங்காயையும் வகைக்கு மூன்று கழஞ்சு வீதம் இடித்துப் பொடிசெய்து போட்டு வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கிருதத்தை வேளைக்கு 2 - 3 தேக்கரண்டி அளவு தினம் 2-வேளை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—உளமாந்தை, சுவாசகாசம், ஈளை, இருமல், சயம் முதலியவைகள் தீரும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

குறிப்பு :—கண்டங்கத்திரி என்பது கத்திரிச்செடியைப்போல் சிறிய இனம். காய் கழற்சிக்காய் அளவாக இருக்கும். இலைகளிலும் காய்களிலும் முள் உண்டு என்பதைக் கவனிக்கவும். கரிமுள்ளி பாப்பாரமுள்ளி என்று சொல்லப்பட்டது முறையே நீலப்பூ வெள்ளைப்பூ விடுகிற இனமாகும். இது தரைகளில் படர்ந்திருக்கும். இதனைச் சிலர் கண்டங்கத்திரி எனப் பிசகாய்க் கூறுவர்.

## 13. பஞ்சகோல கிருதம்

சரக்கு :—

| | |
|---|---|
| திப்பிலி | திப்பிலிமூலம் |
| செவ்வியம் | சித்திரமூலம் |
| சுக்கு | எவச்சாரம் |

இவைகள் வகைக்குப் பலம் - $\frac{1}{2}$.

| | |
|---|---|
| பசுவின் பால் | சேர் 1 |
| பசுவின் நெய் | ,, 1 |

செய்பாகம் :—முற்கூறப்பட்ட ஆறு சரக்குகளை இடித்து அம்மிக்கல்லில் வைத்துப் பசுவின் பால் விட்டு நெகிழ அரைத்து ஒரு கிருத பாண்டத்தில் போட்டு மிகுதி யுள்ள பசுவின் பாலைவிட்டுக் கரைத்து நெய் கூட்டி அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்துப் பதமுறக் காய்ச்சி வடித்துக் கொள்க.

பிரயோகம் :—2 - 3 தேக்கரண்டி அளவு தினம் இரு வேளை சிறிது கற்கண்டுப் பொடி கூட்டிக் கலக்கிக் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—செரியாமை, இருமல், ஜலதோஷம், ஈளை, சுரக்கட்டி முதலியவைகளாம்.

பத்தியம் :— இச்சாபத்தியம்.

## 14. முலைப்பால் கிருதம்

சரக்கு :—

| | | |
|---|---|---|
| பொன்னுங்காணிவேர் | கழஞ்சு | 2 |
| வெள்ளரிவித்து | ,, | 2 |
| பூசனிவித்து | ,, | 2 |
| நெல்லிவற்றல் | ,, | 2 |
| அதிமதுரம் | ,, | 2 |
| முலைப்பால் | படி | 2 |
| ஆவின் நெய் | ,, | 1 |

செய்பாகம்:—முற்கூறப்பட்ட ஐந்து சரக்குகளையும் முலைப்பால் விட்டு நெகிழ அரைத்து ஒரு கிருத பாண் டத்தில் பொட்டு ஆவின் நெய்யை விட்டு அடுப்பிலேற்றி

சிறு தீயாக எரித்துப் பதமுறக் காய்ச்சி வடித்து வைத்துக் கொள்க.

பிரயோகம் :—வேளைக்கு 2 - 3 தேக்கரண்டி அளவு தினம் இருவேளை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—உட்சூடு, தேகமெலிவு, எலும்புருக்கி, கனச்சூடு பிரமேகம், வெட்டை முதலியவைகளாம்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 15. கூழ்ப்பாண்ட கிருதம்

சரக்கு:—1.

| | |
|---|---|
| ஏலம் | சந்தனம் |
| கிராம்பு | இலுப்பைப்பூ |
| கூகைநீறு | மெருகங்கிழங்கு |
| திராட்சைப்பழம் | பேரீச்சம்பழம் |
| கோஷ்டம் | சிறுநாகப்பூ |
| முத்தக்காசு | செங்கழுநீர்க்கிழங்கு |
| திப்பிலி | கார்போக அரிசி |
| அதிமதுரம் | மிளகு |

இவைகள் வகைக்கு வராகனெடை - 2.

சரக்கு :—2.

| | | |
|---|---|---|
| கலியாணப்பூசிணிக்காய்ச்சாறு | படி | 4 |
| வெள்ளரிக்காய்ச்சாறு | ,, | 2 |
| தண்ணீர்விட்டான்கிழங்குச்சாறு | ,, | 1 |
| கரிசாலைச்சாறு | ,, | 1 |
| ஆவின் நெய் | ,, | ½ |
| இளநீர் | ,, | 1 |

சரக்கு :—3.

| | |
|---|---|
| தேன் | பலம் 10 |
| சர்க்கரை | ,, 5 |

செய்பாகம் :—முதலாவது அங்கத்தில் கூறப்பட்ட பதினாறு சரக்குகளையும் இடித்து அம்மிக்கல்லில் வைத்து இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்ட இளநீர் விட்டு மெழுகுபதமாக அரைத்து ஒரு கிருத பாண்டத்தில் போட்டு மிகுதியுள்ள இளநீரையும் திரவங்களையும் கூட்டிக் கலக்கி அடுப்பிலேற்றிச் சிறு தீபாக எரித்துப் பதமுறக் காய்ச்சி வடித்து அதனில் மூன்ருவது அங்கத்தில் கூறப்பட்டவைகளைக் கலந்து உறவாக்கி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கிருதத்தில் வேளைக்கு 2 - 3 தேக்கரண்டி அளவு தினம் இருவேளை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—பிரமேகம், கிரிச்சுரம், தேக எரிவு, தேக வறட்சி தீரும். தேகபுஷ்டி யுண்டாகும்.

பத்தியம் :—கைப்புப் புளிப்புத் தள்ளி இச்சா பத்தியமாக அன்னங் கொள்ளவும்.

## 16. வல்லாரைக் கிருதம்

சரக்கு :—(1)

வல்லாரை இலை பலம்-50

சரக்கு :—(2)

| | |
|---|---|
| சுக்கு | வால்மிளகு |
| சீரகம் | ஏலரிசி |
| ஜாதிக்காய் | தான்றிக்காய் |
| இலவங்கப்பத்திரி | தாளிசப்பத்திரி |
| கோஷ்டம் | கஸ்தூரிமஞ்சள் |

| | |
|---|---|
| கடுகுரோகணி | அக்கராகாரம் |
| தனியா | குருவேர் |
| வெட்டிவேர் | வில்வவேர் |
| கிச்சிலிக்கிழங்கு | சண்பகப்பூ |
| இம்புராவேர் | சந்தனம் |
| வெங்காரம் | |

இவைகள் வகைக்கு வராகனெடை - ½

சரக்கு :—(3)

பசுவின் நெய் படி - ½

செய்பாகம் :—முதலாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள வல்லாரை இலையை இடித்து ஒரு குடிநீர்ப் பாண்டத்தில் போட்டு 4-படித் தண்ணீர் விட்டு அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து ½-படி அளவிற்குச் சுண்டின சமயம் ஆறவிட்டு நன்றாய்ப் பிசைந்து பிசைந்து வடிகட்டி ஒரு கிருத பாண்டத்தில் விட்டு வைத்துக் கொள்க. அப்பால் இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்ட இருபத்தொரு கற்கங்களையும் நன்கு இடித்துச் சூரணம் செய்து முன் சித்தப்படுத்தியுள்ள கியாழத்தில் போதிய அளவிற்கு விட்டு நெகிழ அரைத்துக் கிருத பாண்டத்தில் போட்டுக் கரைத்து மூன்றாவது அங்கத்தில் கூறப்பட்ட பசுவின் நெய்யைக் கூட்டி அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்துப் பதமுறக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கிருதத்தில் வேளைக்கு 2 - 3 தேக்கரண்டி வீதம் தினம் அந்தி சந்தி 20 - 40 நாள் கொடுத்து வருக. இந்தக் கிருதத்தில் சிங்கிபற்பம் கூட்டி வழங்குதல் அதிகச் சிறந்தது.

தீரும் வியாதி :—கணச்சூடு, சொறி, சிரங்கு, நமைச்சல், மேக சம்பந்தமான பல பிணிகள் தீரும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 17. வல்லாரைக் கிருதம் (வேறு முறை)

சரக்கு :—

| | |
|---|---|
| குன்றிவேர் | செங்கழுநீர்க்கிழங்கு |
| அதிமதுரம் | கோரோசனை |
| கோஷ்டம் | பச்சைக்கற்பூரம் |

இவைகள் வகைக்குக் கழஞ்சு - 1.

| | | |
|---|---|---|
| வல்லாரைச்சாறு | படி | 4 |
| பசுவின் பால் | ,, | 4 |
| சீதேவி செங்கழுநீர்ச்சாறு | ,, | 1 |
| இளநீர் | ,, | 2 |
| பசுவின் நெய் | ,, | 2 |

செய்பாகம் :—முற்கூறப்பட்ட ஆறு சரக்குகளை யும் இடித்துச் சூரணித்து அம்மிக்கல்லில் வைத்துப் பசு வின்பால் விட்டு நெகிழ அரைத்து ஒரு கிருத பாண்டத் தில் போட்டு மற்றுமுள்ள திரவங்களை விட்டுக் கலக்கி அடுப்பில் வைத்து 3-நாள் வரையில் தினம் 2-மணி நேரம் சிறு தீயாக எரித்து நான்காவது நாள் பதமுறக் காய்ச்சி வடித்து வைத்துக் கொள்க.

பிரயோகம் —இந்தக் கிருதத்தை வேளைக்கு 1 - 2 தேக்கரண்டி அளவு தினம் இருவேளை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—ஈளை, இருமல், தொண்டைக்கம் மல், சில்விஷம், தேக எரிவு, நாவறட்சி, எலும்புருக்கி, குன்மம், வயிற்றெரிவு, முதலியவைகள் தீரும்.

பத்தியம் :—கைப்பு புளிப்பு தள்ளி இச்சா பத்திய மாக இருத்தல் நன்று.

## 18. நீர்பிரமிக் கிருதம்

சரக்கு :—

| | | |
|---|---|---|
| கறிமஞ்சள் | தோலா | 1 |
| நெல்லிவற்றல் | ,, | 1 |
| சுத்தி சிவதைவேர் | ,, | 1 |
| கடுக்காய் | ,, | 1 |
| திப்பிலி | ,, | 1 |
| வாய்விளங்கம் | ,, | 1 |
| இந்துப்பு | ,, | 1 |
| வசம்பு | ,, | 1 |
| நீர்பிரமிச்சாறு | சேர் | 4 |
| ஆவின் நெய் | ,, | 1 |

செய்பாகம் :—முன் கூறப்பட்ட எட்டுச் சரக்கு களையும் சிறிது இடித்து அம்மிக்கல்லில் வைத்துத் தண் ணீர் தெளித்து நெகிழ அரைத்து ஒரு கிருத பாண்டத்தில் போட்டு நீர்பிரமி இலைச்சாற்றையும் நெய்யையும் கூட்டி அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்துப் பதமுறக் காய்ச்சி வடித்து வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கிருதத்தை வேளைக்கு 1 - 2 தேக்கரண்டி அளவு தினம் இருவேளை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—குரல் கம்மல், சித்தப்பிரமை, வலி, மூர்ச்சை முதலியவைகள் குணமாகும். இன்னும் இந்தக் கிருதம் மனதிற்கும் பரிசரம்பிற்கும் பலத்தைக் கொடுத்து ஞாபக சக்தியை அதிகப்படுத்தும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 19. பஞ்சகௌவியக் கிருதம்

சரக்கு :—

(1) பசுவின்பால் தயிர்
நெய் சாணம்
கோநீர்

இவைகள் வகைக்குப் படி - 2.

(2) அதிமதுரம் சிறுதேக்கு
கோஷ்டம் இந்துப்பு
வாய்விளங்கம் தனியா
விழலரிசி வாலுழுவையரிசி
வெட்பாலையரிசி வசம்பு
வெள்ளுள்ளி தேவதாரு
சதகுப்பை சிற்றரத்தை
சந்தனம் கருஞ்சீரகம்
கரும்பூலாப்பட்டை நன்னாரிவேர்
பொன்முசுட்டை நெல்லிமரவேர்
சாரணைவேர் கீழ்க்காய்நெல்லிவேர்
நிலப்பனைக்கிழங்கு துத்திவேர்
குரோசாணிஓமம் பெருங்குரும்பை
அதிவிடயம் சாதிக்காய்
இலவங்கப்பத்திரி திரிகடுகு
வில்வவேர்ச்சாம்பல் கடுக்காய்
நெல்லிவற்றல் தான்றிக்காய்

இவவகள் வகைக்குக் கழஞ்சு - 1.

செய்பாகம்:—முதலில் இரண்டு படி அளவு பசுவின் சாணத்தில் இரண்டுபடியளவு அதன் சிறுநீரை விட்டுக் கரைத்துப் பிசைந்து வடிகட்டிப் பால், தயிர், நெய் இம் மூன்றையும் கூட்டி ஒரு கிருத பாண்டத்தில் வைத்துக் கொள்க. அப்பால் இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட்ட

முப்பத்தாறு சரக்குகளையும் நன்கு உலர்த்தி இடித்துச் சூரணித்துப் பசுவின் பால் விட்டு நன்கு அரைத்து முன் சித்தப்படுத்தி வைத்துள்ள கிருத பாண்டத்தில் போட்டுக் கரைத்து அடுப்பிலேற்றித் தினம் சிறு தீயாக ¼ - ½ சாமம் எரித்து அடுப்போடு வைத்து விடுக. இப்படி 2-நாள் எரித்து 3-வது நாள் பதமுறக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்ளவும்.

பிரயோகம் :—இந்தக் கிருதத்தில் வேளைக்கு 1 - 2 தேக்கரண்டி அளவு தினம் இருவேளை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—பெரும்பாடு, குன்மம், பீநசம், பித்தப்பாண்டு, காமாலை, பெரும் வயிறு.

பத்தியம் :—புளிப்பு கைப்பு நீக்கி இச்சாபத்தியமாக இருத்தல் நன்று.

## 20. பொன்னுங்காணிக் கிருதம்

சரக்கு :—

| | | | |
|---|---|---|---|
| (1) | பொன்னுங்காணிச்சாறு | படி | ½ |
| | பொற்றிலக்கையாந்தகரைச்சாறு | ,, | ½ |
| | ஆவின்பால் | ,, | ½ |
| | ஆவின்நெய் | ,, | ½ |
| | எலுமிச்சம்பழச்சாறு | ,, | ¼ |
| (2) | அதிமதுரம் | பலம் | 1 |
| (3) | கோரோசனை | ஜாதிக்காய் | |
| | ஜா்பத்திரி | | |

வகைக்குக் குன்றி எடை - 20.

செய்பாகம்: —இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்ட அதிமதுரத்தைப் பால்விட்டு மெழுகுவண்ணம்

அரைத்து ஒரு கிருத பாண்டத்தில் போட்டு, முதலாவது அங்கத்தில் குறிப்பிட்ட ஐந்து திரவங்களையும் கூட்டி அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து வண்டல் மெழுகு பதமாகத் திரளும்போது வடிகடத்தில் மூன்ருவது அங்கத்தில் குறிப்பிட்ட மூன்று சரக்குகளையும் சன்னமாக அரைத்துப் போட்டு வடித்து ஆறவிட்டுக் கலக்கிச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இந்தக் கிருதத்தில் வேளைக்கு 2-3 தேக்கரண்டி வீதம் காலை மாலை கொடுத்து வருக.

தீரும் வியாதி:—மேககாங்கை, கைகால் எரிவு, தேக எரிவு, உஷ்ணம், மூலம், வெட்டை, பிரமேகம், வாய் நாற்றம்.

பத்தியம்:—கைப்பு புளிப்பு தள்ளி இச்சா பத்தியமாக அன்னம் கொள்ள வேண்டும்.

## 21. மாதுளைக் கிருதம்

சரக்கு:—1.

மாதுளம்வேர்
மாதுளம்பூ
மாதுளம்பட்டை
மாதுளம்பிஞ்சு
மாதுளம்பழத்தின்தோல்

இவைகள் வகைக்குப் பலம் - 1.

சரக்கு:—2.

| | | |
|---|---|---|
| ஜாதிக்காய் | வராகனெடை | 1 |
| ஜாதிப்பத்திரி | ,, | 1 |
| ஏலரிசி | ,, | ½ |
| சீந்தில் சர்க்கரை | ,, | 5 |

சரக்கு :—3.

ஆவின் வெண்ணெய் பலம் 10

செய்பாகம் :—முதலாவது இரண்டாவது அங்கங்களில் கூறப்பட்டுள்ள சரக்குகளை யெல்லாம் இடித்து மிருதுவான சமயம் அம்மிக்கல்லில் வைத்துச் சிறிது பால் தெளித்து வெண்ணெய்போல் அரைத்து அதனுடன் மூன்ருவது அங்கத்தில் குறிப்பிட்ட ஆவின் வெண்ணெயைக் கூட்டிப் பிசரி ஒரு கிருத பாண்டத்தில் போட்டுச் சிறுக எரித்து, நெய் வேறு வண்டல் வேருகப் பிரியும் சமயம் வடிகட்டி எடுத்துக் கொள்ளவும்.

பிரயோகம் :—குழந்தைகளுக்கு வேளைக்கு 20 - 30 துளி வெந்நீரில் தினம் 2 - 3 வேளை கொடுக்கவும். பெரியவர்களுக்கு ஒரு தேக்கரண்டி வீதம் 2 - 3 வேளை கொடுக்கவும்.

தீரும் வியாதி :—சீதபேதி, உஷ்ணபேதி, கிராணி, வயிற்றிரைச்சல் முதலியவை குணமாகும். இன்னும் நேத்திரத்தைப் பற்றிய உஷ்ணத்தைச் சாந்தப்படுத்தும்.

பத்தியம் ;—எளிதில் ஜீரணக்கக் கூடிய ஆகாரம் கூட்டவும்.

## 22. அறுகம்வேர்க் கிருதம்

(வேறு முறை)

சரக்கு :—1.

| | |
|---|---|
| அறுகம்வேர் | வீசை 1 |
| பசுவின் நெய் | படி 1 |
| மாதுளம்பழச்சாறு | ,, 1 |

சரக்கு :—2.

அதிமதுரம்
தாமரைவளையம்
செங்கழுநீர்க்கிழங்கு

இவைகள் வகைக்குப் பலம் - ½.

செய்பாகம் :—அறுகம்வேரைச் சுத்த சலத்தில் அலம்பிச் சிறிது நேரம் தண்ணீர் வடிய ஒரு ஓலைப்பாயின் மேல் போட்டுச் சிறு துண்டுகளாக நறுக்கிப் பஞ்சுபோல் சிதைத்து ஒரு குடிநீர்ப் பாண்டத்தில் போட்டு 16-படித் தண்ணீர் விட்டு அடுப்பில் வைத்துத் தினம் ஒன்றுக்கு 2 - 3 மணி நேரம் சிறு தீயாக எரித்து அடுப்போடு விட்டு வைக்கவும். இப்படி இரண்டுநாள் எரித்து மூன்றுவது நாள் ஒருபடி அளவிற்கு வரும்படி நன்ருய் எரித்து ஆற விட்டுப் பிசைந்து பிசைந்து வடிகட்டி ஒரு கிருத பாண்டத்தில் விட்டு அதனுடன் பசுவின் நெய்யையும் மாதுளம் பழச்சாறும் கூட்டி அதில் இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள மூன்று சரக்குகளைப் பால் விட்டு மெழுகு பதம் அரைத்துக் கூட்டிக் கலக்கிப் பதமுறக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் கிருதத்தில் வேளைக்கு இரண்டு தேக்கரண்டி வீதம் தினம் இருவேளை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—அஸ்திசூடு, கிரிச்சரம், கிராணி, பிரமேகம், கடாலச்சூடு, கிருகிருப்பு முதலியவைகள் தீரும். இன்னும் ஸ்திரீகளுக்கு அதிகப்பட்ட போகத் திறல் உண்டாகும் இடுப்புவலி, உளைச்சல் குணமாகும்.

பத்தியம் :—புளி தள்ளி இச்சாபத்தியம்.

## 23. சாகமாதிக் கிருதம்

சரக்கு :—(1)

வெள்ளாட்டு இறைச்சி பலம் - 50.

சரக்கு :—(2)

பாதிரிவேர் வில்வவேர்
பெருமரப்பட்டைவேர் பெருங்கிழங்கு
முன்னைவேர் ஓரிலைத்தாமரைவேர்
மூவிலைத்தாமரைவேர் சிறுகண்டங்கத்திரிவேர்
தரைகண்டங்கத் திரிவேர் (முள்ளி) நெரிஞ்சிவேர்

இவைகள் வகைக்குப் பலம் - 5.

சரக்கு :—(3)

பச்சைப்பயறு காட்டுஉளுந்துவேர்
காட்டுப்பயத்தம்பருப்புவேர் சீந்தில்
நிலப்பூசனி அதிமதுரம்

இவைகள் வகைக்குப் பலம் - ½.

தண்ணீர்விட்டான்கிழங்கு சிற்றாமுட்டி
பால்வள்ளிக்கிழங்கு பேராமுட்டி

இவைகள் வகைக்குப் பலம் - 1.

சரக்கு :—(4)

| | | |
|---|---|---|
| பசுவின் பால் | படி | 1 |
| பசுவின் நெய் | ,, | 1 |

**செய்பாகம் :—**முதலாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள வெள்ளாட்டு இறைச்சியில் எலும்பு கொழுப்பு முதலியவைகள் நீக்கிச் சிறு துண்டுகளாக வெட்டி ஒரு குடிநீர்ப் பாண்டத்தில் போட்டு பதினாறு படித் தண்ணீர்

விட்டு அடுப்பில் வைத்து வாய்மூடி யிட்டுச் சிறுக எரித்து அப்போதைக்கப்போது கிளறிக் கொடுத்துக் கொண்டு வருக. இந்தக் குடிநீர் சுண்டி இரண்டுபடி அள விற்கு வந்தவுடன் கீழிறக்கி ஆறவிட்டுப் பிசைந்து வடி கட்டி வைத்துக் கொள்க.

இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள சரக்கு களை ஒன்று மிரண்டுமாக இடித்து ஒரு குடிநீர்ப் பாண் டத்தில் போட்டுப் பதினறுபடித் தண்ணீர் விட்டு அடுப் பில் வைத்துச் சிறு தீயாக எரித்து இரண்டுபடி அளவிற் குச் சுண்டி வருஞ்சமயம் கீழிறக்கி ஆறவிட்டு வடித்து வைத்துக் கொள்க.

மூன்ருவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள சரக்குகளை ஒன்று மிரண்டுமாக இடித்துத் தட்டை அம்மிக்கல்லில் கொஞ்சங் கொஞ்சமாக வைத்துப் பசுவின்பால் தெளித்து வெண்ணெய்போல் அரைத்து வைத்துக் கொள்க.

அப்பால் ஒரு கிருத பாண்டத்தில் முதலாவது இரண் டாவது அங்கத்தில் முடித்து வைத்துள்ள கியாழத்தை விட்டு மூன்ருவது அங்கத்தில் முடித்து வைத்துள்ள கற் கத்தைப் போட்டுக் கரைத்து நான்காவது அங்கத்தில் கூறப்பட்ட பசுவின் பாலையும் நெய்யையும் விட்டுக் கலக்கி அடுப்பில் வைத்துச் சிறுக எரித்துப் பதமுறக் காய்ச்சி வடித்துச் சீசாவிலிடுக.

**பிரயோகம் :—**இந்தக் கிருதத்தில் வேளைக்கு 1 - 1½ தேக்கரண்டி அளவு தினம் இருவேளை கொடுத்துக் கொண்டு வருக.

**தீரும் வியாதி :—**கர்ணசூலை, செவிடு, நாவு - கண் - வாய் - கன்னம் முதலிய அவயவங்களைக் கெடுக்கின்ற முகவாதம், கைகால் முடக்கு, இடுப்புவாதம், இன்னும்

சரீரத்தில் குடிநிலைக்கப் பெற்றிரா நின்ற சர்வ வாத ரோகங்களும் குணமாகும்.

பத்தியம் :—புளி தள்ளி இச்சாபத்தியமாக வைத்தல் நன்று.

## 24. பஞ்சதிக்த கிருதம்

சரக்கு :—

(1) பேய்ப்புடல் ஏழிலைப்பாலை
வேப்பம்பட்டை ஆடாதோடைவேர்
கடுக்காய் நெல்லிக்காய்
தான்றிக்காய் சீந்தில்கொடி

இவைகள் வகைக்குப் பலம் - 1.

(2) பசுவின் நெய் படி - 2.

செய்பாகம் :—முதலாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள சரக்குகளை யெல்லாம் நன்கு இடித்துக் கொஞ்சங் கொஞ்சமாக அம்மிக்கல்லில் வைத்துத் தண்ணீர் தெளித்து வெண்ணெய்போல் அரைத்து ஒரு கிருத பாண்டத்தில் போட்டுப் பசுவின் நெய்யை விட்டுக் கலக்கி அடுப்பில் வைத்துச் சிறுக எரித்து வண்டல் மெழுகுபோல் திரளும் சமயம் வடித்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தக் கிருதத்தில் வேளைக்கு 1 - 1½ தேக்கரண்டி வீதம் தினம் இருவேளை கொடுத்துக் கொண்டு வருக.

தீரும் வியாதி :—பித்தப்பிரகோபத்தினுல் இரத்தக் கொதிப்புண்டாகித் தோல் சம்பந்தமாகக் காணும் கொப்புளம், சொறி, சிரங்கு, புண் முதலியவைகள் குணமாகும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 25. கண்டங்கத்திரிக் கிருதம்

**சரக்கு :—**

| | | | |
|---|---|---|---|
| (1) | கண்டங்கத்திரி இலைச்சாறு | படி | 1 |
| | நெய் | படி | ½ |
| (2) | சிற்றரத்தை | பலம் | ¼ |
| | சிற்றாமுட்டி | ,, | ¼ |
| | நெருஞ்சிவேர் | ,, | ¼ |
| | சுக்கு | ,, | ¼ |
| | மிளகு | ,, | ¼ |
| | திப்பிலி | ,, | ¼ |

**செய்பாகம் :—**இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள சரக்குகளை யெல்லாம் நன்கு இடித்து அம்மிக்கல்லில் வைத்துச் சிறிது தண்ணீர் தெளித்து வெண்ணெய் போல் அரைத்து ஒரு கிருத பாண்டத்தில் போட்டு முதலாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள கண்டங்கத்திரி இலைச்சாற்றையும் பசுவின் நெய்யையும் விட்டுக் கலக்கி அடுப்பில் வைத்துச் சிறுக எரித்துப் பதமுறக் காய்ச்சி வடித்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—**இந்தக் கிருதத்தில் வேளைக்கு 1 - 1½ தேக்கரண்டி அளவு தினம் இருவேளை கொடுத்துக் கொண்டு வருக.

**தீரும் வியாதி :—**காசம், கஷ்டசுவாசம், தொண்டைக்கட்டு, தொண்டைக் கடம் எல்லாம் தீரும்.

**பத்தியம் :—**சீதளமான பண்டங்களை நீக்கி இச்சா பத்தியமாக அன்னங் கொள்ள வேண்டும்.

---

# தைல இலம்பகம்

(குடித்தைல வகுப்பு)

## 1. வாதநாசத் தைலம்

சரக்கு :—(1)

சுக்கு
நற்சீரகம்
கப்புமஞ்சள்
வெள்ளைப்பூண்டு
பெருங்காயம்
ஆமையின் ஓடு
வசம்பு
தேவதாருகட்டை
கஸ்தூரிமஞ்சள்
உத்தாமணிவேர்
மிளகு

இவைகள் வகைக்கு வராகனெடை - 1.

சரக்கு :—(2)

நொச்சியிலைச்சாறு
வீழியிலைச்சாறு
உத்தாமணிச்சாறு
பொடுதலைச்சாறு
சிற்றாமணக்கு நெய்
முடக்கற்றான்சாறு
வெண்சாரணைச்சாறு
பாவட்டையிலைச்சாறு
தேங்காய்ப்பால்

இவைகள் வகைக்குப் படி - 1.

**செய்பாகம் :**—முதலாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள சரக்குகளை யெல்லாம் இடித்துத் தட்டை அம்மிக் கல்லில் வைத்துத் தெங்கின்பாலால் மெழுகுபதமாக அரைத்து ஒரு தைல பாண்டத்தில் போட்டு இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள திரவங்களை விட்டு நன்றாய்க் கலக்கி அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து

வண்டல் மெழுகுபோல் திரளும் சமயம் வடித்துக் குப்பியி லிடுக.

பிரயோகம் :—இந்தத் தைலத்தில் பெரியவர்களுக்கு ந அவுன்ஸ் வீதம் காலை நேரத்தில் கொடுக்க வேண் ம். குழந்தைகள் பருவத்திற்கு ஏற்றவாறு 1 - 2 தேக் ரண்டி அளவு கொடுக்க வேண்டும்.

தீரும் வியாதி :—பெரியவர்களுக்குக் காணும் பல வாத ரோகங்கள் குணமாகும். இந்தத் தைலத்தைக் குழந் தைகட்குக் கொடுக்கும்போது எவ்வளவு கொடிய மாந்த ரோகமாயினும் குணப்படுவது திண்ணம்.

பத்தியம் :—இதற்குப் புளிதள்ளி இச்சாபத்தியம். நாலைந்து முறை பேதி ஆனபின் ஆகாரம் கொள்ள வேண்டும். பாலுண்ணும் குழந்தைகட்குக் கொடுக்கும் போது தாய் பத்தியமாக இருத்தல் வேண்டும்.

## 2. வேறு முறை

சரக்கு :—(1)

| | |
|---|---|
| கல்லுப்பு | வளையலுப்பு |
| அட்டுப்பு | இந்துப்பு |
| பொட்லுப்பு | கறுப்புப்பு |
| எவாச்சாரம் | நவாச்சாரம் |
| வெங்காரம் | படிக்காரம் |
| சவுக்காரம் | |

இவைகள் வகைக்குப் பலம் - ½.

| | |
|---|---|
| கடுக்காய் | நெல்லிவற்றல் |
| தான்றிக்காய் | |

இவைகள் வகைக்குப் பலம் - 1.

சரக்கு :—(2)

| | | |
|---|---|---|
| சுத்தி நேர்வாளம் | பலம் | 2½ |
| தோலுரித்த வெள்ளைப்பூண்டு | ,, | 2½ |

சரக்கு :—(3)

| | | |
|---|---|---|
| சிற்ருமணக்கெண்ணெய் | படி | 2 |
| ஆவின் பால் | ,, | 1 |
| தேங்காய்ப்பால் | ,, | 1 |
| எலுமிச்சம்பழச்சாறு | ,, | ¼ |

செய்பாகம் :—மூன்ருவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள நான்கு திரவங்களையும் ஒரு தைல பாண்டத்தில் விட்டு அதில் முதலாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள சரக்குகளைப் பொடித்துச் சன்னமாக அரைத்துப் போட்டும், இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள இரண்டு சரக்குகளை அம்மிக்கல்லில் வைத்து மெழுகுபோலரைத்துப் போட்டும் கிளறி அடுப்பில் வைத்துப் பதமுறக் காய்ச்சி வடிகட்டிச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்த எண்ணெயைத் தினம் ஒரு வேளை காலை நேரத்தில் வெறும் வயிற்றில் ½ - 1 காசு அளவு நீராகாரத்தில் போட்டுக் கலக்கிக் கொடுக்கவும். இதனால் 5 - 6 முறை பேதியாகும்.

தீரும் வியாதி :—பித்தவாயு, குன்மவாயு, மேகவாயு, சூலை, பிடிப்பு, திமிர்வாதம், சர்வாங்கவாதம் குணமாகும்.

பத்தியம் :—முழுத்துவரையை அரை புளிப்புக்கூட்டி குழம்பு செய்து கொள்ளவும். தாளிப்பதற்கு நெய், சீரகம் ஆகும்.

குறிப்பு :—இந்த எண்ணெயைத் தேக திடத்திற்கு ஏற்றவாறு கொடுத்த அளவில் பேதி அதிகப்படின் மூ

முறை குறைத்துக் கொள்ளவும். சரிவர 4-5 முறை ஆகாவிட்டால் மறுமுறை சிறிது அதிகப்படுத்திக் கொள்ளவும்.

## 3. குழந்தைகளுக்கு மாந்த எண்ணெய்

சரக்கு :—(1)

முசுமுசுக்கை இலைச்சாறு
நுணா இலைச்சாறு
ஆடாதோடை இலைச்சாறு
நீர்பிரமி இலைச்சாறு
பொடுதலை இலைச்சாறு
துளசியிலைச்சாறு
கையாந்தகரை இலைச்சாறு
வல்லாரை இலைச்சாறு
உத்தாமணி இலைச்சாறு

இவைகள் வகைக்குப் படி வீசம்.

சரக்கு :—(2)

கடுகுரோகணி
வாய்விளங்கம்
சுக்கு
பறங்கிப்பட்டை
சிறுதேக்கு
சண்பகப்பூ
மிளகு

இவைகள் வகைக்குப் பலம் - $\frac{1}{8}$.

சரக்கு :—(3)

சீந்தில்கொடிவேர்
வெள்ளைக்காக்கட்டான்வேர்

இவைகள் வகைக்குப் பலம் - $\frac{1}{2}$.

சரக்கு :—(4)

சிற்றாமணக்கெண்ணெய் படி - $\frac{1}{4}$.

செய்பாகம் :—முதலாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள ஒன்பது திரவங்களையும் ஒரு தைல பாண்டத்தில் விட்டு வைத்துக்கொள்க. அப்பால் இரண்டாவது அங்

கத்தில் குறிப்பிட்டுள்ள ஏழு சரக்குகளை இடித்துச் சூர ணித்தும், மூன்ருவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள இரண்டு வேர் தினுசுகளை முலைப்பால் விட்டு அரைத்தும், ஒருமிக்கச் சேர்த்து முன் சித்தப்படுத்திய தைலப் பாண் டத்தில் போட்டுக் கலக்கி நான்காவது அங்கத்தில் குறிப் பிட்ட சிற்ருமணக்கெண்ணெயைவிட்டு அடுப்பிலேற்றி எரித்துப் பதமுறக் காய்ச்சி வடித்துக்கொள்க.

பிரயோகம் :—ஐந்து வயதுக்குட்பட்ட குழந்தை களுக்கு வயதுக்கு ஏற்றபடி 2 - 3 தேக்கரண்டி அளவு முலைப்பால் சேர்த்துக் குலுக்கிக் கொடுக்கவும் 4 - 5 முறை பேதியாகும்.

தீரும் வியாதி :—குழந்தைகளுக்குக் காணும் சகல மாந்தமும் குணமாகும்.

பத்தியம் :—தாய் இச்சாபத்தியமாக இருந்து பால் புகட்டவேண்டும்.

## 4. கலிங்கத் தைலம் ✓

சரக்கு :—

வரிக்குமட்டிக்காய்ச்சாறு மலைவேப்பிலைச்சாறு
வெள்ளைவெங்காயச்சாறு ஆமணக்கு நெய்
எலுமிச்சம்பழ ரசம்

இவைகள் வகைக்குப் படி - ½.

செய்பாகம் :—மேற்கூறப்பட்டவைகளை யெல்லாம் ஒரு தைலப் பாண்டத்தில்விட்டு அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து வண்டல் மெழுகுபதமாகத் திரளும் சமயம் வடித்துக் குப்பியிலிடுக.

**பிரயோகம்: —**இந்தத் தைலத்தில் தினம் ஒருவேளை காலை நேரத்தில் மாதாந்த ருதுகாலமாகிய மூன்று நாட்களிலும் நீராகாரத்தில் கலந்து கொடுக்கவேண்டும்.

**தீரும் வியாதி :—**பொதுவாக ஸ்திரீகளுக்குக் கூறப்பட்ட ஆதிமலடு, காகமலடு, கதலிமலடு, கருப்பமலடு என்னும் நான்கில் ஆதிமலடு நீங்கலாக மற்ற மூன்றும் குணமாகிச் சந்தான பேரின்பத்தை அடைவார்கள். அப்பொழுது மாதாந்த ருதுகாலத்தில் காணும்வலி, இரத்தத்தை வெளிப்படுத்தாத ரத்தகுன்மம், மலட்டுப் புழுவினுல் ஏற்பட்ட உபத்திரவம் எல்லாம் இருந்த இடம் தெரியாமல் ஒழியும். இந்தத் தைலத்தை பேதைப்பெண் பருவத்திற்கு முன்னும் பேரிளம்பெண் பருவத்திற்குப் பின்னும் கொடுக்கக் கூடாது.

**பத்தியம் :—**உப்பில்லாத பத்தியம், அதாவது வெந்நீர் சாதம், இப்படி 3-நாள் இருந்து நான்காவது நாளும் அதே பத்தியத்தைக் கவனித்து ஓமம் தேய்த்து வெறும் ஸ்நானம் செய்து இச்சாபத்தியமாக அன்னங் கொள்ளவும். ஏழாவது நாள் ஏதேனும் ஒரு தைலங்கொண்டு ஸ்நானம் செய்து வேண்டியவற்றைப் புசிக்கலாம். இந்த எண்ணெயை மூன்று மாதம் மாதாந்த ருதுகாலத்தில் அம்மூன்று நாளாகச் சாப்பிட எவ்விதத்திலும் நன்மை அடைவர்.

## 5. சித்தாதி யெண்ணெய்

சரக்கு: —(1)

| | | |
|---|---|---|
| உத்தாமணி இலைச்சாறு | சேர் | 8 |
| தேங்காய்ப்பால் | ,, | 8 |
| வெங்காயச் சாறு | ,, | 1 |

| | | |
|---|---|---|
| * கடுக்காய்க் கியாழம் | ,, | 1 |
| சிற்றாமணக்கெண்ணெய் | ,, | 1 |

சரக்கு :—2.

| | | |
|---|---|---|
| கடுக்காய்த்தோல் | கழஞ்சி | 1 |
| பூண்டு | ,, | 1 |
| பெருங்காயம் | ,, | 1 |
| கருஞ்சீரகம் | ,, | 1 |
| திப்பிலி | ,, | 1 |
| வெங்காரம் | ,, | 1 |
| காட்டெருமைப்பால் | ,, | 1 |
| இந்துப்பு | ,, | 1 |
| சுத்திவாளம் | பலம் | 1 |

செய்பாகம் :—முதலாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள ஒரு சேர் கடுக்காய்த்தோலைப் பஞ்சுபோல் நசுக்கி ஒரு குடிநீர்ப் பாண்டத்தில் போட்டு எட்டுசேர் சுத்தசலம் விட்டு அடுப்பில் வைத்து எரித்து ஒருசேர் அளவிற்குச் சுண்டி வரும்போது கீழிறக்கி ஆறவிட்டுப் பிசைந்து வடித்து ஒரு தைலப்பாண்டத்தில் விட்டு, அவ்வங்கத்திலுள்ள இதர திரவங்களை யெல்லாம் விட்டுக் கலக்கி வைத்துக் கொள்க. இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட்டவைகளில் இடித்துச் சூரணிக்க வேண்டியவற்றைச் சூரணித்து, மிகுதியுள்ள சரக்குகளுடன் கூட்டிக் கல்வத்திலிட்டு மெழுகு பதமாக அரைத்து வழித்து முன் சித்தப்படுத்தின தைலப்பாண்டத்தில் போட்டுக் கலக்கி அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து எண்ணெயை விரலால் தொட்டுப் பார்க்கச் சுத்தசலம்போல் தெளிவடைந்து இருக்கவும். வண்டலானது சிறிதும் ஈரமில்லாமல் கெட்டி மெழுகுபோல் திரளவும் பதங்கண்டு வடித்து ஆறவிட்டுச் சீசாவில் பத்திரப்படுத்துக.

* விபரம் செய்பாகத்தில் காண்க.

பிரயோகம்:—இந்த எண்ணெயைத் தினம் ஒரு வேளை காலை நேரத்தில் ஒரு தேக்கரண்டி அளவு காப்பி, டீ, சூப்பு முதலிய அனுபானங்களில் கொடுக்கவும். 5—7 முறை பேதியாகும். பேதி அதிகமானால் மறுமுறை எண்ணெயைக் குறைத்துக் கொள்ளவும். பேதி சரிவர ஆகாவிட்டால் சிறிது எண்ணெயை அதிகப்படுத்திக்கொள்ளவும்.

தீரும் வியாதி:—சிரங்கு, தாகம், விக்கல், வாந்தி, குன்மம், கவுசை, கிரந்தி, அரையாப்பு, கண்ணெரிவு, பயித்தியம், சூலை, கொறுக்கு, கர்ப்பச்சூலை, பவுத்திரம், நாவடைப்பு, மண்டையிடி, வாய்ப்புண், ஊதுவாயு முதலிய பல ரோகங்கள் குணமாகும். இந்த எண்ணெயை ஒருமுறை மூன்று நாள் தொடர்ச்சியாக கொடுக்கவேண்டும். இப்படிப் பதினைந்து நாளிற்கு ஒருமுறையாக நீடித்துச் சிலமுறை யுட்கொள்ள அசாத்தியமென்று கருதப்பட்ட நோய்களாக இருப்பதும் குணமாவது திண்ணம்.

பத்தியம்:—இல்லையாயினும், மீன், கருவாடு, இரால் மீன், முட்டை முதலியவற்றைத் தள்ளி இச்சாபத்தியமாக இருத்தல் வேண்டும்.

## 6. சுகபேதி எண்ணெய்

சரக்கு:—

| | |
|---|---|
| சுத்திசெய்த வாளம் | பலம் 1 |
| தேங்காய்ப்பால் | படி $\frac{1}{4}$ |
| ஆவின்பால் | ,, $\frac{1}{4}$ |
| விளக்கெண்ணெய் | பலம் 1 |
| சுத்திபூரம் | வராகனெடை 1 |

செய்பாகம்:—முதலில் வாளம் பூரம் இவ்விரண்டையும் கல்வத்திலிட்டு ஐந்து எலுமிச்சம்பழச்சாற்றால் நன்

ருய் அரைத்து மிகுதியுள்ள திரவங்களுடன் கூட்டி ஒரு பழகின தைலப் பாண்டத்தில் விட்டு அடுப்பிலேற்றிச் சிறுக எரித்து எண்ணெய் வேறு வண்டல் வேருகப் பிரிந்த உடன் காலதாமதம் செய்யாமல் வடித்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்த எண்ணெயில் பெரியவர்களுக்குக் காலை நேரத்தில் 10-துளி எலுமிச்சம்பழரசம் சர்க்கரை கூட்டிய பானகத்திலாவது, ஆரோக்கியத்திற்காகச் சாப்பிடும் காப்பியிலாவது கூட்டிக் கொடுக்க 7 - 8 முறை பேதியாகும். இந்த அளவு சில தேக சுபாவத்திற்கு அதிகமாகத் தோற்றினுல் மறுநாள் குறைத்துக் கொள்ளவும். பேதி சரிவர ஆகாவிடின் சிறிது அதிகப்படுத்திக் கொள்க.

தீரும் வியாதி :—இந்த எண்ணெயைத் தினந்தோறும் தொடர்ச்சியாக மூன்றுநாள் காலை நேரத்தில் கொடுத்துவரப் பெரும்வயிறு என்று சொல்லப்பட்ட மகோதரம் சுருக்கமடையும். மூன்று மாதத்திற்கு ஒருமுறை சுகபேதியாகக் கொடுத்துவரின் எந்தப் பிணிகளையும் அணுக வொட்டாமல் திரிதோஷங்களைத் திட்டப்படுத்தி வரும்.

பத்தியம்;—4 - 5 முறை பேதியான பின் சூப்புசாதம், மிளகுநீர் சாதம உட்கொள்ளலாம்.

## 7. கெந்தக எண்ணெய்

சரக்கு :—

| | | |
|---|---|---|
| சுத்திசெய்த கெந்தகம் | பலம் | 2½ |
| வேப்பஙகொட்டைப்பருப்பு | ,, | 2 |
| சுத்தி நேர்வாளம் | ,, | 2 |
| வேப்பெண்ணெய் | ,, | 1 |
| வாய்விளங்கம் | ,, | 1 |
| | ,, | 1 |

செய்பாகம் :—மேற் கூறப்பட்ட ஐந்து சரக்குகளை யும் கல்வத்தில் போட்டு மெழுகுபோலரைத்துச் சிறு சுண்டக்காய் அளவு உருண்டையாகத் திரட்டி வைத்துக் கொள்க. பின்பு ஒரு பொருத்தமான சிறு கலயத்தின் அடியில் 3—4 துவாரங்கள் போட்டு அதற்குள் முன் செய்து வைத்துள்ள உருண்டைகளை வைத்து மேல் அகல்மூடிச் சீலைசெய்து வைத்துக் கொள்க. பூமியில் பள்ளம் தோண்டி ஒரு சிறிய எனுமில்ட் கோப்பையைத் தரைமட்டத்திற்கு இருக்கும்படி புதைத்து அதன் மேல் சீலைசெய்து வைத்துள்ள கலயத்தை வைத்து 5-6 வறட்டிகளைக் கொண்டு புடமடுக்கித் தீ மூட்டவும். சூடு நன்றாய் ஆறினபின் மேல் உள்ள சாம்பலை யெல்லாம் ஜாக்கிரதையாகத் தைலத்தில் விழாமல் அப்புறப்படுத்தி மேல் கலயத்தை எடுக்க அடியில் உள்ள எனுமில்ட் கோப் பையில் தைல மிருக்கும். இதைச் சீலையில் வடிகட்டிப் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தத் தைலத்தில் தினம் ஒருவேளை காலையில் இரண்டு துளி தமிரில் விட்டுக் கொடுக்க 7-8 முறை பேதியாகும். இப்படித் தொடர்ச்சியாக 3-நாள் கொடுக்க வேண்டும். பேதி அதிகமானுல் அளவை மறு நாள் குறைத்துக் கொள்க. பேதி சரிவர ஆகா விட்டால் சிறிது அளவு அதிகப்படுத்திக் கொள்க. இப்படிக் குழித் தைலம் இறக்கியது துளி வருவதற்குப் பக்குவப்படாமல் கெட்டியாக இருந்தால் சிறிது வேப்பெண்ணெய் விட்டுக் கலக்கித் துளி வருவதற்கு இசையுமாறு செய்து கொள் ளவும்.

தீரும் வியாதி :—படை, சொறி, சிரங்கு, ஆருத விரணம் குணமாகும். குன்ம ரோகத்தால் வயிற்றுவலி மிகுந்து கஷ்டப்படுவோர்க்குக் கொடுக்கக் குணத்தைக் கொடுக்கும்.

பத்தியம் :—புளி தள்ளி இச்சாபத்தியம்.

## 8. கருடன்கிழங்கு எண்ணெய்

சரக்கு :—(1)

| | |
|---|---|
| பச்சைக்கருடன்கிழங்கு | பலம் 10 |
| சங்கங்குப்பிச்சாறு | படி ½ |
| கரிசாலைச்சாறு | ,, ½ |
| வெள்ளைவெங்காயச்சாறு | ,, ½ |
| சிறுசெருப்படைச்சாறு | ,, ½ |
| ஆண்கழுதை சாணத்தில் பெண்கழுதை மூத்திரம்விட்டுக் கரைத்து வடிகட்டியது | ,, ½ |
| சிற்றாமணக்கெண்ணெய் | ,, 1½ |

சரக்கு :—(2)

ஜாதிக்காய் மிளகு
சிவனார்வேம்பு பறங்கிச்சக்கை

இவைகள் வகைக்குப் பலம் - 1.

செய்பாகம் :—முதலில் பச்சைக்கருடன் கிழங்கின் மேல்தோல் சீவி நன்ராய் அரைத்து ஒரு தைல பாண்டத்தில் போட்டு அதனில் சங்கங்குப்பிச்சாறு முதலாகச் சிற்றாமணக்கெண்ணெய் ஈருக உள்ள திரவங்களை விட்டுக் கலக்கி இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட்ட நான்கு சரக்குகளையும் நன்கு இடித்து அம்மிக்கல்லில் வைத்துச் சிறிது வெங்காயச்சாறுவிட்டு அரைத்துப்போட்டு உறவாக்கி அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்து வண்டல் மெழுகுபதமாக வரும்போது வடித்துச் சீசாவில் பத்திரப் படுத்துக.

பிரயோகம் :—இந்த எண்ணெயைத் தினம் ஒரு வேளை காலையில் ¼ - ½ அவுன்ஸ் அளவு இரண்டு மூன்று முறை மலம் போகும்படியான அளவாகச் சரிப்படுத்திக் கொண்டு 5 - 7 நாள் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—மேகம்-21, படை, கருமேகம், வாயு, அரையாப்பு, கொறுக்கு, சொறி, சிரங்கு, மேகரணம் முதலியவைகள் குணமாகும்.

குறிப்பு :—குழந்தைகட்கு உண்டான கரப்பான குணமாகத் தினம் ஒரு வேளை காலை நேரத்தில் ஒரு காசு அளவு 3 - நாள் கொடுக்கவும்.

பத்தியம் :—பேதி ஆனபின் இச்சாபத்தியமாக அன்னம் கொள்ளவும்.

## 9. சர்வமேகத்தெண்ணெய்

சரக்கு :—

| | | |
|---|---|---|
| நிலப்பனங்கிழங்கு | பலம் | 1 |
| அமுக்கராக்கிழங்கு | ,, | 1 |
| ஆகாசகருடன் கிழங்கு | ,, | 1 |
| நன்னாரிவேர் | ,, | 1 |
| சுக்கு | ,, | 1 |
| சீரகம் | ,, | ½ |
| பூமிசர்க்கரைக்கிழங்கு | ,, | 1 |
| சௌரிகொடிக்கிழங்கு | ,, | 1 |
| வெள்ளைவெங்காயம் | ,, | 4 |
| சிற்றாமணக்கெண்ணெய் | விசை | 1 |

செய்பாகம் :—மேற்கூறப்பட்ட * நிலப்பனங்கிழங்கு முதல் சௌரிக்கொடிக்கிழங்கு ஈறாக உள்ள சரக்குகளில் இடிக்கவேண்டியவைகளை இடித்து, மற்றச் சரக்குகளுடன் கூட்டிப் போதிய அளவு வெங்காயச்சாறுவிட்டு நன்கு

* இந்தக் கிழங்குவேர் இனங்கள் கூடியவரையிலும் பச்சையாக இருந்தால் நன்று. அப்படிக் கிடைப்பது அரிதாக இருந்தால் உலர்ந்துள்ளதைக் கூட்டிக்கொள்க.

அரைத்து ஒரு தைலப்பாண்டத்தில் போட்டு, அதனில் வில்லை வில்லையாக அரிந்த வெங்காயத்தையும் சிற்றா மணக் கெண்ணெயையும் விட்டு எல்லாம் நன்றாய் உறவா கும்படி கலக்கி அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து, அரிந்து போட்ட வெங்காயம் மிதக்கும் சமயம் வடித்து ஆறவிட்டுக் குப்பியில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—**இந்த 'எண்ணெயைத் தினம் ஒரு வேளை காலை நேரத்தில் 1—$\frac{3}{4}$ அவுன்ஸ் வீதம் 3 - 5 நாள் கொடுக்கவும்.

**தீரும் வியாதி:—**அரையாப்புக்கட்டி, கைகால் பிடிப்பு, கொறுக்கு, பாண்டு, வெள்ளை, கண்டமாலை, கண்டமாலை யின் ஆருத ரணம், மேகரணம், சொறி, சிரங்கு, படை, வீக்கம் குணமாகும்.

**பத்தியம் :—**மீன், கருவாடு, இரால்மீன், மாமிசம், முட்டை, புளி ஆகாது. வறுத்த உப்பு சுட்ட புளியோடு இச்சாபத்தியமாக அன்னங் கொள்ளவும்.

## 10. வேறு முறை

**சரக்கு :—(1)**

| | | |
|---|---|---|
| நொச்சியிலைச்சாறு | படி | $\frac{1}{2}$ |
| முசுமுசுக்கையிலைச்சாறு | ,, | $\frac{1}{2}$ |
| கௌதும்பைச்சாறு | ,, | $\frac{1}{2}$ |
| நற்சங்கன் இலைச்சாறு | ,, | $\frac{1}{2}$ |
| தூதுவளை இலைச்சாறு | ,, | $\frac{1}{2}$ |
| நிலப்பனங்கிழங்குச்சாறு | ,, | $\frac{1}{2}$ |
| துத்தியிலைச்சாறு | ,, | $\frac{1}{2}$ |
| கழுதை மூத்திரம் | ,, | $\frac{1}{2}$ |
| சிற்றாமணக்கெண்ணெய் | ,, | $\frac{1}{4}$ |

சரக்கு :—(2)

| | |
|---|---|
| சுக்கு | பலம் $\frac{1}{2}$ |
| சீரகம் | ,, $\frac{1}{2}$ |
| பறங்கிச்சக்கை | ,, $\frac{1}{2}$ |
| மாவிலிங்கப்பட்டை | ,, $\frac{1}{2}$ |

செய்பாகம் :—முதலாவது அங்கத்தில் கூறப்பட்ட எல்லாத் திரவங்களையும் ஒரு தைலப் பாண்டத்தில் விட்டுக் கலக்கி அதனில் இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட்ட நான்கு சரக்குகளையும் நன்கு இடித்து அம்மியில் வைத்து மேற்கூறப்பட்ட ஏதேனும் ஒரு மூலிகை சாற்றால் மெழுகுபதமாக அரைத்துப்போட்டுக் கலக்கி அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்துப் பதமுறக் காய்ச்சி வடிகட்டிக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்த எண்ணெயில் தினம் ஒருவேளை காலை நேரத்தில் $\frac{1}{2}$ - $\frac{3}{4}$ அவுன்ஸ் ஆக 5-நாள் கொடுத்து 6-வது நாள் மருந்தில்லாமல் விட்டுவைத்து 7-வது நாள் தைல ஸ்நானம் செய்விக்கவும். இது ஒரு முறை. இப்படி 3 - 4 முறை கொடுக்க மேகரோகம் குணமாகும்.

தீரும் வியாதி:–மேகப்படை, சொறி, சிரங்கு, கண்டமாலை, மேகரணம், அரையாப்பு, கொறுக்கு, கிரந்தி, குட்டம் முதலியவைகள் குணமாகும்.

பத்தியம் :—முன்முறையில் கூறப்பட்டதேயாகும்.

## 11. மேகவாயுவுக்கு இராஜசிந்தாமணி எண்ணெய்

சரக்கு :—(1)

சங்கம்வேர்
பூவரசம்பட்டை
மருதம்பட்டை
வேங்கைப்பட்டை
மணிப்புங்கம்பட்டை
கூவிளம்பட்டை

| | |
|---|---|
| வேப்பம்பட்டை | கொன்றைப்பட்டை |
| உதியம்பட்டை | அழிஞ்சில்பட்டை |

இவைகள் வகைக்குப் பலம் - 10.

சரக்கு :—(2)

| | |
|---|---|
| சீமையகத்தி இலை | தரைவல்லாரை இலை |
| நீர்பிரமி இலை | பொற்றலைக்கையாந்தகரை [இலை |
| கரிசாலை இலை | வெள்ளருகு இலை |
| சின்னி இலை | கரப்பான்பூண்டு இலை |
| சிறுபீளை | முசுமுசுக்கை இலை |
| கோவை இலை | ஓஞ்ஞான்கொடி இலை |
| சிறுசெருப்படை | கீழ்காய்நெல்லி இலை |
| பொன்னாங்காணி இலை | காட்டவரை இலை |
| ஆற்றுத்தும்மட்டிக்காய் | பூவரசங்காய் |
| தாழையவிழுது | |

இவற்றின் சாறு வகைக்குப் படி - ½.

சரக்கு :—(3)

| | |
|---|---|
| நிலப்பனங்கிழங்கு | பூமிசர்க்கரைக்கிழங்கு |
| கருடங்கிழங்கு | மெருகன்கிழங்கு |
| உரலாமணக்கின்கிழங்கு | அமுக்கராக்கிழங்கு |
| தண்ணீர்விட்டான்கிழங்கு | |

இவைகள் வகைக்குப் பலம் - 2½.

சரக்கு :—(4)

| | |
|---|---|
| பறங்கிச்சக்கை | வெட்பாலையரிசி |
| பிரப்பங்கிழங்கு | நீரடிமுத்து |
| வாய்விளங்கம் | மராட்டிமொக்கு |
| ஏலக்காய் | சுக்கு |
| ஜாதிக்காய் | மாசிக்காய் |
| வால்மிளகு | தேசாவரம் |
| வெண்மிளகு | கருஞ்சீரகம் |

இவைகள் வகைக்குப் பலம் - 1¼.

சரக்கு :—(5)

| | |
|---|---|
| புங்கம்பால் | ஆவின்பால் |
| தேங்காய்ப்பால் | கழுதைப்பால் |

இவைகள் வகைக்குப் படி - ½.

**செய்பாகம் :—**முதலாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள பத்துவிதமான பட்டைகளைச் சிறு துண்டுகளாக நறுக்கிப் பஞ்சுபோல் சிதைத்து ஒரு குடிநீர்ப் பாண்டத்தில் போட்டு எட்டுபடி தண்ணீர்விட்டு அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்து ஒருபடி அளவிற்குச் சுண்டிவருஞ் சமயம் கீழிறக்கி ஆறவிட்டுப் பிசைந்து வடிகட்டி ஒரு தைலப் பாண்டத்தில் விட்டு, அதனுடன் இரண்டு வீசை சிற்றாமணக்கெண்ணெயையும், இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள பத்தொன்பது விதமான மூலிகைகளின் சாற்றையும் கூட்டி வைத்துக் கொள்க. அப்பால் மூன்றாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள ஏழு விதமான கிழங்குகளைப் பொடிப் பொடியாக அரிந்தும், நான்காவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள பதினான்கு கடைச்சரக்குகளை இடித்துச் சூரணித்து ஆவின்பால் கொண்டு அரைத்தும், ஒருமிக்கத் தைல பாண்டத்தில் போட்டுக் கலக்கி அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்துக் கொதிவருஞ் சமயம் ஐந்தாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள நான்கு பால் இனங்களை விட்டுக் கிளறிப் பதமுறக் காய்ச்சி வடித்துக் கொள்வதுடன் எண்ணெய் சேதப்படாம லிருக்கும் பொருட்டு வடிகட்டிய திப்பியைக் கிட்டி கட்டிச் சுத்தமாகப் பிழிந்து ஆறவிட்டுச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—**இந்த எண்ணெயில் தினம் ஒரு வேளை காலை நேரத்தில் வெறும்வயிற்றில் ¼ - ½ பலம் கொடுக்கவும். இதனால் 3-4 முறை மலம் போக வேண்டும். கொடுத்த அளவில் மலம் சரிவர 3 - 4 முறை போகா

விடின், மறுநாள் தேகதிடத்திற்கு ஏற்றவாறு அதிகப் படுத்திக் கொள்ளவும். ஒரு சமயம் கொடுத்த அளவு அதிகமென்று உணரின், மறுநாள் அளவைக் குறைத்துக் கொள்ளவும். இந்த எண்ணெயை ஒருமுறை குறைந்தது 3-5 நாள் தேகபலம் அறிந்து கொடுக்கவும்.

தீரும் வியாதி :—கைகால் குடைச்சல், கைகால் பிடிப்பு, கிரந்தி, அரையாப்பு, கொறுக்கு, மேகப்படை, ஊறல்படை, மேகரணம் முதலிய பல பிணிகள் குணமாகும்.

பத்தியம் :—புளி தள்ளி இச்சாபத்தியம். மாமிச வகைகள் கூடாது.

(முடித்தைல வகுப்பு)

## 12. ஆதொண்டைத் தைலம் ✓

சரக்கு :—

| | | |
|---|---|---|
| கம்பஞ்சோற்றுச்சலம்விட்டு இடித்துப் பிழிந்த ஆதொண்டைச்சாறு | படி | 1 |
| ஆவின் பால் | ,, | 1 |
| நல்லெண்ணெய் | ,, | 1 |
| மிளகு | பலம் | 2 |

செய்பாகம்:—ஒரு தைல பாண்டத்தில் முற்கூறப்பட்ட மூன்று திரவங்களையும் விட்டு மிளகை ஒன்று மிரண்டுமாக நறுக்கிப் போட்டு அடுப்பிலேற்றி எரித்து வண்டலானது மெழுகுபதம் வரும்படியாகவும், மிளகு எண்ணெயின்மேல் மிதக்கும்படியாகவும் கவனித்து வடித்து எடுத்துக் கொள்ளவும். அப்பால் வண்டலில் உள்ள மிளகையெல்லாம் எடுத்துக் கல்வத்தில் போட்டு

நன்ருய் அரைத்து வடித்து வைத்துள்ள தைலத்தில் போட்டுக் கலக்கிக் குப்பியிலிடுக.

**பிரயோகம் :—**அதிகாலையில் இந்தத் தைலத்தைச் சிரசிற்கிட்டுத் தேய்த்துப் பின் சிகைக்காய் இட்டு எண்ணெய்ச் சிக்கறத் தேய்த்து வெந்நீர் கொண்டு ஸ்நானம் செய்யவும்.

**தீரும் வியாதி :—**இந்தத் தைலத்தைக் கொண்டு வாரத்திற்கு ஒருமுறை வீதம் சில நாள் ஸ்நானம் செய்ய மண்டையிடி, தலைவலி, கண் குத்தல் குணமாகும்.

**பத்தியம் :—**ஸ்நானம் செய்த தினம் பகல் நித்திரையும் அலைச்சல் திரிச்சலும் கூடாது.

## 13. கபாலபீநச நாசத் தைலம்

**சரக்கு :—**

| | |
|---|---|
| சுக்கு | பெருங்கிழங்கு |
| கண்டங்கத்திரி வேர் | ஏலம் |
| தேசாவரம் | கிராம்பு |
| இலவங்கப்பத்திரி | அதிமதுரம் |
| நற்சீரகம் | கருஞ்சீரகம் |

இவைகள் வகைக்குப் பலம் - 1.

**செய்பாகம் :—** இவற்றில் இடிக்க வேண்டியவற்றை இடித்து மற்றச் சரக்குகளுடன் கூட்டி அம்மிக்கல்லில் வைத்து தேவையான அளவு முலைப்பால் விட்டுக் குழம்பு பதமாக அரைத்து ஒரு தைல பாண்டத்தில் போட்டு ஒரு படி நல்லெண்ணெய் விட்டுக் கலக்கி அடுப்பிலேற்றி சிறு தீயாக எரித்துப் பதமுறக் காய்ச்சி வடித்துக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்தத் தைலத்தைக்கொண்டு வாரம் ஒருமுறை ஸ்நானம் செய்து வருக.

தீரும் வியாதி :—தலைவலி, பீநசம், சந்நிதோஷம், நாசியில் சதா நீர் வடிகின்ற நீர்ப்பீநசம், சயித்தியத்தால் அடுத்து அடுத்து வரும் தும்பல், கண்ணீர் வடிதல் நீங்கும்.

பத்தியம் :—அலைச்சல், திரிச்சல், பகல் நித்திரை கூடாது.

## 14. நேத்திரரோக ஸ்நானத் தைலம் ✓

சரக்கு :—

| | |
|---|---|
| சந்தனத்தூள் | தேவதாரு |
| அதிமதுரம் | விலாமிச்சை |
| செங்கழுநீர்க்கிழங்கு | மிளகு |
| நெல்லிவற்றல் | தனியா |
| கோஷ்டம் | பிரமி |
| வால்மிளகு | கசகசா |
| இலவங்கப்பத்திரி | கருஞ்சீரகம் |

இவைகள் வகைக்குப் பலம் - $\frac{1}{2}$.

செய்பாகம் :—இவற்றை இடித்துச் சூரணித்து அம்மிக்கல்லில் வைத்து ஆவின்பால் விட்டு மெழுகு பதமாக அரைத்து ஒரு தைலபாண்டத்தில் போட்டு $\frac{1}{2}$-படி ஆவின் பாலும் 1-படி நல்லெண்ணெயும் கூட்டிக் கலந்து அடுப்பில் வைத்துச் சிறுக எரித்துப் பதமுறக் காய்ச்சி வடித்துக் குப்பியி லிடுக.

பிரயோகம் —இந்தத் தைலத்தைக்கொண்டு வாரம் இருமுறை ஸ்நானம் செய்து வருக.

தீரும் வியாதி :—கண்ணீர் வடிதல், கண் புகைச்சல் கண்ணொளி மங்கல், காமாலேயினுல் நேர்ந்த பார்வை மந்தம் குணமாகும்.

பத்தியம் :—ஸ்நானம் செய்த தினம் புளி தள்ளி இச்சாபத்தியமாக அன்னங் கொள்வதுடன் பகல் நித்திரை நீக்கவும்.

## 15. ருத்திராங்க சந்நித் தைலம்

சரக்கு :—

| | |
|---|---|
| கொம்பரக்கு | அதிமதுரம் |
| நாபி | ஜாதிப்பத்திரி |
| சந்தனத்தூள் | பொரிகாரம் |
| அகில்கட்டை | பற்பாடகம் |

இவைகள் வகைக்குப் பலம் - ½.

செய்பாகம் :—இவற்றை யெல்லாம் நன்கு இடித்து அம்மிக்கல்லில் வைத்துப் பசுவின்பால் விட்டு நெகிழ அரைத்து ஒரு தைலபாண்டத்தில் போட்டு ½-படி பசுவின் பாலும் ½-படி நல்லெண்ணெயும் கூட்டிக் கலக்கி அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்துப் பதமுறக் காய்ச்சி வடித்துக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்தத் தைலத்தைக் கொண்டு வாரம் ஒருமுறை ஸ்நானம் செய்து வருக.

தீரும் வியாதி :—பிடரிவலி, தலைவலி, மண்டைக் குத்து, நீர்ப்பீநசம், சயித்தியம், சன்னி தோஷம் குணமாகும்.

பத்தியம் :—ஸ்நானம் செய்த தினம் அலைச்சல், திரிச்சல், பகல் நித்திரை கூடாது.

## 16. பலா அரக்கு தைலம்

சரக்கு :—

| | | | |
|---|---|---|---|
| (1) | சிற்ருமுட்டிவேர் | பலம் | 5 |
| | கொம்பரக்குத்தூள் | ,, | 2½ |
| | அமுக்கராவேர் | ,, | 5 |
| | புளித்த மோர் | படி | ½ |
| | நல்லெண்ணெய் | ,, | 1 |
| (2) | முள்ளி | எட்டி | |
| | விலாமிச்சு | சீந்தில் | |
| | பொன்முசுட்டை | சிற்ருமுட்டி | |
| | நன்னாரிவேர் | சாரணை | |
| | சிறுகீரைவேர் | கோஷ்டம் | |
| | அதிமதுரம் | சுக்கு | |
| | மஞ்சள் | கோரைக்கிழங்கு | |
| | ஏலம் | கிராம்பு | |
| | சிற்றரத்தை | மோடி | |
| | ஜாதிக்காய் | தகரைவித்து | |
| | செவ்வல்லிக்கொடி | தேவதாரு | |
| | இலவங்கப்பத்திரி | | |

இவைகள் வகைக்கு கழஞ்சு - 1.

**செய்பாகம் :—**முதலாவது அங்கத்தில் கூறப்பட்ட சிற்ருமுட்டி வேரைச் சிறு துண்டுகளாக நறுக்கிப் பஞ்சு போல் நசுக்கி ஒரு குடிநீர் பாண்டத்தில் போட்டு 5-படித் தண்ணீர் விட்டு அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து அரை படி அளவிற்குச் சுண்டி வரும்போது கீழிறக்கி ஆற விட்டு வடித்து வைத்துக் கொள்க. கொம்பரக்குத்தூளை ஒரு சீலையில் தளர்ச்சியாக முடிச்சுக்கட்டி அதனை, மூன்று படித் தண்ணீர் விட்டு வைத்துள்ள ஒரு குடிநீர்ப் பாண்டத்தில், டோலா யந்திரமாகத் தண்ணீரில் ஆழ்ந்திருக்

கக் கட்டி, அடுப்பிலிட்டு எரித்துத் தண்ணீர் ½-படி அள விற்குச் சுண்டின சமயம் முடிச்சியைத் தள்ளிக் கியா ழத்தை யெடுத்து வைத்துக் கொள்க. அமுக்கராவேரைத் துண்டுதுண்டாக நறுக்கி ஒன்று மிரண்டுமாக இடித்து ஒரு புதுநீர்ப் பாண்டத்தில் போட்டு 3-படித் தண்ணீர் விட்டு அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து அரைப்படி அளவிற்குச் சுண்டி வரும்போது வடித்து வைத்துக் கொள்க. இவ்வாறு பக்குவப்படுத்திய மூன்று கியாழங் களையும் ஒரு தைலபாண்டத்தில் விட்டுப் புளித்த மோரை யும் நல்லெண்ணெயையும் கூட்டிக் கலக்கி வைத்துக் கொள்க. அப்பால் இரண்டாவது அங்கத்தில் கூறப்பட் டுள்ள இருபத்துமூன்று சரக்குகளை ஒன்றிரண்டாக இடித் துப் புளித்த மோர்விட்டு அரைத்து மெழுகுபதத்தில் வழித்து முன்சித்தப்படுத்திய தைலபாண்டத்தில் போட் டுக் கலக்கி அடுப்பில் வைத்துத் தினம் ஒன்றுக்கு ½ மணி நேரம் வீதம் மூன்றுநாள் எரித்து நான்காவது நாள் பத முறக் காய்ச்சி வடித்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இந்தத் தைலத்தைக் கொண்டு வாரம் இருமுறை ஸ்நானம் செய்து வருக.

தீரும் வியாதி :—நாட்பட்ட சுரம், வெட்டை, தேக வெப்பம், தேக எரிவு குணமாகும்.

## 17. அரக்குச்சந்தனாதித் தைலம் ✓

சரக்கு—(1)

| | | |
|---|---|---|
| உயர்ந்த சந்தனத்தூள் | பலம் | 5 |
| கொம்பரக்குத்தூள் | ,, | 5 |
| சிற்றுமுட்டிவேர் | ,, | 5 |
| அமுக்கராவேர் | ,, | 5 |
| புளித்த மோர் | படி | 1 |
| நல்லெண்ணெய் | ,, | 1 |

சரக்கு:—(2)

| | |
|---|---|
| நன்னாரிவேர் | அரத்தை |
| கோஷ்டம் | அதிமதுரம் |
| சதகுப்பை | கடுகுரோகணி |
| சடாமாஞ்சில் | தேவதாரு |
| மஞ்சள் | மரமஞ்சள் |
| கஸ்தூரிமஞ்சள் | பெருங்குரும்பை |
| அமுக்கராவேர் | மஞ்சிஷ்டி |
| சந்தனம் | சிறுநாகப்பூ |

இவைகள் வகைக்கு வராகனெடை - 1.

**செய்பாகம் :—**முதலாவது அங்கத்தில் குறிப்பிட்ட சந்தனத்தூள், சிற்றாமுட்டி, அமுக்கராவேர் முதலிய வற்றை இடித்து ஒரு குடிநீர்ப் பாண்டத்தில் போட்டு 8 படித் தண்ணீர்விட்டு அதனில் கொம்பரக்குத்தூளை ஒரு சீலையில் தளர்ச்சியாகக் கிழிகட்டி டோலா யந்திர மாகத் தண்ணீர்க்குள் ஆழ்ந்திருக்கக் கட்டி அடுப்பில் வைத்து 1-படி அளவிற்குச் சுண்டும்படி எரித்து ஆற விட்டு வடித்து ஒரு தைலபாண்டத்தில் விட்டு அத னுடன் புளித்த மோரையும் நல்லெண்ணெயும் கூட்டிக் கலக்கி வைத்துக் கொள்க. இதற்குமேல் இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள பதினாறு சரக்குகளையும் நன்கு இடித்துச் சூரணித்து அம்மிக்கல்லில் வைத்துப் புளிப்பு மோர்விட்டு நெகிழ அரைத்து முன் சித்தப்படுத்தி வைத்துள்ள தைல பாண்டத்தில் போட்டுக் கலக்கி அடுப்பில் வைத்துத் தினம் ஒன்றுக்கு ½-நாழிகை வீதம் 3-நாள் எரித்து நான்காவது நாள் பதமுறக் காய்ச்சி வடித்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—**இந்தத் தைலத்தைக்கொண்டு வாரம் ஒருமுறை ஸ்நானம் செய்து வருக.

தீரும் வியாதி :—சுரம், சந்நி, காசம், பீநசம், தலை வலி, சொறி, சிரங்கு குணமாகும்.

பத்தியம் :—ஸ்நானஞ் செய்த தினம் புளி தள்ளிப் பத்தியமாக இருத்தல் வேண்டும்.

## 18. குமரித் தைலம்

சரக்கு :—(1)

| | | |
|---|---|---|
| சோற்றுக்கற்றாழைச்சாறு | படி | 4 |
| நல்லெண்ணெய் | ,, | 1 |
| பசுவின் பால் | ,, | 1 |

சரக்கு :—(2)

| | |
|---|---|
| கோஷ்டம் | மஞ்சிஷ்டி |
| சந்தனம் | ரசாஞ்சனம் |
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | புனுகுசட்டம் |
| கடுக்காய் | நெல்லிக்காய் |
| தான்றிக்காய் | ஜாதிக்காய் |
| அதிமதுரம் | சடாமாஞ்சி |
| விலாமிச்சம் | வெட்டிவேர் |
| இலவங்கப்பட்டை | ஏலம் |
| இலவங்கப்பத்திரி | சிறுநாகப்பூ |
| கிரந்திதகரம் | கோரைக்கிழங்கு |
| நன்னாரிவேர் | பச்சைக்கற்பூரம் |
| செங்கழுநீர்க்கிழங்கு | பூலாங்கிழங்கு |
| தக்கோலம் | |

இவைகள் வகைக்கு வராகனெடை - 1.

செய்பாகம் :—சோற்றுக்கற்றாழையை மேல்தோல் நீக்கித் துண்டு துண்டாக நறுக்கு, ஒரு பேசினில் போட்

டுப் பச்சரிசி நெல் உமியைச் சிறிது போட்டுப் பிசைந்து பிசைந்து அதிலுள்ள நீரைப் பாகத்திற்குப் போதிய அளவு எடுத்து ஒரு தைலபாண்டத்தில் விட்டுப் பசுவின் பாலையும் நல்லெண்ணெயையும் கூட்டி வைத்துக் கொள்க.

இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட்ட இருபத்தேழு சரக்குகளில் புனுகு சட்டத்தையும் பச்சைக்கற்பூரத்தை யும் நீக்கி மற்றவைகளை இடித்துச் சூரணித்து அம்மிக் கல்லில் வைத்துப் பசுவின் பால் விட்டு நெகிழ அரைத்து முன் சித்தப்படுத்திய தைலபாண்டத்தில் போட்டுக் கலக்கி அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்துப் பதமுறக் காய்ச்சி, வடிகடத்தில் புனுகுச் சட்டத்தைப் பொடியாக அரிந்தும் பச்சைக்கற்பூரத்தைப் பொடித்தும் போட்டுச் சீலைக்கட்டி வடிக்கவும். தைலம் ஆறினபின் குப்பியில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—** இந்தத் தைலத்தைக் கொண்டு வாரம் ஒருமுறை ஸ்நானம் செய்து வருக.

**தீரும் வியாதி :—** கண்ணருகல், கண்ணீர் ததும்பல், அமரம், கண்ஞேவு, மேகச்சூடு இவைகள் குண மாகும்.

**பத்தியம் :—** புளி தள்ளி இச்சாபத்தியமாக அன்னம் கொள்வதுடன் அலைச்சல், திரிச்சல், பகல் நித்திரை நீக்குக.

## 19. அர்க்காதித் தைலம்

**சரக்கு:—**

| | |
|---|---|
| எருக்கம் பழுப்பிலைச்சாறு | படி ½ |
| கொம்பரக்கு | பலம் ½ |
| சாம்பிராணி | ,, ½ |

| | |
|---|---|
| கஸ்தூரிமஞ்சள் | ,, ½ |
| நல்லெண்ணெய் | படி 1½ |

செய்பாகம் :—ஒரு தைல பாண்டத்தில் எண்ணெயையும் எருக்கம் பழுப்பிலைச் சாற்றையும் விட்டு மற்றச் சரக்குகளையும் மிருதுவாகப் பொடித்துப் போட்டுச் சிறுதீயாக எரித்துப் பதமுறக் காய்ச்சிக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்தத் தைலத்தைக் கொண்டு சிரசிற்குத் தேய்த்தும், கழுத்து, தோள் முதலிய இடங்களில் தேய்த்து உருவிப் பிடித்தும் ஸ்நானம் செய்க.

தீரும் வியாதி :—ஒற்றைத்தலைவலி, இசிவு, கழுத்து ந ம்பின் இசிவு, வலி முகவாதம், சயித்தியம் முதலியாவை ா் குணமாகும்.

பத்தியம் ;—ஸ்நானம் செய்த தினம் புளி தள்ளி உணவு கொள்ளவும்.

## 20. முதியார் கூந்தல் எண்ணெய்

சரக்கு :—

| | |
|---|---|
| முதியார்கூந்தல் | பலம் 5 |
| சோற்றுக்கற்றாழைச்சோறு | ,, 5 |
| வெந்தயம் | ,, 10 |

செய்பாகம்:—முதலில் முதியார்கூந்தலைப் பொடியாக நறுக்கிச் சோற்றுக்கற்றாழைச் சோறுடன் சேர்த்திடித்து வெந்தயத்தைக் கூட்டிப் பிசரி ஒரு குண்டுசட்டியிலாவது பேசின் தட்டிலாவது போட்டு மேல்தட்டு மூடிக் குளிர்ச்சியான இடத்தில் வைக்கவும். நான்காவது நாள் பார்க்க வெந்தயம் முளைவிட்டு இருக்கும். இதுவே சரியான பதம். இன்றேல் பின்னும் இரண்டொரு நாள் வைத்து முளை

கிளம்பின பின் வழித்து ஒரு சாடியில் போட்டு 1½-வீசை அப்பட்டமான எள்ளின் நெய் விட்டு அதனில் செம்பரத் தம்பூ என்று சொல்லப்பட்ட சப்பாத்திப்பூவை 80-கொண்டுவந்து இதழ்களை யெல்லாம் கிள்ளி ஜாடியில் போட்டுக் கிளறி வாய்க்குச் சீலைகட்டி 20 - 30 நாள் ரவி முகத்தில் வைத்து வருக.

பிரயோகம் :—வேண்டும்போது ஜாடியிலுள்ள தைலத்தைச் சிறிது வடித்துக் கூந்தலுக்குத் தடவி வருக.

தீரும் வியாதி:—உஷ்ணத்தினால் தலையில் உண்டாகின்ற சுண்டு நீங்கும். கூந்தல் உதிருதல் நீங்கிச் செழுமையாக வளரும். புழு வெட்டினால் மயிர் உதிர்ந்த இடங்களில் தடவிவரப் புதியதாக மயிர் முளைக்கும்.

## 21. வெட்டிவேர்த் தைலம்

சரக்கும் செய்பாகமும் :—பத்துப் பலம் வெட்டி வேரைச் சிறு துண்டுகளாக நறுக்கி இடித்துப் பஞ்சு போல் செய்து ஒரு குடிநீர்ப் பாண்டத்தில் போட்டு 4 படித் தண்ணீர்விட்டு அடுப்பில் வைத்து எரித்து அரைப்படி அளவிற்குச் சுண்டின சமயம் வடிகட்டி ஒரு தைலப்பாண்டத்தில் விட்டு அதனில் அதிமதுரம், மோடி, கடுக்காய், கஸ்தூரிமஞ்சள் வகைக்கு ½-பலம் வீதம் இடித்துப் பால் விட்டு அரைத்துப் போட்டுக் கலக்கி ¾ - படி எள்ளின் நெய் விட்டுப் பதமுறக் காய்ச்சி வடித் துக் குப்பியிலிடுக.

பிரயோகம்:—இந்தத் தைலத்தைக் கொண்டு வாரம் ஒரு முறை ஸ்நானம் செய்து வருக.

**தீரும் வியாதி :—**பீநசம், மண்டைக் குடைச்சல், தேக எரிவு, கைகால் காந்தல், நீர்க்கோவை, கண்புகைச்சல், காதுமந்தம் தீரும்.

**பத்தியம் :—**இச்சா பத்தியம்.

## 22. சிரோரத்தினத் தைலம்

**சரக்கு ;—**

| | | |
|---|---|---|
| பூண்டு | பலம் | $\frac{1}{4}$ |
| வலம்புரிக்காய் | ,, | $\frac{1}{4}$ |
| மாசிக்காய் | ,, | $\frac{1}{4}$ |
| கிராம்பு | ,, | $\frac{1}{4}$ |
| கொம்பரக்கு | ,, | 1 |

**செய்பாகம் :—**இங்குக் கூறப்பட்ட ஐந்து சரக்குகளையும் இடித்து அம்மிக் கல்லில் வைத்துப் பசுவின் பால் விட்டு அரைத்து ஒரு தைல பாண்டத்தில் போட்டு அதனில் $\frac{1}{4}$-படி பசுவின் பாலையும் $\frac{1}{4}$-படி நல்லெண்ணெயும் கூட்டிக் கலக்கி அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து வண்டல் மெழுகு பதமாக வரும்போது வடித்து ஆற விட்டுச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**தீரும் வியாதி ;—**ஒற்றைத் தலைவலி, பிடரிவலி, சயித்தியம் நீங்கும்.

**பத்தியம் :—**ஸ்நானஞ் செய்த தினம் அலைச்சல், பகல் நித்திரை கூடாது.

## 23. சந்நித் தைலம்

**சரக்கு :—**

| | | |
|---|---|---|
| நஞ்சுமுறிச்சான்வேர் | பலம் | $\frac{1}{2}$ |
| குரகத்தட்டுவேர் | ,, | $\frac{1}{2}$ |
| கஸ்தூரிமஞ்சள் | ,, | $\frac{1}{4}$ |

| | |
|---|---|
| பெருங்காயம் | பலம் $\frac{1}{8}$ |
| மிளகு | ,, $\frac{1}{4}$ |

**செய்பாகம் :—** இங்குக் குறிப்பிட்டுள்ள ஐந்து சரக்கு களையும் நன்ருய் இடித்து ஒரு இரும்புக்கடாயில் போட்டு 7½-பலம் நல்லெண்ணெய் விட்டு அடுப்பில் வைத்துச் சிறுக எரித்து, இட்ட சூரணம் சிவந்து வரும் பதங் கண்டு வடித்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம்:—** வேண்டும்போது தேவையான தைலத் தைச் சிறிது கரிநெருப்பனலில் வெதுப்பித் தாளக்கூடிய சூட்டில் தேய்த்து ஸ்நானம் செய்து வருக.

**தீரும் வியாதி :—** தலைவலி, ஒற்றைத் தலைவலி, கழுத்து நரம்பு இசிவு, மண்டைக் குடைச்சல், சன்னி தோஷம் குணமாகும்.

**பத்தியம் :—** வெந்நீரில் ஸ்நானம் செய்து புளி தள்ளி இச்சா பத்தியமாக அன்னம் கொள்ளவும்.

## 24. சிரரோக சிந்தாமணித் தைலம்

சரக்கு :—

| | |
|---|---|
| கோஷ்டம் | சடாமாஞ்சில் |
| செம்மரப்பட்டை | தேவதாரு |
| சண்பகப்பூ | கருஞ்சீரகம் |
| பூலாங்கிழங்கு | கஸ்தூரிமஞ்சள் |
| கார்போக அரிசி | நற்சீரகம் |
| செவ்வியம் | சிறுதேக்கு |
| சிறுநாகப்பூ | குருவேர் |
| நன்னரிவேர் | அகில்கட்டை |
| வாசனைப்பச்சிலை | வெட்டிவேர் |

சந்தனத்தூள் கொம்பரக்கு
சாம்பிராணி சிற்ருமுட்டி

இவைகள் வகைக்கு வராகனெடை - 2,

**செய்பாகம் :**—மேற்கூறப்பட்ட சரக்குகளை யெல்லாம் நன்ருய் இடித்துச் சூரணம் செய்து அம்மிக்கல்லில் வைத்துப் பசுவின் பால் விட்டு நெகிழ அரைத்து ஒரு தைல பாண்டத்தில் போட்டு ½ - படி பசுவின் பாலையும் ஒரு படி நல்லெண்ணெயையும் கூட்டிக் கலக்கி பதமுறக் காய்ச்சி வடித்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :**—இந்தத் தைலத்தைக் கொண்டு வாரம் ஒரு முறை ஸ்நானம் செய்து வருக.

**தீரும் வியாதி :**—தலைவலி, புறங்கழுத்து நரம்பு இசிவு, நாசியில் நீர் வடிதல், கபரோகம் முதலியவைகள் குணமாகும்.

**பத்தியம் :**—பகல் நித்திரை, அலைச்சல் கூடாது.

## 25. பிருங்காமலக தைலம்

சரக்கு :—

| | | |
|---|---|---|
| (1) | கையாந்தகரைச்சாறு | படி 1 |
| | நெல்லிக்காய்ச்சாறு | ,, 1 |
| | இளநீர் | ,, 1 |
| | சீந்தில் கொடிச்சாறு | ,, 1 |
| | ஆவின்பால் | ,, 1 |
| | நல்லெண்ணெய் | ,, 1 |

(2) கோஷ்டம் கஸ்தூரிமஞ்சள்
அதிமதுரம் சந்தனத்தூள்
சிறுநாகப்பூ ஏலம்

| | |
|---|---|
| கிராம்பு | சண்பகப்பூ |
| கோரைக்கிழங்கு | தாமரைவளையம் |

இவைகள் வகைக்கு வராகனெடை - 1.

செய்பாகம் :—இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள சரக்குகளை யெல்லாம் நன்கு இடித்துச் சூரணம் செய்து அம்மிக்கல்லில் வைத்துப் பசுவின் பால்விட்டு மெழுகுபதமாக அரைத்து, ஒரு தைலபாண்டத்தில் போட்டு அதனில் முதலாவது அங்கத்தில் கூறப்பட்ட திரவங்களை யெல்லாம் ஒருமிக்கக் கலந்து விட்டுக் கலக்கி அடுப்பிலேற்றிப் பதமுறக் காய்ச்சி வடித்து ஆறவிட்டுக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்தத் தைலத்தைக் கொண்டு வாரம் ஒருமுறை ஸ்நானம் செய்து வருக.

தீரும் வியாதி :—கண்ணெரிச்சல், தேக எரிவு, கண்ணோவு குணமாகும்.

## 26. சகதேவித் தைலம்

சரக்கு :—(1)

| | | |
|---|---|---|
| சகதேவிச்சாறு | படி | $\frac{1}{2}$ |
| சீந்தில்கொடிச்சாறு | ,, | $\frac{1}{2}$ |
| பசுவின் பால் | ,, | 1 |
| நல்லெண்ணெய் | ,, | $\frac{1}{2}$ |
| பசுவின் நெய் | ,, | $\frac{1}{2}$ |

சரக்கு :—(2)

| | |
|---|---|
| அதிமதுரம் | கோஷ்டம் |
| சடாமாஞ்சில் | கிராம்பு |
| ஏலம் | கஸ்தூரிமஞ்சள் |

| | |
|---|---|
| நறும்பிசின் | நெல்லிவற்றல் |
| சந்தனத்தூள் | விலாமிச்சம்வேர் |

இவைகள் வகைக்கு வராகனெடை - 1.

செய்பாகம் :—இரண்டாவது அங்கத்தில் கூறப் பட்டுள்ள 10-சரக்குகளையும் நன்றாய் இடித்துச் சூரணம் செய்து அம்மிக்கல்லில் வைத்து பசுவின்பால் விட்டு நன் றாய் அரைத்து ஒரு தைல பாண்டத்தில் போட்டு முதலா வது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள ஐந்து திரவங்களையும் விட்டுக் கலக்கிப் பதமுறக்காய்ச்சி வடித்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இந்தத் தைலத்தைக் கொண்டு வாரம் ஒரு முறை ஸ்நானம் செய்து வருக. இன்னும் இந்தத் தைலத்தை தினம் ஒரு வேளை தேக்கரண்டி அளவு உள் ளுக்கும் சாப்பிட்டு வருக.

தீரும் வியாதி :—கைகாலெரிச்சல், தேக எரிச்சல், கண்ணெரிச்சல் முதலியவைகள் குணமாகும்.

பத்தியம்;—பகல் நித்திரையும் திரிச்சலும் கூடாது.

(பீடித்தைல வகுப்பு)

## 27. சந்நித் தைலம் ✓

சரக்கு :—(1)

| | | |
|---|---|---|
| கருநாபி | வராகனெடை | 1 |
| வசம்பு | ,, | 5 |
| உரித்த பூண்டு | ,, | 5 |
| பெருங்காயம் | ,, | 1 |
| ஓமம் | ,, | 5 |
| சாதிக்காய் | ,, | 10 |
| கலப்பைக்கிழங்கு | ,, | 10 |

சரக்கு :—(2)

| | | |
|---|---|---|
| வேப்பெண்ணெய் | படி | 1 |
| கலப்பைக்கிழங்குச்சாறு | ,, | 1 |

செய்பாகம் :—முதலாவது அங்கத்தில் கூறப்பட்ட சரக்குகளில் இடிக்க வேண்டியவைகளை இடித்துச் சூரணித்து மற்றச் சரக்குகளுடன் கூட்டித் தட்டை அம்மிக் கல்லில் வைத்து இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள கலப்பைக் கிழங்கின் சாற்றைக் கொஞ்சங் கொஞ்சமாக விட்டு மெழுகுபதத்திலரைத்து ஒரு தைல பாண்டத்தில் போட்டு மிகுதியுள்ள கலப்பைக் கிழங்கின் சாறும் வேப்பெண்ணெயையும் கூட்டிக் கலக்கி அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து வண்டல் மெழுகு பதமாகத் திரளும் சமயம் வடித்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்: —இந்தத் தைலத்தை நோயுள்ள இடங்களில் பூசித் தேய்க்கவும். தேய்த்த பின் கைகளை மஞ்சள், சாணம் இவைகளை ஒன்றன்பின் ஒன்றாக இட்டுத் தேய்த்துச் சலம் விட்டு அலம்பிக் கொள்க.

தீரும் வியாதி ;—சந்நி, குடைச்சல், பாரிசவாதம் பிடிப்பு, புறங்கழுத்து இசிவு, வலி குணமாகும்.

பத்தியம் :—வாத சீதளப் பண்டங்களைத் தள்ளி அன்னங் கொள்ளவும்.

## 28. மெழுகுத் தைலம்

சரக்கு :—

| | | |
|---|---|---|
| தேன் மெழுகு | பலம் | 10 |
| சக்கிமுக்கிக்கல் | ,, | 10 |
| சாம்பிராணி | ,, | 5 |

| | | |
|---|---|---|
| பெருமணல் | பலம் | 10 |
| சோற்றுப்பு | ,, | 5 |
| கிராம்பு | ,, | 1 |

செய்பாகம் :—மேற்கூறப்பட்ட சரக்குகளில் தேன் மெழுகையும் சக்கிமுக்கிக் கல்லையும் சிறு துண்டுகளாக நறுக்கி ஒரு மண் தோண்டியில் போட்டுச் சாம்பிராணி யையும் கிராம்பையும் ஒன்றிரண்டாக இடித்துப் போட்டு அதனுடன் மணலையும் சோற்றுப்பையும் கூட்டிப் பிசரி தோண்டிக்குப் பொருத்தமான மண்வாலையைச் செருகி மண்சீலை ஏழுசெய்து உலர்த்தி அடுப்பில் வைத்துக் காடாக்கினியாக எரித்து வருக. அப்போது வாலையின் மேற்புறத்தில் அடிக்கடி குளிர்ந்த சலம் விட்டெரித்துக் கொண்டுவரத் தைலம் சொட்டும். சேதப்படாமல் குப்பி யைக் கொண்டு சேகரம் செய்து அதிலுள்ள சலத்தைப் போக்கித் தைலத்தைப் புட்டியில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தத் தைலத்தை நோயுள்ள இடத் தில் மேற்றடவி இரண்டு மூன்று நிமிஷம் சென்றபின் தேய்க்கவும்.

தீரும் வியாதி :—பாரிசவாதம், முழங்கால்வாதம், தோள் வாதம், கணுச்சூலை, பிடிப்பு, குடைச்சல், வீக்கம் தீரும். இன்னும் வெட்டுக்காயத்திற்குப் பஞ்சியைத் தோய்த்து வைத்துக்கட்ட சீழ் பிடிக்காமல் ஆறும். தேள் கொட்டிய இடத்தில் தடவித் தேய்க்க விஷம் இறங்கும்.

## 29. மாஷத் தைலம்

சரக்கு: —(1)

| | | |
|---|---|---|
| பெரும் உளுந்து | படி | 1 |
| வெள்ளாட்டுப் பால் | ,, | 1 |
| நல்லெண்ணெய் | ,, | 1 |

சரக்கு :—(2)

| | |
|---|---|
| பூனைக்காலிப்பருப்பு | எருக்கு |
| அரத்தை | சுக்கு |
| மிளகு | திப்பிலி |
| வெட்பாலைப்பட்டை | அதிமதுரம் |
| இந்துப்பு | வசம்பு |

இவைகள் வகைக்கு வராகனெடை - 1.

செய்பாகம்:—உளுந்தை ஒரு குடிநீர்ப் பாண்டத்தில் போட்டு நான்குபடித் தண்ணீர்விட்டு அடுப்பிலேற்றி எரித்து ஒருபடி அளவிற்குச் சுண்டி வரும்போது வடித்து ஒரு தைலபாண்டத்தில் விட்டு அதனுடன் நல்லெண் ணெய், வெள்ளாட்டுப்பால் கூட்டிக் கலக்கி வைத்துக் கொள்க. இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள சரக்குகளை நன்கு இடித்துப் பசுவின்பால் விட்டு நெகிழ அரைத்துத் தைல பாண்டத்தில் போட்டுக் கலக்கி அடுப் பில் வைத்துச் சிறுக எரித்து வண்டல் மெழுகுபதம் வரும் சமயம் வடித்துக் குப்பியிலிட்டு வாயடைத்து 10 - நாள் நெற்புடத்திலிட்டு எடுத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தத் தைலத்தைச் சில தினம் மேலுக்குத் தேய்த்துப் பிடித்து வருக.

தீரும் வியாதி :—சிரசில் உண்டாகிற நடுக்கம், கைகால் நடுக்கம் குணமாகும்.

பத்தியம்:—இந்தத் தைலத்தை மேலுக்குத் தேய்த்து வருங் காலத்தில் இச்சாபத்தியமாக அன்னங் கொள்ளல் வேண்டும்.

## 30. வேறு முறை

**சரக்கு :—(1)**

| | |
|---|---|
| பெரும் உளுந்து | படி 1 |
| பசுவின்பால் | ,, 1 |
| நல்லெண்ணெய் | ,, 1 |

**சரக்கு :—(2)**

| | |
|---|---|
| சதகுப்பை | அரத்தை |
| இந்துப்பு | மிளகு |
| சுக்கு | தேவதாரு |
| திப்பிலி | பீனறிப்பட்டை |
| அதிமதுரம் | பூலாங்கிழங்கு |
| கஸ்தூரிமஞ்சள் | நற்சீரகம் |
| வெட்பாலைஅரிசி | சிறுகுறிஞ்சான் |
| விழலரிசி | கடுகுரோகணி |
| தகரைவித்து | சண்பகப்பூ |
| வெள்ளை லோத்திரம் | சடாமாஞ்சில் |
| கிராம்பு | |

இவைகள் வகைக்கு வராகனெடை - 1.

**செய்பாகம்:**—உளுந்தை ஒரு குடிநீர்ப் பாண்டத்தில் போட்டு 8-படித் தண்ணீர்விட்டு அடுப்பிலேற்றி எரித்து ஒருபடி அளவிற்குச் சுண்டி வரும்போது வடித்து ஒரு தைலபாண்டத்தில் விட்டு அதனுடன் பசுவின்பால், நல்லெண்ணெய் கூட்டி வைத்துக் கொள்ளவும். இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள இருபத்தோரு சரக்குகளையும் நன்ருய் இடித்துச் சூரணித்து அம்மிக்கல்லில் வைத்துப் பசுவின்பால் விட்டு நெகிழ அரைத்துப் போட்டுக் கலக்கி அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்துப் பத முறக் காய்ச்சி வடிகட்டி ஆறவிட்டுச் சீசாவில் பத்திரப் படுத்துக.

பிரயோகம் :—இந்தத் தைலத்தைக் கொண்டு தேகமாதி யெங்கும் நன்ருய்த் தடவித் தேய்த்துப் பிடித்து வருக.

தீரும் வியாதி :—பக்கவாதம், திமிர்வாதம், நடுக்கல்வாதம், கர்ணசூலை, காதிரைச்சல், தலைநடுக்கம், செவிடு நீங்கும்.

பத்தியம்: —முன் முறையில் கூறப்பட்டதேயாகும்.

## 31. வாதகஜகேசரித் தைலம்

சரக்கு :—

| | | |
|---|---|---|
| பச்சைசித்திரமூலம் வேர்ப்பட்டை | பலம் | 5 |
| ஓமம் | ,, | 2½ |
| ஊமத்தமிலைச்சாறு | படி | 1 |
| நல்லெண்ணெய் | ,, | 1 |
| கற்பூரம் | பலம் | 1 |

செய்பாகம் :—சித்திரமூலம் பட்டையைச் சோற்றுக் கற்ருழைச் சாறுவிட்டு நெகிழ அரைத்தும், ஓமத்தை ஊமத்தம் இலைச்சாறு விட்டு நெகிழ அரைத்தும், ஒரு தைல பாண்டத்தில் போட்டு மிகுதி ஊமத்தமிலைச்சாற்றையும் நல்லெண்ணெயையும் விட்டுக் கலக்கி அடுப்பில் வைத்துச் சிறுக எரித்துப் பதமுறக் காய்ச்சி வடித்துச் சூடாறும் முன் கற்பூரத்தைப் பொடித்துப் போட்டுக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்தத் தைலத்தை நோயுள்ள இடங்களில் தேய்த்துப் பிடித்து வருக.

தீரும் வியாதி :—பாரிசவாதம், இடுப்புவலி, கைகால் குடைச்சல், முடக்கு, பிடிப்பு முதலியவை குண

மாகும். இந்த தைலத்தைத் தேய்த்தபின் மஞ்சள், சாணம் முதலியவற்றை ஒன்றன்பின் ஒன்று கைகளில் போட்டு தேய்த்துச் சுத்தமாகச் சலம்விட்டுக் கழுவிக் கொள்ள வேண்டும்.

பத்தியம் :—இல்லை.

## 32. மாதுளைத் தைலம்

சரக்கு :—

| | | |
|---|---|---|
| மாதுளம்பழத்தோல் | பலம் | 8 |
| கடுக்காய்த்தோல் | ,, | 1 |
| தான்றிக்காய்த்தோல் | ,, | 1 |
| அக்கரகாரம் | தோலா | 1 |
| கோஷ்டம் | ,, | 1 |
| கிராம்பு | ,, | 1 |
| நெல்லிவற்றல் | ,, | 2 |

செய்பாகம் :—முதலில் மாதுளம்பழத்தின் தோலைச் சிறு துண்டுகளாக நறுக்கி இடித்துப் பஞ்சுபோல் நசுக்கி ஒரு குடிநீர்ப் பாண்டத்தில் போட்டு இரண்டுபடித் தண்ணீர் விட்டு அடுப்பில் வைத்துச் சிறுக எரித்து ஒருபடி அளவிற்குச் சுண்டி வந்த சமயம் அதனில் மற்று முள்ள சரக்குகளை இடித்துச் சூரணம் செய்து போட்டுப் பின்னும் சிறிது நேரம் எரித்துத் தண்ணீரானது கால்படி அளவிற்குக் காணும்போது கீழிறக்கி ஆறவிட்டுப் பிசைந்து பிசைந்து வடித்துக் கியாழத்தை ஒரு தைல பாண்டத்தில் விட்டு அதனுடன் அரைக்கால்படி அப்பட்டமான எள்ளின் நெய்விட்டுப் பதமுறக் காய்ச்சி வடித்துக் குப்பியி லிடுக.

பிரயோகம் :—ஸ்திரீகள் இந்தத் தைலத்தை தங்கள் மர்ம ஸ்தானங்களில் இலேசாக தடவிவர வேண்டும்.

தீரும் வியாதி :—குழந்தைகளுக்குப் பாலின்றதினுல் உண்டான ஸ்தனத்தளர்ச்சி, அடுத்தடுத்துப் பிரசவித்த தின் காரணமாக நேர்ந்த மர்ம ஸ்தானத்தளர்ச்சி இறுகிக் கெட்டிப்படும். இந்தச் சந்தர்ப்பத்தில் முத்தெருக்கன் செவி இலையைத் தினம் இரண்டொன்று பாலில் அரைத்துச் சாப்பிட்டுவர அதிக நன்மையைத் தரும்.

## 33. அர்க்காதித் தைலம்

சரக்கு :—(1)

| | |
|---|---|
| எருக்கம்வேர்ச்சாறு | எலுமிச்சம்பழச்சாறு |
| முருங்கைபட்டைச்சாறு | தேங்காய்ப்பால் |
| நல்லெண்ணெய் | |

இவைகள் வகைக்குப் படி - ½.

சரக்கு :—(2)

| | |
|---|---|
| கிராம்பு | ஜாதிப்பத்திரி |
| வெள்ளைப்பூண்டு | சாதிக்காய் |
| ஏலம் | ஓமம் |
| நற்சீரகம் | மோடி |
| அதிமதுரம் | திப்பிலி |
| அமுக்கராவேர் | |

இவைகள் வகைக்கு வராகனெடை - 1.

செய்பாகம் :—இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள பதினேரு சரக்குகளையும் இடித்துச் சூரணித்து அம்மிக்கல்லில் வைத்துச் சிறிது தண்ணீர்விட்டு மெழுகு பதமாக அரைத்து ஒரு தைல பாண்டத்தில் போட்டு முதலாவது அங்கத்தில் குறிப்பிட்ட ஐந்து திரவங்களையும் விட்டுக் கலக்கி அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்துப் பதமுறக் காய்ச்சி வடித்து ஆறவிட்டுச் சீசாவில் பத்திரப் படுத்துக.

பிரயோகம் :—இந்த தைலத்தைச் சிறிது உச்சியி லிட்டுத் தேய்க்கவும், இன்னும் கழுத்து நரம்பு, பிடரி, தோல் முதலிய இடங்களில் தேய்த்துப் பிடிக்கவும்.

தீரும் வியாதி :—கபாலசன்னி, பிடரிவலி, கழுத்து நரம்பு இசிவு குணமாகும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 34. மெழுகுத் தைலம்

சரக்கு :—

| | | |
|---|---|---|
| 1 தேன் மெழுகு | பலம் | 12 |
| 2 வறுத்த கறியுப்பு | ,, | 24 |
| 3 கழுவிச் சுத்தப்படுத்திய மணல் | ,, | 15 |
| 4 ரசம் | தோலா | 1 |
| 5 லிங்கம் | ,, | 1 |
| 6 எட்டிக்கொட்டைச் சூரணம் | ,, | 1 |
| 7 வெண்ணுபிச் சூரணம் | ,, | 1 |

செய்பாகம் :—இரசம், இலிங்கம் இவ்விரண்டையும் அரைத்துச் சூரணங்களுடன் கலந்து மெழுகை உருக்கி உறையும் சமயம் போட்டுக் கிளறித் துண்டு துண்டாக நறுக்கி உப்பையும் மணலையும் கூட்டிக் கலந்து, ஒரு பானையில் போட்டு அதற்குப் பொருத்தமான மண் வாலை யைச் செருகிச் சீலைசெய்து அடுப்பில் வைத்து நன்ருய் எரித்து வாலையின்மேல் குளிர்ந்த தண்ணீர் விட்டுத் திரா வகம் இறக்குவதைப்போல் தைலம் வாங்கவும்.

பிரயோகம்:—இந்த மெழுகுத் தைலத்தை நோயுள்ள இடங்களிலும் நரம்பு சோர்ந்த இடங்களிலும் தடவித் தேய்த்து வருக.

தீரும் வியாதி :—ஆண் குறியின் அடிப்பாகத்தி லுள்ள நீர்த்தாரைக்குப் படாமல் மேல் பாரிசமாகத் தடவி வர சோர்வு நீங்கும். இன்னும் துஷ்டப் பிரயோகத்தினுல் உண்டான நரம்புத்தளர்ச்சியும் கோணலும் நீங்கும். பாரிச வாதம், குடைச்சல், பிடிப்பு உள்ள இடங்களில் தடவித் தேய்த்துவரக் குணமாகும்.

(துளைத்தைல வகுப்பு)

## 35. கர்ண பிந்து

சரக்கு :—(1)

| | |
|---|---|
| மரமஞ்சள் | வெள்ளைப்பூண்டு |
| சுக்கு | வலம்புரிக்காய் |
| கருஞ்சீரகம் | நண்டிறைச்சி |
| நத்தைசதை | முசுறுமுட்டை |
| கருங்கோழிமுட்டை ஓடு | |

இவைகள் வகைக்கு வராகனெடை - 1.

சரக்கு :—(2)

| | | |
|---|---|---|
| இலைக்கள்ளிச்சாறு | படி | வீசம் |
| ஆவின் நெய் | ,, | $\frac{1}{4}$ |
| வேப்பெண்ணெய் | ,, | $\frac{1}{4}$ |

செய்பாகம் :—ஒரு தைல பாண்டத்தில் இரண்டா வது அங்கத்தில் குறிப்பிட்ட ஆவின் நெய்யையும் வேப் பெண்ணெயையும் விட்டு அதனில் முதலாவது அங்கத் தில் குறிப்பிட்டவைகளில் இடிக்க வேண்டியவைகளை இடித்து மற்றுமுள்ள சரக்குகளுடன் கூட்டி இலைக்கள் ளிச்சாறு விட்டு மெழுகுபதமாக அரைத்துப் போட்டு, சாறு மிகுதிப்பட்டிருப்பின் அதனையும் விட்டுக் கலக்கி அடுப்பிலேற்றி எரித்துப் பதமுறக் காய்ச்சி வடித்துச் சீசாவிலிடுக.

**பிரயோகம்** :—இந்தத் தைலத்தைக் காதுகளில் இரண்டொரு துளிவிட்டுப் பஞ்சுகொண்டு அடைத்து வைக்கவும். இப்படி 12-நாள் செய்க.

**தீரும் வியாதி** :—காது குத்தல், காதுவலி, சீழ்வடிதல், காதுமந்தம், காது இரைச்சல் குணமாகும்.

**பத்தியம்** :—குளிர்ந்த சலத்தில் ஸ்நானம் கூடாது.

## 36. வேறு முறை

சரக்கு :—

முள்ளங்கிக்கிழங்குச்சாறு எள்ளின் நெய்
நாயுருவி இலைச்சாறு பசுவின் பால்
எருக்கம்பழுப்பிலைச்சாறு

இவைகள் வகைக்குப் படி - $\frac{1}{8}$.

**செய்பாகம்** :—இவற்றை ஒரு தைலபாண்டத்தில் விட்டு அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்துப் பதமுறக் காய்ச்சி வடித்துக் குப்பியிலிடுக.

**பிரயோகம்** :—இந்தத் தைலத்தைத் தினம் இருவேளை காதுகளில் இரண்டொரு துளிவிட்டுப் பஞ்சு கொண்டு அடைத்து வருக.

**தீரும் வியாதி**:—காதில் சீழ்வடிதல், காதுவலி, காது குத்தல் முதலியன தீரும்.

**பத்தியம்** :—குளிர்ந்த சலத்தில் ஸ்நானம் கூடாது.

## 37. பீநசக் கிருதம்

சரக்கு :—

| | | |
|---|---|---|
| குங்குமப்பூ | கழஞ்சு | 1 |
| கோரோசனை | „ | 1 |
| கோஷ்டம் | „ | 1 |

| | | |
|---|---|---|
| அதிமதுரம் | ,, | 1 |
| கோரைக்கிழங்கு | ,, | 1 |
| கஸ்தூரி | பணவெடை | 1 |
| பச்சைக்கற்பூரம் | ,, | 1 |
| பசுவின் நெய் | படி | 1 |

செய்பாகம் :—இவற்றுள் இடித்துச் சூரணிக்க வேண்டியவற்றை இடித்துச் சூரணித்து மற்றச் சரக்குகளுடன் கூட்டிக் கல்வத்தில் போட்டு மிருதுவாக அரைத்து வைத்துக் கொள்க. அப்பால் பசுவின் நெய்யை உருக்கிச் சிவக்காமல் காய்ச்சிக் கீழிறக்கி முன் சித்தப் படுத்தியுள்ள சூரணத்தைப் போட்டுக் கலக்கி சரக்குகளின் நிறம் அதில் தோற்றப்படின் வடித்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இதை அந்தி சந்தி நாசிகளில் இரண் டொரு துளிவிட்டுக் கொண்டுவரச் சில நாளில் நாசியி லிருந்து வடிகின்ற சலம், சீழ், இரத்தம் முதலியவைகள் நீங்கும்.

## 38. வேறு முறை

சரக்கு :—(1)

| | | |
|---|---|---|
| கரிசலாங்கண்ணிச்சாறு | படி | ½ |
| பசுவின் நெய் | ,, | ½ |

சரக்கு :—2

| | |
|---|---|
| சுக்கு | கோஷ்டம் |
| அதிமதுரம் | வாய்விளங்கம் |

இவைகள் வகைக்கு வராகனெடை - 4.

செய்பாகம்:—இரண்டாவது அங்கத்தில் கூறப் பட்ட நான்கு சரக்குகளையும் நன்கு இடித்துச் சூரணித் துக் கல்வத்தில் போட்டுக் கரிசாலைச்சாறு சிறிது விட்டு

மெழுகுபோல் அரைத்து மிகுதியுள்ள சாற்றில் கலக்கிப் பசுவின் நெய்யுடன் கூட்டி ஒரு தைலபாண்டத்தில் விட்டு அடுப்பில் வைத்துப் பதமுற எரித்து வடித்து எடுத்துக் கொள்ளவும். இதற்குமேல் அபினி கற்பூரம் வகைக்கு ஒரு வராகனெடை வீதம் கல்வத்தில் போட்டு முன் காய்ச்சி வைத்துள்ள நெய்யில் கொஞ்சம் விட்டு நன்ருய் அரைத்து மொத்த நெய்யில் கலக்கிச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம்:**—இந்த நெய்யைத் தினம் இருவேளை நாசிகளில் இரண்டொரு துளி விட்டுக் கொண்டுவர எத்தகைய கொடிய பீநசமும் குணமாகும்.

## 39. அபஸ்மாரத் தைலம்

**சரக்கு ;—**

| | |
|---|---|
| முதலை மலம் | பலம் 1 |
| காட்டுப்பன்றி மலம் | ,, 1 |
| கழுதை மலம் | ,, 1 |

**செய்பாகம் :**—இவைகளைப் பொடி செய்து ஒரு சீலையில் பரப்பித் திரிபோல் சுருட்டி வளையம்போல் கட்டி வேப்பெண்ணெயில் தோய்த்து தொங்கும்படியாகக் கம்பி கொண்டு கட்டி வளையத்தைக் கொளுத்தி 5-பலம் வேப்பெண்ணெயைக் கொஞ்சங் கொஞ்சமாக வளையத்தின் மேல் விட்டுச் சுடர்த் தைலத்தை வாங்கவும். இதை இரண்டு மடிப்புள்ள சீலையில் வடிகட்டிச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம்:**—இந்தத் தைலத்தைத் தினந்தோறும் காலை மாலை நாசியில் இரண்டு துளி வீதம் விட்டுக் கொண்டு வருக, அத்தருணம் காலை மாலை இரண்டு துளி வெற்றிலையில் உள்ளுக்குக் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—மூர்ச்சாரோகம், வலி, சித்தப் பிரமை குணமாகும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

(சிலைத்தைல வகுப்பு)

## 40. நாரிகேளத் தைலம்

சரக்கும் செய்பாகமும் :—நூறு கொட்டாங்கச்சிகளை (50 தேங்காய்களின் ஓடு) துண்டு துண்டுகளாக நறுக்கி இவைகள் கொள்ளத் தக்கதாகவும், அடியில் 3 - 4 துவாரமிட்டதாகவும் உள்ள ஒரு மட்பாணையில் பாதி போட்டு நடுவில் 8 பலம் கார்போக அரிசியையும், 8-பலம் கிராம்பையும் ஒன்றிரண்டாக இடித்துப் போட்டு அதன் மேலே மிகுதியுள்ள கொட்டாங்கச்சித் துண்டுகளைப் போட்டு வாய்க்குப் பொருத்தமான சாணக்கைக் கொண்டு மூடி மண்சீலை ஏழு செய்து அசையாமல் வைத்துக் கொள்க. அப்பால் முன் சீலை செய்து வைத்துள்ள மட்பாணை அரைப்பாகம் தரைமட்டத்திற்கு கீழ் இருக்கும்படியாகவும் பாணையின் சுற்றுப்புறம் ஒரு வறட்டி அடங்கும் படியாகவும், குழி தோண்டி நடுவில் ஒரு சிறு பள்ளம் செய்து எனுமில்ட் டம்ளர் (சிறுபாத்திரம்) வைத்து அதன் மேல் முன் சித்தப்படுத்திய மட்பாணையின் அடித்துவாரம் உள்ளடங்கும்படி கவனமாக வைத்து பொருத்து வாய்க்கு மண்சீலை ஏழு எட்டு செய்து தரை மட்டத்திற்கு வறட்டி அடுக்கி அதன்மேல் காணப்படும் பாணையின் அரையாகத்தை வறட்டிக்கொண்டு அடுக்கி மூடித் தீமூட்டவும். புடம் நன்றாய் ஆறின பின், சுற்றுப்புறங்களிலுள்ள வறட்டிச் சாம்பலை யெல்லாம் பொறுமையுடன் நீக்கி அடியில் வைத்த சிறு பாத்திரத்திற்கும் மேல் பாணைக்கும் செய்துள்ள சீலையை நீக்கி, மண் சாம்பல் முதலியவைகள் சிறு

பாத்திரத்தில் விழாதபடி மேல் பானையை தூக்கி அடியி லுள்ள தைல பாத்திரத்தை எடுத்துச் சீலையில் வடித்துக் குப்பியிலிடுக. இவ்வாறு புடமிட்டெடுத்தது குழித்தைல மென்பர்.

**பிரயோகம் :—** ஒரு துடைப்பக்குச்சியின் முனையிலா வது அல்லது ஒரு குடைக்கம்பியின் முனையிலாவது சிறிது பஞ்சு சுற்றி இந்தத் தைலத்தில் சிறிது தோய்த் துப் பல் சொத்தை, பல்லரணை, பற்களி னீற்றிலுள்ள வீக்கம் முதலியவற்றிற்கு தேய்க்க எரிச்சலுண்டாகும். உடனே தேங்காய் எண்ணெயை வாயில் விட்டுக் கொப் பளித்து உமிழ்ந்து விடவேண்டும். இப்படி 2 - 3 தடவை செய்ய உடனே குணமாகும். பற்களின் நோயை அனுச ரித்துக் கன்னம் வீக்கம் கொண்டிருந்தால் இந்தத் தைலத்தை இலேசாக மேற்றடவலாம். எரிச்சல் மீறும் போது அதன்மேல் தேங்காய் எண்ணெயைத் தடவி வர எரிச்சல் அடங்கும். இப்படியே முழங்கால் வீக்கம், நோய் ஊறல் மிகுந்த படை முதலியவற்றிற்கு உபயோகப் படுத்தலாம்.

## 41. வேறு முறை

**சரக்கு :—**

| | | | | |
|---|---|---|---|---|
| கொட்டாங்கச்சி | 100 | கௌரிபாஷாணம் | பலம் | $\frac{1}{2}$ |
| சங்குபாஷாணம் | பலம் $\frac{1}{4}$ | பூரம் | ,, | $\frac{1}{4}$ |
| ரேவல்சின்னி | ,, $\frac{1}{4}$ | துருசு | ,, | $\frac{1}{4}$ |
| மிருதார்சிங்கி | ,, $\frac{1}{4}$ | நாபி | ,, | $\frac{1}{4}$ |
| கெந்தி | ,, $\frac{1}{4}$ | சேராங்கொட்டை | ,, | $\frac{1}{4}$ |

**செய்பாகம் :—** இவற்றுள் கொட்டாங்கச்சிகளை நீக்கி மற்றச் சரக்குகளை ஒன்றிரண்டாக நறுக்கி ஒரு முழு கொட்டாங்கச்சிக்குள் போட்டு மேல் கொட்டாங்கச்சி மூடி

போல் செருகிக் கயிற்றினுல் அழுத்தமாகக் கட்டி வைத்துக் கொள்ளவும். அப்பால் கொட்டாங்கச்சிகளை சிறு துண்டுகளாக நறுக்கி இவைகள் கொள்ளத்தக்கதாகவும் அடிப்பாகத்தில் மூன்று நான்கு துளையிட்டதாகவும் உள்ள ஒரு மண்தோண்டியில் பாதி போட்டுப் பரப்பி முன் கயிற்றினுல் கட்டி வைத்துள்ள மருந்துக் கலசத்தை வைத்து அதன்மேல் மிகுதியுள்ள கொட்டாங்கச்சித் துண்டுகளைப் போட்டு வாய்க்கு சாணக்கைக்கொண்டு மூடிச் சீலைசெய்து முன் முறையில் கூறிய வண்ணம் குழித்தைலம் இறக்கவும். இதன் உபயோகம்:—மேல் முறையில் கூறப்பட்டதேயாகும்.

## 42. விரணநாசத் தைலம்

சரக்கு:—

| | |
|---|---|
| 1 கந்தகம் | 7 பாதரசம் |
| 2 பால்துத்தம் | 8 மயில்துத்தம் |
| 3 நீரடிமுத்துப்பருப்பு | 9 ஏலரிசி |
| 4 மிருதார்சிங்கி | 10 ரசகற்பூரம் |
| 5 கஸ்தூரிமஞ்சள் | 11 வில்லைரசகற்பூரம் |
| 6 காட்டு சீரகம் | 12 கார்போக அரிசி |

இவைகள் வகைக்கு கழஞ்சு - 1.

செய்பாகம் :—முதலில் கந்தகத்தையும் பாதரசத்தையும் கல்வத்தில் போட்டு நன்கு அரைத்துக் கறுப்பு நிறமாக மாறுதலடைந்த பின் மற்ற சரக்குகளை ஒன்றன் பின் ஒன்ருகக் கூட்டி அரைத்து எல்லாம் ஒருமிக்க உறவான பின் புங்கம்பால்விட்டு ஒருநாள் கையோயாமல் அரைத்து வழித்து ஒரு தைலபாண்டத்தில் போட்டு பன்னிரண்டு பெரிய தேங்காய்களைத் துருவிப் பிழிந்த அப்பட்டமான பாலைவிட்டுக் கலக்கி அடுப்பிலேற்றிச் சிறு

தீயாக எரித்து வண்டல் வேறு, எண்ணெய் வேருகப் பிரியும்போது வடித்துக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்த தைலத்தை ஆருத மேகரணம், கண்டமாலை ரணம், அரையாப்பு, பவுத்திரம், குழிப்புண் முதலியவற்றிற்குத் தடவிவர உடனே ஆறும்.

## 43. வேறு முறை

சரக்கு :—

| | | |
|---|---|---|
| கந்தகம் | பலம் | 5 |
| துருசு | ,, | $2\frac{1}{2}$ |
| கருஞ்சீரகம் | ,, | $2\frac{1}{2}$ |
| தாளகம் | ,, | $2\frac{1}{2}$ |
| நீரடிமுத்துப் பருப்பு | ,, | 5 |
| கார்போக அரிசி | ,, | $2\frac{1}{2}$ |

செய்பாகம்:—இவற்றுள் கந்தகம், தாளகம், துருசு இம் மூன்றையும் கல்வத்தில் போட்டுத் தினம் ஒன்றுக்கு நான்குசாமம் வீதம் புங்கம்பால் விட்டு 16-நாள் அரைத்துத் தயிருபோல் இருக்கும்போது இருபத்தைந்து பெரிய தேங்காய்களிலிருந்து பிழிந்தெடுத்த அப்பட்டமான பாலை விட்டு உறவாக்கி ஒரு இரும்புக் கடாயில் விட்டு எரித்து நெய்வேறு வண்டல் வேருகப் பிரியும்போது வடித்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்த எண்ணெயை ஆருத மேகரணம், புண், சொறி, சிரங்கு, படை முதலியவற்றிற்குத் தடவிவர விரைவில் ஆறும்.

## 44. சிங்கித் தைலம்

சரக்கு :—

| | |
|---|---|
| பாதரசம் | கந்தகம் |
| மிருதார்சிங்கி | பூநீலம் |
| படிக்காரம் | பறங்கிச்சக்கை |
| கடுக்காய்த்தோல | பால்துத்தம் |
| வசம்பு | வெங்காரம் |

செய்பாகம் :—மேற்கூறப்பட்ட 10-சரக்குகளேயும் வகைக்குக் கழஞ்சு ஒன்ருகக் கல்வத்தில் போட்டு நன்கு அரைத்துப் புங்கம்பால் உதியம்பால் அப்பட்டத் தேங் காய்ப்பால் வகைக்குக் கால்படி வீதம் சேர்த்து ஒரு தைலபாண்டத்தில் விட்டு அடுப்பில் வைத்துச் சிறுக எரித்து நெய் வேறு வண்டல் வேருகப் பிரியும்போது வடித்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தத் தைலத்தைப் புரையோடும் ரணம், கிரந்தி, அரையாப்பு, தொடைவாழை, குழிவிரணம் கண்டமாலே, ரணம், மேகரணம் முதலியவற்றிற்குத் தடவிவர ஆறும்.

## 45. கெந்தக தைலம்

சரக்கு :—

கெந்தகம் பலம் 2 பச்சரிசி பலம் 2

செய்பாகம்:—இவ்விரண்டையும் கல்வத்தில் போட் டுச் சுண்ணும்பு நீர்விட்டு இரண்டு மூன்றுநாள் அரைத்து வில்லேதட்டிக் காயவைத்து அகலில் வைத்து மேல் அகல் மூடி சீலேசெய்து உலர்த்தி 7-8 வறட்டியில் புடமிடவும். சாம்பல் வர்ணமாகப் பற்பம் ஆகும். இதை அரைத்து இருபாதியாகப் பங்கிட்டு ஒரு பாகத்தை எடை போட்டுக்

கல்வத்திலிட்டு அதற்கு 10-மடங்கு தேங்காய் எண்ணெய் விட்டு அரைத்து வழித்துக் கோப்பையில் வைத்துக் கொள்க. இந்தக் கெந்தக தைலத்தைப் புண், சொறி, சிரங்கு, ரணம் இவற்றிற்குத் தடவிவர விரைவில் ஆறும். அந்தச் சமயம் முன்நிறுத்தி வைத்துள்ள பற்பத்தில் வேளைக்கு ½-குன்றி எடையாகத் தினம் இருநேரம் தேனில் மத்தித்துக் கொடுத்து வருதல் அதிக நன்மையைத் தரும்.

---

# செந்தூர இலம்பகம்

## 1. அயச் செந்தூரம்

சரக்கும் செய்பாகமும்:—சன்னமாக இராவிய அயப் பொடி பலம்-4, இரசம் பலம்-2, கந்தகம் பலம்-1 இவற்றுள் முதலில் கந்தகத்தையும் இரசத்தையும் கல்வத்தில் போட்டு 2-மணி நேரம் அரைக்கக் கறுப்பு நிறமாக மாறுதல் அடையும். அப்பொழுது அயத்தூளைக் கூட்டி வேல மரத்தின் பிஞ்சுக்காய்களை இடித்துப் பிழிந்தெடுத்த சாறு விட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகு பதத்தில் காலணு அகலமும் கனமும் உள்ள வில்லைகளாகச் செய்து நிழலில் இரண்டு மூன்றுநாள் உலர்த்தி வைத்துக் கொள்க.

அப்பால் ஒரு அறையின் மூலையில் காற்றில்லாத இடமாகப் பார்த்து ½-அடி உயரம் ¾-அடி அகலம் பச்சரிசி நெல் உமியைப் பரப்பி அதன்மேல் முன் சித்தப்படுத்திய வில்லைகளைப் பரப்பி அதன்மேல் ½-அடி உயரம் உமியைக் கொட்டி இரண்டொரு வறட்டித் துண்டுகளை வைத்துத் தீமூட்டவும் புடம் நன்ருய் வெந்து ஆறின பின் வில்லை

களைப் பார்க்கச் சிவந்திருக்கும். இவற்றைக் கல்வத்தில் போட்டு அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்குத் துவரம்பருப்பளவு தினம் இருவேளை தகுந்த அனுபானங் களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி ;—இரத்தக் குறைவினால் உண்டான பல பிணிகள் குணமாகும். நல்ல தேஜசும் தாதுவிருத்தியு முண்டாகும்.

பத்தியம் :—புளி தள்ளி இச்சாபத்தியமாக இருத்தல் நன்று.

## 2. வேறு முறை

சரக்கும் செய்பாகமும் :—அயப்பொடி பலம்-4, கந் தகம் பலம்-4 கல்வத்தில் போட்டு எலுமிச்சம்பழச்சாறு விட்டுத் தினம் ஒன்றுக்கு இரண்டு சாமம் வீதம் மூன்று நாள் அரைத்து வில்லை தட்டி உலர வைத்து ஒரு வாயகன்ற சட்டியிலிட்டு மேல்சட்டி மூடிச் சீலை செய்து அடுப்பிலேற்றி முத்தீயாக நான்கு சாமம் எரித்து எடுக் கச் சிவந்திருக்கும். இவ்வாறு குமரிச்சாறு, பொற்றலைக் கையாந்தகரைச் சாறு ஒவ்வொன்றிலும் அரைத்து அரைத்து வில்லை தட்டி முன்போல் எரித்து எடுக்க நல்ல செந்தூரமாகும். இதை அரைத்துக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்குக் குன்றியெடை தினம் இருவேளை தகுந்த அனுபானங் களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—சோபை, பாண்டு, காமாலை, மகோ தரம் தீருவதுடன் இரத்தவிருத்தியும் தாதுபுஷ்டியும் உண்டாகும்.

பத்தியம் :—புளி தள்ளி இச்சாபத்தியமாக அன்னம் கொள்ள வேண்டும்.

## 3. அயகாந்த செந்தூரம்

சரக்கு :—

| | | |
|---|---|---|
| அயப்பொடி | பலம் | 1 |
| காந்தம் | ,, | $\frac{1}{4}$ |
| கெந்தி | ,, | 1 |
| இலிங்கம் | கழஞ்சு | 1 |
| வெங்காரம் | ,, | 1 |
| நவச்சாரம் | ,, | 1 |
| கற்பூரம் | ,, | 1 |
| படிக்காரம் | ,, | 1 |

செய்பாகம் :—மேற்கூறப்பட்ட எட்டுச் சரக்குகளையும் கல்வத்தில் போட்டுப் பழச்சாற்றில் தினம் ஒன்றுக்கு 2-சாமம் விதம் 7-நாள் அரைத்து வில்லை தட்டி 15-நாள் வரையில் வைத்து வருக. அப்பால் அந்த வில்லையை மீண்டும் கல்வத்தில் போட்டுப் பழச்சாறு விட்டு நான்குசாமம் அரைத்து வில்லை தட்டிக் காயவைத்து அகலில் வைத்து மேல் அகல்மூடிச் சீலைசெய்து 30-40 வறட்டியில் புடமிட்டு எடுக்க நல்ல செந்தூரமாகும். இதை அரைத்துக் குப்பியி விடுக.

பிரயோகம்:—இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு $\frac{1}{2}$ - 1 குன்றி எடை தினம் இருவேளை கொடுக்கவும்.

தீரும் வியாதி :—பாண்டு, சோபை, சுரம்' வாத சீதளத்தினால் வந்த பல பிணிகள் தீரும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 4. வேறு முறை

சரக்கு :—

| | |
|---|---|
| அயப்பொடி | பலம் 1 |
| காந்தம் | ,, 1 |
| கெந்தி | ,, 1 |
| பூநீறு | கழஞ்சு 1 |

செய்பாகம் :—இவற்றைக் கல்வத்தில் போட்டுத் தினம் ஒன்றுக்கு 3-சாமம் வீதம் பழச்சாறு விட்டு 7-நாள் அரைத்து வில்லை தட்டிக் காய வைக்கவும். இரண்டு அரை செங்கல்லைக் கொண்டுவந்து அவற்றின் கனத்தில் அரை பாகம் குறையும்படி நன்ருய்த் தேய்த்து ஒன்றில் வில்லை யடங்கும்படி சுரண்டிப் பள்ளம் செய்து அதனில் முன் சித்தப்படுத்திய வில்லையை வைத்து மற்ருேர் கல்லால் மூடிச் சந்துவாய்க்கு மண்பூசி அவ்விரு கல்லிற்குப் பொருந்த மேல் மண்சீலை 7-8 செய்து உலர்த்தி 50-வறட்டி யில் புடமிடவும். புடம் ஆறின பின் செங்கல் இடையில் வைத்த வில்லையைப் பார்க்கச் சிவந்திருக்கும். இதை அரைத்துக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு ½-1 குன்றி எடை தினம் இருவேளை பிணிக்கேற்ற அனு பானங்களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—நீர்தோஷம், கபாலவாயு, கண் புகைச்சல், காதுமந்தம், பாண்டு, சோபை, காமாலை முதலியவைகளாம்.

பத்தியம் :—புளி தள்ளி இச்சாபத்தியம்.

## 5. அயகாந்த சண்டமாருதச் செந்தூரம் ✓

சரக்கும் செய்பாகமும் :—நான்கு பலம் சுத்தமான அயப்பொடியையும், இரண்டு பலம் கந்தகத்தையும் கல்வத்தில் போட்டுப் பழச்சாறுவிட்டு நான்கு சாமம் அரைத்து வில்லை தட்டிக் காய வைத்து அகலில் அடக்கி மேல் அகல் மூடிச் சீலைசெய்து ரவியில் உலர்த்தி முழப்புடமிடவும். அப்பால் அகலிலிட்ட வில்லையைக் கல்வத்தில் போட்டுக் கந்தகம் சேர்க்காமல் பின்னும் இருமுறை அரைத்து அரைத்து முன்போல் இரண்டு புடமிடவும். கரகரப்பற்ற நல்ல செந்தூரமாகும். இதைக் கல்வத்தில் போட்டு இதனுடன் சுத்திசெய்து இடித்துத் தூளாக்கிய காந்தம் பலம்-4 கந்தகம் பலம்-2 கூட்டிச் சோற்றுக் கற்றாழைச்சாறு விட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகுபதத்தில் அரையணு அகலமும் கனமும் உள்ள வில்லைகளாகத் தட்டி ரவியில் உலர்த்தி அகலில் பரப்பி மேல் அகல் மூடிச் சீலைசெய்து நன்கு உலர்த்தி முன்போல் முழுப்புடம் இடுக. புடம் நன்ருய் ஆறிய பின் வில்லைகளைக் கல்வத்தில் போட்டுப் பொற்றலைக்கையாந்தகரைச் சாற்றில் நான்கு சாமம் அரைத்து முன்போல் வில்லை தட்டிப் புடமிடவும். இப்படிப் பின்னும் ஒருமுறை புடமிட்டெடுக்க நல்ல செந்தூரமாக இருக்கும். நிறம் சரிவர இல்லை யென்றுணர்ந்தால், இதனைப் பொடித்து ஒரு அகன்ற புதுச் சட்டியில் போட்டு அடுப்பிலேற்றிச் செந்தணலாகும்படி வறுத்து எடுக்க நிறம் பின்னும் சிறிது சிவந்து காட்டும். இதை அயகாந்த செந்தூர மென்பர். இதனைத் தனியாக தகுந்த அனுபானங்களில் கொடுக்கப் பாண்டு, சோபை, காமாலை இரத்தக்குறைவால் நேர்ந்த பல பிணிகள் குணமாகும்.

இதற்குமேல் இலிங்கம் வராகனெடை-16, பூரம் வராகனெடை-8, வீரம் வராகனெடை-2, கந்தகம் வராக-

னெடை-2, இரசசெந்தூரம் வரானெடை-2 ஆகக் கல்வத்தில் போட்டு வெள்ளைக் காட்டாமணக்குப் பால்விட்டு ஒரு வாரம் அரைத்துக் காய வைத்து முன் சித்தப்படுத்தியுள்ள அயகாந்த செந்தூரம் மொத்த எடையில் கூட்டி இரண்டு மூன்று நாள் நன்ருய் உறவாகும்படி அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு ½-1 குன்றி யெடை ரோகங்களுக் கேற்றவாறு அனுபானங்களில் தினம் இருவேளை இருபது நாள் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—சர்வ வாதரோகங்கள். பித்த ரோகங்கள், கபரோகங்கள், குன்மம், வயிற்றுவலி, கவுசை, மேகம், பவுத்திரம், சந்நி, சுரம், வயிற்றுப்பொருமல் முதலிய பல பிணிகள் குணமாகும்.

பத்தியம் ;—இச்சா பத்தியம்.

## 6. அயகாந்த செந்தூரம்

சரக்கும் செய்பாகமும்:—அயப்பொடி பலம்-2½, காந்தம் பலம்-2½, இவைகளை முறைப்படி சுத்தி செய்து ஒரு மட்குடுவையில் போட்டு எருமையின் மூத்திரத்தை மூழ்க விட்டு வாய்மூடிச் சீலை செய்து பூமியில் ஒருமுழ ஆழம் பள்ளந் தோண்டி அதில் புதைத்து விடுக. ஒரு மண்டலம் சென்றபின் குடுவையை எடுத்து அதிலுள்ள அயகாந்தத்தைச் சுரண்டி எடுத்துக் கல்வத்தில் போட்டு எருமையின் மூத்திரத்தால் நான்கு சாமம் அரைத்து மெழுகுபதத்தில் காலணு அகலமும் கனமும் இருக்கும்படி வில்லைகள் செய்து ரவியில் உலர்த்தி அகலில் பரப்பி மேல் அகல்மூடிச் சீலைசெய்து 30—40 வறட்டியில் புடமிடவும். இது நன்ருய் ஆறினபின் அகலிலிட்ட வில்லைகளை

எடுத்து முன்போல் எருமையின் மூத்திரம் விட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகுபதத்தில் வில்லைகள் செய்து அகலில் பரப்பி மேல் அகல் மூடிச் சீலைசெய்து புடமிடவும். இவ்வாறு 10-புடம் முடிவுபெறின் உயர்தரமான செந்தூர மாகும்.

**பிரயோகம் :—**வேளைக்கு ½-குன்றியெடை தினம் இருவேளை தேனில் அனுபானம் செய்து கொடுத்துக் கொண்டு வருக.

**தீரும் வியாதி:—**காமாலை, சோபை, பாண்டு, மகோதரம் முதலியவைகள் குணமாகும். இன்னும் கீர்ப்பை, இரைப்பை, மண்ணீரல், கல்லீரல் முதலிய இடங்களில் உண்டான ரணம் ஆறும்.

**பத்தியம் :—**புளி தள்ளி இச்சாபத்தியமாக இருத்தல் வேண்டும்.

## 7. வீர அயச்செந்தூரம்

**சரக்கு :—(1)**

| | | |
|---|---|---|
| சுத்திசெய்த அயப்பொடி | பலம் | 1 |
| சுத்திசெய்த கந்தகம் | ,, | 1 |

**சரக்கு :—(2)**

| | | |
|---|---|---|
| சுத்திசெய்த இலிங்கம் | ,, | 1 |
| சுத்திசெய்த வீரம் | ,, | 1 |
| சுத்திசெய்த வெடியுப்பு | ,, | 1 |

பூநீறு அல்லது முப்புச்சுண்ணம் வராகனெடை-1.

**செய்பாகம் :—**மேற்கூறப்பட்ட ஆறு சரக்குகளில் முதலாவது அங்கத்தில் குறிப்பிட்டவைகளைக் கல்வத்தில் போட்டு எலுமிச்சம்பழச்சாறு விட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகுபதத்தில் ஒரே வில்லையாகத் தட்டி ரவி

யில் உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல் மூடி மண்சீலை ஏழுசெய்து நன்கு உலர்த்தி 15-வறட்டியில் புடமிடவும். அதன்பின் அகலிலிட்ட வில்லையை எடுத்துப் பார்க்கச் சிவந்து இருக்கும். இதனை மீண்டும் கல்வத்தில் போட்டு இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள சரக்குகளைக் கூட்டி எலுமிச்சம்பழச்சாறு விட்டு 2—3 சாமம் நன்கு அரைத்து முன்போல் ஒரே வில்லையாகத் தட்டி அகலி லடக்கிப் புடமிடவும். இப்படி மூன்று முறை அரைத்து அரைத்துப் புடமிட நல்ல செந்தூரமாகும். இதனை அரைத்துக் குப்பியில் அடைத்து வைக்கவும்.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு ½—1 குன்றி எடை தினம் இருவேளை ரோகத்திற் கேற்ற வாறு தேன், நெய், வெண்ணெய் முதலிய அனுபானங் களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—பாண்டு, சோகை, காமாலை, இரத் தக் குறைவினலுண்டான பல ரோகம்.

பத்தியம் :—கைப்பு புளிப்பு தள்ளி இச்சாபத்தியம்.

## 8. காந்தச் செந்தூரம்

சரக்கும் செய்பாகமும் :—இரண்டு மூன்று பலம் ஓடு காந்தத்தைச் சிவக்கக் கன்னுன் உலையில் வைத்து ஊதிப் பசுவின்நீரில் தோய்க்கவும். இப்படி ஏழுமுறை செய்து அலம்பி எடுத்துக் கல்லுரலில் போட்டு நன்ருய் இடித்து மாவுபோல் செய்து கல்வத்தில் போட்டுப் பொற் றிலைக் கையாந்தகரைச்சாறு கொஞ்சங் கொஞ்சமாக விட்டு நான்கு சாமம் அரைத்து வில்லை தட்டி நன்கு உலர்த்தி அகலில் அடக்கி மேல் அகல்மூடி மண்சீலை ஏழு செய்து உலர்த்தி 20 - 25 வறட்டியில் புடமிடவும். புடம்

நன்ருய் ஆறினபின் மீண்டும் வில்லையைக் கல்வத்தில் போட்டு முன்போல் பொற்றிலைக் கையாந்தகரைச் சாறு விட்டு 2-3 சாமம் அரைத்து வில்லை தட்டி அகலிலடக்கிச் சீலைசெய்து புடம் போடவும். இவ்வாறு சோற்றுக்கற்ருழைச்சாறு, நாவல்பட்டைச்சாறு, அரசம்பட்டைச்சாறு, எலுமிச்சம்பழச்சாறு ஒவ்வொன்றிலும் வரிசைக்கிரமமாக அரைத்து அரைத்து இரண்டிரண்டு புடமிட நல்ல செந்தூரமாகும். இதை அரைத்துக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு ½—1 குன்றி எடை தினம் இருவேளை நெய், தேன் முதலிய அனுபானங்களில் 10—20 நாள் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—காமாலை, பாண்டு, சோபை, ஈளை, மதுமேகம்.

பத்தியம் :—கைப்பு புளிப்புத் தள்ளி இச்சா பத்தியம்.

## 9. வேறு முறை

சரக்கும் செய்பாகமும் :—மூன்று பலம் ஓடு காந்தத்தைத் துண்டுகளாக நறுக்கி ஒரு சிமை மூசையில் போட்டுக் கன்னுன் உலையில் வைத்து ஊதிச் சிவந்த சமயம் மூசை நிறையப் பொற்றலைக் கையாந்தகரைச் சாறு விடவும். பிறகு சாற்றை வடித்துவிட்டு மீண்டும் உலையில் வைத்துப் பழுக்கக் காய்ச்சிப் பொற்றலைக்கையாந்தகரைச்சாறு விடவும். இப்படிச் சிரமம் பாராமல் இருபத்தோரு முறைசெய்து கல்வத்தில் போட்டுப் பொற்றலைக்கையாந்தகரைச்சாறு விட்டுத் தினம் ஒன்றுக்கு மூன்று சாமம் வீதம் நான்கு நாள் அரைத்து அகலமான வில்லை தட்டி ரவியில் உலர்த்தி ஒரு புதிய சட்டியில் வைத்து மேல் சட்டி மூடிச் சீலைசெய்து அடுப்பில் வைத்து

12-சாமம் எரித்து ஒரு நாள் ஆறவிட்டு மறுநாள் மேல் சட்டியைத் திறந்து பார்க்க நல்ல செந்தூரமாக இருக்கும் இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—**இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு ½ - 1 குன்றி எடை தினம் இருவேளை தகுந்த அனுபானங்களில் கொடுத்து வருக.

**தீரும் வியாதி:—**பாண்டு, சோபை, காமாலை, பெரும்பாடு இன்னும் இரத்தக் குறைவால் ஏற்பட்ட பல பிணிகள் குணமாகும்.

**பத்தியம் :—**புளி தள்ளி இச்சா பத்தியம்.

## 10. மண்டூரச் செந்தூரம்

**சரக்கும் செய்பாகமும் ;—**மூன்று பலம் மண்டூரத்தைக் கொண்டு வந்து கன்ஞன் உலையில் வைத்துப் பழுக்கக் காய்ச்சி ஏழு முறை கோவின் நீரிலாவது அல்லது வெள்ளாட்டு நீரிலாவது தோய்க்கவும். இதைச் சலம் விட்டு நன்ருய் அலம்பி ஈரம் போக உலர்த்தி இடித்து மாவுபோல் செய்து ஒரு கட்ராவில் (கிண்ணம் போன்ற மட்பாண்டம்) போட்டு வெற்றிலைச் சாறுவிட்டு ரவியில் வைக்கவும். இதில் சாறு சுண்டச் சுண்டத் தினந்தோறும் கொஞ்சம் சாறுவிட்டு மூன்று தினத்திற்குக் குறையாமல் ரவியில் வைத்து வருக. இதற்கு மேல் வரிசைக்கிரமமாக நொச்சியிலைச்சாறு, வெள்ளாட்டுப்பால், வெள்ளாட்டு நீர் முதலியவற்றைத் தனித்தனியாக சரக்கு மூழ்கும்படி விட்டு எரித்து ஒவ்வொன்றும் சுண்டின சமயம் கீழிறக்கி ஆறவிடுக. இவ்வாறு செய்தது மண்டூரத்திற்கு ஒருவித மான சுத்தியாகும். இந்த மண்டூரத்தைச் சேதப்படாமல் சுரண்டிக் கல்வத்தில் போட்டுக் குமரிச்சாறு விட்டு நான்கு சாமம் அரைத்து ஒரே வில்லையாக் தட்டி ரவியில்

உலர்த்தி அந்த வில்லைக்குப் பொருத்தமான அகலில் வைத்து மேல் அகல்மூடிச் சீலைசெய்து 50 - வறட்டியில் புடமிடவும். மறுநாள் புடத்திலிட்ட அகலைச் சோதித்துப் பார்க்க வில்லை சிவந்திருக்கும். மீண்டும் அதைக் கல்வத்தில் போட்டுக் குமரிச்சாறு விட்டு நான்கு சாமம் நன்கு அரைத்து மெழுகு பதத்தில் காலணு அகலமும் கனமும் உள்ள வில்லைகளாகச் செய்து ரவியில் உலர்த்தி ஒரு அகலில் ஒன்றன்மீது ஒன்று படாமல் பரப்பி மேல் அகல் மூடிச் சீலைசெய்து முன்போல் 50-வறட்டியில் புடமிடவும். இப்போது நல்ல சிவப்பு நிறமாகவும் மிருதுவாகவும் இருக்கும். அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம்:**—இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு ½ - 1 குன்றி எடை தினம் இருவேளை 10 - 12 நாள் தேனில் கொடுக்கவும்.

**தீரும் வியாதி :**—பாண்டு, சோபை, காமாலை, பெருவயிறு, ஈளை, கிராணி முதலியவைகள் தீரும். நல்ல ரத்தமும் தேஜசும் உண்டாகும்.

**பத்தியம் ;**—பாண்டு, சோபை முதலிய ரோகங்களுக்குக் கொடுக்கும்போது வெள்ளாட்டுப்பால்சாதம் அதிக உத்தமம். சாத்தியப்படாத சமயம் இச்சாபத்தியமாகவும் பசுவின் பாலன்னமும் உட்கொள்ள வேண்டும்.

## 11. வேறு முறை

**சரக்கும் செய்பாகமும் :**—ஐந்து பலம் நாட்சென்ற மண்டூரத்தைக் கொண்டுவந்து கன்னுன் உலையில் வைத்துப் பழுக்க ஊதிக் கோவின் நீரில் தோய்க்கவும். இப்படி ஐந்து முறை காய்ச்சிக் காய்ச்சித் தோய்க்கச் சுத்தியாகும். இதை ஈரமில்லாமல் துடைத்துக் கல்லுரலில் போட்டுக் கடப்பாறை கொண்டு மாவுபோல் இடித்துக் கல்வத்தில்

போட்டுக் கரிசாலைச்சாற்றில் ஒரு நாளும், குமரிச்சாற்றில் ஒரு நாளும் நன்ருய் அரைத்து மெழுகுபதத்தில் வில்லை தட்டி ரவியில் உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல் மூடிச் சீலைசெய்து 30 - வறட்டியில் புடமிடவும். இப்படியே கரிசாலைச்சாற்றில் அரைத்து அரைத்து முன் போல் வில்லை தட்டி அகலில் வைத்து மேல் அகல் மூடிச் சீலைசெய்து 10 - 15 புடம் வரையில் போட்டுவர உயர் தரமான செந்தூரமாகும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம்:—**இந்தச் செந்தூரத்தை வேளைக்கு ஒரு குன்றி எடையாகத் தினம் இருவேளை ½—1 மண்டலம் கொடுத்து வருக,

**தீரும் வியாதி :—**அறுகம்வேர்கட்டையை நன்ருய் உலர்த்தி இடித்துச் சூரணம் செய்து அதற்குச் சமனெடை வெள்ளைச் சர்க்கரை கூட்டி வைத்துக்கொண்டு வேளைக்குத் திரிகடிப் பிரமாணம் அந்தி சந்தி செந்தூரம் கூட்டிப் பசுவின் வெண்ணெய் கூட்டி மத்தித்துச் சாப்பிட்டுவர நரம்புகளுக்கு முறுக்கேற்றித் தாதுபுஷ்டியை யுண்டாக்கும்.

சுக்கு, மிளகு, திப்பிலி இம்மூன்றையும் சிறிது வெதுப்பி இடித்துச் சூரணித்துச் சமனெடை வெள்ளைச் சர்க்கரை கூட்டி வைத்துக்கொண்டு வேளைக்குத் திரிகடிப் பிரமாணம் அந்தி சந்தி செந்தூரம் கூட்டித் தேன் மத்தித்துச் சாப்பிட்டுவர எரிகுன்மம், சத்திகுன்மம், பித்த குன்மம், சுரப்பாண்டு, பித்தப்பாண்டு குணமாகும்.

சீரகத்தைச் சிறிது வெதுப்பி இடித்துச் சூரணித்துச் சமனெடை வெள்ளைச் சர்க்கரையைக் கூட்டி வைத்துக் கொண்டு வேளைக்குத் திரிகடிப் பிரமாணம் அந்தி சந்தி செந்தூரம் கூட்டி தேன் விட்டுக் குழைத்து சாப்பிட்டுவர வாதரோகம் பித்தரோகம் போம்.

திப்பிலியைச் சிறிது வெதுப்பி இடித்துச் சூரணித்து சமனெடை சர்க்கரை கூட்டி வைத்துக்கொண்டு வேளைக்குத் திரிகடிப் பிரமாணம் அந்தி சந்தி செந்தூரம் கூட்டித் தேன்விட்டு மத்தித்துச் சாப்பிட்டுவரச் சிலேத்தும ரோகம், காமாலை, பாண்டு முதலியவைகள் போம்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 12. எஃகுச் செந்தூரம்

**சரக்கும் செய்பாகமும் :—**கல்லுளிகளையாவது அல்லது எஃகுத் துண்டுகளையாவது கன்னானுலையில் வைத்து ஊதிப் பழுக்கக் காய்ந்த சமயம் வெள்ளாட்டு நீரும் கோவின் நீரும் கலந்து வைத்துள்ள சட்டியில் தோய்த்துப் பட்டறையின்மேல் வைத்துச் சுத்தி கொண்டு அடிக்கவும். அந்த உளியிலிருந்து சிட்டங்கள் விழுவதுடன் தோய்க்கும்போது சட்டியிலுள்ள சிறுநீரிலும் விழும். இப்படியே பழுக்கக் காய்ச்சிக் காய்ச்சிச் சட்டியிலுள்ள சிறுநீரில் தோய்த்துச் சுத்தியால் அடித்துக்கொண்டு வரச் சிட்டங்கள் தாராளமாகக் கிடைக்கும். இவற்றை யெல்லாம் சேதப்படாமல் மூன்று பலம் அளவிற்கு எடுத்துக் கல்வத்தில் போட்டுக் கரிசலாங்கண்ணிச் சாறுவிட்டுத் தினம் ஒன்றுக்கு நான்கு சாமம் வீதம் மூன்றுநாள் அரைத்து ஒரே வில்லையாகச் செய்து ஒரு அகலமான அகலில் வைத்துக் காற்று வாட்டமாக ஒரு மாதம் வைத்து விடவும்.

ஆப்பச் சட்டியைப் போன்ற இரண்டு சட்டிகளைக் கொண்டு வந்து வாய்பொருந்தும்படி தேய்த்து ஒன்றில் உலர்ந்த ஆலம் இலையை ஒன்றுமிரண்டுமாக இடித்துப் போட்டு அழுத்தி அதன்மேல் முன் சித்தப்படுத்தி வைத்துள்ள வில்லையை வைத்து அதன்மேல் ஆலம் இலைத்

தூளைப் போட்டுக் குவித்து அழுத்தி மேல்சட்டி மூடிச் சீலைசெய்து அசையாமல் 100-வறட்டிகளின் இடையில் வைத்துத் தீமூட்டவும். மறுநாள் புடம் நன்ருய் ஆறின பின் சட்டியிலிட்ட வில்லையை எடுத்துக் கல்வத்தில் போட்டு, ஓரிலைத்தாமரையைச் சலம்விட்டு இடித்துப் பிசைந்து விலவிலத்த கண்களையுடைய ஓர் உரப்பான சீலையில் வைத்துக் கசக்கிப் பிழிந்து எடுத்த வழுவழுப் பான சாற்றை விட்டு நான்கு சாமம் அரைத்து வில்லை தட்டி அகலில் வைத்து மேல் அகல்மூடிச் சீலைசெய்து 60 - 70 வறட்டியில் புடமிடவும். அப்பால் புடமாறினபின் அகலை எடுத்து அதிலுள்ள வில்லையைக் கல்வத்தில் போட்டுக் குமரிச்சாறு விட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகு பதத்தில் காலணு அகலமும் கனமும் உள்ள வில்லைகளாகச் செய்து ரவியில் நன்கு உலர்த்தி அகலில் ஒன்றன்மீது ஒன்று படாமல் பரப்பி மேல் அகல்மூடிச் சீலைசெய்து 50-60-வறட்டியில் புடமிடவும். புடம் நன்ருய் ஆறினபின் அகலிலிட்ட வில்லைகளைப் பார்க்கச் சிவந்து மிருதுவாக இருக்கும். இதுவே சரியாக முடிந்தது என் றுணர்க. அப்படி நன்ருய்ச் சிவந்திராவிடின் மீண்டும் அதனைக் கல்வத்தில் போட்டுக் குமரிச்சாறு விட்டு நான்கு சாமம் அரைத்து முன்போல் வில்லைகள் செய்துலர்த்தி அகலிலிட்டு மண்சீலை செய்து காய்ந்தபின் -0-60 வறட்டி யில் புடமிடவும். அப்போது எவ்விதத்திலும் நல்ல நிறத் தை அடையும். இதை அரைத்துக் குப்பியிலிடுக.

பிரயோகம்:—இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு ¼ - ½ குன்றி எடை திரிபலாதி சூரணத்துடன் சர்க்கரை கூட்டிக் கலந்து வைத்துள்ள கலவையில் திரிகடிப் பிர மாணம் கூட்டித் தேன்விட்டு மத்தித்துக் கொடுக்கவும். இப்படிக் காலை மாலை ஏழுநாள் கொடுப்பது அவசிய மாகும்.

**தீரும் வியாதி:**—பருத்த சரீரம் பலங்குன்ருமல் இளைக்கும். இன்னும் இது தேகத்தைச் சிறுகச் செய்வதுடன் நரைதிரையை மாற்றும் நரம்புகளுக்கு நல்ல பலத்தையும் இரத்தப் பெருக்கையும் உண்டாக்கும்.

**பத்தியம்:**—புளி தள்ளி இச்சாபத்தியமாக இருத்தல் நன்று.

**குறிப்பு:**—சில சந்தர்ப்பம் அயம், காந்தம், மண்டூரம் முதலியவைகள் புடபேதத்தினுல் மாறுபட்டுக் கருஞ் சிவப்பாக இருந்தால் வில்லைகளை ஒன்றுமிரண்டுமாகப் பொடித்து ஒரு புதுச் சட்டியில் போட்டு அடுப்பில் வைத்துக் காடாக்கினியாக எரித்து வறுக்கச் சிவந்து விடும். இதைப் பண்டிதர்கள் கவனத்தில் வைக்கக்கடவர்.

## 13. அன்னபேதிச் செந்தூரம்

**சரக்கும் செய்பாகமும்:**—ஐந்து பலம் அன்னபேதியைக் கல்வத்தில் போட்டு எலுமிச்சம்பழச்சாறு விட்டு 2 - 3 சாமம் அரைத்து மெழுகு பதத்தில் வழித்து ஒரு பொருத்தமான சிறு கல்யத்தில் போட்டு வாய்மூடிச் சீலை செய்து 20-வறட்டியில் புடமிடவும். மீண்டும் இதை முன் போல் அரைத்து ஒரு புடமிட்டு எடுத்து அந்தச் செந்தூரத்தின் எடைக்கு எட்டிலொரு எடை இலிங்கமும் பதினுறிலொரு எடை கெந்தியும் கூட்டிக் கல்வத்தில் போட்டுப் பழச்சாறு விட்டரைத்து வில்லைதட்டி உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல்மூடிச் சீலைசெய்து முன்போல் புடமிட்டு எடுக்க நல்ல செந்தூரமாகும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம்:**—இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு $\frac{1}{4}$ - $\frac{1}{2}$ குன்றி எடை தினம் இருவேளை தேனில் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—கல்லீரலில் உண்டான ரணம், வீக்கம், பித்தசுரம், வாதசுரம், மந்தபசி தீரும். வெண்ணெயில் கொடுக்கச் சீதபேதி குணமாகும்.

பத்தியம் :—ரோகத்திற்கு ஏற்றவாறு இச்சாபத்தியமாக வைத்தல் வேண்டும்.

## 14. வேறு முறை

சரக்கும் செய்பாகமும் :—ஒரு எனுமில் கோப்பையிலாவது அல்லது ஒரு மண் கட்ராவிலாவது 5 - பலம் அன்னபேதியைப் போட்டு இவைகள் மூழ்கும்படியான அளவிற்கு எலுமிச்சம்பழச்சாறு, புதியஞ இலைச்சாறு இஞ்சிச்சாறு சமனளவாகக் கலந்து விட்டு அடுப்பில் வைத்துச் சிறுக எரித்துச் சுண்டி மெழுகுபோல் வருஞ்சமயம் வழித்து ஒரு சிறு கலயத்தில்போட்டு வாய்மூடிச் சீலை செய்து 20-வறட்டியில் புடமிடவும். நன்ருய்ச் சிவந்திருக்கும். அரைத்துப் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்குக் குன்றி எடை தினம் இருவேளை தேனில் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—மயக்கம், தலைசுற்றல், வாந்தி' வாய்குமட்டல், காமாலை, கைகாலெரிவு முதலிய பித்த சம்பந்தமான பிணிகள் குணமாகும். இன்னும் அஜீரண பேதி, பாண்டு தீரும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 15. வேறு முறை

சரக்கும் செய்பாகமும் :—ஐந்து பலம் அன்னபேதியை ஒரு கட்ராவில் போட்டு மூழ்க வெள்ளாட்டுநீரும் கோநீரும் சமனளவாகக் கலந்து விட்டு அடுப்பில் வைத்துச் சிறுக எரித்துச் சுண்டி மெழுகு பதம் வந்த

வுடன் சேதப்படாமல் சுரண்டி எடுத்துக் கல்வத்தில் போட்டு முன் நீர் விட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகு போல் திரளும் சமயம் வில்லை தட்டிக் காயவைத்து அக லில் அடக்கி மேல் அகல் மூடி மண்சீலை ஏழு செய்து 20 - வறட்டியில் புடமிடவும். நல்ல செந்தூரமாகும். அரைத் துக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்குக் குன்றி எடை தினம் இருவேளை தேனில் கொடுக்கவும்.

தீரும் வியாதி ;—பித்தபாண்டு, சோபை, காமாலை, பெருவயிறு, வீக்கம் முதலியவைகள் குணமாகும். பேதி யைக் கட்டும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 16. தாம்பர அன்னபேதிச் செந்தூரம்

சரக்கும் செய்பாகமும் :—ஒரு வராகனெடையுள்ள தாம்பர குளிசத்தகட்டைக் கொண்டுவந்து சிவக்கக் காய்ச்சி ஏழுமுறை பழச்சாற்றிலும் ஏழுமுறை புளியமிலைச் சாற்றிலும் தோய்த்து எடுக்கச் சுத்தியாகும் இதில் அரை வராகனெடை எடுத்துப் பொடியாகக் கத்தரித்து வைத் துக்கொள்க. அப்பால் 10 - பலம் அன்னபேதியைக் கல் வத்தில் போட்டு எலுமிச்சம்பழச்சாறு விட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகுபதத்தில் வழித்து முன் சித்தப் படுத்தி வைத்துள்ள தாம்பரப் பொடியைப் போட்டுப் பிசரிக் குடுவையிலிட்டு வாய்மூடிச் சீலைசெய்து 20—25 வறட்டியில் புடமிடவும், நல்ல செந்தூரமாகும். மீண்டும் இதைக் கல்வத்தில் போட்டுப் பழச்சாறு விட்டு இரண்டு சாமம் அரைத்து வில்லை தட்டிக் காயவைத்து அகலில் அடக்கிச் சீலைசெய்து 20-வறட்டியில் புடமிடவும். தாம்பர சத்துச் சிறிதும் இல்லாமல் சிவந்து இருக்கும். இதை

இன்னும் ஒருமுறை பழச்சாற்றில் அரைத்து வில்லைதட்டி முன்போல் அகலிலடக்கிச் சீலைசெய்து புடமிட்டுக்கொண்டாலும் அதிக உத்தமம். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்குத் துவரம் பருப்பளவு தினம் 2-அல்லது 3-வேளை தேனில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—துளிர்சுரம், கபசுரம், பித்தசுரம், பாண்டு போம்.

பத்தியம் :—பார்லி அரிசிகஞ்சி, கோதுமை நொய் கஞ்சி ஆகும். மற்றது ஆகாது.

## 17. நீலகண்ட செந்தூரம்

சரக்கும் செய்பாகமும் :—சுத்தமான அயப்பொடி பலம்-5, சுத்திசெய்த சங்குபாஷாணம் பலம்-1 இவ்விரண்டையும் கல்வத்தில் போட்டுப் பழச்சாறுவிட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகுபதத்தில் ஒரே வில்லையாகத்தட்டி ரவியில் உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல்மூடிச் சீலை செய்து காய்ந்தபின் 30-வறட்டியில் புடமிடவும். இப்படியே புடத்திற்குப் புடம் ஒவ்வொரு பலம் சுத்திசெய்த சங்குப் பாஷாணத்தைக் கூட்டிப் பழச்சாற்றுலரைத்து அரைத்து ஐந்து புடமிடவும். இது கருஞ்சாயலான செந்தூரமாகும். இதன் மொத்த எடை ஏறத்தாழ 7½-பலத்திற்குத் தேறும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு 2 அரிசி எடை தினம் இருவேளை 3-நாள் கொடுக்கவும். மீண்டும் கொடுக்கவேண்டியது அவசியமாயின் ஒருவாரம் சென்றபின் ஒருமுறை மூன்று நாள் கொடுக்கவும்.

**தீரும் வியாதி :—** பாரிசவாதம், முகவாதம், ஜிக்கு வாதம் இவைகள் குணமாகும்.

**பத்தியம் :—** புளிதள்ளி இச்சாபத்தியம். வெள்ளாட்டுச் சூப்பு சேர்த்துக் கொள்ளவும்.

## 18. நாராயணச் செந்தூரம்

**சரக்கு :—**

| | | |
|---|---|---|
| வாலைரசம் | வராகனெடை | 30 |
| கந்தகம் | ,, | 12 |
| இலிங்கம் | ,, | 15 |
| தாளகம் | ,, | 10 |
| மனோசிலை | ,, | 4 |

**செய்பாகம் :—** மேற்கூறப்பட்ட ஐந்து சரக்குகளையும் கல்வத்தில் போட்டு நவலவண திராவகம்விட்டு நான்கு சாமம் அரைத்து நன்ருப் ரவியில் உலர்த்தி ஒரு மண்ணோட்டில் பொடித்துப் போட்டுக் கரிநெருப்பனலில் வைத்துச் சிறிதுநேரம் கறுத்தபுகை கிளம்பும் வரையில் வறுத்து ஆறவிட்டு அரைத்து ஏழுமண் சீலைசெய்த குப்பியில் போட்டு வாய்க்குப் பலப்பக்கல் கார்க்கிட்டு 7-8 மண் சீலை செய்து ரவியில் உலர்த்தி வைத்துக்கொள்க. அப்பால் முக்கால் அடி அகலமும் ½-அடி உயரமும் உள்ள இரண்டு சட்டிகளைக் கொண்டுவந்து வாய் பொருந்தும்படி தேய்த்து ஒன்றில் 2 - 3 விரற்கடை உயரமிருக்கப் பெருமணல் கொட்டிப் பரப்பி நடுவில் முன் சித்தப்படுத்திய குப்பியை வைத்துக் குப்பிமறைய மணலைக் கொட்டி மேல்சட்டி மூடிச் சந்து வாய்க்கு மண்பூசி மண்சீலை 7-செய்து உலரவிட்டு அடுப்பிலேற்றி நான்கு சாமம் தீபாக்கினியாகவும் கமலாக்கினியாகவும் எரித்து அன்றிரவு அடுப்போடு ஆறவிடுக. மறுநாள் காலையில் மீண்

டும் நான்கு சாமம் கமலாக்கினியாகவும் காடாக்கினியாகவும் எரித்து அடுப்போடு ஆறவிடுக. அதற்கு அடுத்த நாள் காலையில் நான்கு சாமம் காடாக்கினியாக எரித்து ஒருநாள் ஆறவிட்டுப் பார்க்கக் குப்பியிலிட்ட சரக்குகள் சிவந்திருக்கும். எரிப்புக் குறைவால் கருஞ்சிவப்பாக இருந்தாலும் குற்றமில்லை. கறுத்து இருக்கக் கூடாது. அப்படிக் கறுத்து இருப்பின், மீண்டும் திராவகம் விட்டு அரைத்து உலர்த்திப் பொடித்து முன்போல் சீலைசெய்த குப்பியில் போட்டு நான்கு சாமம் காடாக்கினியாக எரித்தல் வேண்டும். எவ்விதத்திலும் நிறம் சிவந்து காணும். அரைத்துச் சீசாவில் பத்திரபபடுத்துக. இது ஏறத்தாழ 68½-வராகனெடை தேரும்.

**பிரயோகம்:**—இந்தச் செந்தூரத்தில் வேளைக்குத் துவரம்பருப்பளவு அந்தி சந்தி தகுந்த அனுபானங்களில் கொடுத்து வருக.

**தீரும் வியாதி:**—கண்டங்கத்திரி, ஆடாதோடை, தூதுவளை வகைக்கு ஒரு கைப்பிடி அளவு எடுத்துப் பிட்டு அவியலாக அவித்துக் கசக்கிப் பிழிந்த சாற்றில் 1 - 2 தேக்கரண்டி அளவு எடுத்து அதிலரைபாகம் தேன் கூட்டிச் செந்தூரமிட்டுக் கலக்கி தினம் இருவேளை 10-15 நாள் கொடுக்கக் கப சம்பந்தமான பல பிணிகள் நீங்கும். திப்பிலியை நெருப்பனலில் வெதுப்பி இடித்து எடுத்த சூரணம் இரண்டு மூன்று குன்றி எடையுடன் செந்தூரம் சேர்த்துத் தேன்விட்டு மத்தித்து தினம் 2-வேளை 20 நாள் கோடுக்கச் சூலை, குட்டம், மேகரணம், கடிவிஷம், அரையாப்பு, புற்று, கபாலசூலை, பீநசம், நெஞ்சுநோய், நெஞ்சு அடைப்பு முதலியவைகள் நீங்கும். அரை தேக்கரண்டி வெள்ளைக் காட்டாமணக்குப் பாலில் செந்தூரம் கூட்டித் தினம் இருவேளை 20—40 நாள் கொடுக்க வெண்குட்டம் தீரும். வெள்ளுள்ளியைத்

தோலுரித்து 10—15 நாள் நிழலில் நீர் சுண்ட ஆரப் போட்டுப் பழுப்பு நிறம் கண்டவுடன் நல்லவேளை வேர்ப் பட்டை கூட்டி இடித்து ஒரு சீலையில் முடிச்சுக் கட்டி நெருப்பனலில் வாட்டிப் பிழிந்தெடுத்த தைலத்தில் வேளைக்கு 5—6 துளி வீதம் தினம் இருவேளை செந்தூரம் கூட்டி 10-நாள் கொடுத்துவர வாத மூர்ச்சை, பித்த மூர்ச்சை, சந்நி மூர்ச்சை, கரப்பான், சந்நி தோஷம் முதலியவைகள் நீங்கும். நெற்பொரி, ஓமம், சுக்கு, மிளகு இவற்றைச் சிறிது வெதுப்பி இடித்துச் சூரணம் செய்து வைத்துக் கொண்டு வேளைக்கு இரண்டு மூன்று குன்றி யெடை சூரணத்தில் செந்தூரம் கூட்டி முருங்கைப்பட்டைச் சாறு விட்டு மத்தித்து தினம் இருவேளை ஏழுநாள் கொடுக்கப் பக்கவாதம், சர்வாங்கவாதம், தோள்வாதம், நடுக்கு வாதம், முடக்குவாதம் கெண்டைவாதம், இடுப்புவாதம், உதிரவாதம் முதலியவைகள் குணமாகும். இவ்வாறு நோய்க்கு ஏற்றவாறு அனுபானம் செய்து கொடுக்கப் புகின் சர்வ ரோகமும் குணமாகும்.

பத்தியம் :—இச்சா பத்தியமாகவும் பசுவின்பால், மோர், நெய் முதலியவற்றை மருந்தின் வீறு தணியும்படியாகவும் ஆகாரம் உட்கொள்ள வேண்டும்.

இம்முறையில் உபயோகப்படுத்த வேண்டிய நவ உப்பு திராவகத்தின் செய்முறை:—வெடியுப்பு பலம்-15, வெங்காரம் பலம்-1, படிக்காரம் பலம்-10, துரிசு பலம்-½, நவாச்சாரம் பலம்-1, இந்துப்பு பலம்-½, பூநீறு பலம்-1, கல்லுப்பு பலம்-½, அன்னபேதி பலம்-1, ஆக முப்பதரைப் பலம் உப்பைக் கல்வத்திலிட்டு அரைத்து ஒருநாள் ரவியில் உலர்த்தி வாலையிலிட்டு திராவகம் வடித்து வாங்கிக் கொள்ளவும்.

## 19. ஆறுமுகச் செந்தூரம்

**சரக்கும் செய்பாகமும்:**—வாலைரசம் தோலா-5, கந்தகம் தோலா-9, மனோசிலை தோலா-8, இந்துப்பு தோலா-4, அயப்பொடி தோலா-12, காந்தம் தோலா-7 இவைகளைக் கல்வத்தில் போட்டுச் சோற்றுக்கற்றாழைச் சாற்றால் தினம் ஒன்றுக்கு 3—4 சாமம் வீதம் 5-நாள் அரைத்து வில்லை செய்து உலர்த்தி வைத்துக் கொள்க. அப்பால் ஒரு மட்பாண்டத்தில் கற்றாழை மடலின் மீதுள்ள தோலைச் சீவி உள்ளிருக்கும் சோற்றைச் சிறு துண்டுகளாக நறுக்கி மூன்று அங்குலம் உயரமிருக்கும்படியாகப் பரப்பி அதன்மீது முன்செய்த வில்லையை வைத்து, மேலும் முன்போல் கற்றாழைச் சோற்றைப் பரப்பி மேல் சட்டி மூடிச் சீலை செய்து அடுப்பில் வைத்து ஆறு சாமம் எரித்து எடுக்கவும். அப்போது மேல் சட்டியில் பதங்கம் ஏறி நிற்பதுடன் அடிப்பாண்டத்தில் வைத்த வில்லை சிவந்திருக்கும். இந்த வில்லையையும் மேலேறிய பதங்கத்தையும் சேதப்படாமல் கல்வத்தில் போட்டு முன்போல் சோற்றுக் கற்றாழைச்சாறு விட்டு நான்கு சாமம் நன்றாய் அரைத்து மெழுகுபதத்தில் ஒரே வில்லையாகச் செய்து நன்கு உலர்த்திச் சோற்றுக்கற்றாழையைப் பரப்பாமல் தனியாக மட்பாண்டத்தின் நடுவில் வைத்து மேல்சட்டி மூடிச் சீலை செய்து உலர்த்தி அடுப்பில் வைத்து நான்கு சாமம் எரித்து எடுக்கவும். இப்படி 4—5 முறை அப்போதைக் கப்போது மேல் ஏறும் பதங்கத்தையும் அடியிலிருக்கின்ற வில்லையையும் சோற்றுக்கற்றாழைச் சாற்றில் அரைத்து அரைத்து எரித்துக்கொண்டுவர மேல்சட்டியில் பதங்கம் ஏறாது. இதுவே சரியாக முடிந்தது. இதை அரைக்கச் சிவப்பு நிறமாக இருக்கும். இதைக் குப்பியில் பத்திரப்படுத்துக. **உபயோகிக்கும் விதம்:**—இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு ½ - 1 குன்றியெடை தினம் இருவேளை 5 - 7 நாள் தேனில் கொடுத்து வருக.

**தீரும் வியாதி :**—சுரம், சந்நி, ஈளை, க்ஷயம், காசம், கிரந்தி, வாத ரோகங்கள், மேகரணம், குட்டம், வெண்குட்டம், கண்டமாலை, சோபை, பித்தப்பாண்டு, பலவித பேதி, அரையாப்பு, தலைநோய், பவுத்திரம், குன்மம், நீர் ரோகங்கள் குணமாகும் ரோகத்திற்கு ஏற்றவாறு அனுபானம் அறிந்து கொடுக்கச் சகல ரோகமும் தீரும்.

**பத்தியம் :**—இச்சாபத்தியம், புளியை நீக்கியும் சில சந்தர்ப்பம் நீக்காமலும் கொடுக்கலாம்.

## 20. இலிங்கச் செந்தூரம்

**சரக்கும் செய்பாகமும்:**—இரண்டு பலம் இலிங்கத்தைக் கல்வத்தில் போட்டு முலைப்பால் கொஞ்சங் கொஞ்சமாக விட்டு நான்கு சாமத்திற்குக் குறையாமல் அரைத்து மெழுகுபதத்தில் வில்லை தட்டி அகலில் வைத்து மேல் மூடாமல் மூன்று மாதம் வரையில் ஓர் இடத்தில் வைத்து விடவும். இந்த வில்லையை நான்காவது மாதம் கல்வத்தில் போட்டு அதனுடன் வெள்ளைச்சங்குபற்பம் பலம் - ½ பொரித்த எண்ணெய் வெங்காரம் பலம் - ½ கூட்டி முலைப் பால்விட்டு 2 - 3 சாமம் அரைத்து வில்லை தட்டி உலர்த்தி எடுத்து மீண்டும் அதனைக் கல்வத்தில் போட்டு நன்றுப் அரைத்துச் சீசாவில் பத்திரப் படுத்துக.

**பிரயோகம் :**—இந்தச் செந்தூரத்தில் வேளைக்குக் குன்றி எடை தினம் இருவேளை தேனில் அனுபானம் செய்து கொடுக்கவும்.

**தீரும் வியாதி:**—சர்வசுரம், சயித்தியம், ஜலதோஷம், கைகால் உளைச்சல், வாதவலி, தலைவலி முதலிய சீதள சம்பந்தமான பல பிணிகள் குணமாகும்.

**பத்தியம்:**—ரோகத்திற்கு ஏற்றவாறு கஞ்சி, புனல் பாகம், இச்சாபத்தியம்.

## 21. கெம்பு செந்தூரம்

சரக்கும் செய்பாகமும் :—ஒரு பலம் உயர்தரமான கெம்புப் பொடியை ஒரு மூசையில் போட்டுக் கரிநெருப் பனலில் வைத்துச் சூடேறின சமயம் வெள்ளாட்டுப்பாலில் கொட்டவும். இப்படி ஏழுமுறை செய்து சுத்தமாக அலம்பி ஈரமில்லாமல் துடைத்துக் கல்லுரல் அல்லது இரும்பு உரலிலிட்டு இடித்து மாவுபோல் செய்து கல்வத்தில் போட்டுக் கொடி இனத்தைச் சார்ந்த சிலந்திநாயகம் என்னும் பூண்டின் சாறுவிட்டு 3-சாமத்திற்குக் குறையா மல் நன்கு அரைத்து மெழுகுபதத்தில் வில்லைதட்டி ரவி யில் உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல்மூடி மண் சீலை ஏழு செய்து 30 - வறட்டியில் புடமிடவும் இப்படி அரைத்து அரைத்து ஐந்து புடமிட்ட பின் ரோஜாபூவைக் கொண்டுவந்து சலம்விட்டு வேகவைத்துப் பிசைந்து பிசைந்து வடிகட்டி எடுத்த கியாழம்விட்டு அரைத்து அரைத்து ஐந்து புடமிடவும். இப்போது ரோஜாப்பூ வர்ணமாக இருக்கும். இதை அரைத்துச் சீசாவில் பத்தி ரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்குத் துவரம்பருப்பளவு தினம் இருவேளை முலைப்பால் அல்லது வெள்ளாட்டுப்பாலில் அனுபானம் செய்து கொடுக்கவும்.

தீரும் வியாதி:—சுவாசகாசம், இருமல், ஈளை, க்ஷயம் தீரும் தேகத்திற்குப் பலமும் ஆரோக்கியமும் கொடுக்கும்.

பத்தியம் :—புளி தள்ளி இச்சாபத்தியம்.

## 22. கருவங்கச் செந்தூரம்

சரக்கும் செய்பாகமும் :—கோவின் பஞ்சகௌவியத்தில் 21-முறை உருக்கிச் சாய்த்தெடுத்த கருவங்கம் பலமொன்றை ஒரு இரும்புக் கடாயில் போட்டு அடுப்பில் வைத்து எரித்து வங்கம் உருகின சமயம் இரண்டு பலம் வெடியுப்பைத் தூள்செய்து வைத்துக்கொண்டு அவசரப்படாமல் கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டுக் கரண்டி கொண்டு தேய்த்துவரப் பற்பமாகும். இவ்வாறு பற்பமானதை இரண்டொரு குன்றி எடை ஒரு கரண்டியில் போட்டு நல்லெண்ணெய்விட்டு அடுப்பில் வைத்து எரிக்க எண்ணெய் பற்றி எரிந்தடங்கும். அப்போது கரண்டியை ஆறவிட்டு விரலால் சோதித்துப் பார்க்கச் சத்து இல்லாமல் இருந்தால் இதுவே சரியான பதம். ஒரு சமயம் மணிபோல வங்கசத்து உருகி நிற்கில் மீண்டும் கொஞ்சம் வெடியுப்புத்தூள் தூவிக் கரண்டிகொண்டு சத்தில்லாமல் தேய்த்து எடுத்துக்கொள்ளவும். இதைச் சீலையில் அரித்து ஏதேனும் திப்பிகள் இருப்பின் நீக்கி விட்டுப் பற்பத்தை மீண்டும் இரும்புக் கடாயில் போட்டு அடுப்பிலேற்றி எரித்து ஒரு பலம் அபினியைச் சிறு துண்டுகளாக நறுக்கி வைத்துக்கொண்டு கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டுக் குமரிவேர்கொண்டு தேய்த்து ஒவ்வொரு முறையும் பற்பத்தைக் கீழ்மேலாகக் கிளறிக் கொடுத்துக் கொண்டுவருக. இதற்குமேல் ஒரு வீசை அம்மாம்பச்சரிசி இலையையும். ஒரு வீசை செந்நாயுருவி இலையையும் வரிசைக் கிரமமாகக் கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டுக் கரண்டிகொண்டு தேய்த்துவருக. அப்பால் 2-பலம் நாயுருவி உப்பையும் 2-பலம் அம்மாம்பச்சரிசி உப்பையும் வரிசைக் கிரமமாகப் போட்டுக் கரண்டி கொண்டு கிளறிக் கொடுத்து தேய்க்கவும். நல்ல செந்தூரமாகும். இந்தச் செந்தூரத்தைச் செய்ய ஆரம்பித்த

பொழுது அவசரப்படாமல் சாத்தியப்பட்ட வரையிலும் கொஞ்சங் கொஞ்சமாகக் கிரமப்படி செய்க. எத்தனை நாள் சென்றிடினும் குற்றமில்லை. இவ்வாறு முடிவுபெற்ற மருந்து சிவப்பாகத் தோற்ருவிடின் இதைச் செங்நாயுருவிச் சாற்றில் அரைத்து அரைத்து இரண்டொரு புடமிட நல்ல நிறங் காணும். மருந்து இலேசாகவும் 6 அவுன்ஸ் புட்டியில் அடங்ககககூடியதாகவும் ஏற்படும்.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு 1-2 குன்றி எடை தினம் இருவேளை தகுந்த அனுபானங்களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—நீரிழிவு, மதுமேகம், எலும்புருக்கி குணமாகும். ஆவாரம்பட்டை பலம்-2½, கறிமஞ்சள் பலம்-¼ கூட்டி இடித்து வைத்துள்ள சூரணத்தில் வேளைக்கு அரைக்கால் ரூபாய் எடையாக எடுத்து இச்செந்தூரத்தைச் சேர்த்துக் கொடுக்க நீர் வியாதிகள் விரைவில் குணமாகும்.

பத்தியம் :—நல்ல ஆகாரம் கொள்ளவேண்டும். இச்சாபத்தியம்.

## 23. கருவங்கச் செந்தூரம்

### (வேறு முறை)

சரக்கும் செய்பாகமும் :—மூன்று பலம் கருவங்கத்தை முன் முறையில் கூறியவாறு சுத்திசெய்து ஈசல் இறகுபோல் தகடு அடித்துச் சிறு துண்டுகளாக நறுக்கி ஒரு சீன கோப்பையிலாவது அல்லது எனுமில் கோப்பையிலாவது போட்டு அத் துண்டுகள் மறைய வெடியுப்புத் திராவகம்விட்டு, இரண்டு மூன்று நாள்வரையில் துடைப்பக் குச்சியைக்கொண்டு கிளறிக் கொடுத்துக்

கொண்டு வருக. இந்தத் திராவகம் கருவங்கத்தை மாவு போல் கரைத்துவிடும். அதில் சிறிது சலம்விட்டுச் சுப்ப லால் கிளறி 3 4 மணிநேரம் அசையாமல் வைத்துத் தெளிந்துள்ள நீரை வடித்துவிடவும். இதை இரண்டு மூன்றுநாள் ரவிமுகத்தில் வைத்துச் சிறிதும் ஈரம் இல் லாத பக்குவத்தில் சுரண்டிக் கல்வத்தில்போட்டு ஆகாசத் தாமரைச் சாறுவிட்டுத் தினம் ஒன்றுக்கு நான்கு சாமம் வீதம் இரண்டு நாள் அரைத்து மெழுகுபதத்தில் அகல மாக ஒரேவில்லை தட்டி ரவியில் உலர்த்துக. அப்பால் ஒரு புதுச்சட்டியில் முன் முடித்த வில்லையை வைத்து மேல் சட்டி மூடிச் சீலைசெய்து அடுப்பில் வைத்து முத்தீயாக நான்கு சாமம் எரித்து ஒரு இரவு ஆறவிட்டு மறுநாள் பார்க்கத் திருச்சூரணம்போல் சிவந்து இருக்கும். அப்படி யில்லாமல் நிறம் மாறுபடின் மீண்டும் அந்த வில்லையைக் கல்வத்தில் போட்டு ஆகாசத் தாமரைச்சாறு விட்டு நான்கு சாமம் அரைத்து வில்லைதட்டி முன்போல் சட்டி யில் வைத்து எரிக்க எவ்விதத்திலும் சிவந்தநிறம் ஏற் படும். இந்தச் செந்தூரத்தை இரண்டொரு குன்றி எடை கரண்டியில் போட்டு நல்லெண்ணெய் சிறிதுவிட்டு அடுப் பில் வைத்து எரிக்க எண்ணெய்பற்றி எரியும். ஆறவிட்டு கரண்டியில் சோதித்துப் பார்க்க வங்கசத்து உருகி மணி மணியாக இருக்குமாயின் பின்னும் இரண்டொருமுறை ஆகாசத்தாமரைச் சாற்றில் அரைத்து அரைத்து எரிக்க வேண்டும். சத்து இராவிடின் அரைத்துக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்குத் துவரம்பருப்பளவு தினம் இருவேளை 10-நாள் தேனில் கொடுக்கவும். தேவையாயின் 10-நாள் மருந்தில்லாமல் விட்டு வைத்து மீண்டும் 10-நாள் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—கருமேகம், மேகரணம், மதுமேகம் இவைகள் போகும்.

பத்தியம் :—இச்சாபத்தியமாக புளி தள்ளி அன்னம் கொள்ளவும்.

மேற் கூறப்பட்ட பாகத்தில் வெடியுப்புத் திராவகம் செய்ய வேண்டிய முறை:—வெடியுப்பு பலம்-10, படிக் காரம் பலம்-10, சுத்தி பூநீறு பலம்-10 இவைகளை இடித்து ஒரு மட்குடத்தில் போட்டு வாய்க்குப் பொறுத்தமான மண்வாலை செருகி மண்சீலை ஏழு செய்து அடுப்பிலேற்றி முறைபோல் திராவகம் வாங்கி உபயோகப்படுத்திக் கொள்ளவும்.

## 24. கருவங்கச் செந்தூரம்
### (வேறு முறை)

சரக்கும் செய்பாகமும் :—மூன்று பலம் சுத்தி செய்த கருவங்கத்தை ஒரு இரும்புக் கடாயில் போட்டு அடுப்பில் வைத்துப் பெருந் தீயாக எரித்து உருகின சமயம் ஆடாதோடை இலையைப் பொடியாக அரிந்து கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டு நான்கு சாமம் கரண்டி கொண்டு தேய்த்து வரச் சந்தன நிறமாகக் காணும். இதைச் சீலையில் அரித்து திப்பி இருப்பின் தள்ளி விட்டு அடியில் நின்ற பற்பத்தைக் கல்வத்தில் போட்டு அமுக் கரா இலைச்சாறு விட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகு பதத்தில் வில்லை தட்டி உலர்த்தி அகலில் அடக்கி மேல் அகல் மூடிச் சீலைசெய்து 20-25 வறட்டியில் புடமிடவும். அதன்பின் பொற்றலைக்கையாந்தகரைச் சாற்றில் நான்கு சாமம் அரைத்து வில்லை தட்டி முன்போல் 20-25 வறட்டி யில் புடமிடவும். நல்ல செந்தூரமாகும். இதை அரைத் துக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்குத் துவரம்பருப்பளவு தினம் இருவேளை தேனில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—செம்மேகம், கருமேகம், ஈளை, இருமல் குணமாகும்.

பத்தியம் :—இச்சாபத்தியம், புளி நீக்குதல் அதிக உத்தமம்.

## 25. வங்கச் சந்திரோதயம்

சரக்கும் செய்பாகமும் :—முன்முறையில் முடித்த கருவங்கச் செந்தூரம், இலிங்கம், அயப்பொடி, வீரம், ரச செந்தூரம் வகைக்குப் பலம்-1 ஆகக் கல்வத்தில் போட்டுப் பழச்சாறு, குப்பைமேனிச்சாறு முதலியவற்றில் வரிசைக் கிரமமாக மும்மூன்று சாமம் அரைத்து வில்லை தட்டிக் காயவைத்து ஓர் புதிய சட்டியில் வைத்து மேல் சட்டி மூடி வாய் பொருத்தத்திற்கு மண் பூசி அதன்மேல் மண்சீலை ஏழுசெய்து நன்றாய் உலர்த்தி அடுப்பிலேற்றி நான்கு சாமம் எரித்து ஆறவிட்டுப் பார்க்க அடியில் செந்தூரமாகவும் மேல் சட்டியில் சிறிது பதங்கமாகவும் ஏறி இருக்கும். இந்தப் பதங்கத்தைச் சேதப்படாமல் சுரண்டி எடுத்து அடியிலுள்ள வில்லையுடன் கூட்டிக் கல்வத்தில் போட்டு முன்போல் இரு மூலிகைகளின் சாறுவிட்டு அரைத்து வில்லை தட்டி முன்போல் சட்டியில் வைத்து எரிக்கவும். இப்படி மூன்று முறை எரித்த பின் மேல் சட்டியில் பதங்கம் சிறிது இருந்தாலும் தள்ளி விட்டு அடியிலுள்ள வில்லையைக் கல்வத்தில் போட்டு நன்கு அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு $\frac{1}{4}$—$\frac{1}{2}$ குன்றி எடை தினம் இருவேளை கொடுக்கவும்.

தீரும் வியாதி :—திரிகடுகு சூரணத்தில் கொடுக்க வாயு, அக்கினிமந்தம், பித்தம், காமாலை, சோபை, சுரக்கட்டி, இரைப்பு குணமாகும். ஜாதிக்காய், ஜாதிபத்திரி,

கிராம்பு, அதிவிடயம் இவற்றைப் பொன்மேனியாக வெதுப்பிச் சூரணம் செய்து வைத்துக்கொண்டு இதனில் வேளைக்கு 2—3 குன்றி யெடையாகச் செந்தூரம் கூட்டித் தினம் இருவேளை கொடுத்துவர வாந்தி, பேதி, ரத்தபேதி, கிராணி, சீதபேதி, வயிற்றுவலி, வயிற்றுப்பிசம் குண மாகும். இலுப்பைப்பூ, ஜாதிக்காய் இவ்விரண்டையும் சிறிது வெதுப்பிச் சூரணம் செய்து இதனில் வேளைக்கு 2—3 குன்றி யெடையாகச் செந்தூரம் கூட்டிக் கொடுக்க தாது விருத்தி யுண்டாகும்.

பத்தியம் :—ரோகத்திற்கு ஏற்றவாறு இச்சாபத்திய மாக ஆகாரம் கொள்ளுதல் வேண்டும்.

## 26. பூரணசந்திரோதயம்

சரக்கு :—

| | | |
|---|---|---|
| தங்கம் | வராகனெடை | 1 |
| வாலைரசம் | ,, | 8 |
| சுத்தி கந்தகம் | ,, | 16 |

செய்பாகம்:—முதலில் வாலைரசத்தைக் கல்வத்தில் விட்டுச் சுருள் தங்கரேக்கைப் பொடிப்பொடியாகக் கத்த ரித்துப் போட்டு அரைக்கவும். இவைகள் இரண்டும் நன்ருய் உறவான பின் கந்தகத்தைக் கொஞ்சங் கொஞ்ச மாகப் போட்டு அரைத்து எல்லாம் உறவாகிக் கறுப்பு நிறமாக இருக்கும்போது சேதப்படாமல் சுரண்டி எடுத்து வைத்துக் கொள்ளவும். அதன்பின் சிறு கமலாப்பழம் அளவுள்ள மட்குடுவையையும் அதன் வாய்க்குப் பொருத்தமான அகலையும் சாதம் வடித்த கஞ்சியில் ஒரு வாரம் போட்டு ஊறவிட்டு அலம்பி எடுத்து ரவியில் உலர்த்தி அதனில் முன் அரைத்துச் சித்தப்படுத்திய தூளைப் போட்டுப் புளியாரைக் கீரைச்சாறு அரை குடுவை கொள்ளும் அளவிற்கு விட்டு வாய்க்கு அகல்கொண்டு

மூடி மண்சீலை ஏழுசெய்து உலர்த்தி எடுத்துக் கொள்க. பின்பு இரண்டுபடி அளவு கொள்ளத்தக்க ஒரு மண் தோண்டியில் வெடி யடங்க வறுத்து எடுத்த சோற்றுப்பை 2-விரற்கடை கனமிருக்கும்படி பரப்பி நடுவில் குடுவையை வைத்து தோண்டி நிறைய வறுத்த உப்பைப் போட்டு அழுத்தித் தோண்டியின் வாய்க்குப் பொருத்தமான மண் சாணக்கைக்கொண்டு மூடிச் சீலைசெய்து அடுப்பில் வைத்து முத்தீயாக 4-சாமம் எரிக்கவும். அதன் பின் காடாக்கினியாக இரண்டு சாமம் எரித்து ஆறவிடுக. மறுநாள் சிறு மட்குடுவையை திறந்து பார்க்க மருந்தானது உருகிச் சிவந்து இருக்கும். அப்பொழுது குடுவையிலும் அதன் வாய் மூடியிலும் பற்றியுள்ள மருந்தை யெல்லாம் சேதப்படாமல் சுரண்டி எடுத்துக் கல்வத்தில் போட்டு அரைக்கச் சிவந்திருக்கும். இதைச் சீசாவில் பத்திரப்படுத்துக. எரிப்பின் பேதத்தால் சிறிது கறுத்திருப்பின் மீண்டும் அந்தக் குடுவையில் போட்டு வாய்மூடிச் சீலைசெய்து முன்போல் உப்பில் வைத்து பின்னும் இரண்டு சாமம் எரித்தெடுக்க உயர்தரமான சிவப்பு நிறத்தோடு இருக்கும். ஆனால் எடையில் சிறிது குறையும்.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு துவரம்பருப்பு அளவு காலை மாலை தாதுபுஷ்டிக்குரிய லேகியங்களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—தேக துர்ப்பலம், துரிதஸ்கலிதம், மக்கட்பேறின்மை.

பத்தியம் :—சத்துள்ள ஆகாரங்களை வேளை தவறாமல் உட்கொள்ளவும்.

குறிப்பு :—இந்தச் செந்தூரத்தை தேனில் கொடுக்க, சுரம், ஜலுப்பு, சயித்தியம், தேக உளைச்சல், வாத கப ரோகங்கள் குணமாகும்.

## 27. வேறுமுறை

சரக்கு :—

| | | |
|---|---|---|
| தங்கம் | வராகனெடை | 1 |
| வாலேரசம் | ,, | 8 |
| சுத்தி கந்தகம் | ,, | 16 |

**செய்பாகம் :—**முதலில் வாலேரசத்தைக் கல்வத்தில் விட்டு சுருள் தங்கரேக்கை பொடிப் பொடியாகக் கத்த ரித்துப் போட்டு அரைக்கவும் இவைகள் இரண்டும் நன் ருய் உறவான சமயம் கந்தகத்தைக் கொஞ்சங் கொஞ்ச மாகப் போட்டு அரைத்து எல்லாம் உறவாக்கிக் கறுப்பு நிறமாக மாறியபின் செம்பருத்திப் பூச்சாற்றிலாவது அல் லது செம்பருத்திப் பூக்கியாழத்திலாவது நான்கு சாமம் அரைக்கவும். அதன்பின் செவ்வல்லி புஷ்பச் சாற்றில் இரண்டு சாமமும் பூமாதுளம் பூச்சாற்றில் இரண்டு சாம மும் அரைத்து ரவிமுகத்தில் நன்ருய் உலர்த்திப் பொடி யாக்கிச் சிறு கமலாப்பழம் அளவுள்ள காசிக்குப்பியி லாவது, அது கிடைக்கப்பெருத சமயம் நெருப்புக்கு நிற்கக் கூடிய (fire proof) கழுத்து நீண்ட புட்டியிலா வது போட்டு அந்தப் புட்டிக்கு மேலே 7-8 மண்சீலை வலு வாகச் செய்து உலர்த்தி வைத்துக் கொள்க.

அப்பால் 1½ - 2 படி அளவு கொள்ளத்தக்க ஒரு மண் பானையில் இரண்டு விரற்கடை பெருமணல் கொட்டிப் பரப்பி நடுவில் சீலை செய்த குப்பியை வைத்து வாய்க்குப் பஞ்சுகொண்டு அடைத்து வாய்வரம்பிற்கு மட்டமாக மணல் கொட்டிப் பரப்பி வாயடைப்பைத் திறந்து விடவும். இந்தப் பானையை அசையாமல் காலை நேரத்தில் அடுப்பில் வைத்து நான்கு சாமம் வரை யில் கிரமப்படி முத்தீயாக எரித்துக்கொண்டு வருக. இந்தச் சந்தர்ப்பத்தில் 2 - 3 மணி நேரத்திற்கு ஒருமுறை ஒரு நீண்ட குடைக்கம்பியைக்கொண்டு குப்பியின்

வாய் அடைபடாமலிருக்கும் பொருட்டு உட்செலுத்திக் கிளறிக் கொடுத்துக்கொண்டிருக்கவும். நான்கு சாமத்திற்குச் சமீபித்தவுடன் பின்னும் தீயை அதிகப்படுத்தி எரித்து அடிக்கடி குடைக்கம்பியைக் கொண்டு கிளறிக் கொடுக்கவும். எப்பொழுது குடைக்கம்பியின் முனை சிவந்து காட்டுகிறதோ அப்போது உள்ளிருக்கும் மருந்து செந்தூரமாய்விட்டதென்று உணர்க. அந்தச் சமயம் குடைக்கம்பிக்கொண்டு கிளறிக் கொடுக்கும்போது மருந்து தட்டுப்படாது புட்டியின் அடியில் கரகரப்புத் தோன்றும். இதைப் பகுத்துணர்ந்து எரிப்பதை நிறுத்தி அடுப்போடே ஆறவிட்டு மறுநாள் குப்பியை எடுத்துப் பக்குவமாக உடைத்து மேலேறிப் பிடித்திருக்கும் ரசசெந்தூரத்தையும் குப்பியின் அடியில் உருகித் தங்கி இருக்கும் தங்கச்சத்துள்ள பொடியையும் சேதப்படாமல் எடுத்துப் புட்டியின் தூள் சிறிதும் இல்லாதபடி ஆய்ந்து கல்வத்தில் போட்டு அரைத்துக் குப்பியிலிடுக.

**பிரயோகம்:**—பச்சைக்கற்பூரம், கோரோசனை, குங்குமப்பூ, கிராம்பு, ஜாதிக்காய், சமுத்திரசோசிவிதை வகைக்கு வராகனெடை-1, இவைகள் சேர்ந்த மொத்த எடைக்கு முன்முடித்த பூரணசந்திரோதயச் செந்தூரம் கூட்டிப் பன்னீர்விட்டு நான்குசாமம் அரைத்துக் குன்றி அளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திவைத்துக் கொள்க. இந்த மாத்திரையை வேளைக்கு ஒன்றாக தினம் இருவேளை பொடிசெய்து பசுவின் பாலில் போட்டுக் கொடுக்கவும்.

**தீரும் வியாதி :**—க்ஷயம், காசம், சுவாசம், இருமல், மேகம், தாதுநட்டம் தீரும். தங்கநிறமான தேகமும் கண்களைப் பரிக்கத்தக்க தேஜசும் உண்டாகும்

**பத்தியம் :**—வேளை தவறாமல் நல்ல ஆகாரம் கொள்ளவும்.

## 2. சத்து செந்தூரம்

(1) அப்பிரகநவநீதம் பலம்-2, தாளகம், கௌரி, சூதம், வெடியுப்பு, வெங்காரம், நவச்சாரம், மிருதார்சிங்கி, உலர்ந்த பூநாகம் வகைக்குக் கழஞ்சு-2, சுத்திபூநீறு கழஞ்சு-4, இவைகளை யெல்லாம் கல்வத்தில்போட்டு எலுமிச்சம்பழச்சாறு விட்டு ஒரு சாமம் அரைத்து மெழுகுபதத்தில் வில்லைதட்டி ரவியில் உலர்த்திச் சிறு துண்டுகளாக நறுக்கி ஒரு திட்டமான சீமை மூசையில்போட்டு வாய்க்குக் கனத்த ஓடுகொண்டு மூடிச் சீலைசெய்து கன்ஞுன் உலையில் வைத்து மூசை மறையக் காட்டுக்கரி போட்டு ஊதவும். கரிபூத்து மூசை வெளியே தெரியும் போது மூசையைச் சிறிது மேல்தூக்கிக் காட்டுக்கரி போட்டு ஊதவும். இப்படி மூன்றுமுறை கரிபோட்டு ஊதி ஆறவிட்டு மேல்மூடி நீக்கிப் பார்க்க அப்பிரகம் உருகி கட்டியாக இருக்கும். இந்தக் களங்கை யெடுத்துக் கொண்டு மற்றச் சிட்டங்களை தள்ளிவிடவும். இதுவே அப்பிரகச் சத்து.

(2) கல்காந்தம் பலம்-2, வெள்ளைப்பாஷாணம் பலம்-2, இவை யிரண்டையும் தூள்செய்து கல்வத்தில் போட்டு குமரிச்சாறுவிட்டு இரண்டு சாமம் அரைத்து மெழுகுபதத்தில் வழித்துப் பொரித்த வெங்காரம் பலம்-½ கூட்டிப் பிசரி ஒரு சீமை மூசையில் போட்டு வாய்க்குக் கனத்த ஓடுகொண்டு மூடிச் சீலை செய்து முன் முறையில் கண்டபடி கன்ஞுன் உலையில்வைத்து ஊதி எடுத்து ஆறவிட்டுப் பார்க்க உருகிக் களங்காக இருக்கும். மற்றச் சிட்டங்களைத் தள்ளி மருந்தை எடுத்து வைத்துக் கொள்ளவும். இதுவே காந்த சத்து.

(3) துப்பு இல்லாத அயப்பொடிப் பலம்-2½, பொரித்த வெங்காரம் பலம்-¼, நவச்சாரம் பலம்-¼, வெள்ளைப்பாஷாணம் பலம்-¼, சூதம் பலம்-¼, பூநீறு பலம்-¼, இவைகளைக்

கல்வத்தில்போட்டு எலுமிச்சம்பழச்சாறுவிட்டு 4-சாமம் அரைத்து மெழுகுபதத்தில் வில்லைதட்டி உலர்த்திச் சிறு துண்டுகளாக நறுக்கி ஒரு சீமை மூசையில் போட்டு வாய்க்கு கனத்த ஓடுகொண்டு மூடிச்சீலைசெய்து முன் முறையில் கூறியவாறு ஊதி, எடுத்து நன்ருய் ஆறவிட்டுப் பார்க்க அயம் உருகிக் கட்டியாக இருக்கும். சிட்டங்களைத்தள்ளி அயக்களங்கை எடுத்து வைத்துக்கொள்ளவும்.

முன் முடித்து வைத்துள்ள அப்பிரகச்சத்து, காந்தச் சத்து, அயச்சத்து இம்மூன்றையும் வகைக்கு ஒரு பலமாக எடுத்து இருப்பு உரலில் போட்டு இடித்து மாவுபோல் செய்து கல்வத்தில் போட்டுக் கையாந்தகரைச்சாற்றில் தினம் ஒன்றுக்கு இரண்டு சாமம் வீதம் இரண்டுநாள் அரைத்து மெழுகுபதத்தில்வில்லைசெய்து ரவியில் உலர்த்தி அகலில்வைத்து மேல் அகல் மூடி மண்சீலை ஏழுசெய்து 20-25 வறட்டியில் புடமிடவும். இவ்வாறு அரைத்து அரைத்து வில்லைசெய்து உலர்த்தி அகலி லடக்கிப் புடமிட்டுக்கொண்டு வரச் சிவந்துவரும். அத்தருணம் மருந்தின் மொத்த எடைக்குப் பதில் ஒருபாகம் சுருள் தங்க ரேக்கைப் பொடியாகக் கத்தரித்துப்போட்டுக் கையாக்தகரைச் சாறுவிட்டு 4-சாமம் அரைத்து வில்லைதட்டி ரவியில் உலர்த்தி அகலி லடக்கி முன்போல் இரண்டு மூன்று புடமிட நல்ல செந்தூரமாகும். அரைத்துச் சீசாவில் பத்திரப் படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு ½ குன்றி எடை தினம் இரு வேளை ரோகத்திற்கு ஏற்றவாறு அனுபானங்களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—நரம்பின் துர்ப்பலம், இரத்தக் குறைவு, மதுமேகம், நீரிழிவு குணமாகும்.

பத்தியம் :—இச்சாபத்தியமாக நல்ல ஆகாரம் உட்கொள்ளவும்.

## 29. வேறு முறை

சரக்கும் செய்பாகமும் :—இந்த மூன்று சத்துகளை யும் வகைக்கு ஒரு பலம் வீதம் கையாந்தகரைச்சாற்றில் அரைத்து புடமிட்டுக் கொண்டுவரச் சிவக்கும். அத் தருணம் ¼-பலம் சுத்தி இலிங்கம் கூட்டிக் கையாந்தகரைச் சாற்றி லரைத்து வில்லை தட்டி அகலி லடக்கிக் காடைப் புடமிடவும். ஆறினபின் வில்லையை எடுத்துக் கல்வத்தில் போட்டு மீண்டும் ¼-பலம் சுத்தி இலிங்கம் கூட்டி முன் போலரைத்து வில்லை தட்டி அகலி லடக்கிக் காடைப் புடமிடவும் நல்ல செந்தூரமாகும். அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக. இதன் பிரயோகம், தீரும்வியாதி, பத்தியம் முதலியவைகள் யாவும் முன்முறையில் கூறப்பட்டதே யாகும்.

## 30. பூரணச்சந்திரோதய சத்து செந்தூரம்

சரக்கும் செய்பாகமும் :—ஒரு சுத்தமான கல்வத்தில் 32-வராகனெடை வாலைரசத்தைப் போட்டு அதனில் ஒரு வராகனெடை தங்கச்சுருள் ரேக்கைப் பொடியாகக் கத்தரித்துப் போட்டு அரைக்க இவ்விரண்டும் உறவாகி விடும். அதனுடன் 64-வராகனெடை சுத்தி செய்த நெல்லிக்காய் கந்தகத்தைப் பொடித்துக் கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டு அரைத்து வரக் கறுப்பு நிறமாக மாறுதல் அடையும். அத்தருணம் முன்முறையில் சித்தப்படுத்திய அப்பிரகச்சத்து, காந்தச்சத்து, அயச்சத்து வகைக்கு 1-வராகனெடை பொடித்துப் போட்டுச் செம்பருத்திப் பூச் சாறுவது அல்லது அதன் கியாழமாவது விட்டுத் தினம்

ஒன்றுக்கு 2 - 3 சாமம் விதம் இரண்டு நாள் அரைத்துப் பட்டாணிப் பிரமாணம் மாத்திரைகள் செய்து உலர்த்தி ஏழுசீலை செய்து குப்பியில் போட்டு வாய்க்குப் பலப்பக்கல் லால் அடைத்துச் சீலை செய்து உலர்த்தி வாலுகாயந் திரத்தில் வைத்து முதல்நாள் தீபாக்கினியாக 12-மணி நேரமும், கமலாக்கினியாக 12-மணி நேரமும் எரித்து மறு நாள் 12-மணி நேரம் காடாக்கினியாக எரித்து ஆற விட்டுக் குப்பியிலிட்ட மாத்திரைகளைப் பார்க்கச் சிவந் திருக்கும். அரைத்துப் பத்திரப்படுத்துக. சரியான நிறம் ஏற்படாவிடின் மீண்டும் முன்போல் அரைத்து மாத்திரை கள் செய்து குப்பியி லடைத்து 4-சாமம் எரித்து எடுக்க நிறத்தை அடையும்.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு 2 - 3 அரிசிப் பிரமாணம் காலை மாலை தகுந்த அனுபானங்களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி;—மதுமேகம், க்ஷயம், காசம், நீரிழிவு; இரத்தக் குறைவா லுண்டான பல பிணிகள் நீங்கும். பொதுவாக இச் செந்தூரத்திற்கு கஸ்தூரி குன்றி எடை-4, பச்சைக்கற்பூரம் குன்றி எடை-4, ஜாதிக்காய் சூரணம் வராகனெடை-½, மொட்டு நீக்கிய கிராம்புச் சூர ணம் வராகனெடை-½ கல்வத்திலிட்டு அரைத்து வைத்துக் கொண்டு வேளைக்கு ஒரு குன்றி அளவுள்ள சூரணத்தில் மேற்படி செந்தூரம் கூட்டிக் கொடுக்கப் பல பிணிகள் நீங்கும்.

பத்தியம் :—ரோகத்திற்கு ஏற்றவாறு இச்சாபத்திய மாகவும் நோயை விருத்தி செய்யாத பண்டங்களாகவும் கூட்டிக் கொள்வது நற்பயனைத் தரும்.

## 31. சட்லோகச் செந்தூரம்

சரக்கு :—

அயப்பொடி பலம் - 1½.

| | |
|---|---|
| வெங்கலத்தூள் | பூரம் |
| வெள்ளிப்பொடி | இலிங்கம் |
| தங்கச்சுருள்ரேக்கு | வெள்ளிக்காடிக்காரம் |
| காந்தம் | ரசம் |
| சங்குபாஷாணம் | தாளகம் |
| கௌரிபாஷாணம் | ரசசெந்தூரம் |
| வீரம் | நெல்லிக்காய்கந்தகம் |

இவைகள் வகைக்கு வராகனெடை - 1.

**செய்பாகம்:**—மேற்கண்ட பதினைந்து சரக்குகளை யும் கல்வத்தில் போட்டுக் கையாந்தகரைச்சாறு விட்டு இரண்டு மூன்று நாள் அரைத்து அயத்தூள் மிருதுவாக மடிந்தபின் மெழுதுபதத்தில் ஒரே வில்லையாகத் தட்டி ரவியில் நன்ருய் உலர்த்தி ஒரு குண்டு சட்டியில் வைத்து அதன் வாய்க்குப் பொருத்தமான அத்தகைய வேறு சட்டியின் உட்புறத்தில் கரிசாலை இலைச்சாற்றைச் சந்தில்லாமல் பூசி உலரவிட்டு மேல்கவிழ்த்துப் பொருத்த வாய்க்கு மண்பூசி அதன்மேல் ஏழு மண்சீலை செய்து உலர விட்டு அடுப்பிலேற்றி நான்குசாமம் முத்தீயாக எரித்து ஆறவிடுக.

மறுநாள் மண்சீலையை நீக்கி மேல்சட்டியைத் திறக் கும்போது ஒருவிதமான நெடி கிளம்பும். ஆகையால் அதில் ஏறியுள்ள பதங்கத்தைப் பன்றி மயிர் கற்றைக் கொண்டு சுரண்டி எடுக்கும்போது முகத்தை ஒருபுறமா கத் திருப்பிக்கொண்டு அந்த நெடி நாசி, வாய்வழியாகச் செல்லாதபடி ஜாக்கிரதையாகச் சுரண்டி எடுத்து அத னுடன் அடியிலுள்ள வில்லையையும் எடுத்துக் கல்வத்தில்

போட்டுக் கையாந்தகரைச்சாறுவிட்டு இரண்டு சாமம் அரைத்துக் காலணு கனமும் அகலமும் உள்ள வில்லைக ளாகத்தட்டி ரவியில் உலர்த்தி முன்போல் சட்டியில் வைத்து மேல்சட்டிமூடிச் சீலைசெய்து நான்கு சாமம் எரிக்க வும். இப்படி நாலைந்து முறை மடக்கி மடக்கிப் பதங்கம் ஏருமல் அடியில் எல்லாச் சரக்கும் நிற்கும் வரையில் செய்ய உயர்தரமான செந்தூரமாகும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—** இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு 1-2 அரிசிப் பிரமாணம் ரோகத்தின் வன்மை மென்மைக் கேற்றவாறு தினம் இருவேளை கொடுக்கவும்.

**தீரும் வியாதி :—** சாதாரண சுரத்திற்கு ½-அரிசிப் பிரமாணம் தேனில் இரண்டொருவேளை கொடுக்கக் குணமாகும். சந்நிபாதங்களில் 1½-அரிசிப் பிரமாணம் தேனில் 2 - 3 வேளை கொடுக்கக் குணமாகும். பித்தப் பாண்டு, யானைக்கால் முதலியவற்றிறகு ஒரு அரிசி எடை வெல்லத்தில் வைத்துத் தினம் இருவேளை 3 - 5 நாள் கொடுக்கக் குணமாகும். இன்னும் இந்தச் செந்தூரம் வாத சீதள ரோகத்திற்கு அதிகப் பயன்படும்.

**பத்தியம் —** சுரம், சந்நி இவைகளில் கஞ்சி, புனல் பாகம். இதர வியாதிகளில் இச்சாபத்தியம்.

## 32. இரச செந்தூரம்

**சரக்கும் செய்பாகமும் ;—** சுத்திசெய்த வாலைரசம் பலம் - 4, சுத்திசெய்த கந்தகம் பலம்-8 இவை இரண்டை யும் கல்வத்தில் போட்டு 2-சாமம் அரைக்கவும். இவைகள் இரண்டும் உறவானபின் சுத்திசெய்த தாளகம் பலம் ½ கூட்டி ஒரு சாமம் வரையில் தளுக்கற நன்ருய் அரைத்

துச் சுரண்டி எடுத்து வைத்துக்கொள்க. அப்பால் ஒரு பெரிய சாத்துக்குடிப்பழம் அளவுள்ள கண்குடுவையில் போட்டு வாய்க்குப் பொருத்தமான வட்டமுள்ள மண் ணோட்டால் மூடி மண்சீலை வலுவாக 7 - 8 செய்து காய விட்டு மறுநாள் குடுவை முழுவதும் ஊடுருவிச் செல்லும் படி 7 - 8 மண்சீலை சுற்றி ரவியில் காயவிட்டு எடுத்துக் கொள்க. அப்பால் 3 - 4 படி அளவிற்குக் கொள்ளத்தக்க ஒரு புதிய மட்கடத்தைக் கொண்டுவந்து பெரும் மணலா கக் கொட்டி இரண்டு மூன்று விரற்கடை கனத்திற்குக் கவனித்து முன் சித்தப்படுத்தி வைத்துள்ள கண்குடு வையை நடுவில் வைத்து மட்கடம் நிறைய மணலைக் கொட்டி வாய்க்குப் பொருத்தமான சாணக்கைக்கொண்டு மூடிச் சீலைமண் ஏழுசெய்து நன்ருய் உலர்த்தி வாயகன்ற பெரிய அடுப்பில் வைத்து ஒரு சாமம் தீபாக்கினியாகவும் இரு சாமம் கமலாக்கினியாகவும் நான்கு சாமம் காடாக் கினியாகவும் (அதாவது ஒரு பகல் ஒரு இரவு) எரித்து ஒரு நாள் ஆறவிட்டுக் கண்குடுவையைப் பார்க்க இரசம் உரு கிக் கறுத்திருக்கும். கல்வத்தில் போட்டு அரைக்க முருக் கம்பூவின் வண்ணம் சிவந்திருக்கும். இதுவே சரியாக முடிந்ததாகும். சிலசந்தர்ப்பம் எரிப்பின் குறைவால் சரி வர நிறம் அமையாவிடில் மீண்டும் இதை அரைத்து அந்தக் குடுவையிலேயே இட்டு வாய்மூடிச் சீலைசெய்து முன்போல் வாலுகாயந்திரத்தில் வைத்து ஒரு பகல் எரித்து எடுக்க நல்ல நிறம் வரும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப் படுத்துக.

பிரயோகம்:—இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு ½ - ¾ குன்றி எடை தினம் இருவேளை தேனில் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—மூலம், பவுத்திரம், மேகரணம், சுரம், சந்நி, கப சம்பந்தமான இருமல், சுரம், சயித்தியம், சலதோஷம் இவைகள் குணமாகும்.

**பத்தியம் :—**ரோகத்தின் வன்மை மென்மைக்கேற்ற படி புளி தள்ளி இச்சாபத்தியமாக இருத்தல்வேண்டும். சுரம், சந்நி முதலிய ரோகங்களில் கஞ்சி பத்தியமாக வைத்துக் கியாழ இலம்பகத்தில் சுரத்திற்காகக் கூறப் பட்ட ஏதேனும் ஒரு கியாழத்தையும் கொடுத்து வருதல் அதிக நன்று.

## 33. இரச செந்தூரம்

### (வேறு முறை)

**சரக்கும் செய்பாகமும்:—**வாலேரசம் பலம்-1, கந்தகம் பலம்-1, நவச்சாரம் பலம்-1, ஆக இம் மூன்றில் கந்தகத் தையும் நவச்சாரத்தையும் ஒரு சுத்தமான கல்வத்தில் போட்டு நன்ருய் அரைத்து வில்வப்பழம் அளவுள்ள கண் குடுவை யொன்றில் பாதித் தூளைப் போட்டு நடுவில் வாலேரசத்தை விட்டு அதன்மேல் மிகுதியுள்ள பொடி யைப் போட்டு வாய்க்கு ஓடு மூடிச் சீலேசெய்து, உலர்த்தி வைத்துக் கொள்க. அப்பால் ஒரு குண்டு சட்டியில் 2-விரற்கடை உயரம் பெரும்மணல் கொட்டிப் பரப்பி நடு வில் முன் சித்தப்படுத்திய குடுவையை வைத்து மேலே மணல் கொட்டிப் பரப்பிக் குண்டு சட்டியின் வாய்க்குப் பொருத்தமான சாணத்தைக் கொண்டு மூடிச் சீலேசெய்து உலர்த்தி அடுப்பில் வைத்துக் காடாக்கினியாக ஒரு சாமம் எரிக்கவும். எப்பொழுது கந்தகநெடி அதிகமாகக் கிளம்புகின்றதோ அத்தருணம் கீழிறக்கி ஆறவிட்டுக் குடுவையில் பார்க்க ரசம் கெந்தியுடன் சம்பந்தப்பட்டு உருகி இருக்கும். இதை அரைக்கச் சிவந்து காட்டும். இதைக் குப்பியில் பத்திரப்படுத்துக. இந்தச் செந்தூரத் தின் எடைக்கு 5-ல் ஒரு பாகம் தங்கச் சுருள் ரேக்கைப் பொடிப்பொடியாய்க் கத்திரித்துப் போட்டு அரைத்து பள பளப்பு இல்லாத சமயம் உபயோகப்படுத்துவது முண்டு.

பிரயோகம்:—இந்தச் செந்தூரத்தில் வேளைக்குத் துவரம்பருப்பளவு தினம் இருவேளை தேனில் கொடுத்து வருக.

தீரும் வியாதி:—காசம், சுவாசம், மேகம், வாயு, நரம்பு பலவீனம் இவைகள் நீங்கும்.

பத்தியம்:—நல்ல ஆகாரம் உட்கொள்வதுடன் பசுவின்பாலை இராக்காலத்தில் கற்கண்டிட்டு அருந்தவும்.

## 34. தனிரச செந்தூரம்

சரக்கும் செய்பாகமும்:—ஒரு சீனுக் கோப்பையிலாவது அல்லது எனுமில் கோப்பையிலாவது ஒரு பலம் வாலைரசத்தை விட்டு ரவிமுகத்தில் வைத்து மூழ்கச் செந்தூர திராவகம் விடவும். மணி நேரத்திற்கு ஒருமுறை துடைப்பச் சுப்பலைக் கொண்டு கிளறிக் கொடுக்கவும்; ஒரு சமயம் திராவகம் சுண்டி விட்டதாகப் புலப்படின் மீண்டும் சிறிது திராவகம் விடவும். இவ்வாறு விட்டுக் கிளறிக் கொடுத்துக் கொண்டுவர ரசம் உருவு மாறி வெளுப்பாக மாவுபோல் ஆகும். இதை ஒரு பனை ஓலையைக் கொண்டு வழித்து ஏழு சீலைசெய்து வைத்துள்ள குப்பியில் விட்டு வாய்க்குப் பலப்பக்கல்லால் அடைத்துச் சீலைசெய்து வாலுகா யந்திரத்தில் வைத்து நான்கு சாமம் எரித்து ஒரு இரவு ஆறவிட்டு மறுநாள் குப்பியில் பார்க்க ரசம் சிவந்து அடியில் இருக்கும். இதை ஒரு குடைக்கம்பி கொண்டு சுரண்டி எடுத்துக் கல்வத்தில் போட்டு அரைத்துப் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இந்தச் செந்தூரத்தில் 1—2 அரிசிப் பிரமாணம் நெய் தேன் இவற்றில் ஒரே வேளை கொடுக்கவும். மூன்று நாள் வரையில் சிறுகீரைவேர்க் கியாழம் காலை மாலை கொடுத்து வருக. இன்றேல் தேகத்தில் எரிச்

சல் காணும். இதில் குணந் தெரியாவிடின் நான்காவது நாள் ஒரு வேளை முன்போல் கொடுத்துச் சிறுகீரை வேர்க் கியாழம் கொடுக்கவும்.

**தீரும் வியாதி :—**இருமல், சுவாசகாசம், வாத பிணி கள் இவைகள் தீரும்.

**பத்தியம் :—**இரண்டு நாள் வரையில் பால் சாதமும் மூன்ருவது நாள் புளி தள்ளி இச்சாபத்தியமாக அன்னம் கொள்ளவும்.

**செந்தூர திராவகத்தின் செய்முறை:—**கல்லுப்பு, இந் துப்பு, வெடியுப்பு, படிக்காரம், வளையலுப்பு, பாறையுப்பு, வகைக்குப் பலம்-4 இவற்றை இடித்துப் பொடியாக்கி ஒரு எனுமில்ட் பேசினில் பொட்டு 3-விரற்கடை சலம் விட்டு. அடுப்பில் வைத்து எரித்துப் பூவரசம் மரத்தின் குச்சியால் கிண்டிக் கொடுத்துக் குழம்பு பதமாக வரும்போது ஏழு சீலை செய்த அடிமட்டமான கறுப்புப் புட்டியில் விட்டு: துவாரமிட்ட புட்டியைச் செருகி சந்துக்குச் சீலைமண் அடைத்து அடிப்புட்டியை ஒருசட்டியில் மணலில் இருக் கும்படி அமர்த்தி எரித்து முறைபோல் திராவகம் வாங்க வும். இதுவே செந்தூர திராவகம் ஆகும்.

## 35. சண்முகத் தளச்செந்தூரம்

**சரக்கும் செய்பாகமும்:—**இலிங்கம், வீரம், பூரம், தாளகம் வகைக்குப் பலம்-$\frac{1}{4}$, வாலைரசம் பலம்-2, கந்தகம் பலம்-1 இவற்றுள் இலிங்கம் முதல் தாளகம் ஈருக உள்ள சரக்குகளைக் கல்வத்தில் போட்டு நன்கு அரைத்து எடுத் துக்கொள்க. பின்பு கந்தகத்தைக் கல்வத்தில் போட்டுக் கம்மாறு வெற்றிலைச்சாறுவிட்டு குழம்புபதமாக அரைத்து ஒரு சிறு விளாங்காய்ப் பிரமாணமுள்ள குடுவையின் உட்புறத்திலும் அதன் வாய்க்குப் பொருத்தமான அக

லின் உட்புறத்திலும் தழும்பப்பூசி ஒருநாள் நிழலில் காய விட்டு மறுநாள் இந்தக் குடுவையில் முன் அரைத்து வைத்துள்ள தூளில் முக்கால் பாகம்போட்டு நடுவில் பள்ளம் செய்து அதனில் வாலை ரசத்தைவிட்டு மிகுதி யுள்ள தூளை மேல்போட்டு அசையாமல் மேல் மூடியிட்டு மண்சீலை ஏழு எட்டு செய்து ரவியில் வைத்துக் காய்ந்த பின் எடுத்துக்கொள்க.

இதற்குமேல் 2½-படி அளவு கொள்ளத்தக்க ஒரு மட் பாண்டத்தில் இரண்டுபடி வறுத்த உப்புடன் இடித்து எடுத்த 15-பலம் பிரண்டையைப் போட்டுப் பிசரி 2-3 விறற்கடை உயரம் இருக்கும்படியாகப் போட்டுப் பரப்பி நடுவில் முன் சீலைசெய்து வைத்துள்ள குடுவையை வைத்து மிகுதியுள்ள உப்பைக் கொட்டி அழுத்தி அப் பாண்டத்திற்குப் பொருத்தமான சாணக்கைக் கொண்டு மூடிச் சீலைசெய்து ரவியில் உலர்த்தி அடுப்பில் வைத்து ஒரு சாமம் தீபாக்கினியாகவும், இரண்டு சாமம் கமலாக் கினியாகவும், மூன்று சாமம் காடாக்கினியாகவும் எரித்து ஒரு இரவு ஆறவிட்டு மறுநாள் குடுவையின் வாய் ஓட்டை நீக்கிப் பார்க்க உருகிக் கட்டியாக இருக்கும். இதைக் கல்வத்திலிட்டு அரைக்கச் சிவந்து காணும். இதைப் புட்டியில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :**—இந்த செந்தூரத்தில் வேளைக்கு ¼ - ½ குன்றி எடை தினம் இருவேளை தேன் நெய் முதலிய அநு பானங்களில் 5-நாள் கொடுக்கவும். மீண்டும் கொடுப்பது அவசியமானால் 10-நாள் விட்டு மறுபடியும் ஒருமுறை 5-நாள் கொடுக்கவும். இவ்வாறு பெரிய நோய்களுக்கு 20-40 நாள் வரையிலும் கொடுக்கலாம்.

**தீரும் வியாதி :**—மேக சம்பந்தமான பல அழுகிய ரணங்கள் ஆறும். திமிர், குட்டம், குன்மம், மார்புநோய்,

சூலை, கபரோகங்கள், கணுச்சூலை, சுரம், சந்நி, வாதரோகங்கள், காக்கைவலி, குமரகண்டவலி, முயல்வலி, உட்குத்து, புறங்குத்து, மூர்ச்சை ரோகம், குணமாகும்.

இம் மருந்து உண்ணும்போது சூடு செய்வதாக உணர்ந்தால் சிரசில் நெய் தடவிக் குளிர்ந்த சலத்தில் ஸ்நானம் செய்யவேண்டும்.

பத்தியம் :—புளி தள்ளி இச்சாபத்தியம்.

குறிப்பு :—சித்த வைத்திய பதார்த்த குணவிளக்கம் தாது வர்க்கத்தில் கருணாகர சண்முகச் செந்தூரம் என்று வரையப்பட்டதற்கும் இதற்கும் எடைபாகம் சிறிது பேதப்படும். இவ்விதமாகச் சிலர் கையாடி வருகின்றனர். இம்முறையும் அதிக நன்மையைத் தருகின்றன.

## 36. சண்முக நவநீத செந்தூரம்

சரக்கும் செய்பாகமும் :—இலிங்கம் பலம்-1, இரச செந்தூரம் பலம்-½, ரசகற்பூரம் பலம்-¼, தாளகம் பலம்-¼, வீரம் பலம் 1|16 (வீசம்) கந்தகம் பலம்-1½ இங்குக் கூறப்பட்ட ஆறு சரக்குகளையும் கிரமப்படி சுத்தி செய்து கல்வத்தில் போட்டு நான்கு சாமம் கையோயாமல் அரைத்து சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு துவரம்பருப்பளவு தினம் இருவேளை கொடுத்துவருக.

தீரும் வியாதி :—சுக்கு, மிளகு, திப்பிலி சமனெடையாக வெதுப்பி இடித்த சூரணத்தில் சமன் பனவெல்லம் கூட்டிப் பிசைந்து வைத்துக்கொண்டு அதனில் புளியங்கொட்டைப் பிரமாணம் எடுத்துச் செந்தூரம் கூட்டித் தினம் இருவேளை கொடுத்துவர வாதசம்பந்தமான பல பிணிகள் குணமாகும். புளியங்கொட்டைப் பிரமாணம்

பனவெல்லத்தில் செந்தூரம் கூட்டித் தினம் இருவேளை கொடுத்துவர ஈளை, இருமல், காசம் குணமாகும். இன்னும் இந்தச் செந்தூரத்தைத் தேனில் மத்தித்துத் தினம் இருவேளை கொடுக்கச் சுரம், சந்நிதோஷம், சயித்தியம் குணமாகும். முருங்கைப்பட்டைச்சாற்றில் தேன்கூட்டி அதில் செந்தூரமிட்டுத் தினம் இருவேளை கொடுக்கப் பாரிச வாதம், சச்சுவாயு, ஜிக்குவாவாதம், தனுர்வாதம் குணமாகும்.

பத்தியம்:—ரோகத்திற்கு ஏற்றவாறு ஆகாரம் கொடுக்கவும்.

## 87. பஞ்சாமிர்த செந்தூரம்

சரக்கும் செய்பாகமும் :—வீரம், பூரம், ரசசெந்தூரம் வகைக்குப் பலம்-¼, இலிங்கம் பலம்-½ இவற்றைக் கிரமப்படி சுத்தி செய்து கல்வத்தில் போட்டு மிருதுவாக அரைத்து வைத்துக் கொள்ளவும். அப்பால் 1¼-பலம் படிக்காரத்தைக் கல்வத்திலிட்டு நன்ருய் அரைத்துத் தூள் செய்து, இதில் அரைபாகம் எடுத்து ஒரு புது மண் சட்டியில் போட்டுப் பரப்பி அதன்மேல் முன் அரைத்து வைத்துள்ள தூளைப் போட்டு அதன்மேல் மிகுதியுள்ள படிக்காரத்தூளைப் போட்டு அடுப்பிலேற்றிச் சிறுக எரித்துப் படிக்காரம் பொங்கி அடங்கின உடன் கீழிறக்கி ஆறவிட்டு மருந்தை யெல்லாம் பெயர்த்து எடுத்துக் கல்வத்தில் போட்டு நன்கு அரைத்துச் சீசாவில் பத்திரப் படுத்துக.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்குத் துவரம்பருப்பளவு தினம் இருவேளை 2-3 நாள் தேனில் கொடுத்து வருக.

தீரும் வியாதி ;—கபசம்பந்தமான சுரம், பேதி சம்பந்தமான சுரம், வாயு, இருமல் குணமாகும். இருமலுக்குக் கொடுக்கும்போது தாளகப் பதங்கம் ½-1 அரிசி அளவு கூட்டிக் கொடுப்பது சாலச் சிறந்தது.

பத்தியம் :—சுர ரோகத்திற்காவது இருமலுக்காவது கொடுக்கும்போது பால்கஞ்சி உத்தமம். அன்னம் சேர்க்கக் கூடாது.

தாளகப் பதங்கம் செய்முறை:—ஒரு மண் தோண்டியில் இரண்டு பிடி மணலிக்கீரையை போட்டுப் பரப்பி அதன்மேல் சுத்திசெய்த ½-பலம் தாளகத்தைப் பொடி செய்து தூவி அத்தகைய மற்றோர் சட்டியின் உட்புறத்தில் மணலிக்கீரைச் சாற்றைச் சந்து இல்லாமல் பூசி உலர விட்டுக் கவிழ்த்து மூடி வாய்பொருத்தத்திற்கு மண்பூசி அதன்மேல் மண்சீலை ஏழு செய்து உலர்த்தி அடுப்பில் வைத்து எரித்து இரண்டு மூன்று சாமம் ஆனபின் கீழிறக்கி ஆறவிட்டுச் சீலையைப் பிரித்து மேல்சட்டியில் ஏறியுள்ள பதங்கத்தைச் சுரண்டிக் கல்வத்திலிட்டு நன்கு அரைத்துக் குப்பியிலிடுக.

## 38. தங்கலிங்க செந்தூரம்

சரக்கும் செய்பாகமும் :—ஒரு பலம் எடை யிருக்கும்படியாக இலிங்கத்தை மழுமழுப்பு இருக்கும்படி தேய்த்து அதன்மேல் ஒரு வராகனெடை தங்கச்சுருள் ரேக்கைக் குன்றிமணி பசைகொண்டு சந்து விடாமல் சுற்றி நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்க.

அப்பால் ஒரு கிண்ணத்தைப் போன்ற மட்பாண்டத்தில் ஐந்து பலம் நெய்விட்டு அதில் மூக்குவெட்டி நீக்கிய 2½-பலம் சேங்கொட்டையை இரண்டிரண்டாக நறுக்கிப்

போட்டு அதன் மத்தியில் லிங்கக்கட்டியை வைத்து அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரிக்கக் கொட்டைகள் தீப்பற்றி எரியும். அத்தருணம் கீழிறக்கி ஆறவிட்டு இலிங்கத்தைப் பார்க்கத் தங்கம் இலிங்கத்துடன் உறவாகி யிருக்கும். சில சந்தர்ப்பம் அரைகுறையாக உறவாகி இருப்பதுமுண்டு. இதனால் குற்றமில்லை. இலிங்கத்தையும் சம்பந்தப்படாமலிருக்கும் தங்கத்தையும் சேதப்படாமல் எடுத்துக் கல்வத்தில் போட்டு தண்ணீர்விட்டான் கிழங்குச்சாறு விட்டு ஒரு சாமம் அரைத்து வில்லை தட்டிக் காயவைத்து அகலில் வைத்து மேல் அகல்மூடிச் சீலைசெய்து உலர்த்தி ½-படி பச்சரிசி நெல் உமியின் நடுவில் வைத்துத் தீமூட்டவும். புடம் ஆறினபின் வில்லையை எடுத்து மீண்டும் கல்வத்தில் போட்டு முன்போல் இருமுறை தண்ணீர்விட்டான் கிழங்குச்சாறு விட்டு அரைத்து அரைத்துப் புடமிட்டெடுக்க நல்ல செந்தூரமாகும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்குத் துவரம்பருப்பளவு தினம் இருவேளை தாதுவிருத்திக்குரிய லேகியங்களில் அனுபானம் செய்து 20-நாள் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—பாரிசவாதம், காசம், க்ஷயம், நரம்பின் துர்ப்பலம் நீங்கும். நல்ல தேஜசும் ஆண் தன்மையும் மீறும்.

பத்தியம் :—இச்சாபத்தியமாக நல்ல ஆகாரத்தை உட்கொள்ள வேண்டும். தேகத்திற்கு நல்ல சுகம் காணும் வரையில் ஸ்திரீபோகமும் லாகிரி உபயோகமும் வைத்துக் கொள்ளக் கூடாது.

## 39. சடாதாரச் செந்தூரம்

**சரக்கு :—**

பூர்ணச்சந்திரோதய செந்தூரம்
இரச செந்தூரம்
அப்பிரகச் செந்தூரம்
வெள்ளி பற்பம்
வெள்வங்க பற்பம்
பவழ பற்பம்
இவைகள் வகைக்குக் கழஞ்சு-1.

**செய்பாகம் :—**இங்குக் கூறப்பட்ட ஆறு பற்பச் செந்தூரங்களைக் கல்வத்தில் போட்டுக் கலியாணப்பூசிணிக்காய்ச் சாறுவிட்டு ஒரு சாமம் அரைத்துக் கல்வத்தோடே ரவியில் ஒரு பகல் உலர்த்தி மருந்தை யெல்லாம் சிறிதும் சேதப்படாமல் நன்றாய்ச் சுரண்டி எடுத்துப் பின்னும் ஒருமுறை மிருதுவாகும்படி அரைத்துக் குப்பியிலிடுக.

**பிரயோகம் :—**வேண்டும்போது இந்த செந்தூரத்தில் வேளைக்கு ஒரு குன்றி எடையாக தினம் இருவேளை பஞ்சகௌவிய லேகியத்திலாவது அல்லது பஞ்சகௌவிய கிருதத்திலாவது அனுபானம் செய்து 20—40 நாள் கொடுத்து வருக.

**தீரும் வியாதி :—**பெரும்பாடு, அஸ்திவெட்டை, க்ஷயம், மேகம், பிரமேகம், மதுமேகம், புலால்மேகம், நீரிழிவு, மூலம், பவுத்திரம், நாட்பட்ட வெட்டை, எலும்புருக்கி முதலியவைகள் குணமாகும், இந்த மருந்தானது தேகத்தில் மேகமென்று குடிவாய்ந்த பல ரோகங்களுக்கு அதிகம் சிறந்தது.

**பத்தியம் :—**ரோகத்திற்கு ஏற்றவாறு ஆகாரம் உட்கொள்ளவேண்டும்.

## 40. அயத்தங்கச் செந்தூரம்

சரக்கும் செய்பாகமும் :—சுத்தமான அயத்தூள் பலம்-5, தங்கம் வராகனெடை-1, சங்குபாஷாணம் வராகனெடை-½, வாலைரசம் வராகனெடை-6, கெந்தகம் பலம்-1, இவற்றுள் முதலில் வாலைரசத்தைக் கல்வத்தில் போட்டு தங்கச்சுருள்ரேக்கைப் பொடிப்பொடியாகக் கத்தரித்துப் போட்டு அரைக்கவும். இவை இரண்டும் நன்ருய் உறவான சமயம் கந்தகத்தைக் கூட்டி அரைக்கவும். இவைகள் எல்லாம் நன்ருய்க் கறுத்து உறவான பதத்தில் அயம் பாஷாணம் முதலியவற்றைக் கூட்டி அரைத்து எல்லாம் ஒருமித்த சமயம் எலுமிச்சம்பழச்சாறுவிட்டு நாள் ஒன்றுக்கு 2-3 சாமம் வீதம் நான்கு நாள் அரைத்து மெழுகுபதத்தில் பட்டாணிப் பிரமாணம் மாத்திரைகள் செய்து உலர்த்தி ஏழு சீலை செய்த குப்பியில் போட்டு வாய்க்குப் பலப்பக்கல்லால் அடைத்துச் சீலை செய்து வாலுகா யந்திரத்தில் வைத்து நான்கு சாமம் எரித்து ஒரு இரவு ஆறவிட்டு மறுநாள் குப்பியை எடுத்து வாய்திறந்து மாத்திரைகளை வெளிப்படுத்திப் பார்க்கச் சிவந்திருக்கும். ஒரு சமயம் நிறம் சரியாகப் புலப்படாவிடின் இதை அரைத்து ஒரு புது சட்டியிலிட்டுச் சிறிது நேரம் நெருப்பைப் போலாகிற வரையில் வறுத்து ஆறவிட நல்ல நிறம் வரும். அப்படிச் செய்தும் அன்னபேதிச் செந்தூர நிறம் ஏற்படாவிடின் கல்வத்தில் போட்டு முற்கூறிய எடைப் பிரகாரம் ரசம் கெந்தி பாஷாணம் கூட்டி எலுமிச்சம்பழச் சாற்ருல் 2-3 சாமம் அரைத்து மாத்திரைகள் செய்து முன் போல் குப்பியில் போட்டு வாய்மூடிச் சீலைசெய்து வாலுகா யந்திரத்தில் வைத்து எரித்து ஆறவிட்டு மாத்திரைகளைப் பொடித்து வறுத்து எடுக்க உயர்தரமான செந்தூரமாகும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக. இது ஒருவிதமான காயகற்ப செந்தூரத்திற் கொப்பாகும்.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு ½-1 குன்றி எடை தினம் இருவேளை தகுந்த அனுபானங்களில் கொடுத்து வரவேண்டும்.

தீரும் வியாதி :—காசம், பாரிசவாதம், முகவாதம் சச்சுவாயு, பாண்டு, சோபை, காமாலை, வீக்கம், மதுமேகம் குணமாவதுடன் நல்ல தேஜசும் ஆண் தன்மையும் விசேஷிக்கும். பூரண சுகத்திற்குக் குறைந்தது ஒரு மண்டலம் உட்கொள்ள வேண்டும்.

பத்தியம் :—இச்சாபத்தியமாக நல்ல ஆகாரம் வேளை தவருமல் உட்கொள்ள வேண்டும்.

குறிப்பு :—இந்தச் செந்தூரத்தை மூதண்ட லேகியத்தில் கொடுக்கப் பல பிணிகள் குணமாகும் என்பதைப் பண்டிதர்கள் கவனத்தில் வைக்கக் கடவர்.

## 41. அப்பிரகச் செந்தூரம்

சரக்கும் செய்பாகமும் :—ஐந்துபலம் கிருஷ்ண அப்பிரக நவநீதத்தைக் கல்வத்தில் போட்டு ஆடுதீண்டாப் பாளைச் சாறுவிட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகுபதத்தில் காலஞ அகலமும் கனமும் உள்ள வில்லைகளாகச் செய்து ரவியில் நன்ருய் உலர்த்தி நான்குபடி பச்சரிசிநெல் உமியில் வைத்துப் புடமிடவும். இப்படி ஆடுதீண்டாப் பாளைச்சாற்ருல் அரைத்து அரைத்துப் பத்துபுட மிட்டெடுத்துப் பார்க்கச் சிவந்திருக்கும். தளுக்குச் சிறிதும் இராது. இந்த வில்லைகளை மறுபடியும் கல்வத்தில் போட்டு முன்போல் சிகைக்காய்ச்செடியின் இலைச்சாற்ருல் பத்துமுறை அரைத்து அரைத்துப் புடமிட உயர்தரமான செந்தூரமாகும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு ஒரு குன்றி எடை தினம் இருவேளை தகுந்த அனுபானங்களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—நீரிழிவு, மதுமேகம், க்ஷயம், தேக துர்ப்பலம் நீங்கும்.

பத்தியம் :—நல்ல ஆகாரம் வேளை தப்பாமல் உண்ணவேண்டும். இனிப்புப் பண்டங்களையும் ஸ்திரீ போகத்தையும் சில நாள் நீக்குவது கடமையாகும்.

## 42. வேறு முறை

சரக்கும் செய்பாகமும் :—ஐந்து பலம் கிருஷ்ண அப்பிரக நவநீதத்தைக் கல்வத்தில் போட்டுச் செப்பு நெருஞ்சிச்சாறு விட்டு நான்கு சாமம் அரைத்து வில்லை தட்டி ரவியில் உலர்த்தி அந்த வில்லைக்குக் கீழும் மேலும் மேற்படி மூலிகையை அரைத்து அங்கிபூட்டி அகலில் வைத்து மேல் அகல்மூடிச் சீலைசெய்து 100-வறட்டியில் புடமிடவும். இதற்குமேல் புடத்திலிட்ட வில்லையைக் கல் வத்தில் போட்டு மாம்பட்டைச்சாற்ருல் நான்கு சாமம் அரைத்து வில்லை தட்டி ரவியில் உலர்த்தி அந்த வில்லைக் குக் கீழும் மேலும் மாம்பட்டையை அரைத்து அங்கிபூட்டி அகலிலடக்கிச் சீலைசெய்து 100-வறட்டியில் புடம் போட வும். அதன்பின் புடத்திலிட்ட வில்லையை எடுத்துக் கல்வத்தில் போட்டு நெல்லிவற்றல் கியாழத்துடன் வாழைக்கிழங்குச்சாறு கூட்டிக் கொஞ்சங் கொஞ்சமாக விட்டு நான்கு சாமம் அரைத்து வில்லை தட்டி ரவியில் நன்ருய் உலர்த்தி அந்த வில்லைக்கு நெல்லிவற்றலையும் தேற்ருங்கொட்டையையும் மெழுகுபோல் அரைத்து அங்கிபூட்டி அகலில் அடக்கி மேல் அகல் மூடிச் சீலை செய்து 100-வறட்டியில் புடமிடவும். இவ்வாறு முடிவு

பெற்று அப்பிரகத்தை இரண்டுமுறை குமரிச்சாறு விட்டு நான்கு சாமம் அரைத்துச் சிறு வில்லைகளாகச் செய்து அகலில் பரப்பி ரவியில் உலர்த்தி மேல் அகல் மூடிச் சீலை செய்து 60-வறட்டியில் புடமிடவும். இப்படியே நாவல்பட்டைச்சாறு, மாம்பட்டைச்சாறு, ஒதியம்பட்டைச்சாறு முதலியவற்றால் இரண்டிரண்டு புடமிட்டு எடுக்க உயர் தரமான செந்தூரமாகும். தளுக்குச் சிறிதும் இராது. இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—**வேளைக்குக் குன்றி எடை தினம் 2-வேளை தகுந்த அனுபானங்களில் கொடுக்கவும்.

**தீரும் வியாதி :—**நீரிழிவு, மதுமேகம், க்ஷயம், தேக துர்ப்பலம் முதலியவைகள் தீரும்.

**பத்தியம் :—**நல்ல வலுவுள்ள ஆகாரம் உட்கொள்ள வேண்டும்.

## 43. வேறு முறை

**சரக்கும் செய்பாகமும் :—**கல் அத்தி, ஆல், அரசு, அத்தி இம் மரங்களின் வேர்ப்பட்டையைப் பச்சையாக ஒவ்வொரு வீசை கொண்டுவந்து சிறு துண்டுகளாக நறுக்கிப் பஞ்சுபோல் நசுக்கி ஒரு பெரிய மட்பாண்டத்தில் போட்டுப் பட்டைக்குமேல் ½-அடி உயரமிருக்கும்படி சுத்தமான தண்ணீர் விட்டுப் பிசைந்து பிசைந்து 2 - 3 நாள் ஊறவிட்டு வைக்கவும். அப்பால் ஐந்துபலம் கிருஷ்ண அப்பிரக நவநீதத்தைக் கல்வத்தில் போட்டு முன் சித்தப்படுத்தி வைத்துள்ள பட்டைகளின் ஊறல் நீரை விட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகுபதத்தில் வில்லை தட்டி உலர வைத்து அதன்மேல் கனமாக எருக்கிலையைச் சுற்றி நூலால் கட்டி மண்சீலை ஏழுசெய்து

60 - 70 வறட்டியில் புடமிடவும். இவ்வாறு அரைத்து அரைத்து வில்லை தட்டி உலர்த்தி எருக்கிலையைச் சுற்றி மண்சீலை செய்து இருபத்தொரு புடமிடக் காவிக்கல் நிற மாகத் தளுக்கற்றுச் சிவந்திருக்கும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்குக் குன்றி எடை தினம் இருவேளை தகுந்த அனுபானங்களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—மேகம்-21, க்ஷயம், கிராணி குண மாகும். இன்னும் இந்தச் செந்தூரத்தினால் பருத்த சரீரம் பலங்குன்றாமல் இருக்கும்.

பத்தியம் :—ரோகத்திற்கு ஏற்றவாறு ஆகாத பண்டங்களைத் தள்ளி நல்லுணவைச் சேர்க்கவும்.

## 44. வேறு முறை

சரக்கும் செய்பாகமும் :—ஐந்து பலம் கிருஷ்ண அப்பிரக நவநீதத்தைக் கல்வத்தில் போட்டுக் கிரந்திநாயகம் இலைச்சாறுவிட்டு முதலில் 5 - 6 நாள் அரைத்து மெழுகுபதத்தில் சிறு வில்லையாகத் தட்டி ரவியில் உலர்த்தி அகலில் பரப்பி மேல் அகல்மூடிச் சீலைசெய்து 60—70 வறட்டியில் புடமிடவும். மீண்டும் வில்லைகளைக் கல்வத்தில் போட்டு மேற்படி மூலிகைச் சாறுவிட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகுபதத்தில் முன்போல் வில்லை தட்டி அகலில் பரப்பி மேல் அகல் மூடிச் சீலைசெய்து முன்போல் புடமிடவும். இப்படி 7—8 புடமிடுவதற்குள் தளுக்கற்று உயர்தரமான சிவந்த நிறத்தை அடையும். இதை அரைத்துக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்குக் குன்றி எடை தினம் இருவேளை * கடலழிஞ்சிப்பட்டை லேகியத்தில் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—மதுமேகம், வெகுமூத்திரம் இவைகள் குணமாகும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 45. வெள்ளையப்பிரகச் செந்தூரம்

சரக்கும் செய்பாகமும் :—ஐந்து பலம் வெள்ளை யப்பிரகத்தைக் கொண்டுவந்து இதழ் இதழாகப் பிரித்துச் சிறு துண்டுகளாகக் கத்தரித்து வைத்துக்கொள்க. அப்பால் மூன்று நான்கு படி அளவு கொள்ளத்தக்க ஒரு மண்தோண்டியைக் கொண்டுவந்து கால் பாகம் சரக்கொன்றைப் பூவைப் போட்டுப் பரப்பி அதன்மேல் முன் சித்தப்படுத்திய அபிரகத் துண்டுகளைத் தூவி அதன் மேல் சரக்கொன்றைப்பூவை மேல் போட்டுப் பரப்பி அதன் மேல்கொஞ்சம் அப்பிரகத் துண்டுகளைத் தூவுக. இப்படிப் படிப்படியாய் எல்லா அப்பிரகத் துண்டுகளையும் போட்டுத் தோண்டி நிறைய சரக்கொன்றைப் பூவைப் போட்டு அழுத்தி தோண்டியின் வாய்க்கு ஓடு மூடிச் சீலசெய்து 100-வறட்டியில் புடமிடவும். ஆறினபின் சலம் விட்டுக் கரைத்து கரைத்து நிதானமாக நீரை வடித்துக்கொண்டு வர வெள்ளையப்பிரகமானது நவநீதம்போல் வழுவழுப்பாகவும் அணுத்துவமாகவும் அடியில் தங்கும். இதை ஈரமில்லாதபடி உலர்த்தி எடுத்துக்கொள்க. இதை ஒரு சுத்தமான கல்வத்தில்போட்டு ஆகாசத்தாமரைச் சாறு விட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகுபதத்தில் அரை

---

* சித்தவைத்திய பதார்த்தகுண விளக்கம் மூலவர்க்கத்தில் கடலழிஞ்சிப்பட்டையின் கீழ்க் காண்க.

யஞ் கனமும் அகலமும் உள்ள வில்லைகளாகச் செய்து ரவியில் உலர்த்தி அகலில் பரப்பி மேல் அகல் மூடிச் சீலை செய்து 60—70 வறட்டியில் புடமிடவும். இப்படி ஆகாசத் தாமரைச்சாற்ருல் அரைத்து அரைத்து வில்லை தட்டி முன் போல் பதின்மூன்று புடமிடச் செந்தூரமாகும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—வேண்டும்போது இந்தச் செந்தூரத்தில் குன்றி எடை தினம் இருவேளை நெய் வெண்ணெய் முதலிய அனுபானங்களில் கொடுத்துவருக.

தீரும் வியாதி :—வெள்ளை, வெட்டை, வாய், நாவு முதலிய விடங்களில் வரும் ரணம், வாய் நாற்றம், ஆண் குறியின் முனைத்தோலில் காணும் வெடிப்பு இவைகள் குணமாகும்.

## 46. இலவணச் செந்தூரம்

சரக்கும் செய்பாகமும் :—ஐந்து பலம் சோற்றுப் பைக் கல்வத்தில் போட்டு வில்வத்துளிர் இலையுடன் சிறிது சலம் தெளித்து இடித்துப் பிழிந்தெடுத்த சாற்றைக் கொஞ்சங் கொஞ்சமாக விட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகுபதத்தில் வழித்து ஒரு சுட்டு எடுத்த மண் மூசையிலாவது அல்லது சீமை மூசையிலாவது போட்டு வாய்மூடிச் சீலைசெய்து உலையில் வைத்து மூசைப் பழுக்க ஊதி எடுத்து ஆறவிட்டு அதிலுள்ள உப்பைக் கல்வத்தில் போட்டு ஆகாசத்தாமரை இலைச்சாறுவிட்டு இரண்டு சாமம் அரைத்துச் சிறு வில்லைகளாகத் தட்டி உலர்த்தி ஒரு அகல் மண்ஓட்டில் பரப்பி மேல் ஓடு மூடிச் சீலைசெய்து 20 வறட்டியில் புடமிடவும். இப்படி ஆகாசத்தாமரைச்சாற்ருல் அரைத்து அரைத்து வில்லை தட்டி அகலில் அடக்கி மேல் அகல்மூடிச் சீலைசெய்து 10-

புடமிட ரோஜாப்பு வர்ணமாக இருக்கும் இதை அரைத்துக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்குக் குன்றி எடை தினம் இருவேளை தேனில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—குன்மம், நெஞ்செரிவு, சூலை, சூதக வாயு, வயிற்றுவலி முதலியவைகள் குணமாகும்.

பத்தியம் :—எளிதில் ஜீரணிக்கக் கூடிய ஆகாரமாகும்.

## 47. வேறு முறை

சரக்கும் செய்பாகமும் :—ஐந்து பலம் சோற்றுப்பைக் கல்வத்தில் போட்டுக் கொட்டைக்கரந்தை (நாறுங் கரந்தை) இலைச்சாறு விட்டு இரண்டு சாமம் அரைத்து வில்லை தட்டி கடும் ரவியில் உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல் மூடிச் சீலை செய்து 10—12 வறட்டியில் புடமிடவும். இப்படித் தினம் காலையில் இரண்டு சாமம் வீதம் அரைத்து வில்லை தட்டி உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல் மூடிச் சீலை செய்து இரவில் புடமிடவும். இப்படி 10-புடமிட ரோஜாப்பூ வர்ணமாக இருக்கும். இதை அரைத்துக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்குக் குன்றி எடை தினம் இருவேளை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—குன்மம், செறியாமை, பேதி, வயிற்றுவலி முதலியவைகள் குணமாகும்.

பத்தியம் :—எளிதில் ஜீரணிக்கக் கூடிய அன்னம்.

## 48. தாம்பரச் செந்தூரம்

சரக்கு :—

| | | |
|---|---|---|
| தாம்பர அரப்பொடி | தோலா | 1 |
| வாலைரசம் | ,, | 6 |
| கந்தகம் | ,, | 8 |

செய்பாகம் :—தாம்பரப்பொடியை ஒரு மண்ணோட்டில் போட்டுப் பட்டைச் சாராயம் விட்டுக் காய்ச்சி எடுக்கச் சுத்தியாகும். இதைப் பத்திரப்படுத்துக. ஒரு சுத்தமான கல்வத்தில் வாலைரசத்தை விட்டுக் கந்தகத்தைக் கூட்டி அரைத்துக் கறுப்பு நிறமாக மாறுதல் அடைந்த பின் முன் சுத்திசெய்து வைத்துள்ள தாம்பரப் பொடியைப் போட்டு 2—3 சாமம் அரைத்துச் சுரண்டி எடுத்து வைத்துக் கொள்க. விளாம்பழம் அளவுள்ள இரண்டு குடுவைகளைக் கொண்டு வந்து வாய் பொருந்தும்படி மட்டமாகத் தேய்த்து ஒன்றில் முன் அரைத்து வைத்துள்ள ரசகெந்தி தாம்பரத்தூளைப் போட்டு, குடைக் கம்பி நுழையும்படியாக மற்ரோர் குடுவையின் மேற்புறத்தில் நடுவில் துவாரமிட்டுக் கவிழ்த்துப் பொருத்தமுற்ற இரு குடுவைகளின் வாய் பொருத்தத்தில் மண்பூசி, மண் சீலை ஏழுசெய்து உலர விடுக. இதற்குமேல் இந்த இரண்டு குடுவைகளும் உள்ளுக்கு அடங்கும்படியான ஒரு குண்டு சட்டி கொண்டுவந்து நடுவில் வட்டமாகத் துவாரமிட்டு மருந்திட்ட குடுவையின் அடிபாகம் கால்வாசி கீழிறங்கும்படி செருகிச் சந்துக்கு மண்பூசி மேற் குடுவையின் மட்டத்திற்குத் துவாரத்தில் மணல் விழாதபடி கொட்டிப் பரப்பி அடுப்பில் வைத்து நான்கு சாமம் எரித்து எடுக்கச் செந்தூரமாகும். இதை நன்ருய் ஆறவிட்டு அரைத்துக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு 1—1½ அரிசிப் பிரமாணம் காலை மாலை தகுந்த அனு பானங்களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—வறுத்த திப்பிலி பலம்-1, பொரித்த வெங்காரம் பலம்-½ இவ்விரண்டையும் அரைத்து வைத் துக் கொண்டு வேளைக்கு 2—3 குன்றி எடை சூரணத்தில் முன் முடித்த செந்தூரம் கூட்டிக் கொடுக்க மந்தாரகாசம், சுவாசகாசம், இரைப்பு, இருமல் குணமாகும்.

பத்தியம் :—இச்சாபத்தியம் மாமிசம் சேர்க்கக் கூடாது.

## 49. தங்கச் செந்தூரம்

சரக்கும் செய்பாகமும் :—ஒரு வராகனெடை தங்கச் சுருள் ரேக்கைப் பொடிப்பொடியாகக் கத்தரித்து வைத் துக் கொள்ளவும். அதன்பின் ஒரு சுத்தமான கல்வத்தில் நான்கு வராகனெடை வாலைரசத்தை விட்டு முன் கத்த ரித்து வைத்துள்ள தங்க ரேக்குத் துண்டுகளைக் கொஞ் சங் கொஞ்சமாகப் போட்டு அரைத்துக் கொண்டுவர ரசத் துடன் உறவாகி விடும். அப்போது மாசிப்பத்திரி இலைச் சாறு விட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகுபதத்தில் வில்லையாகத் தட்டி உலர்த்திப் பொருத்தமான சிறு அகலில் வைத்து மேல் அகல்மூடிச் சீலைசெய்து 20-வறட்டி யில் புடமிடவும். இப்படி அரைத்து அரைத்து 3-புடமிடத் தங்கசாயலின்றி நல்ல செந்தூரமாகும். இதை அரைத்துக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு 1—1½ அரிசி எடை தினம் இருவேளை தாதுவிருத்திக் குரிய லேகியங்களில் கொடுத்துவருக.

தீரும் வியாதி :—மதுமேகம், க்ஷயம், காசம், தாது நஷ்டம், தேக துர்ப்பலம் குணமாகும்.

பத்தியம் :—நல்ல ஆகாரம் உட்கொள்ளவேண்டும்.

## 50. அயவெள்ளிச் செந்தூரம்

சரக்கும் செய்பாகமும் :—சுத்தி செய்த சரிகை வெள்ளி அல்லது சன்னமாக இராவிய வெள்ளிப்பொடி வராகனெடை-2, புதியதாக இராவிய அயப்பொடி வராகனெடை-2, இவ்விரண்டையும் கல்வத்தில் போட்டு ஒரு கோழிமுட்டையிலுள்ள வெண்கருவு விட்டு நன்ருய் அரைத்து மெழுகுபதத்தில் கடலைப்பிரமாணம் மாத்திரைகள்செய்து நிழலில் உலர்த்திக் கருவுகளை நீக்கிய ஒரு காலி முட்டை ஓட்டிற்குள் போட்டு வாய்ப்புறம் மற்ருேர் முட்டை ஓட்டைச் செருகி மண்சீலை 5—6 செய்து 10-வறட்டியில் புடமிடவும். புடம் ஆறினபின் முட்டை ஓட்டிற்குள் அடக்கம்செய்த மாத்திரைகளை மீண்டும் கல்வத்தில்போட்டு ஒரு முட்டையின் வெண்கருவு விட்டரைத்து முன்போல் மாத்திரைகள் செய்து முட்டைக்குள் அடக்கம் செய்து மேல் முட்டை ஓடு செருகிச் சீலைசெய்து புடமிடவும். இப்படி 10-புடமிடச் செந்தூரமாகும். இதை அரைத்துக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்குத் துவரம்பருப்பளவு தினம் இருவேளை தாதுவிருத்திக்குரிய லேகியங்களில் கொடுத்துவருக.

தீரும் வியாதி :—நாட்பட்ட தேக துர்ப்பலம், நரம்பின் தளர்ச்சியினுல் நேர்ந்த தாதுநஷ்டம் குணமாகும் நல்ல ரத்தமும் தேஜசும் உண்டாக்கும்.

## 51. தங்கச் செந்தூரம்

**சரக்கும் செய்பாகமும் :—** ஒரு மண் தோண்டியில் 3-அல்லது 4-செவ்விளநீரில் உள்ள நீரைவிட்டு அந்நீருக்கு 7-8 விரற்கடை உயரத்திலிருக்கும்படி ½-வராகனெடை வீரத்தைச் சீலையில் முடிந்து தொங்கவிட்டு டோலாயந்திர விதிப்படி நீர்சுண்ட எரித்து வீரத்தை எடுத்துப் பொடி செய்து ஒரு புட்டியில் போட்டு, அதில் ஆண்விஷ மூங்கில் இலையை இடித்துச் சாறுவாங்கி ஆழாக்கு அளவிற்கு விட்டுக் குலுக்கி வைத்துவிடுக. மறுநாள் பார்க்கச் சாறு தெளிந்து சலம்போலிருக்கும். அசையாமல் வடித்துக் கொண்டு திப்பியைத் தள்ளிவிடவும்.

அப்பால் ஒரு வராகனெடை தங்கச்சுருள்ரேக்கைப் பொடிப் பொடியாகக் கத்தரித்துப் போட்டு முன் சித்தப் படுத்திய தெளிவு நீரைக் கொஞ்சங் கொஞ்சமாக விட்டு இரண்டு சாமம் அரைத்து மெழுகுபதத்தில் வழித்து வில்லைதட்டி வெடிக்காமல் நிழலில் உலர்த்தவும் இது நன்றாய்க் காய்ந்த பதத்தில் ஒரு பொருத்தமான அகலில் வைத்து மேல் அகல்மூடிச் சீலைசெய்து ரவிமுகத்தில் உலர்த்தி 15-வறட்டியில் புடம் போடவும். புடம் ஆறின பின் வில்லையைப் பார்க்கச் சிவந்திருக்கும். இதை அரைத்துக் குப்பியிலிடுக.

**பிரயோகம் :—** இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு இரண்டு அரிசிப் பிரமாணம் காலை மாலை தாதுவிருத்திக் குரிய ஏதேனும் ஒரு லேகியத்தில் அனுபானம் செய்து கொடுத்துக்கொண்டு வருக.

**தீரும் வியாதி :—** தேகத்திலுள்ள பலபிணிகளை நீக்குவதுடன் மன்மதனுக்கு ஒப்பாக நல்ல தேஜசும் பலமும் பொருந்தி இருக்கச் செய்யும்.

## 52. சொர்ணபுஷ்பரசச் செந்தூரம்

சரக்கு :—

| | | |
|---|---|---|
| வெள்வங்கம் | பலம் | 1 |
| வாலைரசம் | ,, | 1 |
| நெல்லிக்காய் கந்தகம் | ,, | 1 |
| நவச்சாரம் | ,, | 1 |
| படிக்காரம் | ,, | 1 |
| இலிங்கம் | ,, | 1 |

செய்பாகம்:—இவற்றைக் கிரமப்படி சுத்திசெய்து முதலில் வெள்வங்கத்தை ஒரு கரண்டியில் போட்டு உருக்கி ஆறிவரும்போது வாலை ரசத்தைத் தொந்தித்துக் கல்வத்தில் போட்டு அரைத்துத் தூளாக்கி அதன்பின் கந்தகத்தைக் கூட்டி அரைக்கவும். இவைகள் யாவும் நன்ருய் உறவானபின் மற்றுமுள்ள சரக்குகளைப் படிப்படியாகப் போட்டு அரைத்து ஏழு சீலைசெய்த கறுப்புப் புட்டியில் போட்டு வைத்துக் கொள்க. இதற்குமேல் ஒரு குண்டுசட்டியில் 2-3 விரற்கடை உயரம் பெரும் மணல் கொட்டிப் பரப்பி நடுவில் முன் சித்தப்படுத்திய புட்டியை வைத்து வாய்க்குப் பஞ்சு அடைத்து வாய் மட்டத்திற்கு மணல் கொட்டி மட்டமாகப் பரப்பிய பின் வாய் அடைப்பை எடுத்துவிட்டு அசையாமல் அடுப்பில் வைத்து ஆவாரம்பட்டை அல்லது ஆவாரங்கட்டையால் நான்கு சாமம் எரிக்கவும். மூன்று சாமத்திற்கு மேல் இரும்பு சலாக்கைக்கொண்டு புட்டியின் வாய் வழியாக விட்டு மருந்துள்ள பாகம் வரையில் கிண்டிக் கொடுக்கவும். எப்பொழுது அந்த இரும்பு சலாக்கில் மருந்துள்ள வரைக்கும் மஞ்சள் சாயலாக ஒட்டுகின்றதோ அந்தச் சமயம் எரிப்பதை நிறுத்தி ஆற விடுக. மறுநாள் குப்பியிலிட்ட மருந்துகளைக் கொட்டிப் பார்க்கத் தக்க சாயலாகப்

புஷ்பம்போல் பூத்திருக்கும். இதை அரைத்துக் குப்பியி லிடுக.

**பிரயோகம் :**—இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு ஒரு குன்றி எடை தினம் இருவேளை நெய் தேன் இவைகளில் கொடுத்து வரக் குஷ்டம், கருங்குஷ்டம், மேகரணம். பவுத் திரம், மூலம், இருமல் முதலியவைகள் குணமாகும் இந்த மருந்தைக் கொடுக்கும்போது பசுவின் பால் தாராளமாகச் சேர்த்துக் கொள்ள வேண்டும். ஜாதிக்காய், ஜாதிப்பத் திரி, கிராம்பு, கோஷ்டம், வால்மிளகு, கசகசா, அதிமதுரம் வகைக்குப் பலம் ஒன்ருகச் சிறிது வெதுப்பிச் சூரணித்து வைத்துக்கொண்டு ஒரு படி பசுவின்பாலில் 15-பலம் வெள்ளைச்சர்க்கரை கூட்டிக் கரைத்து அடுப்பிலிட்டுப் பாகுபதம் வரும்போது கொட்டிக் கிளறிப் போதிய அளவு நெய் தேன் கூட்டிப் பிசரி வைத்துக்கொண்டு வேளைக் குக் கொட்டைப்பாக்களவு லேகியத்தில் முன்முடித்த செந்தூரத்தை வைத்து கூட்டிக் கொடுத்துக் கொண்டு வரத் தாதுவிருத்தியையும் தேஜஸையும் நாளுக்கு நாள் தோற்றுவிக்கும்.

## 53. வெடியுப்புச் செந்தூரம்

**சரக்கும் செய்பாகமும் :**—ஐந்து பலம் வெடியுப்பை ஓர் சட்டியிலிட்டு அடுப்பில் வைத்து எரிக்க உப்பு உருகும். அந்தச் சமயம் ஆழாக்கு நாகவல்லி இலைச்சாற்றை விட்டுக் கிளறிக் கொடுத்துக் கொண்டுவர நீர் சுண்டும் வரையில் சிடுசிடுப்போடு சப்த முண்டாகி அடங்கும். உடனே அதை ஒரு பலகையின்மேலாவது அல்லது சுத்த மான கல்வத்திலாவது சாய்த்து விடவும். மீண்டும் இதைச் சட்டியிலிட்டு உருக்கி முன்போல் நாகவல்லி இலைச்சாறு விட்டுச் சுண்டிச் சோறுபதமாக இருக்கும் போது சாய்க்கவும். இப்படி மூன்று முறையானதைப்

பார்க்கச் சிவந்து காட்டும் இன்றேல் பின்னும் சிறிது நேரம் சிவக்கும் வரையில் எரித்து ஆறவிட்டு அரைத்துக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு 1—2 குன்றி எடை தக்க அனுபானங்களில் கொடுக்கவும். இப்படிச் சில தினம் கொடுத்து வருதல் நன்று.

தீரும் வியாதி :—இந்தச் செந்தூரத்தைக் காலையில் நெய்யிலும் மாலையில் தேனிலும் கொடுத்துவரப் பாண்டு, சோபை, காமாலை, வீக்கம், மகோதரம் முதலியவைகள் நீங்கும். இளநீர், முள்ளங்கி கிழங்குச்சாறு, வாழைக்கட்டைச்சாறு போன்றவைகளில் கொடுக்க நீர் அடைப்பு, கல்லடைப்பு, சதையடைப்பு முதலியவைகள் குணமாகும்.

பத்தியம்:—இச்சாபத்தியமாகவும் காரத்தை மிகுந்த அளவில் குறைத்தும் கூட்டுக.

---

# பற்ப இலம்பகம்

## 1. கற்பூர சிலாசத்துப்பற்பம்

சரக்கும் செய்பாகமும்:—இரண்டு பலம் கற்பூர சிலாசத்தை எலுமிச்சம்பழச்சாற்றிலும், கற்சுண்ணாம்பு கரைத்த நீரிலும் மும்மூன்று நாள் ஊறப்போட்டு எடுத்துச் சலம் விட்டு அலம்பிக் கல்வத்தில் போட்டுச் சிறு செருப்படை யிலைச்சாறு விட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகுபதத்தில் வில்லை தட்டிக் காய வைத்து அகலில் வைத்து மேகல் அகல் மூடிச் சீலைசெய்து 20-வறட்டியில் புடமிடவும். இப்படி மூன்று புடமிட்டெடுக்கச் சிலாசத்து வெளுத்து மிருதுவாக இருக்கும். இதனைக் கல்வத்தில்

போட்டு நன்கு அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக. இதைப்போலவே காட்டு சிறுகீரைச்சாறு, சிறு நெருஞ்சில் சாறு, ஆவாரை இலைச்சாறு முதலியவற்றிலும் முடித்துக் கொள்ளலாம்.

**பிரயோகம் :—**இந்தப் பற்பத்தில் வேளைக்குக் குன்றி யெடை தினம் இருவேளை நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களில் சில தினம் கொடுத்து வருக.

**தீரும் வியாதி :—**தேகத்தில் பித்தத்தாலெழுந்த நமை, எரிவு, தடிப்பு, வெள்ளை, வெட்டை, நீர்க்கடுப்பு நீங்கும். இதனுடன் சங்குபற்பம் கூட்டிக் கொடுக்க நீர்ச் சுறுக்கு, நீர் எரிச்சல், நீர் அடைப்பு இவைகள் குணமாகும்.

**பத்தியம் :—**காரசாரமற்ற அன்னமாகக் கொள்ளு தல் சாலச் சிறந்தது.

## 2. வேறு முறை

**சரக்கும் செய்பாகமும் :—**பத்துப்பலம் கற்பூர சிலா சத்தைச் சிறு துண்டுகளாக நறுக்கிப் புளித்துள்ள அரிசி கழுநீரில் போட்டு 3-அல்லது 5-நாள் ஊறப்போட்டு எடுத் துக் கொள்க. இரண்டு அல்லது மூன்று வீசை சோற்றுக் கற்றாழை மடல்களைக் கொண்டுவந்து மேல் தோலைச் சீவிக் கழித்துச் சிறு துண்டுகளாக நறுக்கி ஒரு மண் தோண்டியில் கொஞ்சம் போட்டுப் பரப்பி அதன்மேல் சில சிலாசத்துத் துண்டுகளைப் பரப்பி அதன்மேல் கொஞ்சம் சோற்றுக் கற்றாழைத் துண்டுகளைப் பரப்பவும். அப் போது இரண்டரைப்பலம் அன்னபேதியைப் பொடித்து வைத்துக் கொண்டு அதன்மீது கொஞ்சம் தூவிச் சோற் றுக்கற்றாழைத் துண்டுகளைப் பரப்பவும். இப்படிப் படிப் படியாக எல்லாவற்றையும் போட்டு தோண்டியின் வாய்க் குப் பொருத்தமான மண்ணோடு கொண்டு மூடி மண்சீலை

ஏழுசெய்து 100, 150-வறட்டியில் புடமிடவும். நல்ல பற்ப மாகும். வெளுத்துள்ள சிலாசத்துக் கட்டிகளைக் கல்வத் தில். போட்டு நன்கு அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத் துக, புடபேதத்தினுல் கருதிய வண்ணம் வெளுத்திரா விடின் இந்தச் சிலாசத்து கட்டிகளைப் பொறுக்கி எடுத் துக் கல்வத்திலிட்டுக் குமரிச்சாற்ருல் நான்கு சாமம் அரைத்து மெழுகுபதத்தில் காலணு அகலமும் கனமும் உள்ள வில்லைகளாகச் செய்து ரவியில் நன்ருய் உலர்த்தி அகலில் பரப்பி மேல் அகல் மூடி மண்சீலை ஏழுசெய்து 50-வறட்டியில் புடமிட வேண்டும். அப்போது நன்ருய் வெளுத்து மிருதுவாகவும் குணத்தில் சிறந்ததாகவும் இருக்கும். இதை அரைத்துப் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—வேளைக்குக் குன்றி யெடை தினம் இருவேளை நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—வெட்டை, வெள்ளை, நீர்க்கடுப்பு, பித்த மிகுதியால் ஊறலோடு வந்த தடிப்பு, சீதபேதி குணமாகும். இந்தப் பற்பத்தைச் சீதபேதிக்குக் கொடுக் கும்போது படிக்கார நவநீத பற்பம் கூட்டிக் கொடுக்க அதிக நன்மையைத் தரும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 3. வெடிகார சிலாசத்துப் பற்பம்

சரக்கும் செய்பாகமும் :—சிலாசத்து, வெடியுப்பு, வெங்காரம் இம்மூன்றையும் கிரமப்படி சுத்தி செய்து வகைக்குப் பலம் இரண்டு வீதம் கல்வத்தில் போட்டுச் சுண்ணும்புத் தெளிவு நீர் விட்டு தினம் ஒன்றுக்கு மூன்று சாமம் வீதம் இரண்டு நாள் அரைத்து மெழுகு பதத்தில் ஒரே வில்லையாகத் தட்டி ரவிமுகத்தில் நன்ருய் உலர்த்தி

ஒரு பொருத்தமான அகலில் வைத்து மேல் அகல் மூடி மண்சீலை ஏழு செய்து நன்கு உலர்த்தி 20, 25-வறட்டியில் புடமிடவும். புடம் நன்ருப் ஆறின பின் வில்லையைப் பார்க்க வெண்மை நிறமாக வெளுத்திருக்கும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம்:**—இந்தப் பற்பத்தில் வேளைக்குக் குன்றி யெடை காலை மாலை நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களில் கொடுத்து வருக.

**தீரும் வியாதி :**—நீர்க்கட்டு, நீர் எரிச்சல், நீர்ச் சுறுக்கு, ஆரம்ப வெள்ளை குணமாகும்.

**பத்தியம் :**—பால்சாதம், மோர்சாதம் அல்லது கார சாரமற்ற உணவு கொள்ளல் வேண்டும்

## 4. வெங்கார பற்பம்

**சரக்கும் செய்பாகமும் :**—வெங்காரம் பலம்-1, சிலா சத்துப் பலம்-1, இவ்விரண்டையும் கல்வத்தில் போட்டு, இரண்டு பலம் துத்திவேர்ப்பட்டையுடன் ஒரு கைப்பிடி பருத்திச்செடி சுட்டெடுத்த சாம்பலைக் கூட்டி ½ படித் தண்ணீர்விட்டு நாலில் ஒன்ருய் காய்ச்சிய கியாழத்தை விட்டு நான்கு சாமம் அரைத்து ஒரே வில்லையாகத் தட்டி ரவியில் உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல் மூடிச் சீலை செய்து ரவிமுகத்தில் வைத்து நன்ருய்க் காய்ந்தபின் 7 . 8 வறட்டியில் புடமிடவும். அதன்பின் வில்லையை எடுத்துக் கல்வத்தில் போட்டுக் கோழிமுட்டையின் வெண்கருவிட்டு ஒருசாமம் அரைத்து வில்லைதட்டி உலர்த்தி முன்போல் அகலில் வைத்து மேல் அகல் மூடிச் சீலைசெய்து 7-8 வறட்டியில் புடமிடவும். இப்படி மூன்று புடமிட்டெடுக்க உயர் தரமான பற்பம் ஆகும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தப் பற்பத்தை வேளைக்குக் குன்றி எடை தினம் இருவேளை நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களில் கொடுத்துவருக.

தீரும் வியாதி :—நீர் அடைப்பு, நீர்ச் சுருக்கு, நீர் எரிச்சல் குணமாகும். இந்தப் பற்பத்தை தேனில் கொடுத்துவரப் பெரும் வயிறு, மகோதரம் குணமாகும். முள்ளங்கிக்கிழங்குச் சாற்றில் கொடுத்துவரக் கல்லடைப்பு குணமாகும்.

## 5. வேறு முறை

சரக்கும் செய்பாகமும் :—ஒரு பலம் கற்பூரசிலாசத்துப் பற்பத்தை ஒரு குவிந்த அகலில் போட்டுப் பரப்பி, அதன்மேல் சுத்திசெய்த ஒருபலம் வெங்காரத்தை வைத்து மேல் அகல்மூடிச் சீலைசெய்து 15-வறட்டியில் புடமிட வெங்காரம் உருகிப் பொங்கி அடங்கி இருக்கும். இதைக் கல்வத்தில் போட்டு மிருதுவாக அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தப் பற்பத்தில் வேளைக்கு 1-1½ குன்றி எடை தினம் இருவேளை நோய்க்கு ஏற்றவாறு அனுபானங்களில் கொடுத்துவருக.

தீரும் வியாதி:—வெண்ணெய், நெய் முதலியவற்றில் கொடுக்க நீர்க்கட்டு, நீர்க்கடுப்பு நீங்கும். வெள்ளரி விதையைச் சலம்விட்டு அரைத்துப் பிழிந்தெடுத்த பாலில் விரால்மீன் தலையிலுள்ள கல்லைச் சிறிது உறைத்து அதனுடன் இந்த பற்பத்தைச் சேர்த்துக்கொடுக்க கல்லடைப்பு நீங்கும். இதனில் கருதியவாறு குணந்தெரியாவிடின் முள்ளங்கிக்கிழங்கை இடித்துப் பிழிந்தெடுத்த

ஒன்றல்லது அரை ஆழாக்குச் சாற்றில் இந்தப் பற்பத்தைக் கூட்டிக்கொடுக்க இரண்டு மூன்று வேளையில் கல்லடைப்பைக் குணப்படுத்தும்.

பத்தியும் :—இச்சாபத்தியம்.

## 6. சீமைக் கல்நார்பற்பம்

**சரக்கும் செய்பாகமும் ;**—இரண்டு பலம் சீமைக் கல்நாரை ½-அங்குலம் நிகளமும் விரல்கனமும் இருக்கும்படி நறுக்கி வைத்துக்கொண்டு ஒவ்வொன்றையும் ஏழுமுறை கன்னான் உலையிலாவது அல்லது கரிநெருப்பனலிலாவது சிவக்கக் காய்ச்சிக் காய்ச்சி அப்போதைக்கப்போது புதிய கோவின்நீரில் தோய்க்கவும். இது ஒருவிதமான சுத்தியாகும். இதைச் சலம்விட்டு நன்றாய் அலம்பி ஈரமில்லாதபடி உலர்த்தி வைத்துக்கொள்க. புதிய சரக்காகக் கஸ்தூரிமஞ்சள் நான்கு பலம் கொண்டுவந்து இடித்துச் சூரணம் செய்து ஒரு குவிந்த மண்ணோட்டில் பாதித் தூளைப் போட்டுப் பரப்பி அதன்மேல் முன் சித்தப்படுத்திய கல்நார் துண்டுகளை வைத்து அதன்மேல் மிகுதியுள்ள கஸ்தூரிமஞ்சள் தூளைப்போட்டு அசையாமல் பொருத்தமான மேல் மண்ஞோடுமூடிச் சீலைசெய்து 30-வறட்டியில் புடமிடவும். புடம் ஆறினபின் கல்நாரைப்பார்க்க வெளுத்து இருக்கும். உடைத்தால் கல்லுப்போலிருக்கும். இதைக் கல்வத்தில்போட்டு புளிப்புத் தயிராவது முள்ளங்கிக் கிழங்கின் சாறுவது விட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகுபதத்தில் காலணு அகலமும் கனமும் உள்ள வில்லைகளாகத் தட்டி ரவியில் உலர்த்தி அகலில் பரப்பி மேல் அகல்மூடிச் சீலைசெய்து 20-30 வறட்டியில் புடமிடவும். நல்ல பற்பமாகும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம்:**—இந்தப் பற்பத்தில் வேளைக்குக் குன்றி எடை தினம் இருவேளை 10-நாள் நெய் வெண்ணெய் முதலிய அனுபானங்களில் கொடுத்துவருக.

**தீரும் வியாதி:**—வெள்ளை, வெட்டை, நீர்ச்சுருக்கு, நீர் எரிச்சல், தேக வெப்பம் முதலியவை குணமாகும். இதனுடன் சிலாசத்துப் பற்பம் கூட்டிக்கொடுப்பது அதிகம் நன்று.

**பத்தியம்:**—இச்சாபத்தியம்.

## 7. வேறு முறை

**சரக்கும் செய்பாகமும்:**—சீமைக் கல்நாரைக் கொண்டுவந்து விரல் கனத்திற்குப் பிளந்து $\frac{3}{4}$-அங்குலம் நிகளத்திற்குத் துண்டித்து இரண்டு பலம் எடையிருக்கும்படி எடுத்துக்கொள்க. இந்தத் துண்டுகளையெல்லாம் இரண்டு மூன்று சோற்றுக்கற்ருழையின் மடலிற்குள் செருகி ஒருநாள் விட்டுவைத்து மறுநாள் எடுத்து ரவியில் சிறிதும் ஈரம் இல்லாமல் உலர்த்தவும். மீண்டும் இந்தத் துண்டுகளை முன்போல் சோற்றுக்கற்ருழையின் மடலிற்குள் செருகி வைத்திருந்து மறுநாள் எடுத்து ரவியில் உலர்த்தவும். இப்படி மூன்று முறை செய்து நன்ருய் உலர்ந்திருக்கும் பதத்தில் நான்காவது முறையாகச் சோற்றுக்கற்ருழையின் மடலிற்குள் செருகி ஒவ்வொன்றுக்கும் 7—8 மண்சீலை செய்து ஈரம் வற்றச் சாம்பலில் புரட்டி 30—40 வறட்டியில் புடமிடவும். புடம் ஆறினபின் கல்நாரைப் பார்க்க வெளுத்து மிருதுவாக இருக்கும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம்:**—இந்தப் பற்பத்தில் வேளைக்குக் குன்றி எடை தினம் இருவேளை நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—மேககாங்கை, வெள்ளை, நீர்ச் சுருக்கு, நீர் எரிச்சல் குணமாகும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 8. வேறு முறை

சரக்கும் செய்பாகமும் :—மூன்று பலம் சிமைக்கல் நாரைச் சிறு துண்டுகளாக நறுக்கி இளநீரில் மூன்று நாள் ஊறப்போட்டு எடுத்துச் சுத்த சலம் விட்டு நன்ருய் அலம்பி ரவியில் உலர்த்திப் பத்திரப்படுத்துக.

அப்பால் ஒன்றரை வீசை பச்சை கோங்கிலவமரப் பட்டையை (முள்ளிலவமரப்பட்டை) கொண்டுவந்து சிறு துண்டுகளாக நறுக்கிப் பஞ்சுபோல் நசுக்கி அரைபாகம் ஒரு கோணித்துணியில் பரப்பி அதன்மேல் முன் சுத்தி செய்து வைத்துள்ள கல்நார் துண்டுகளை ஒன்றன்மீது ஒன்று படாமலிருக்கும்படி பரப்பி அதன்மேல் மிகுதி யுள்ள பட்டைத்தூளையிட்டுக் கோணியைச் சுருளையாகச் சுருட்டிக் கயிறு கொண்டு கட்டி 7—8 மண்சீலை வலு வாகச் செய்து ஒரு நாள் ஈரம் வற்ற உலர்த்தி மறுநாள் 80-வறட்டியில் புடமிட்டு ஆறின பின் பார்க்க வெளுத்து நீற்றிருக்கும். இதை அரைத்துக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்தப் பற்பத்தில் வேளைக்கு ஒரு குன்றி எடை தினம் காலை மாலை நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—வெள்ளை, நீர் எரிச்சல், உட்சூடு, தேககாங்கை.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 9. நாட்டுக் கல்நார் பற்பம்

சரக்கும் செய்பாகம் ;—சிறு துண்டுகளாக மூன்று பலம் நாட்டுக் கல்நாரைக் கொண்டுவந்து அவற்றை எலுமிச்சம்பழச்சாறும் கற்சுண்ணமும் இட்டுக் கலக்கி வைத்துள்ள நீரில் போட்டு மூன்று நாள் ஊற விட்டு அடுப்பில் வைத்து சிறிது எரித்து ஈரமெல்லாம் வற்றிய பின் அவற்றிற்குச் சுமார் தேங்காய்ப் பிரமாணம் ஆவாரை இலையை அரைத்துக் கவசமிட்டு மண்சீலை 7 - 8 செய்து ஒருநாள் ஈரம் வற்ற ரவியில் வைத்து உலர்த்தி மறுநாள் 60-70 வறட்டியில் புடமிட்டு ஆறின பின் எடுக்க வெந்து வெளுத்து நீற்றிருக்கும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தப் பற்பத்தில் வேளைக்கு குன்றி யெடை தினம் காலை மாலை வெண்ணெய், நெய் முதலிய அனுபானங்களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—வெள்ளை, வெட்டை, நீர் எரிச்சல், நீர் கடுப்பு முதலியவைகள் குணமாகும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

(நீர் கட்டுக்கு)

## 10. கார வெடியுப்பு பற்பம்

சரக்கு :—

| | | |
|---|---|---|
| வெடியுப்பு | பலம் | 2 |
| வெங்காரம் | ,, | 2 |
| நீர்முள்ளி சாம்பல் | ,, | 2 |

செய்பாகம் :—இம்மூன்றையும் கல்வத்தில் போட்டு கோழிமுட்டை வெண்கரு விட்டு 2-சாமம் அரைத்து

மெழுகுபதத்தில் வில்லை தட்டி உலர்த்தி சிறு துண்டு களாக நறுக்கி ஒரு குடுவையில் போட்டு வாய்க்கு ஓடு மூடிச் சீலைசெய்து 7 - 8 வறட்டியில் புடமிடவும். புடம் ஆறின பின் குடுவையிலிட்ட மருந்தை சுரண்டி எடுத்து அரைத்து சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—** இந்த பற்பத்தில் வேளைக்கு 2-3 குன்றி எடை இளநீரில் போட்டுக் கொடுக்கவும்.

**தீரும் வியாதி :—** நீர்க்கட்டு நீங்கும். நீர் தாராள மாக இறங்கும்.

**பத்தியம் :—** இச்சாபத்தியம்.

## 11. படிக்கார நவநீதபற்பம்

**சரக்கும் செய்பாகமும்:—** பத்துபலம் படிக்காரத் தைப் பொடிசெய்து ஒரு வாயகன்ற பெரிய மண் சட்டியில் போட்டு அடுப்பிலேற்றி எரித்து நீர்சுண்டி நன்கு வெளுத்துப் பொங்கி அடங்கினபின் ஆறவிட்டுச் சட்டியி லிருந்து பெயர்த்தெடுத்துக் கல்வத்தில் கொஞ்சங் கொஞ்ச மாகப் போட்டு மிருதுவாகும்படி எல்லாவற்றையும் அரைத்து எடுத்துக் கொள்க. கனமும் மழுமழுப்பும் உள்ள கடிதாசியை ஒரு ருல் தடி (மழுமழுப்புள்ள உருளையான கட்டை)யின்மேல் இரண்டு மூன்று ஓலை கனத்திற்குச் சுற்றிக் கடிதாசியின் வரம்பிற்குப் பசை தடவி ஒட்டிக் குழையைப்போல் உருவி எடுத்துக்கொள்ளவும். இவ்வாறு தேவையான அளவிற்குச் செய்து ஒவ்வொரு குழையையும் நான்கு அங்குலம் நீளத்திற்குத் துண்டித்து ஒருபுறத் தின் வாயை மடக்கிச் சந்தில்லாமல் ஒட்டி விடவும். இப் படி முடித்து வைத்துள்ள குழைகளின் மற்றொரு வாயின் வழியாக முன் அரைத்து வைத்துள்ள படிக்காரத்தூளைப் போட்டு அழுந்தக் கெட்டித்து குழைகளின் வாயை மடக்

கிச் சந்தில்லாமல் அடைத்து வருக. அப்பால் ஒரு பெரிய மட்பாண்டத்தில் 7-8 படி நெல்லைக் கொட்டி இடையில் முன் சித்தப்படுத்திய குழைகளைச் செருகி வாய் மூடிச் சீலைசெய்து ஆறுமாதம் வரையில் ஓர் இடத்தில் வைத்து விடுக. பின்னர் நெற்புடத்திலிட்ட குழைகளைச் சோதித்துப் பார்க்கப் படிக்காரம் கல்லுப்போலிறுகி இருக்கும். இவற்றை யெல்லாம் நன்ருய் இடித்து அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம்:**—இந்தப் படிக்கார பற்பத்தில் வேளைக்கு ஒரு குன்றி யெடை தினம் இருவேளை நெய் வெண்ணெய் தேன் முதலிய அனுபானங்களில் கொடுத்து வருக.

**தீரும் வியாதி :**—உள்ளுறுப்பு ரணம், பேதி, சீதபேதி, உஷ்ணபேதி, நீர்ச்சுருக்கு, நீர் எரிச்சல் குணமாகும். இந்தப் படிக்கார நவநீத பற்பம் குன்றி யெடை-1, பற்ப இலம்பகத்தில் இரண்டாவதாகக் கூறப்பட்ட சிலாசத்துப் பற்பம் குன்றி எடை-1, உலர்ந்த வில்வப்பழச்சதை சூரணம் குன்றி எடை 1-, ஆகக் கலந்து நெய் வெண்ணெய் முதலிய அனுபானங்களில் கொடுத்து வரவும். இப்படித் தினம் இருவேளை இரண்டு மூன்று நாள் கொடுக்க அசாத்தியமென்று பல பண்டிதர்களால் கைவிடப்பட்ட சீதபேதி குணமாகும்.

**பத்தியம் :**—அரரூட்மாவுகஞ்சி, ஜவ்வரிசிகஞ்சி, அல்லது மோர் சாதம் கூட்டவும்.

## 12. படிக்கார பற்பம்

**சரக்கும் செய்பாகமும் :**—ஒரு சிறு மட்கலயத்தில் ஒரு பலம் பசுவின் வெண்ணெயைப் போட்டு இடையில் ஒரு பலம் படிக்காரத்தைச் செருகி வாய்க்கு ஓடுமூடிச் சீலை செய்து 10-15 வறட்டியில் புடமிடவும் இது நல்ல பற்ப

மாகும். ஒருகால் நிறம் போதிய அளவு வெளுப்பாக இரா விடின் மீண்டும் கல்வத்திலிட்டு ஆவின்பாலால் ஒருமணி நேரம் அரைத்து மெழுகுபதத்தில் வில்லை தட்டி ரவியில் உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல்மூடிச் சீலைசெய்து 10-வறட்டியில் புடமிடவும். புடம் ஆறினபின் பார்க்க நன்ருய் வெளுத்து இருக்கும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—** இந்தப் பற்பத்தில் வேளைக்குக் குன்றி எடை தினம் இருவேளை பிணிக்கேற்றவாறு தேன், நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களில் கொடுத்து வருக.

**தீரும் வியாதி :—** உட்சூடு, உள்ளுறுப்பு ரணம், பேதி, இருமல், வெட்டை, நீர் எரிச்சல் முதலியவை தீரும்.

இருமலுக்குக் கொடுப்பதாக இருப்பின் முதல் நாள் காலையில் ஒரு முசுமுசுக்கை இலையில் குன்றியெடை பற்பத்தை வைத்து மென்று தின்னும்படி கொடுக்கவும். மறுநாள் காலையில் இரண்டு முசுமுசுக்கை யிலையில் வைத்துக் கொடுக்கவும். இவ்வாறு தினம் ஒன்றுக்கு ஒவ்வொரு இலையை அதிகப்படுத்தி ஏழு நாள் வரையில் கொடுத்து எட்டாவது நாளிலிருந்து ஒவ்வொரு இலையைக் குறைத்துக் கொண்டே வருக. இதனுல் இருமல் குண மாகும்.

**பத்தியம் ;—** இச்சாபத்தியம்.

## 13. சீனபாஷாண பற்பம்

**சரக்கும் செய்பாகமும் :—** ஐந்து பலம் படிக்காரத்தையும் ஒரு பலம் சுத்திசெய்த சங்குபாஷாணத்தையும் கல்வத்தில் போட்டுச் சிறு பிள்ளைகள் அமுரியையும் பிரண்டைச்சாற்றையும் சமனடவாகக் கலந்து கொஞ்சங் கொஞ்சமாக விட்டு 3 சாமம் அரைத்துச் சுத்தமாகச்

சுரண்டி எடுத்து ஒரே வில்லையாகத் தட்டி ரவியில் உலர்த்தவும். மறுவலும் அவ்வில்லலைக் கல்வத்தில் போட்டு அமுரிப் பிரண்டைச்சாறு விட்டு 3-சாமம் அரைத்து வில்லை தட்டி ரவியில் நன்ருய் உலர்த்தவும். இப்படி ஒன்பது முறை அரைத்து அரைத்து ரவியில் ஒவ்வொரு முறையும் உலர்த்தி எடுத்து வைத்துக் கொள்க அப்பால் ஒரு பொருத்தமான அகலில் கற்சுண்ணும்பையும் சாம்பலையும் சமனளவாகக் கலந்து போட்டு முன் அரைத்து வைத்துள்ள வில்லையை வைத்து அதன்மேல் சுண்ணும்புச் சாம்பல் கலவையைப் போட்டு மேல் அகல் மூடிச் சீலை செய்து 7 - 8 வறட்டியில் புடமிடவும். சரியாக வெந்திராவிடின் மீண்டும் ஒருமுறை முன்போல் அரைத்து வில்லை செய்து முன் அகலிலிட்ட வண்ணம் அடக்கிச் சீலை செய்து பின்னும் ஒரு புடமிட்டு எடுத்துக் கொள்ளவும். எடை சிறிது குறைந்தாலும் குற்றமில்லை. இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இத்தப் பற்பத்தில் வேளைக்கு 1 - 2 அரிசிப் பிரமாணம் திராட்சைப்பழத்தினுள் வைத்து 2 - 3 வேளைக்குக் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—பழையசுரம், காசம், பாரிசவாதம், முகவாதம், தாதுபலவீனம் குணமாகும்.

பத்தியம் :—புளி தள்ளி இச்சாபத்தியம்.

## 14. சீனலவண பற்பம்

சரக்கு :—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| படிக்காரம் | பலம் | 3 | வெங்காரம் | பலம் | $\frac{1}{2}$ |
| வெடியுப்பு | ,, | $\frac{1}{2}$ | கல்லுப்பு | ,, | $\frac{1}{2}$ |
| இந்துப்பு | ,, | $\frac{1}{2}$ | நாட்டுக்கல்நார் | ,, | $\frac{1}{2}$ |
| வளையலுப்பு | ,, | $\frac{1}{2}$ | ரசகற்பூரம் வராகனெடை | | $\frac{1}{2}$ |

**செய்பாகம் :—** இவற்றுள் முதலில் படிக்காரத்தை நீக்கி மற்றச் சரக்குகளைக் கல்வத்தில் போட்டு நன்ருய் அரைத்து வைத்துக் கொள்க. பின்னர் படிக்காரத்தை நன்ருய் அரைத்து ஒரு வாயகன்ற சட்டியில் பாதித் தூளைப் பரப்பி அதன்மேல் முன் அரைத்து வைத்துள்ள உப்பு தினுசுகளைப் போட்டு அதன்மேல் மிகுதியுள்ள படிக்காரத்தூளைப் போட்டு அடுப்பில் வைத்துச் சிறுக எரித்து எல்லாம் உருகி நீர்வற்றின சமயம் கீழிறக்கி ஆற விட்டு மருந்தைச் சட்டியிலிருந்து பெயர்த்து எடுத்துக் கல்வத்தில் போட்டு நன்ருய் அரைத்து சீசாவில் பத்திரப் படுத்துக.

**பிரயோகம் :—** இந்தப் பற்பத்தில் வேளைக்குக் குன்றி யெடை தினம் இருவேளை நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களில் கொடுத்து வருக.

**தீரும் வியாதி :—** வெள்ளை, வெட்டை, நீர்ச்சுருக்கு, நீர்க்கட்டு குணமாகும். இன்னும் இந்தப் பற்பத்தைச் சுக்குத்தூளில் அனுபானம் செய்ய வயிற்றுவலியும், பன வெட்டில் கொடுக்கச் சூதக வயிற்றுவலியும், சோம்பு சூரணத்தில் கொடுக்கச் சுரக்கட்டியும், வெந்நீரில் கொடுக்க உஷ்ணபேதியும் குணமாகும்.

**பத்தியம் :—** இச்சாபத்தியம்.

## 15. பவழ பற்பம்

**சரக்கும் செய்பாகமும் :—** இலந்தமரத்தின் இலையை அரைத்தாவது, அல்லது தைவேளைச் செடியின் இலையை அரைத்தாவது சிறிது நீர் சுண்ட ரவியிலிட்டுக் குகை பிடித்து அதற்குள் இரண்டு பலம் சுத்தி செய்த பவழத் தைப் போட்டு முன் அரைத்த இலையைக் கொண்டே மேல் மூடி செய்து அடைத்து அதன்மேல் ஏழு மண்சீலை செய்து

சிறிது உலர்த்தி 40 - 50 வறட்டியில் புடமிடவும். பவழம் வெந்து நீற்றிருக்கும். இதைக் கோப்பையில் போட்டு ஆவின்பால் சிறிது தெளித்துக் காற்றுவாடையில் வைத்திருக்க பூக்கும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தப் பற்பத்தில் வேளைக்கு ½ - 1 குன்றி யெடை தேன், நெய், அல்லது புளியங்கொட்டை அளவு கற்கண்டு, நெய் கூட்டி அரைத்த கலவை முதலியவற்றில் அனுபானம் செய்து தினம் இருவேளை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—மேகச்சூடு, தேகவறட்சி, க்ஷயம், ஈளை, இருமல் குணமாகும். இன்னும் இந்தப் பற்பத்தை நீராகாரத்தில் போட்டுக் கொடுக்க நீர்க்கடுப்பு குணமாகும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 16. வேறு முறை

சரக்கும் செய்பாகமும் :—சுத்தி செய்த பவழம் பலம்-1, கிராம்பு, சடாமாஞ்சி, வீரம் வகைக்குக் கழஞ்சு-1 கல்வத்தில் போட்டு முயல் ரத்தம் விட்டு நான்கு சாமம் அரைத்து வில்லை தட்டி ரவியில் உலர்த்தி எடுத்துக் கொள்ளவும். அப்பால் முயல் எலும்புகளை இரண்டொரு வறட்டிகளின் மேல் பரப்பி அதன்மேல் முன்போல இரண்டொரு வறட்டி இட்டுத் தீமூட்டி வெந்தாறின பின் எலும்புகளை எடுத்துக் கல்வத்தில் போட்டுக் குமரிச்சாறு விட்டு மெழுகுபோல் அரைத்து மூசையையும் மூடியையும் செய்து உலர்த்தி அதனில் முன் சித்தப்படுத்திய வில்லையைச் சிறு துண்டுகளாக உடைத்துப் போட்டு மேல் மூடியிட்டு மண் சீலை 7 - 8 செய்து உலர்த்தி 40 - 50 வறட்டியில் புட-

மிடவும். ஆறின பின் பார்க்க மூசையிலிட்ட துண்டுகள் வெளுத்து இருக்கும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப் படுத்துக.

**பிரயோகம் :—** இந்தப் பற்பத்தை வேளைக்குக் குன்றி எடை தினம் இருவேளை கொடுத்து வருக.

**தீரும் வியாதி :—** இருமல், காசம், க்ஷயம், நீர் ரோகம், மகோதரம் தீரும். சீதளதேகிகட்குத் தேனிலும் உஷ்ணதேகிகட்கு நெய்யிலும் கொடுப்பது நன்று.

**பத்தியம் :—** இச்சாபத்தியம். கபத்தை விருத்தி செய்யும் பண்டங்களை நீக்குக.

## 17. வேறு முறை

**சரக்கு :—**

| | | | |
|---|---|---|---|
| நற்பவழம் | பலம் 1 | வீரம் | கழஞ்சு 1 |
| சடாமாஞ்சில் | கழஞ்சு 5 | மிளகு | ,, 4 |

**செய்பாகம் :—** இவைகளைக் கல்வத்தில் போட்டுக் குமரிச்சாறு விட்டு நான்கு சாமம் அரைத்து வில்லை தட்டி ரவியில் உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல் மூடிச் சீலைசெய்து 20 - 25 வறட்டியில புடமிடவும். புடம் நன்றாய் ஆறின பின் வில்லையைப் பார்க்க வெளுத்திருக்கும். ஒரு சமயம் சரியானபடி வெளுத்திராவிடில் மீண்டும் ஒருமுறை குமரிச்சாற்றால் இரண்டு சாமம் அரைத்து வில்லை தட்டி உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல் மூடிச் சீலைசெய்து 20 - 30 வறட்டியில் புடமிட நல்ல பற்பமாகும். இதை அரைத்துக் குப்பியிலிடுக.

**பிரயோகம் :—** கற்கண்டைக் கல்வத்தில் போட்டுப் பசுவின் நெய்விட்டு வெண்ணெய்போல் ஆகும் வரையில்

அரைத்து வழித்து வைத்துக்கொண்டு வேளைக்குச் சுண்டைக்காய்ப் பிரமாணம் காலை மாலை மேற்படி பற்பம் ஒரு குன்றி எடை கூட்டிக் கொடுத்துக் கொண்டு வருக.

தீரும் வியாதி :—இருமல், காசம், க்ஷயம், மேகசுரம் முதலியவைகள் குணமாகும். இந்தப் பற்பத்தை நீராகாரத்தில் போட்டுக் கொடுக்க நீர்ச்சுருக்கு, நீர் எரிச்சல், வெட்டை குணமாகும்.

## 18. பவழ சிலாசத்துப் பற்பம்

சரக்கும் செய்பாகமும் :—சுத்தி செய்த பவழம் பலம்-1, சுத்தி செய்த கற்பூரசிலாசத்துப் பலம்-1, இவ்விரண்டையும் கல்வத்தில் போட்டுப் பிரண்டைச்சாறு விட்டு நான்கு சாமம் அரைத்து வில்லைத் தட்டி ரவியில் உலர்த்தி அகலில் அடக்கி மேல் அகல் மூடிச் சீலை செய்து முழப்புடமிடவும். புடம் ஆறின பின் பார்க்க வில்லை வெளுத்துப் பற்பமாக இருக்கும். இதைக் கல்வத்திலிட்டு அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தப் பற்பத்தில் வேளைக்கு ஒரு குன்றி எடை தினம் இருவேளை வெண்ணெய், நெய் முதலிய அனுபானங்களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—மேகசுரம், எலும்புருக்கி, மதுமேகம், வெள்ளை, வெட்டை, நீர்ச்சுருக்கு, நீர் எரிச்சல், உஷ்ண இருமல் குணமாகும்.

இந்தப் பற்பத்தைத் தேனில் கொடுக்க மேக ஊறல், குன்மம் வாயு தீரும்.

பத்தியம் :—புளி தள்ளி இச்சாபத்தியம்.

## 19. பலகறை பற்பம்

சரக்கும் செய்பாகமும் :— ஒரு மட்கலயத்தில் தேவையான அளவு அரை பாகத்தில் அடங்கக்கூடிய தாகப் பலகறையைப் போட்டு அவைகள் மூழ்க எலுமிச் சம்பழச்சாறு விட்டு ஒரு இரவு வைத்து மறுநாள் கலயத் தின் வாய்க்குப் பொருத்தமான அகல் மூடிச் சீலைசெய்து 30—40 வறட்டியில் புடமிடவும். புடம் நன்ருய் ஆறின பின் கலயத்திலிட்ட பலகறையைப் பார்க்க வெளுப்பாகப் பூத்திருக்கும். இதை நன்ருய் அரைத்துக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்தப் பற்பத்தை வேளைக்குக் குன்றி எடை தினம் இருவேளை நெய், வெண்ணெய் முத லிய அனுபானங்களில் கொடுத்துவருக.

தீரும் வியாதி :—நீர் எரிச்சல், பக்கசூலை, மார்பு நோய், வயிற்றுவலி, ஈரல் நோய், கபக்கட்டு இவைகள் தீரும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 20. வெள்ளைச்சங்கு பற்பம்

சரக்கும் செய்பாகமும் :—மூன்று பலம் சங்குத் துண்டுகளைக் கொண்டுவந்து கருந்துளசி இலையை நெகிழ அரைத்துச் சுமார் சிறு தேங்காய்ப்பிரமாணம் உருண்டையாகத் திரட்டி அதனுள் செருகி மண்சீலை எழு செய்து சிறிது ஈரம் வற்றச் சாம்பலில் புரட்டி எடுத்து 50—60 வறட்டியில் புடமிடவும். இது வெளுத்து இருக் கும். இந்தத் துண்டுகளை ஒரு கோப்பையில் போட்டுக் காற்றுவாடையில் வைத்துவிடத் தானுகப் பூத்துமலரும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—**இந்தப் பற்பத்தில் வேளைக்கு ஒரு குன்றி எடை தினம் இருவேளை வெண்ணெய், நெய் முதலியவற்றில் 3-5 நாள் கொடுக்கவும்.

**தீரும் வியாதி :—**வெள்ளை, நீர்ச்சுருக்கு, நீர் எரிச்சல், நீர்க்கட்டு, தேககாங்கை, இருமல், காமாலை குணமாகும்.

இந்தப் பற்பத்தையாவது, முன்முறையில் கூறப்பட்ட பலகறை பற்பத்தையாவது தனியாகக் கொடுப்பதைவிட இதனுடன் சிறிது கல்நார், சிலாசத்து கூட்டிக் கொடுப்பது அதிக நன்மையைத் தரும்.

## 21. சிங்கி பற்பம்

**சரக்கும் செய்பாகமும் :—**அகத்திக்கீரையை அரைத்துச் சுமார் ஒரு தேங்காய்ப் பிரமாணம் ஒரு சட்டியிற்போட்டு அதனிடையில் மான்கொம்புச் சீவலைத் தேவையான அளவு செருகி அடுப்பில் வைத்து மூலிகை தீயும்வரையில் எரித்து ஆறவிட்டு மான்கொம்புச் சீவலையெல்லாம் சேதப்படாமல் எடுத்து வைத்துக்கொள்க. அப்பால் நீர்முள்ளி இலையை நன்கு அரைத்துச் சுமார் ஒரு தேங்காய்ப் பிரமாணம் உருண்டையாகத் திரட்டி முன் எடுத்து வைத்துள்ள மான்கொம்புச்சீவலை உள்ளே செருகி மண்சீலை 7 அல்லது 8 செய்து சிறிது உலர்த்தி 70-80 வறட்டியில் புடமிடவும். புடம் நன்ருய் ஆறினபின் நீர்முள்ளிக்கவசத்திலிட்ட மான்கொம்புச் சீவலைப் பார்க்க நன்ருய் வெளுத்து இருக்கும். இதை அரைத்துக் குப்பியிலிடுக.

இது சரியான வெளுப்பு நிறமாகக் கண்களுக்குப் புலப்படாவிடின் மீண்டும் கல்வத்திலிட்டு வெள்ளாட்டுப் பாலாவது அல்லது ஆவின்பாலாவது சிறுகவிட்டு 1-2

சாமம் அரைத்து வில்லைதட்டி உலர்த்தி அகலிலிட்டு மேல் அகல்மூடிச் சீலைசெய்து 50-60 வறட்டியில் புடமிட நல்ல பற்பம் ஆகும்.

பிரயோகம் :—கபம் அதிகரித்தபோது இந்தப் பற்பத்தில் வேளைக்கு 2-3 குன்றி எடை தினம் இருவேளை தேனில் கொடுத்து வருக. மார்புநோய், இடுப்புவலி முதலியவற்றிற்குக் குன்றி எடையாகத் தினம் இருவேளை நெய்யில் கொடுத்துவருக.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 22. வேறு முறை

சரக்கும் செய்பாகமும் :—இரண்டு பலம் எடையுள்ள மான்கொம்பைக் கொண்டுவந்து சுண்டுவிரல் கனமும் அங்குல நிகளமும் இருக்கும்படி பிளந்து வைத்துக் கொள்க.

அகத்திக்கீரையும் உளுத்தும்பருப்பையும் சமஎடையாகக் கூட்டி அரைத்து முன் சித்தப்படுத்திய ஒவ்வொரு துண்டுகளுக்கும் விரல்கனமிருக்கும்படி கவசமிட்டுச் சிறிது உலர்த்திப் புற்றுமண்ணைச் சிறிது சலம் விட்டுப் பதமாக அரைத்துச் சீலைக்குத் தடவி ஒவ்வொன்றிற்கும் ஏழு சுற்று சுற்றி ஈரம் வற்றச் சாம்பலில் புரட்டி எடுத்து 60-70 வறட்டிகளின் நடுவில் பரப்பிவைத்துத் தீமூட்டவும். மான்கொம்புகள் வெந்து வெளுத்திருக்கும். இப்படி வெளுத்த மான்கொம்புகளைக் கல்வத்தில் போட்டுக் குமரிச்சாறுவிட்டு நான்குசாமம் அரைத்துக் காலணு கனமும் அரையணு அகலமும் இருக்கும்படி வில்லைகள்செய்து ரவியில் உலர்த்தி அகலில் பரப்பி மேல் அகல் மூடிச் சீலை செய்து 50-வறட்டியில் புடமிடவும். இது நல்ல பற்பமாகும். இதை அரைத்துக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்தப் பற்பத்தில் வேளைக்குக்குன்றி எடை தினம் இருவேளை, நெய் தேன் முதலிய அனுபானங்களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—மார்பு நோய், இருமல், கபக்கட்டு, அக்கினிமந்தம் குணமாகும். இதனுடன் சிறிது பவழ பற்பம் கூட்டிக் கொடுக்க மிகுந்த நன்மையைத் தரும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

குறிப்பு :—முதலில் அகத்திக்கீரையையும் உளுந்தையும் கூட்டி அரைத்துக் கவசமிட்டுப் புடமிட்ட மான் கொம்புத் துண்டுகளைக் குமரிச்சாற்றில் அரைப்பதற்குப் பதிலாகப் பொடுதலை இலையை அரைத்துக் கவசமிட்டு மண்சீலை செய்து 40-50 வறட்டியில் புடமிட்டு எடுத்துக் கொள்வதும் சிலர் வழக்கம்.

## 23. வேறு முறை

சரக்கும் செய்பாகமும் :—சிங்கி என்று சொல்லப் பட்ட புள்ளிமான் கொம்பைக்கொண்டு வந்து சிறு துண்டுகளாக நறுக்கிப் பலப்பக்குச்சி கனத்திற்குப் பிளந்து மூன்று பலம் எடைக்கு ஒரு மட்கலயத்தில் போட்டு இவைகள் மூழ்கச் சிற்றாமணக்கெண்ணெய் விட்டு 10-நாள் வரையில் ஊறவிட்டு எடுத்து வைத்துக் கொள்ளவும்.

முழ அகலம் நிகளமுள்ள சீலையை இரண்டு மடிப்பாக மடித்துப் போட்டு அதனில் முன் ஊறப்போட்டு வைத்துள்ள மான்கொம்புத் துண்டுகளை வைத்துச் சுருட்டிச் சிற்றாமணக்கெண்ணெயில் தோய்த்து 20-30 வறட்டியின் நடுவில் வைத்துத் தீமூட்டவும். புடம் ஆறினபின் மான் கொம்புகளைப் பார்க்க நன்றாய் வெந்திருக்கும். இவற்றைச் சேதப்படாமல் எடுத்துக் கல்வத்தில் போட்டு வெள்ளாட்

டுப்பால் விட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகு பதத்தில் காலணு அகலமும் கனமும் உள்ள வில்லைகளாகச் செய்து உலர்த்தி அகலில் பரப்பி மேல் அகல்மூடிச் சீலைசெய்து 30-40 வறட்டியில் புடமிட நல்ல பற்பமாகும். இதைக் கல்வத்திலிட்டு நன்கு அரைத்துக் குப்பியிலிடுக.

**பிரயோகம்:**—இந்தப் பற்பத்தில் வேளைக்குக் குன்றி எடை தினம் இருவேளை வெண்ணெய் நெய் தேன் முதலிய அனுபானங்களில் கொடுத்து வருக.

**தீரும் வியாதி:**—கப சம்பந்தமான இருமல், ஈளை, வாயு சம்பந்தமான மார்புவலி வயிற்றில் சஞ்சரிக்கும்படியான வாயு, தேக உளைச்சல் குணமாகும்.

**பத்தியம்:**—வாத சீதள பண்டம் நீக்கி இச்சாபத்தியமாக இருத்தல் நன்று.

## 24. வேறு முறை

**சரக்கும் செய்பாகமும்:**—இரண்டு பலம் எடையுள்ள மான்கொம்பைக் கொண்டு வந்து ஒரு அங்குலம் நிகளமும் விரல் கனமும் உள்ள துண்டுகளாக நறுக்கி வைத்துக் கொள்க. அப்பால் இரண்டுபலம் நாயின் மலத்தையும் இரண்டு பலம் நெல்லிக்காய்க் கந்தகத்தையும் ஒரு கல்வத்தில் போட்டுச் சிறிது சலம் தெளித்து மெழுகு போலரைத்து முன் சித்தப்படுத்தியுள்ள மான்கொம்புத் துண்டுகளுக்குச் சம கனமாகக் கவசமிட்டு வெடிக்காமல் நிழலில் உலர்த்தி ஒவ்வொரு துண்டிற்கும் 5-6 மண்சீலை செய்து ரவியில் உலர்த்தி 30-40 வறட்டியின் நடுவில் பரப்பி வைத்துத் தீமூட்டவும். புடம் ஆறினபின் மறுநாள் கவசத்தை நீக்கிப் பார்க்க மான்கொம்புத் துண்டுகள் நன்ருய் வெந்து நீற்றிருக்கும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தப் பற்பத்தில் வேளைக்கு ½-குன்றி எடை தினம் இருவேளை தேனில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—கண்டமாலை, வெள்ளை, வெட்டை, மேகம் முதலியவை குணமாகும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 25. வேறுமுறை

சரக்கும் செய்பாகமும் :—இரண்டுபலம் மான்கொம்பைக் கடலைப்பிரமாணம் சிறு துண்டுகளாக நறுக்கி ஒரு சட்டியில் போட்டுக் கழற்சிக்காய் இலைச்சாறுவிட்டு 3-நாள் ஊறப்போட்டு நான்காவது நாள் எடுத்து வைத்துக் கொள்க. அப்பால் கழற்சிக்காய் இலையை அரைத்து ஒரு தேங்காய்ப் பிரமாணம் உருண்டையாகத் திரட்டி அதற்குள் முன் சித்தப்படுத்தியுள்ள மான்கொம்புத் துண்டுகளைச் செருகி மண்சீலை செய்து ஒருநாள் ரவியில் வைத்து மறுநாள் 40-50 வறட்டியில் புடமிடவும். புடம் ஆறின பின் கவசத்திலிட்ட மான்கொம்புத் துண்டுகளைப் பார்க்க வெந்து நீற்றிருக்கும். இதை அரைத்துக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்தப் பற்பத்தில் வேளைக்கு ½-1 குன்றி எடை தினம் இருவேளை நெய், தேன் இவைகளில் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—கைகால் குடைச்சல், வெள்ளை, மேகம் குணமாகும். இன்னும் வயது வந்து ருது ஆகாத பெண்களுக்கு விலக்கத்தை யுண்டாக்கும்.

பத்திய :—இச்சாபத்தியம்.

## 26. நத்தை ஓடு பற்பம்

**சரக்கும் செய்பாகமும் :—**தேங்காய் பிரமாணமுள்ள ஒரு மட்கலயத்தில் ஓமவள்ளி இலையை அரைபாகம் போட்டு அதன்மேல் 10-15 பெரும் வெள்ளை நத்தை ஓடுகளைப் போட்டுக் கலயம் நிறைய ஓமவள்ளி இலையைப் போட்டு அழுத்தி வாய்க்கு ஓடுமூடிச் சீலை செய்து 50 - 60 வறட்டியில் புடமிடவும். புடம் நன்றாய் ஆறின பின் கலயத்திற் குள்ளிட்ட நத்தை ஓடுகளைப் பார்க்க வெந்து வெளுத்திருக்கும். இதை அரைத்துக் குப்பியிலிடுக.

**பிரயோகம் :—**இந்தப் பற்பத்தில் வேளைக்கு ஒரு குன்றி எடை அல்லது இரண்டு குன்றி எடை தினம் இரு வேளை வெண்ணெயிற் கொடுத்து வருக.

**தீரும் வியாதி :—**மூலம், இரத்தமூலம், ஆசனக் கடுப்பு, சீதபேதி முதலியவை குணமாகும்.

**பத்தியம் :—**காரசாரமான ஆகாரத்தைச் சிலநாள் தள்ளி இச்சாபத்தியமாக அன்னம் கொள்ள வேண்டும்.

## 27. அண்டச் சுண்ணம்

**சரக்கும் செய்பாகமும் :—**கோழி குஞ்சு பொரித்த முட்டை ஓடுகளை ஒரு மட்பாண்டத்தில் போட்டு அதனில் சுண்ணாம்பையும் பூநீற்றையும் சமபாகமாகக் கலந்து தண்ணீர் விட்டுக் கரைத்து வடிகட்டி விட்டு அடுப்பில் வைத்து இரண்டு மூன்றுமணி நேரம் எரித்து ஆற விட்டுக் குளிர்ந்த சலம் விட்டு 5 - 6 முறை கைவிரல் களால் பிசைந்து பிசைந்து அலம்பிவர அதிலுள்ள சவ்வு கள் நீங்கிச் சுத்தமாகும். இதை உலர்த்தி வைத்துக் கொள்க.

இப்படிச் சுத்திசெய்த முட்டை ஓடு ஐந்து பல மெடைக்குக் கல்வத்தில் போட்டுச் சிறுபீளைச்சாறு விட்டு 3-சாமம் நன்ருய் அரைத்து மெழுகுப்தத்தில் ஒரே வில்லை யாகத் தட்டி ரவியில் காய வைத்து அகலில் வைத்து மேல் அகல் மூடிச் சீலைசெய்து 30-40 வறட்டியில் புடமிடவும். புடம் ஆறின பின் அகலிலிட்ட வில்லையைப் பார்க்க வெளுத்திருக்கும். இதைக் கல்வத்தில் போட்டு இத னுடன் சுத்தி செய்த பூரம் ¼ பலம் கூட்டி நன்ருய் அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தச் சுண்ணத்தில் வேளைக்குக் குன்றி எடை திரிகடுகுச் சூரணத்தில் கூட்டித் தினம் இருவேளை கொடுக்கவும்.

தீரும் வியாதி :—அதிக வியர்வை வருவதை நிறுத் தும், பித்த வாயுவைக் குணப்படுத்தும்.

பத்தியம் :—சீதளபண்டம் நீக்கி இச்சாபத்தியமாக அன்னம் கொள்ள வேண்டும்.

## 28. கோழிக்கல் பற்பம்

சரக்கும் செய்பாகமும் :—கோழியின் வயிற்றைச் சோதிக்கச் சிறு கற்கள் நிறைந்துள்ள ஒரு பை கிடைக் கும். அதிலுள்ள கற்களைச் சுத்த சலம்விட்டு அலம்பி எடுத்துக் கொள்க. இப்படித் தேவையான அளவிற்குச் சேகரப்படுத்திக் கல்வத்தில் போட்டுக் குப்பைமேனி இலைச்சாறு விட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகுபதத் தில் வில்லை தட்டிக் காய வைத்து அதற்குக் குப்பைமேனி இலையை அரைத்து அங்கிபூட்டி மண்சீலை 7 - 8 செய்து 25 - 30 வறட்டியில் புடமிடவும்; நல்ல பற்பமாகும். ஒருக் கால் மிருதுவாக இல்லாமல் கரகரப்புத் தோற்றுமாயின் பின்னும் ஒருமுறை முன்போலரைத்துப் புடமிட நல்ல பற்பமாகும்.

**பிரயோகம் :—** இந்தப் பற்பத்தில் வேளைக்கு ஒரு குன்றி எடை தினம் இருவேளை கொடுக்கவும்.

**தீரும் வியாதி:—** நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களிற் கொடுத்துவர வெள்ளையின் சம்பந்தமாக ஏற்படும் நீரடைப்பு நீங்கும். இன்னும் நீரிலுள்ள * கலங்களைச் சுத்தப்படுத்தும்.

**பத்தியம் :—** இச்சாபத்தியம்.

## 29. ஆருதார பற்பம்

**சரக்கும் செய்பாகமும்:—** வெடியுப்பு, வெங்காரம், சுத்திசெய்த பொரித்த அண்டஓடு, பலகறை, கற்பூரசிலாசத்து, படிக்காரம் வகைக்குப் பலம்-1, இவற்றைக் கல்வத்தில் போட்டு எலுமிச்சம்பழச் சாறுவிட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகு பதத்தில் வில்லைதட்டி ரவியில் உலர்த்தி வைத்துக்கொள்ளவும். அப்பால் வெந்த கற்சுண்ணாம்புக்கல்லைக் கொண்டுவந்து நீர்தெளித்துப் பூக்கடித்துக் கல்லில்லாமல் ஆய்ந்து சலம்விட்டு மெழுகுபதத்திற்குப் பிசைந்து ஒரு பெரிய மூசையும் மூடியும செய்து அதற்குள் முன்முடித்து வைத்துள்ள வில்லையைச் சிறு துண்டுகளாகப் பிட்டுப்போட்டு மேல் மூடியிட்டு மண்சீலை ஏழு அல்லது எட்டுசெய்து முழுப்புடத்திலிடவும். ஆறின பின் மூசையிலிட்ட துண்டுகள் வெளுத்துப் பற்பமாக இருக்கும். இவற்றை நன்கு அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—** இந்தப் பற்பத்தில் வேளைக்குக் குன்றி எடை தினம் இருவேளை இளநீர் வெங்காயச்சாறு

---

* சிலருடைய சிறுநீரை வெள்ளைப் புட்டியிலிட்டு 4 - 5 மணி நேரம் சென்றபின் பார்க்க அடியில் மாவுபோல் படிந்திருக்கும். சிறிது அசைத்துப் பார்க்க அணுத்துவமான மாசுகள் தோற்றும். இதனையே இங்குக் கலங்கள் என்று கருதப்பட்டது.

அல்லது நீரைப்பெருகச்செய்யும் குடிநீர் முதலியவற்றில் கொடுத்து வருக.

தீரும் வியாதி:—நீர் அடைப்பு, கல்லடைப்பு, சதையடைப்பு, நீர் எரிச்சல், நீர்க்கடுப்பு முதலியவைகள் குணமாகும்.

பத்தியம்:—மோர்சாதம், பால்சாதம் அல்லது காரசாரமற்ற அன்னம் கொள்ளவும்.

## 30. சுவர்ணமுத்துப் பற்பம்

சரக்கும் செய்பாகமும்:—சுருள் தங்கரேக்கு, கெட்டி முத்து, நற்பவழம் வகைக்கு வராகனெடையாகக் கல்வத்தில் போட்டு பிரண்டைச்சாறு விட்டு மூன்று சாமம் நன்ருய் அரைத்து வில்லை தட்டிக் காயவைத்துப் பொருத்தமான அகலில்வைத்து மேல் அகல்மூடிச் சீலெசெய்து 75-வறட்டியில் புடமிடவும். இது நன்ருய் ஆறினபின் அகலிலிட்ட வில்லையைப் பார்க்கச் சுண்ணமாக இருக்கும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இந்தச் சுண்ணத்தில் வேளைக்கு 1-1½ அரிசிப் பிரமாணம் தினம் இருவேளை நோய்க்கேற்ற அனுபானங்களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி:—இருமல், க்ஷயம், காசம், ஈளை, எலும்புருக்கி குணமாவதுடன் நல்ல தேஜசும் பலமும் உண்டாகும்.

குறிப்பு:—இது சுண்ணமானபடியால் ஆரம்பிக்கும் பொழுது முதலில் சிறிது வேகம் செய்யும். ஆகையால் கற்கண்டைக் கல்வத்தில் போட்டுப் பசுவின் நெய் விட்டு வெண்ணெய் பதத்திற்கு அரைத்துவைத்துக்கொண்டு வேளைக்குச் சுண்டைக்காய்ப்பிரமாணம் எடுத்து அதனில் இந்தப் பற்பத்தை மத்தித்துக் கொடுக்க மருந்து வேகம்

செய்யாது. அல்லது ஒரு பெரிய தேங்காயைத் துருவி எடுத்து அதனில் புளியங்கொட்டை மேல்தோலை இடித்துச் சூரணம்செய்து சுமார் 2-2½ தேக்கரண்டி அளவு கூட்டிப் பிசரிக் கசக்கிப் பிழியத் தேங்காய் நெய்வடியும். இது சிறிது பால்போல வெளுப்புத் தட்டினால் ரவியில் வைக்க நெய்யாகும். பிழிவதற்கு முடியாமல் வறட்சியாக இருந்தால் இதனுடன் சிறிது தேங்காய்த் துருவலைக் கூட்டிப் பிசரிப் பிழிய நெய் காணும். வேளைக்கு 20-துளியாக விட்டு அதனில் இச்சுண்ணத்தைக் கூட்டிக் கொடுப்பது சாலச்சிறந்தது.

பத்தியம்:—இச்சாபத்தியம்.

## 31. முத்துச்சிப்பி பற்பம் ✓

சரக்கும் செய்பாகமும் :—அப்பளா காரத்தையும் சுண்ணும்பையும் சமனளவாகக் கரைத்த நீரில் முத்துச் சிப்பிகளைப்போட்டு எரித்து அலம்பி எடுத்தது பலம்-4, வெடியுப்புப் பலம்-2, மிருதார்சிங்கி பலம்-½, இவற்றைக் கல்வத்தில்போட்டு 5-6 பெரிய எலுமிச்சம்பழத்திலிருந்து பிழிந்து எடுத்த சாறு கொஞ்சங்கொஞ்சமாக விட்டு அரைத்து மெழுகுபதத்தில் ஒரே வில்லைபாகத்தட்டி ரவியில் உலர்த்தி அகலில் வைத்து மேல்அகல்மூடிச் சீலை செய்து 25 வறட்டியில் புடமிடவும். நல்லபற்பமாகும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக

பிரயோகம்:—இந்தப்பற்பத்தில் வேளைக்கு 1-2 குன்றி எடை தினம் இருவேளை நெய், வெண்ணெய், தேன் முதலியவற்றில் ரோகத்திற்கு ஏற்றவாறு அனுபானம் செய்து கொடுத்துக்கொண்டு வருக.

தீரும் வியாதி :—நீரடைப்பு, வெள்ளை, வெட்டை, மூலம், பவுத்திரம், இருமல், சுரம் முதலிய பல ரோகங்கள் குணமாகும்.

பத்தியம் :—நல்லெண்ணெய், புளி, கடுகு, மீன், கருவாடு, இரால்மீன், தேங்காய், அகத்திக்கீரை, சிறுகீரை, பாவற்காய் தள்ளி மற்றவைகளைக் கொள்ளலாம். புளிக்குப் பதில் எலுமிச்சம்பழச் சாற்றைக் கூட்டிக் கொள்ளலாம்.

## 32. வெடியுப்பு சுண்ணம்

சரக்கும் செய்பாகமும் :—வெள்ளாட்டு அமுரி உப்பு பலம்-½, சுத்தி செய்த பூநீறு பலம்-2, நவச்சாரம் பலம்-2 இவற்றைக் கல்வத்தில் போட்டு எலுமிச்சம்பழச் சாறு விட்டுக் குழம்பு பதமாக அரைத்து ஒரு பீங்கான் கோப்பையில் வழித்துவிட்டுச் சில தினம் கடும் பனியில் வைக்க ஜெயநீராக இளகி மேலே தெளிந்து நிற்கும். அப்போதைக்கப்போது தெளிவுநீரை வடித்து வேறு கோப்பையில் பத்திரப்படுத்துக. பெருங்கட்டிகளாக இரண்டு மூன்று பலம் வெடியுப்பைக் கொண்டுவந்து முன் சித்தப்படுத்திய ஜெயநீரில் தோய்த்துத் தோய்த்துப் பீங்கான் பிளேட்டில் (தட்டில்) வைத்துக் கடும் ரவியில் உலர்த்தவும். இவ்வாறு ஏழு அல்லது ஒன்பதுமுறை செய்து வைத்துக் கொள்க. அப்பால் பூவரசம் பழுப்பு இலைகளைக் கொண்டு வந்து ஒன்று இரண்டுமாக இடித்து ஒரு மண்சட்டியில் 2-3 விரற்கடை உயரம் போட்டு அழுத்தி அதன்மேல் முன் சித்தப்படுத்திய வெடியுப்புக் கம்பிகளைப் பரப்பி அதன்மேல் இடித்த பூவரசம்பழுப்பு இலையைப் போட்டு அழுத்தி அடுப்பில் வைத்து எரிக்கவும். இலைகள் சாம்பலான பதத்தில் நடுவில் வைத்த வெடியுப்புக் கட்டிகள் உருகி இருக்கும். இவற்றை எடுத்துக் கல்வத்தில் போட்டு அரைத்துத் தண்ணீர் விட்டுக் கரைத்து 4-5 மடிப்புள்ள சீலையில் வடிகட்டி ஒரு பழகின மட்பாண்டத்தில் விட்டு அடுப்பில் வைத்து எரிக்க உப்பு

உறைந்து பற்பமாகும். இதற்குக் காரமுண்டு. இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—** இந்தச் சுண்ணத்தில் வேளைக்குத் துவரம்பருப்பளவு தினம் இருவேளை இளநீரிலாவது நீரைப் பெருக்குகின்ற குடிநீர்களிலாவது கொடுத்துவர நீர் தாராளமாக இறங்கும்.

**தீரும் வியாதி :—** கல்லடைப்பு, சதையடைப்பு, நீர்க்கட்டு நீங்குவதுடன் தேகத்தில் அக்கிரமித்து உண்டான நீர்க்கோவையை நீக்கி வீக்கத்தைக் குணப்படுத்தும்.

**பத்தியம் :—** இச்சாபத்தியம்.

## 33. வேறு முறை

**சரக்கும் செய்பாகமும் :—** மாட்டின் கால் எலும்புகளைத் துண்டு துண்டுகளாக நறுக்கி ஒரு மட்பாண்டத்தில் போட்டு அதனில் அப்பளாகாரமும் சுண்ணும்பும் கரைத்த நீரைவிட்டு அடுப்பிலேற்றி 3 மணி நேரம் எரித்து ஆறவிட்டுச் சலம் விட்டு அலம்பி ஒருவாரம் வரையில் நன்ருய் ரவிமுகத்தில் வைத்து உலர்ததவும். இதை உரலில் போட்டு நன்ருய் இடித்துப் பெருங்கண் சல்லடையில் சலித்து 10-பலம் எடைக்கு எடுத்துக் கொள்ளவும். அப்பால் ஒரு பெருந் தேங்காய்ப் பிரமாணமுள்ள ஒரு மட் கலயத்தில் 5-பலம் முன் இடித்து வைத்துள்ள எலும்புகளைப் போட்டுப் பரப்பி அதன்மேல் 5-பலம் வெடியுப்புக் கம்பிகளைப் பரப்பி மேலும் 5-பலம் எலும்புத் தூளைப் போட்டமுத்தி வாய்க்கு மூடியிட்டு மண்சீலை செய்து 30-வறட்டியில் புடமிடவும். புடம் ஆறினபின் கலயத்தில் பார்க்க வெடியுப்பு உருகி வில்லையாக இருக்கும். இதைக் கல்வத்தில் போட்டுச் சுண்ணும்புத் தெளிவு நீர்விட்டு இரண்டு சாமம் அரைத்து வில்லை தட்டி உலர்த்தி அகலில்

வைத்து மேல் அகல் மூடிச் சீலைசெய்து 60-வறட்டியில் புடமிடச் சுண்ணமாகும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக. இவ்வாறு ஆட்டு எலும்பின் தூள், ஆமையோட்டின் தூள், பேரண்டத்தூள் முதலியவற்றிலும் முடித்துக் கொள்ளலாம்.

பிரயோகம் :—இந்தச் சுண்ணத்தில் வேளைக்குத் துவரம்பருப்பளவு தினம் இருவேளை இளநீர், முள்ளங்கிச் சாறு அல்லது நீரை பிரிக்கும்படியான ஏதேனும் ஒரு குடிநீர் முதலியவற்றில் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—கல்லடைப்பு, சதையடைப்பு, நீர்க்கட்டு, தேக வீக்கம் குணமாகும்.

பத்தியம்:—இச்சாபத்தியம், பால்சாதம், மோர்சாதம் உத்தமம்.

## 34. கல்மத பற்பம்

சரக்கும் செய்பாகம் ;—வெண்மை நிறமுடையதாகவும், மாவுக்கல்லைப்போல் மழுமழுப்புடையதாகவும் உள்ள மூன்று பலம் கல்மதத்தைக் கொண்டுவந்து சிறு துண்டுகளாக நறுக்கிச் சுண்ணாம்பு கரைத்த நீரில் போட்டு மூன்றுமணி நேரம் எரித்து ஆறவிட்டுச் சுத்த சலம் கொண்டு அலம்பக் கல்வத்தில் போட்டுக் குமரிச்சாறு விட்டு நான்கு சாமம் அரைத்துக் காசு கனமும் அகலமும் உள்ள வில்லைகளாகத் தட்டி ரவிமுகத்தில் உலர்த்தி அகலில் பரப்பி மேல் அகல் மூடிச் சீலைசெய்து 30-வறட்டியில் புடமிடவும். இது நல்ல பற்பமாகும். அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இந்தப் பற்பத்தில் வேளைக்குக் குன்றி எடை தினம் இருவேளை நெய், வெண்ணெய் முதலியவற்றில் அனுபானம் செய்து கொடுக்கவும்.

**தீரும் வியாதி :—** இரத்தக்கொதிப்பு, உள்ளுறுப்புக் களில் கண்ட ரணம், பேதி, சீதபேதி, தேகவெப்பம் முதலியவைகள் போகும்.

**பத்தியம் :—** நோயின் தன்மைக்கேற்ற உணவறிந்து இச்சாபத்தியமாக இருத்தல் நன்று.

இந்தக் கல்மதத்துடன் சமனெடை படிக்காரம் கூட்டிக் குமரிச்சாற்றி லரைத்துப் புடமிடுவதுண்டு. இது உஷ்ணபேதி, சீதபேதி முதலியவற்றிற்குச் சிறந்தது.

## 35. கருடக்கல் பற்பம்

**சரக்கும் செய்பாகமும் :—** இரண்டு பலம் வெண்மை நிறமுடைய பால்கருடக்கல்லைக் கொண்டுவந்து 5-6 வறட்டிகளின் நடுவில் வைத்து தீமூட்டி வெந்தபின் எடுத்துக் கல்லுரலில் போட்டு இடித்து மாவுபோல் செய்து கல்வத்தில் போட்டுத் தாமரை இலைச்சாறுவிட்டு இரண்டு சாமம் அரைத்து வில்லைதட்டி நன்கு உலர்த்தி அதன் மேல் தாமரை இலையை அரைத்து அங்கிபூட்டிச் சீலைமண் ஏழுசெய்து ஈரம் வற்றச் சாம்பலிற் புரட்டி முழப்புடத்தி லிடவும். புடம் ஆறினபின் பார்க்க வெளுத்துப் பற்பமாக இருக்கும். புடபேதத்தினுல் நிறம் சரிவரப் புலப்படாவிடின் மீண்டும் ஒருமுறை பழச்சாற்றி லரைத்து மெழுகு பதத்தில் காலணு கனமும் அகலமும் உள்ள வில்லைகளாகச் செய்து அகலில் பரப்பி மேல் அகல்மூடிச் சீலைசெய்து 30-வறட்டியில் புடமிட நல்ல நிறத்தை அடையும். இதனை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—** இந்தப் பற்பத்தில் வேளைக்குக் குன்றியெடை தினம் இருவேளை நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களில் கொடுத்து வருக.

**தீரும் வியாதி :—**நீர் எரிச்சல், நீர்க்கடுப்பு, நீர்ப்பை கொதிப்பு, கணச்சூடு நீங்கும். தாது உறைந்திறுகும்.

**பத்தியம் :—**இச்சாபத்தியம்.

## 36. தனிமுத்துச் சிற்பி பற்பம்

**சரக்கும் செய்பாகமும் :—**மூன்று பலம் முத்துச்சிப் பியை அப்பளாகாரம் சுண்ணாம்பு கரைத்த நீரில் போட்டு ஒருமணி நேரம் எரித்து ஆறவிட்டு நீர்விட்டு அலம்பி 5-6 வறட்டிகளின் நடுவில் வைத்துத் தீமூட்டி வெந்தபின் எடுத்து ஒரு சுத்தமான கல்வத்தில் போட்டு மணித்தக் காளி சாறுவிட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகுபதத் தில் ஒரே வில்லையாகத்தட்டி ரவியில் நன்றாய் உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல்மூடிச் சீலைசெய்து 30-வறட்டி யில் புடமிட நல்ல பற்பமாகும். அரைத்துச் சீசாவில் பத் திரப்படுத்துக.

**பிரயோகம் :—**இந்தப் பற்பத்தில் வேளைக்கு $\frac{1}{2}$-$\frac{3}{4}$ குன்றி எடை தினம் இருவேளை நெய் அல்லது வெண்ணெ யில் கொடுத்துவருக.

**தீரும் வியாதி :—**உஷ்ணத்தினலுண்டான இருமல், நீர்க்கட்டு, நீர் எரிச்சல், கணச்சூடு, க்ஷயசுரம் குணமாகும்.

**பத்தியம் :—**இச்சாபத்தியம்.

## 37. மிருதார்சிங்கி பற்பம்

**சரக்கும் செய்பாகமும் :—**இரண்டு பலம் மிருதார் சிங்கியை முலைப்பாலில் மூன்றுநாள் ஊறப்போட்டு எடுத் துச் சலம் விட்டு அலம்பி ஈரம் வற்றச் சிறிது உலர்த்திக் கல்வத்திலிட்டு அதனுடன் நான்கு பலம் படிக்காரம் கூட்டி நன்கு அரைத்து அரைப்பாகத்தில் அடங்கும்படி ஒரு மட்கலயத்தில் போட்டு வாய்க்கு ஒடு மூடிச் சீலை

செய்து 60 வறட்டியில் புடமிடவும். அல்லது உலையில் வைத்து இரண்டு மணிநேரம் ஊதியெடுக்கவும். சூடு ஆறினபின் மட்கலயத்திலிட்ட சரக்குகளைச் சேதமின்றிச் சுரண்டியெடுத்து அதனுடன் இரண்டு பலம் படிக்காரம் கூட்டி இளம் பனமட்டைச்சாறுவது அல்லது பனஞ்சாறுவது கொஞ்சங் கொஞ்சமாக விட்டு நான்கு சாமம் கையோயாமல் அரைத்து மெழுகு பதத்தில் வில்லைதட்டி ரவியில் உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல்மூடிச் சீலை செய்து 20-வறட்டியில் புடமிடவும். இவ்வாறு பின்னும் இருமுறை அரைத்துப் புடமிட நல்ல பற்பமாகும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—**இந்தப் பற்பத்தில் வேளைக்கு ½-1 குன்றி எடை. தினம் இருவேளை நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களில் கொடுத்துவருக. அல்லது வில்வ இலையையும் வெங்காயத்தையும் சமனளவாகக் கூட்டி நீராகார நீர் விட்டு இடித்துப் பிழிந்தெடுத்த நீரில் கொடுக்கவும்.

**தீரும் வியாதி :—**வெள்ளை, நீர்ச்சுருக்கு, நீர் எரிச்சல், பவுத்திரம், இரத்த மூலம், பெரும்பாடு முதலியவை குணமாகும்.

**பத்தியம் :—**காரத்தைக் கூடிய வரையிலும் மட்டுப்படுத்தி இச்சாபத்தியமாக அன்னங் கொள்ள வேண்டும்.

## 38. சிற்றண்டக் கல்நார் பற்பம்

**சரக்கும் செய்பாகமும்:—**சீமைக்கல்நாரைப் புளிப்பு மோரில் மூன்றுநாள் ஊறப்போட்டு எடுத்துக் சலம்விட்டு அலம்பிக் காயவைத்து அதனை மூன்றுமுறை சுட்ட சுண்ணும்புக் கற்களினிடையில் வைத்துச் சலம் விட்டுத் தாளித்து 6-மணி நேரம் சென்ற பின் எடுத்து ஒவ்வொரு

முறையும் சலம் விட்டு அலம்பி ரவியில் வைத்து உலர்த்தி யெடுக்கச் சுத்தியாகும். ஓர் சீலையில் பொரித்த சிற்றண்ட ஓடுகளைத் தளர்ச்சியாக முடிச்சுக் கட்டிக் கற்சுண்ணமும் அப்பளாக்காரமும் கரைத்த நீரில் போட்டு இரண்டுமணி நேரம் எரித்து ஆறவிட்டு அதில் உள்ள சவ்வுபோகத் தேய்த்து அலம்பிக் காய வைக்கச் சுத்தியாகும்.

இவ்வாறு சுத்தியான சீமைக்கல்நார் பலம்-2, பொரித்த கோழிமுட்டை ஓடு பலம்-2 ஆகக் கல்வத்தில் போட்டு முலைப்பால் கொஞ்சங் கொஞ்சமாக விட்டு நான்கு சாமம் அரைத்து ஒரே வில்லையாகத் தட்டி ரவியில் உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல் மூடிச் சீலை செய்து 60-வறட்டியில் புடமிடவும். இது நல்ல பற்பமாகும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தப் பற்பத்தில் வேளைக்கு $\frac{1}{4}$ - $\frac{1}{2}$ குன்றி எடை தினம் இருவேளை நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—நீர்க்கட்டு. நீர் எரிச்சல், நீர்ச் சுருக்கு, வெள்ளை, வெட்டை தீரும். இதனுடன் சிறிது சிலாசத்து, சுக்கு பற்பம் கூட்டிக் கொடுக்கப் பெரும் பயனைத் தரும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 39. பாஷாண பற்பம்

சரக்கும் செய்பாகமும்:—ஒரு பலம் சுத்திசெய்த சங்குப் பாஷாணத்தைக் கல்வத்தில் போட்டுப் பிரண்டைச்சாறு விட்டு மூன்று சாமம் அரைத்து வில்லை தட்டி ரவியில் இரண்டு மூன்று நாள் உலர்த்தவும். இப்படியே ஒன்பது முறை பிரண்டைச்சாறு விட்டு அரைத்து

அரைத்து உலர்த்தி எடுத்துக் கொள்ளவும். ஒரு அகலில் கற்சுண்ணத்தைப் பரப்பி அதன்மேல் முன் சித்தப்படுத்திய வில்லையை வைத்து அதன்மேல் கற்சுண்ணத்தைப் போட்டு மேல் அகல்மூடிச் சீலைசெய்து நன்ருய் உலர்த்தி வைத்துக் கொள்க. இதன் மொத்த எடைக்கு நான்கு மடங்கு வறட்டிகளைப் பிட்டடுக்கி அதன் நடுவில் முன் சித்தப்படுத்திய அகலை வைத்துத் தீமூட்டவும். சரியாக வெந்திராவிடின் மீண்டும் ஒருமுறை புடமிட்டு எடுத்துக் கொள்ளவும். ஒருசமயம் சிறிது எடை குறைந்தாலும் குற்றமில்லை. இதனை அரைத்துக் குப்பியிலிடுக.

**பிரயோகம் :—**இந்தப் பற்பத்தில் வேளைக்கு $\frac{1}{4}$ - $\frac{1}{2}$ அரிசிப் பிரமாணம் திராட்சைப் பழத்திற்குள் வைத்து 2-அல்லது 3-வேளை கொடுக்கவும்.

**தீரும் வியாதி :—**பழைய சுரம், குளிர்சுரம், காசம், பாரிசவாதம், நரம்பின் துர்ப்பலம் குணமாகும்.

**பத்தியம்:—**கைப்பு, புளிப்பு தள்ளி இச்சாபத்தியமாக அன்னங் கொள்ள வேண்டும்.

## 40. கற்பூரச் சுண்ணம்

**சரக்கும் செய்பாகமும்;—**அசல் வெண்பட்டு நூலின் எடைக்கு நான்கிலொருபங்கு வெண்மிளகு கூட்டி வெள்ளாட்டுப் பால்விட்டு மெழுகு வண்ணமாக அரைத்து ஒருபலம் கற்பூரம் அடங்கும்படியாக ஒரு மூசையும் மேல் மூடியும் செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்துக. இதற்குமேல் இந்த வெண்பட்டு மூசை அடங்கும் அளவிற்கு ஒரு மண்மூசையும் வாய்மூடியும் செய்து நன்ருய் உலர்த்திக் கரி நெருப்பனலில் புரட்டிப் புரட்டி வெந்து சிவந்த பதத்தில் ஆறவிட்டுப் பத்திரப்படுத்துக.

அப்பால் ஒருபலம் கற்பூரத்தை ஒரு சுத்தமான கல்வத்தல் போட்டுக் கற்பூரவள்ளி இலைச்சாறு விட்டு 3-சாமம் அரைத்து உருண்டையாகத் திரட்டி முன் தயார் செய்த வெண்பட்டு மூசையிலிட்டு அதன்மேல் சாறு எடுத்த பின் நிற்கும் கற்பூரவள்ளி இலைத் திப்பியை அடைபோல் செய்து வைத்து அதன்மேல் வெண்பட்டால் செய்துள்ள வாய் மூடியைக் கொண்டு அடைத்துச் சந்து வாய்க்கு முன்போல் வெண்பட்டையும் வெண்மிளகையும் அரைத்துப் பூசி ரவியில் உலர்த்தி ஏற்கெனவே செய்து வைத்துள்ள மண்மூசையில் இட்டு வாய்மூடிக்கொண்டு அடைத்துச் சீலைசெய்து 5-6 வறட்டியில் புடமிடவும். புடம் ஆறினபின் பார்க்க வெண்பட்டு உருகிக் கற்பூரத்தின்மேல் கவசமிட்டது போலிருக்கும். இந்த மேல் கவசத்தை இருபாதியாகத் துண்டித்துப் பார்க்கக் கற்பூரமும் உருகி யிருக்கும் இது காற்றுப்படப் பூக்கும். இதை உடனே அரைத்துக் குப்பிலிடுக.

பிரயோகம் :—இந்தச் சுண்ணத்தில் வேளைக்கு 2-அரிசி பிரமாணம் தேனில் 2-அல்லது 3-வேளை கொடுக்கவும். இதை நீடித்த நாளும் அதிக அளவும் கொடுப்பது நன்றன்று.

தீரும் வியாதி :—பல்வலி, சொத்தைப்பல், உள்ள இடங்களில் துவரம்பருப்பளவு வைத்து அழுத்த 2-3 நிமிஷத்திற்குள் வலி நீங்கும். பல்லீற்றில் சுரப்புக்கொண்ட சீதளநீர் வெளியாகும். மூலங்களில் அனுசரித்த சீதளத்தை உடனே நிவர்த்தி செய்யும். இந்தச் சுண்ணத்தை உள்ளுக்குக் கொடுக்க வாந்திபேதி, பிரசவகாலத்தில் சிக்குட்பட்டுள்ள அழுக்கினால் நேர்ந்த பல துன்பம், சந்நி, மாத விலக்கத்தில் தடைப்பட்ட உதிரமும் அது சம்பந்தமான வயிற்றுவலியும் குணமாகும்.

பத்தியம் ;—இச்சாபத்தியம்.

## 41. நாக பற்பம்

**சரக்கும் செய்பாகமும் :—** மூன்று பலம் சிறுகண் நாகத்தை உருக்கி உருக்கிப் பத்துமுறை இலுப்பை எண்ணெயில் சாய்த்துச் சுத்தி செய்து ஒரு இரும்புக் கடாயில் போட்டு அடுப்பில் வைத்துக் காடாக்கினியாக எரித்துக் கொண்டுவர நாகம் உருகும். அத்தருணம் நடு நரம்புகளை நீக்கிய ஆடாதோடை இலையை ஒன்று அல்லது ஒன்றரை வீசை எடைக்குச் சேகரித்துப் பொடிப்பொடியாக அரிந்து வைத்துக்கொண்டு நிதானமாக நாகம் மடிந்து சத்து மாறும்படி கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டு இலைகள் தீயத்தீயக் கரண்டி கொண்டு தேய்த்து வருக. இப்படி ஏறக்குறைய மூன்று அல்லது நான்கு சாமத்திற்குக் கணக்காகும் வரையில் மூலிகையை யிட்டுக் கரண்டி கொண்டு தேய்ப்பது அவசியமாகும். ஒரு சமயம் மூலிகையானது போதிய கால அளவிற்கு இல்லாவிடின் மறுநாள் மூலிகையைத் தேவையான அளவிற்குப் போட்டுக் கரண்டி கொண்டு தேய்த்து நாகச்சத்து இல்லாமல் கீழிறக்கி ஆறவிடவும். இதைச் சீலையில் அரித்துத் திப்பி ஏதேனுமிருப்பின் தள்ளிவிட்டுப் பற்பத்தைக் கல்வத்தில் போட்டுக் கால்பலம் சூதம் கூட்டி ஆடாதோடை இலைச் சாற்றால் நான்கு சாமம் அரைத்துக் காலணு அகலமும் கனமும் உள்ள வில்லைகளாகச் செய்து ரவியில் உலர்த்தி அகலில் பரப்பி மேல்அகல்மூடிச் சீலைசெய்து 20-25 வறட்டியில் புடமிடவும். இப்படி ஒவ்வொரு முறையும் கால்பலம் சூதம் கூட்டி அரைத்து அரைத்து வில்லைதட்டி மூன்று புடமிட நற்குணத்தைப் பெற்ற பற்பமாகும். சில சமயம் சிவந்த சாயலாக முடிவது முண்டு. இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இந்தப் பற்பத்தில் வேளைக்கு $\frac{1}{4}$—$\frac{1}{2}$ குன்றி எடை நெய், வெண்ணெய் முதலிய அனுபானங் களில் தினம் இருவேளை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—மூலம், ரத்தமூலம், பவுத்திரம், சீத பேதி, இரத்தபேதி, கிராணி, வெள்ளை, பெரும்பாடு முத லியவைகள் தீரும்.

பத்தியம் :—இச்சாபத்தியமாக அன்னங் கொள் வதில் காரத்தை முற்றிலும் நீக்க வேண்டும்.

## 42. வேறு முறை

சரக்கும் செய்பாகமும் :—இலுப்பை எண்ணெயில் இருபத்தொரு முறை உருகிச் சாய்த்த இரண்டு பலம் நாகத்தை ஒரு இரும்புக் கடாயில் போட்டு அடுப்பிலேற் றிப் பெருந்தீயாக எரித்து நாகம் உருகின சமயம் சுக்குத் தூள் பலம்-2, வெடியுப்புத் தூள் பலம்-2, பூசும் மஞ்சள் தூள் பலம்-2, ஓமம் பலம் $\frac{1}{2}$-யாக ஒருமிக்கக் கலந்து கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டு இரும்புக் கரண்டி கொண்டு தேய்த்து வருக. அப்பால் கருவூமத்தம் இலை, செந்நாயுருவி இலை, கையாந்தகரை இலை வகைக்குப் பத்து பலம் வீதம் வரிசைக்கிரமமாக ஒன்றன்பின் ஒன்று கிரா சம் கொடுத்து நிதானமாகக் கரண்டிகொண்டு தேய்த்து வர நாகச்சத்து இல்லாமல் பற்பமாகும். கடாயை கீழிறக்கி ஆறவிட்டுச் சேதப்படாமல் பற்பத்தைச் சுரண்டி எடுத் துக் கல்வத்தில் போட்டு மிருதுவாக அரைத்துச் சீசாவில் அரித்துத் திப்பியை நீக்கி பற்பத்தை எடுத்துக்கொள்க.

இந்தப் பற்பத்தைக் கல்வத்தில் போட்டு பொடுதலை இலைச்சாறு விட்டு நான்குசாமம் அரைத்து மெழுகுபதத் தில் வில்லை தட்டி ரவியில் உலர்த்தி அகலில் வைத்து

மேல் அகல்மூடிச் சீலைசெய்து 50-வறட்டியில் புடமிடவும். இப்படி இரண்டு புடமிட நல்ல பற்பமாகும். இது சிறிது மஞ்சள் நிறத்தோடிருப்பினும் குற்றமில்லை.

**பிரயோகம்:**—இந்தப் பற்பத்தை வேளைக்கு ½ - ¾ குன்றி எடை தினம் இருவேளை நோய்க் கேற்றவாறு அனுபானம் செய்து கொடுத்துக் கொண்டு வருக.

**தீரும் வியாதி:**—கண்டங்கத்திரி, ஆடாதோடை, முசுமுசுக்கை, கருந்துளசி, இண்டங்கொழுந்து, தூதுவளை இவற்றின் சாறு வகைக்குக் கால்படி வீதம் வடிகட்டிப் பீங்கான் தட்டுகளில் விட்டு ரவியில் நன்ருய் உலர்த்திக் கல்வத்திலிட்டு அரைத்துச் சூரணமாகச் செய்து வைத்துக்கொண்டு அதனில் வேளைக்கு இரண்டு குன்றி எடையாக முன்முடித்த நாகபற்பம் கூட்டித் தேன்விட்டு மத்தித்துக் கொடுத்துக்கொண்டுவர 10 - 15 நாளில் ஈளை, இருமல், காசம் ,சுவாசரோகம் குணமாகும். வெண்ணெய், நெய் முதலிய அனுபானங்களில் கொடுத்துவர ரத்த மூலம், சீழ்மூலம், பவுத்திரம், சீதபேதி, இரத்தபேதி குணமாகும்.

இந்தப் பற்பத்தைத் தேனில் அனுபானம் செய்து கொடுக்கக் கிராணி, பேதி முதலியவை குணமாகும். இந்தப் பற்பத்தை நெய்யில் அனுபானம் செய்து தினம் இருவேளை கொடுத்துக் கால்மணி நேரம் சென்றபின் சீமைத் தக்காளிப்பழச்சாறு ½ - 1 அவுன்ஸ் வீதம் கொடுத்துவர க்ஷயரோகத்தில் கண்ட ரத்தவாந்தி குணமாகும். இன்னும் க்ஷயரோகத்தி லுண்டான சுரமும் குறையும்.

கசகசா லேகியத்தில் இந்தப் பற்பத்தைக் கூட்டிக் கொடுக்கச் சீதபேதி, ரத்தபேதி, கிராணி, இரத்தமூலம், பிரசவத்திற்கு முன்பின்னுகக் காணும் கிராணி முதலியவை குணமாகும்.

## 43. வேறு முறை

சரக்கும் செய்பாகமும் :—முன்போல் சுத்தி செய்த இரண்டு பலம் நாகத்தை ஒரு இருப்புக் கடாயில் போட்டு கன்னான் உலையில் வைத்து ஊதி, நாகம் உருகின சமயம் உத்தாமணிக்கொடியை இலையுடன் கத்தையாகக் கட்டிக் கொண்டு தேய்த்துவர நாகம் பொரித்து பற்பமாகும். இதைச் சீலையில் அரித்துத் திப்பி இருப்பின் தள்ளி விட்டு அடியிலுள்ள பற்பத்தை எடை தூக்கி அதன் எடைக்குப் பாதி வாலேரசம் கூட்டிக் கல்வத்திலிட்டு உத்தாமணி இலைச்சாறு விட்டு இரண்டு சாமம் அரைத்து மெழுகு பதத்தில் வில்லை தட்டி ரவியில் நன்றாய் உலர்த்தி வைத்துக் கொள்க. அப்பால் துத்தியிலையை மெழுகுபோலரைத்து முன் உலர்த்திய நாக வில்லைக்கு அங்கிபூட்டி மண்சீலை ஏழுசெய்து முழப்புடத்திலிடவும். இவ்வாறு இருமுறை அரைத்து அரைத்து வில்லை தட்டி உலர்த்தி துத்தியிலையை அரைத்து அங்கிபூட்டி புடமிட்டெடுக்க நல்ல பற்பமாகும்.

பிரயோகம்:—இந்தப் பற்பத்தில் வேளைக்குக் குன்றி எடை தினம் இருவேளை நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—மூலம், பவுத்திரம், வயிற்றி லுண்டாகும் நமைச்சல், இளைப்பு, தேகத்திலுண்டாகும் கொப்பளம், வீக்கம், ரத்தமூலம், சீழ்மூலம், சீதபேதி, இரத்தபேதி, கிராணி முதலியவை குணமாகும்.

பத்தியம்:—இச்சாபத்தியம்.

## 44. நாகரச பற்பம்

**சரக்கும் செய்பாகமும் :—** இலுப்பை எண்ணெயில் இருபத்தொரு முறை உருக்கிச் சாய்த்த நான்கு தோலா நாகத்துடன் நான்கு தோலா வாலைரசத்தைத் தொந்தித்துக் கல்வத்தில் போட்டு அதனுடன் எட்டு தோலா சுத்தி செய்த சங்குப் பாஷாணத்தைக் கூட்டி 80-தோலா எடையுள்ள வெள்ளைச் சாட்டரணைச் சாற்றைக் கொஞ்சங் கொஞ்சமாக விட்டுக் கையோமல் நன்ருய் அரைத்து மெழுகுபதம் வந்த சமயம் பட்டாணிப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்க.

அப்பால் குழம்புச் சட்டியைப் போன்ற வாயகன்ற சட்டியைக் கொண்டுவந்து நடுவில் முன்முடித்து வைத்துள்ள மாத்திரையைக் குவித்து அதன்மேல் 10-தோலா எடையுள்ள செப்புத்தகட்டை 3-அங்குலம் உயரமும், 4-அங்குலம் அகலமும் இருக்கும்படியாக கிண்ணம்போலடித்து மூடி, சட்டியின் அடிப் பாகத்திற்கும் கிண்ணத்தின் பொருத்து வாய்க்கும் இடையில் ஏற்பட்ட சந்துக்கு உளுந்து சீலைசெய்து காயவிட்டு இரண்டரை வீசை இந்துப்பைப் பொடிசெய்து போட்டு அழுத்தி அடுப்பில் வைத்து அரசங்கட்டை கொண்டு ஒருசாமம் தீபாக்கினியாகவும், இரண்டுசாமம் கமலாக்கினியாகவும், மூன்று சாமம் காடாக்கினியாகவும் எரித்து இரண்டு நாள் ஆறவிட்டுச் சட்டியிலிட்ட மாத்திரைகளை அரைத்துப் பத்திரப்படுத்துக. இது வெளுப்பாக இருக்கும். சில சந்தர்ப்பம் எரிப்புக் குறைவால் சரிவர முடியாமல் நிறம் பேதப்பட்டால் மறுவலும் கல்வத்திலிட்டு வெள்ளைச்சாட்டரணைச்சாற்றில் இரண்டு சாமம் அரைத்து வில்லைதட்டி உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல் மூடிச் சீலைசெய்து 20-வறட்டியில் புடமிட வெளுக்கும்.

பிரயோகம் :—இந்தப் பற்பத்தில் வேளைக்கு 2-3 அரிசிப் பிரமாணம் நெய், தேன் முதலிய அனுபானங்களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—மஞ்சள் வெள்ளை, பக்ஷவாதம், திமிர், க்ஷயம், காசம் முதலியவை குணமாவதுடன் நல்ல தேஜசும் பலமும் சுக்கில விருத்தியுமுண்டாகும்.

பத்தியம் :—புளிதள்ளி இச்சாபத்தியம்.

## 45. நாகசங்கு பற்பம்

சரக்கும் செய்பாகமும் :—இலுப்பை எண்ணெயில் ஏழுமுறை உருக்கி எடுத்த ஒரு பலம் நாகத்தை ஒரு இரும்புக்கடாயில் போட்டு அடுப்பில் வைத்துக் காடாக்கினியாக எரித்து உருகின சமயம் ஊதும் வெள்ளைச் சங்கையாவது அல்லது பாலடைச் சங்கையாவது ஒரு பலம் எடைக்குப் பொடிசெய்து கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டுக் கரண்டிகொண்டு தேய்த்துவரப் பொடியாகிவிடும். இதைக் கல்வத்தில் போட்டு உத்தாமணி இலைச்சாறு விட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகுபதம் வருஞ்சமயம் வில்லை தட்டி உலர்த்தி அகலில்வைத்து மேல் அகல்மூடிச் சீலைசெய்து உலர்த்தி 30-வறட்டியில் புடமிட நல்ல பற்பமாகும். இதை அரைத்துக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்தப் பற்பத்தில் வேளைக்குக் குன்றி எடை தினம் இருவேளை நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களில் கொடுத்துவருக.

தீரும் வியாதி :—வெள்ளை, வெட்டை, மூலம், பவுத்திரம் முதலியவைகள் குணமாகும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 46. கருவங்க பற்பம்

**சரக்கும் செய்பாகமும்:**—கிரமப்படி சுத்தி செய்த இரண்டு பலம் கருவங்கத்தை ஒரு இரும்புக் கடாயில் போட்டுக் கன்னுன் உலேயில் வைத்து ஊதி அல்லது பெரிய அடுப்பில வைத்துக் காடாக்கினியாக எரித்து வங்கம் உருகின சமயம் கொம்புக்கள்ளி பழுப்புக் குச்சி களேச் சிறு துண்டுகளாக நறுக்கி வைத்துக்கொண்டு கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டு நான்கு சாமம் வரை யில் கரண்டிகொண்டு தேய்த்துவர வங்கச்சத்து இல்லா மல் பற்பமாகும். இதைச் சீலேயில் அரித்துத் திப்பியை நீக்கிவிட்டுப் பற்பத்தைக் கல்வத்தில் போட்டுக் கொம்புக் கள்ளி பழுப்புச்சாறுவிட்டு நான்கு சாமம் அரைத்து வில்லேதட்டி ரவியில் உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல்மூடிச் சீலேசெய்து 20 வறட்டியில் புடமிடவும். இது நன்ருய் வெளுத்திருக்கும். அரைத்துச் சீசாவில் பத்திரப் படுததுக.

**பிரயோகம்:**—இந்தப் பற்பத்தில் வேளேக்குத் துவ ரம் பருப்பளவு தினம் இருவேளே தேன், நெய் முதலிய அனுபானங்களில் கொடுக்கவும்.

**தீரும் வியாதி:**—அரையாப்பு, கிரந்தி, வெள்ளே, பவுத்திரம், மேகரணம், மேகவாயு பிடிப்பு, மதுமேகம் முத லியவைகள் குணமாகும்.

**பத்தியம்:**—கைப்பு புளிப்பு தள்ளி இச்சாபத்திய மாக அன்னங்கோடல் நன்று.

## 47. வேறு முறை

**சரக்கும் செய்பாகமும்:**—ஒரு வீசை விஷ மூங்கி லிலேயைக் கொண்டுவந்து சிறு துண்டுகளாகக் கத்த ரித்து அதனுடன் ஒரு வீசை நாட்சென்ற பூவரசம் மரத்

தின் பட்டையைக் கூட்டி ஒன்றுமிரண்டாக இடித்து ஒரு கோணித் துண்டின்மேல் பாதித் தூளைப் பரப்பி அதன் மேலே இரண்டு பலம் சுத்திசெய்து ஓலைகனத்திற்குத் தகடு அடித்துச் சிறு துண்டுகளாக நறுக்கி வைத்துள்ள கருவங்கத்தை ஒன்றன்மீது ஒன்றுபடாமல் பரப்பி அதன் மேல் மிகுதியுள்ள பட்டைத்தூளைப் போட்டு கோணியின் நான்கு மூலையையும் சேர மடித்துக் கயிறுகொண்டு கட்டி உரப்பான சீலையில் மண்ணைப்பூசி வலுவாக 7-8 சீலை செய்து சிறிது காயவிட்டு 100-வறட்டியில் புடமிடவும். புடம் ஆறினபின் மறுநாள் கோணியிலிட்டு வங்கத்தைப் பார்க்க வெந்து வெளுத்திருக்கும். ஜாக்கிரதையாக வெளுத்துப் பொரிந்திருக்கும் வங்கத்தை யெல்லாம் பொறுக்கிக் கல்வத்திலிட்டு அரைத்துச் சீலையில் அரித்துத் திப்பியைத் தள்ளிப் பற்பத்தைச் சீசாவில் பத்திரப் படுத்துக.

பிரயோகம் :—இந்தப் பற்பத்தில் வேளைக்குத் துவரம்பருப்பளவு தினம் இருவேளை 3 - 5 நாள் நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—வெள்ளை, வெட்டை, ஆறுத மேக ரணம், காசம், எலிகடி, குட்டம், மதுமேகம் இவைகள் தீரும்.

பத்தியம் :—கைப்பு, புளிப்பு தள்ளி இச்சாபத்திய மாக அன்னம் கொள்ளுதல் நன்று.

## 48. வேறு முறை

சரக்கும் செய்பாகமும் :—சுத்திசெய்த ஒரு பலம் கருவங்கத்தை உருக்கி அதனுடன் ½-பலம் வாலை ரசத்தை தொந்தித்துக் கல்வத்தில் போட்டு அரைக்கப் பொடியாகும். அப்போது சுத்திசெய்த 1½-பலம் பேரண்

டத்தூளைக் கூட்டிக் குப்பைமேனிச்சாறு விட்டு எட்டு சாமம் அரைத்து ஒரு பெரிய வச்சிரமூசையில் போட்டு வாய்க்கு ஓடு மூடிச் சீலைசெய்து கஜபுடம் போட்டு உலையில் வைத்து மூசையழுக ஊதி எடுத்து ஒருபுறம் வைத்து விடுக. இந்த மூசையை ஒருவாரம் சென்றபின் உடைத்துப் பார்க்கக் கருவங்கம் பற்பமாக இருக்கும். இதை அரைத்துக் குப்பியில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—** இந்தப் பற்பத்தில் வேளைக்கு 1 - 2 அரிசிப் பிரமாணம் காலை மாலை ஏழுநாள் நெய்யில் கொடுக்கவும்.

**தீரும் வியாதி :—** வெள்ளை, கொறுக்கு, யோனிப் புற்று, லிங்கப்புற்று, மேகரணம், குழிப்புண்கள், சிலையோடும் ரணங்கள் குணமாகும்.

**பத்தியம் :—** கைப்பு புளிப்பு தள்ளி இச்சாபத்தியமாகவும், மோர் பால் நெய் தாராளமாகவும் சேர்த்துக் கொள்க.

## 49. வங்கரச பற்பம்

**சரக்கும் செய்பாகமும் :—** இரண்டு பலம் சுத்தி செய்த கருவங்கத்தை உருக்கி இரண்டு பலம் வாலை ரசத்தை தொந்தித்து ஒரு இரும்புக் கடாயில் போட்டு அடுப்பிலேற்றிச் சிறுக எரித்து உருகின சமயம் ஆறு பலம் படிக்காரத்தைத் தூள்செய்து வைத்துக்கொண்டு நிதானமாக மூன்று சாமத்திற்குப் பயன்படுமாறு கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டு இரும்புக் கரண்டிகொண்டு தேய்த்து வருக. அப்போது கருவங்கம் லோகசத்து இல்லாமல் மடிந்து பற்பமாகும். இந்தப் பற்பத்தை யெல்லாம் ஒருங்கு சேரும்படி கரண்டி கொண்டு கரண்டி நடுவில் தள்ளிக் குவித்து அதன்மேல் ஒரு புது குண்டுச் சட்டியைக் கொண்டு மூடி ஒரு சாமம் காடாக்கினியாக எரித்து

அடுப்போடு ஆறவிடுக. மறுநாள் சுத்தி செய்த தாளகம் வராகனெடை-1, சுத்தி செய்த வீரம் வராகனெடை-1, ஆகத் தனித்தனிக் கல்வத்தில் போட்டு அரைத்து எடுத்துக் கலந்து முன் எரித்து ஆறவிட்டுள்ள பற்பத்தில் போட்டுக் கிளறி மீண்டும் மேல்சட்டி மூடி 1 - 2 சாமம் எரித்து ஆறவிட்டுப் பற்பத்தைச் சுரண்டிக் கல்வத்தில் போட்டு நன்கு அரைத்துச் சீலையில் அரித்துத் திப்பி இருப்பின் தள்ளிவிட்டுப் பற்பத்தைக் குப்பியிலிடுக.

பிரயோகம்:—இந்தப் பற்பத்தில் வேளைக்கு 2 - 3 அரிசி எடை தேனில் தினம் இருவேளை தகுந்த அனுபானங்களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி:—சந்நிபாதசுரம், (டயிபாயிட் பீவர்) கபசுரம், நீர்ச்சுருக்கு, மண்ணீரல், கல்லீரல் வீக்கம் குணமாகும். இந்தப் பற்பத்தைக் கபசுரத்திற்கு தேனில் காலை மாலை கொடுத்த பின் கண்டுபாரங்கி, சுக்கு, மிளகு, கடுக்காய்த்தோல், சிற்றரத்தை வகைக்குப் பலம்-¼ வீதம் இடித்துக் கால்படி சலத்தில் போட்டு வீசம்படியாகக் குடிநீர் காய்ச்சி வடிகட்டி வேளைக்கு 1—1½ அவுன்ஸ் அளவு மூன்றுநாள் ஆறுவேளை கொடுக்க விரைவில் குணமாகும்.

ஆவாரங்கொழுந்துடன் சிறிது சீரகம் கூட்டி அரைத்து நெல்லிக்காய்ப் பிரமாணம் எடுத்து அதற்குச் சமன் ஆவின் வெண்ணெய் கூட்டிப் பிசரி அதனில் இப் பற்பத்தை வைத்து தினம் இருவேளை மூன்று நாள் கொடுக்க நீர்ச்சுருக்கு குணமாகும்.

குறிப்பு:—இந்த முறையில் குறிப்பிட்டுள்ள கருவங்கத்திற்குப் பதிலாக வெள்வங்கத்தைக் கூட்டிச் செய்வாருமுளர். இதுவும் சுரம், சுரக்கட்டி முதலியவற்றை விரைவில் குணப்படுத்துகின்றதென்பதைக் கவனிக்கப் பட்டுள்ளது.

## 50. கருவங்க பற்பம்

சரக்கும் செய்பாகமும் :—சுத்திசெய்த 1 பலம் கரு வங்கத்தை ஈசலிறகுபோல் தகடடித்து பொடியாகக் கத்த ரித்து கல்வத்தில்போட்டு அதனுடன் 1-பலம்சுத்திசெய்த ஆமை ஓட்டின் தூளைப்போட்டுப் பழச்சாறுவிட்டு நான்கு சாமம் அரைத்து வில்லைதட்டி உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல்மூடிச் சீலைசெய்து 15-வறட்டியில் புடமிடவும். புடம் ஆறினபின் வில்லையை எடுத்துக் கல்வத்தில் போட்டு மீண்டும் ஒரு பலம் ஆமை ஓட்டுத் தூளைப் போட்டு பழச்சாறுவிட்டு நான்கு சாமம் அரைத்து வில்லை தட்டி உலர்த்தி அகலில் அடக்கி மேல் அகல்மூடிச் சீலை செய்து முன்போல் புடமிடவும். இப்படிப் புடந்தோறும் ஒரு பலம் ஆமையோட்டின் தூளைக் கூட்டிக்கூட்டி நான்குமுறை அரைத்துப் புடமிடச் சத்து இல்லாமற் பற்ப மாகும். இதை அரைத்துக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்தப் பற்பத்தில் வேளைக்கு துவரம் பருப்பளவு தினம் இருவேளை நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களில் 10-நாள் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—இரத்தமூலம், பவுத்திரம், மேகம், வெட்டை முதலிய பல ரோகங்கள் தீரும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 51. கெந்தக பற்பம்

சரக்கும் செய்பாகமும் :—ஒரு ரூபாய் எடை கெந்த கத்திற்குச் சிகைக்காய் இலையை அரைத்து ஒரு கிச்சிலிக் காய் பிரமாணம் கவசமிட்டு வைத்துக்கொள்க. அப்பால் நான்கு பலம் தோலுரித்த வெள்ளைப்பூண்டை அரைத்து முன் சித்தப்படுத்திய உருண்டை அடங்கக்கூடிய மூசை யும் மூடியும் செய்து அதனுள் அடக்கிச் சீலைசெய்து 8-

வறட்டியில் புடமிடவும். புடம் ஆறினபின் கெந்தகத்தைப் பார்க்க வெளுத்திருக்கும் அரைத்துப் பத்திரப் படுத்துக.

**பிரயோகம் :—** இந்தப் பற்பத்தில் வேளைக்கு 2-அரிசி எடை தினம் இருவேளை நெய்யில் கொடுத்துவருக.

**தீரும் வியாதி :—** தோல் சம்பந்தமான பலவிதப் படை ரணம் தேமல் முதலியவைகள் குணமாகும்.

இது அனுபவத்தில் வந்ததாக இருப்பினும் கைபாகம் செய்பாகம் புடபாகம் தவறுமேயாயின் அரை குறையாக முடியும். மீண்டும் ஒருமுறை கவனத்தைச் செலுத்திச் செய்யமுடியும் என்பதைக் கவனத்தில் வைக்கக்கடவர். கெந்தகவாசனை வருமாயின் உடனே மருந்தைப் புடத்தி லிருந்து எடுத்து மேலே ஈரமண்ணைக் கொட்டிச் சூட்டை ஆற்றிவிடவும்.

## 52. வெள்வங்க பற்பம்

**சரக்கும் செய்பாகமும் :—** வெள்வங்கத்தைக் கிரமப் படி சுத்தி செய்து ஈசல் இறகுபோல் தகடு அடித்துப் புளி யம் இலையளவாகக் கத்தரித்து ஒரு பலம் அளவிற்கு எடுத்துக்கொள்க. பின்னர் வேப்பம்பட்டை, புளியம் பட்டை, அரசம்பட்டை வகைக்கு ஒரு வீசை அளவு கொண்டுவந்து சிறு துண்டுகளாக நறுக்கிப் பஞ்சுபோல் நசுக்கி ஒரு கோணியில் அரைபாகம் போட்டுப் பரப்பி அதன்மேல் முன்சித்தப்படுத்திய வங்கத்தகட்டைத் தூவி அதன்மேல் மிகுதியுள்ள பட்டைத்தூளைப் போட்டுப் பரப் பிச் சுருட்டிக் கயிறுகொண்டு கட்டி மண்சீலை உரப்பாக 10-12 செய்து ஈரம் வற்றச் சாம்பலில் புரட்டி எடுத்து 80-வறட்டியில் புடமிடவும். இது நன்றாய் ஆறினபின் மேல் உள்ள வறட்டிகளைக் கொஞ்சங் கொஞ்சமாக எடுக்க

வேண்டும். சில சந்தர்ப்பம் மண்சீலை செய்த சுருணையானது உடைந்து நசுங்கப் பெற்றிருந்தாலும் இருக்கும். ஆதலால் கவனத்துடன் வறட்டிகளை அப்புறப்படுத்திச் சுருணையை சோதித்துப் பார்க்க அதிலிட்ட வங்கத்தகடுகளெல்லாம் பூத்துப் பொரிந்து இருக்கும். கஷ்டத்தைச் சிறிதும் பாராமல் பொரிந்துள்ள வங்கத்தையெல்லாம் பொறுக்கி எடுத்துக்கொள்ளவும். அல்லது பட்டைச் சாம்பலோடு பொரிந்துள்ள வங்கத்தை யெல்லாம் வாரிப் பெரிய கண்ணுடைய சல்லடையில் போட்டுச் சலித்து எடுக்கச் சாம்பல் போய்ப் பொரிந்த வங்கம் ஜல்லடையில் நிற்கும் இவற்றை நிதானமாகப் பொறுக்கிக் கல்வத்தில் போட்டு அரைத்துச் சீலையில் அரித்து வங்கத்திப்பி இருப்பின் நீக்கிவிட்டுப் பற்பத்தைச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தப் பற்பத்தில் வேளைக்கு $\frac{1}{4}$ - $\frac{1}{2}$ குன்றி எடை தினம் இருவேளை 5 - 7 நாள் நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—வெள்ளை, வெட்டை, அரையாப்பு மேகரணம், தேகதுர்ப்பலம், மூலம், பவுத்திரம் குணமாகும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 53. வேறு முறை

சரக்கும் செய்பாகமும் :—சுத்தி செய்த இரண்டு பலம் வெள்வங்கத்தை மெல்லிய தகடாக அடித்து இரு புளிய இலை அகலத்திற்குச் சதுரமாகக் கத்தரித்து வைத்துக் கொள்க.

இதற்குமேல் ஒரு வீசை வேப்பிலையைக் கொண்டு வந்து ஒன்றுமிரண்டுமாக இடித்து இதனில் அரைபாகம்

ஒரு கோணித்துண்டின் மேல் பரப்பி அதன்மீது கறிமஞ் சள் தூளைத்தூவி முன் சித்தப்படுத்திய வங்கத் தகடு களை ஒன்றன்மீது ஒன்றுபடாமலிருக்கும்படி பரப்பிப் பின்னும் சிறிது மஞ்சள்தூள் தூவி மிகுதியுள்ள வேப் பிலையைப் போட்டுச் சுருட்டிக் கயிறுகொண்டு கட்டி உரப்பான சீலையில் களிப்பு மண்ணைப் பூசி 10 - 12 சீலை செய்து 100-வறட்டியில் புடமிடவும். புடம் ஆறின பின் ஜாக்கிரதையாக மேல் உள்ள வறட்டிகளை எடுத்துச் சுருணையிலுள்ள பொரிந்துள்ள வங்கத்தை யெல்லாம் முன்முறையில் கூறிய வண்ணம் சேகரித்துக் கல்வத்தி லிட்டு அரைத்துச் சீலையில் அரித்துத் திப்பி இருப்பின் தள்ளிவிட்டுப் பற்பத்தைச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இந்தப் பற்பத்தில் வேளைக்கு ½-குன்றி எடை தினம் இருவேளை தேன், நெய் முதலிய அனுபானங் களில் 7 - நாள் கொடுக்கவும்.

தீரும் வியாதி:—வெள்ளை, வெட்டை, மூலம், பவுத் திரம், மேகரணம், நீர் ரோகம் முதலியவைகள் குண மாகும்.

பத்தியம்:—கைப்பு, புளிப்பு தள்ளி இச்சாபத்திய மாக அன்னம் கொள்ள வேண்டும்.

## 54. வேறு முறை

சரக்கும் செய்பாகமும்:—ஒரு பலம் சுத்தி செய்த வெள்வங்கத்தை ஈசல் இறகுபோல் தகடு அடித்துப் புளி யம் இலைபோல் கத்தரித்து வைத்துக் கொள்க. அப்பால் ஏழரைப் பலம் எடையுள்ள புளியம்புறணியைக் கொண்டு வந்து இடித்துச் சூரணம் செய்து வைத்துக்கொள்க.

நான்கு தோலா சடைக்கஞ்சாவை இடித்துச் சூரணம் செய்து வைத்துக் கொள்க. இதற்குமேல் ஒரு கோணிச்

சீலையின்மேல் அரைபாகம் புளியம்புறணித் தூளைப் பரப்பி அதன்மேல் அரைபாகம் கெஞ்சாத்தூளைத் தூவி அதன்மேல் கத்தரித்து வைத்துள்ள வங்கத் துண்டு களைப் பரப்பி மிகுதியுள்ள கெஞ்சாத்தூளையும் புளியம் புறணித்தூளையும் படிப்படியாகப் போட்டுச் சுருட்டிக் கயிறுகொண்டு கட்டி மண்சீலை 7 - 8 வலுவாகச் செய்து 30 - 40 வறட்டியில் புடமிடவும். புடம் ஆறின பின் மண் சீலையிலிட்ட கவசத்தைச் சோதித்துப் பார்க்க வங்கத் துண்டுகள் வெளுத்துப் பொரிந்திருக்கும். இவற்றை யெல் லாம் சேதப்படாமல் பொறுக்கி எடுத்துக் கல்வத்தில் போட்டு மிருதுவாக அரைத்து மெல்லிய சீலையில் அரித் துத் திப்பி இருப்பின் தள்ளிவிட்டுப் பற்பத்தை எடுத்துக் கொள்க. இந்தப் பற்பத்தை மீண்டும் கல்வத்தில் போட் டுப் புளிப்புத் தயிர்விட்டு நான்கு சாமம் அரைத்து வில்லை தட்டி உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல் மூடிச் சீலை செய்து உலர்த்தி 20 - 30 வறட்டியில் புடமிடவும். இப் போது நல்ல பற்பமாகும். இதை அரைத்துக் குப்பியி லிடுக.

பிரயோகம்:—இந்தப் பற்பத்தில் வேளைக்குக் குன்றி எடை தினம் இருவேளை நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—வெள்ளை, வெட்டை, மூலம், பவுத் திரம், மேகவாயு, பிடிப்பு, கிரந்தி முதலியவைகள் குண மாகும். இன்னும் இது தாதுவிருத்தியை யுண்டாக்கும்.

பத்தியம் :—புளி தள்ளி இச்சாபத்தியம்.

## 55. வேறு முறை

சரக்கும் செய்பாகமும் :—ஒரு பலம் வெள்வங்கத் தைக் கிரமப்படி சுத்திசெய்து ஒருகாசு கனமிருக்கும்படி தகடு அடித்து அதனைக் காசு அளவுச் சதுரமாக இருக்கும்

படி கத்தரித்து வைத்துக்கொள்க. அப்பால் அரைவீசை பற்பாடகச் செடியைக் கொண்டுவந்து அரைத்து ஒரு கோணித்துண்டின்மேல் அரைபாகத்தை அடைபோல் தட்டி அதன்மேல் முன் தயார் செய்த வங்கத்துண்டுகளை ஒன்றின்மீதொன்று படாமலிருக்கும் பொருட்டு வைத்து மிகுதியுள்ள அரைத்த மூலிகையை அடை தட்டி வைத்துக் கோணித்துண்டின் நான்கு மூலையையும் மேற்பாகமாகச் சேரமடித்து 7-8 மண்சீலை வலுவாகச் செய்து 80- வறட்டியில் புடமிடவும். புடம் ஆறினபின் வங்கத்துண்டுகளைப் பார்க்கப் பொரிந்து வெளுத்திருக்கும். அவற்றைச் சேதப்படாமல் பொறுக்கி கல்வத்தில் விட்டு அரைத்து மெல்லிய சீலையால் அரித்து திப்பியை நீக்கிப் பற்பத்தைப் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இந்தப் பற்பத்தில் வேளைக்கு ½-1 குன்றி எடை தினம் இருவேளை நெய் வெண்ணெய் முதலிய அனுபானங்களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—வெள்ளை, வெட்டை, மேகரணம் கிரந்தி மேகக்குடைச்சல் முதலியவைகள் குணமாகும்.

பத்தியம்:—புளி தள்ளி இச்சாபத்தியம்.

## 56. வேறு முறை

சரக்கும் செய்பாகமும்:—ஒரு பலம் வெள்வங்கத்தைச்சுத்திசெய்து பனை ஓலைகனத்திற்குத் தகடு அடித்து ஆவாரம் இலை அளவாகக் கத்தரித்து வைத்துக்கொள்க. அப்பால் ஆடுதின்னாப்பாளை வேரும் வெந்தோன்றிக் கிழங்கும் (ஆகாசகருடன் கிழங்கு) சமனெடையாக அரைத்து ஒரு தேங்காய்ப்பிரமாணம் எடுத்து உருண்டை செய்து அதனுள் மேற்படி வங்கத்துண்டுகளைச் செருகி மண்சீலை 7-8 வலுவாகச் செய்து ஈரம்வற்றச் சாம்பலில்

புரட்டி 60-70 வறட்டியில் புடமிடவும். இது நன்ருய் ஆறினபின் கவசத்திலிட்ட வங்கத்தைப் பார்க்க வெளுத்துப் பூத்திருக்கும். இதைக் கல்வத்திலிட்டு அரைத்துச் சீலையில் அரித்துத் திப்பியைத் தள்ளிப் பற்பத்தைச் சீசாவிலிடுக.

பிரயோகம்:—வேளைக்குக் குன்றி எடை தினம் இரு வேளை நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களில் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—ஆவாரைப் பஞ்சாங்கத்தை அரைத்து அதனில் சிறு சுண்டைக்காய் அளவு எடுத்து தேன்விட்டு மத்தித்துப் பற்பத்தைக் கூட்டிக் கொடுக்கக் கல்லடைப்பு, சதை அடைப்பு, பிரமேகம், நீர்சுரப்பு தீரும். நெய், வெண்ணெய் போன்றதில் கொடுக்க வெள்ளை வெட்டை, மூலம், பவுத்திரம் குணமாகும்.

பத்தியம் :—புளி தள்ளி இச்சாபத்தியம்.

## 57. வெள்வங்க பற்பம்

சரக்கும் செய்பாகமும் :—ஒரு பலம் சுத்திசெய்த வெள்வங்கத்தை உருக்கி ஒரு பலம் வாலைரசத்தை தொந்தித்துக் கல்வத்தில் போட்டுச் சுத்திசெய்த குஞ்சு பொரித்த முட்டை ஓட்டை இரண்டுபலம் கூட்டிச் சுண்ண நீர் விட்டு இரண்டு நாள் அரைத்து மெழுகுபதத்தில் வில்லைதட்டி உலர்த்தித் துண்டுதுண்டாக நறுக்கிச் சுட்டெடுத்த மண்மூசையில் போட்டு வாய்க்கு ஓடுமூடிச் சீலை செய்து கன்ஞன் உலையில் வைத்து மூசையழுக ஊதி ஆறவிடுக. இந்த மூசையை மூன்ருவது நாள் எடுத்துப் பார்க்க வங்கம் பூத்திருக்கும் இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக

பிரயோகம் :—இந்தப் பற்பத்தில் வேளைக்குக் குன்றி எடை தினம் இருவேளை நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களில் 5-நாள் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—வெள்ளை, கைகால்பிடிப்பு, கிரந்தி, குடைச்சல் மேகரணம் குணமாகும்.

## 58. வெள்வங்க பவழபற்பம்

சரக்கும் செய்பாகமும் :—ஒரு பலம் சுத்தி செய்த வெள்வங்கத்தை ஒரு இரும்புக் கரண்டியில் போட்டு உருக்கி ஒரு பலம் பாதரசத்தை தொந்தித்துச் சூடாறும் முன் கல்வத்தில் போட்டு அரைக்கப் பொடியாகும். இதனில் ஒரு பலம் சுத்தி செய்த பவழத்தைப் பொடி செய்து போட்டுச் சுண்ணநீர் விட்டு தினம் ஒன்றுக்கு நான்கு சாமம் வீதம் இரண்டு மூன்று நாள் அரைத்து மெழுகு பதத்தில் வில்லை தட்டிக் காயவைத்து அதன்மேல் 7-8 சுண்ணச் சீலை செய்து நன்குலர்த்தி 30-40 வறட்டியில் புடமிடவும். புடம் ஆறின பின் சுண்ணச் சீலையை நீக்கி வில்லையைக் கல்வத்தில் போட்டுச் சுண்ண நீர்விட்டு நான்கு சாமம் அரைத்துச் சிறு வில்லைகளாகத் தட்டி உலர்த்தி ஒரு அகலில் பரப்பி மேல் அகல் மூடிச் சீலை செய்து உலர்த்தி 30-வறட்டியில் புடமிடவும். இவ்விதம் பின்னும் ஒரு புடமிட்டெடுக்க நல்ல பற்பமாகும். அரைத்துக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்தப் பற்பத்தில் வேளைக்கு ½-1 குன்றி எடை நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களில் தினம் இருவேளை 7-நாள் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—மூலம், அஸ்திசுரம், எலும்புருக்கி, தீராத வெள்ளை, நீர்ச்சுருக்கு, மேகவாயு, சூலை, கிரந்தி முதலியவை குணமாகும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

சிலர் சுண்ணநீருக்குப் பதிலாகக் குப்பைமேனிச் சாற்ருல் அரைத்துப் புடமிடுவது வழக்கம்.

## 59. வெள்வங்கச்சங்கு பற்பம்

சரக்கும் செய்பாகமும் :—சுத்தி செய்த ஒரு பலம் வெள்வங்கத்தை ஒரு இரும்புக் கடாயிலிட்டு அடுப்பில் வைத்துப் பெருந்தீயாக எரித்து உருகின சமயம் ஒரு பலம் ஊதும் வெள்ளைச்சங்கையாவது அல்லது பாலடைச் சங்கையாவது ஒரு பலம் எடைக்கு மாவுபோல் பொடி செய்து வைத்துக்கொண்டு கொஞ்சங் கொஞ்சமாகக் கிராசமிட்டுக் கரண்டிகொண்டு தேய்த்து அப்போதைக் கப்போது சுற்றுப்புறத்தில் சிதறுண்டிருக்கும் பொடியை யெல்லாம் கரண்டி கொண்டு சுரண்டி நடுவில் தள்ளிக் குவித்துச் சிறிதுநேரம் எரித்து மீண்டும் கொஞ்சம் சங்குத் தூளைக் கிராசமிட்டுத் தேய்க்கவும். இப்படிச் சங்குத்தூள் முடியும் வரையில் முற்கூறியவாறு நிதானமாகத் தேய்த்துவரச் சத்து இல்லாமல் பொடியாகும். இதைச் சேதப்படாமல் சுரண்டிக் கல்வத்தில் போட்டு நாவல்பட்டைச்சாறு விட்டு நான்கு சாமம் அரைத்து வில்லை தட்டி நன்ருய் உலர்த்தி வைத்துக் கொள்க.

இதற்குமேல் நாவல்பட்டையைப் பஞ்சுபோல் இடித்து நசுக்கி ஒரு பெரிய தேங்காய்ப் பிரமாணம் எடுத்து ஒரு கோணித் துண்டில் பாதித் தூளைப் பரப்பி மேலே முன்சித்தப்படுத்திய வில்லையை வைத்து அதன்மேல் பாதித்தூளைப் போட்டு நான்கு மூலையையும் ஒருங்கு சேர மடித்துக் கயிறுகொண்டு கட்டி மண்சீலை 7 - 3 வலுவாகச் செய்து 50-60 வறட்டியில் புடமிடவும். புடம் ஆறினபின் வில்லையைப் பார்க்க வெளுத்து நீற்றிருக்கும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தப் பற்பத்தில் வேளைக்கு 1 - 1½ குன்றி எடை தினம் இருவேளை நெய் வெண்ணெய் போன்ற அனுபானங்களில் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—வெள்ளை, வெட்டை, மூலம், பவுத்திரம், நீர்ச்சுருக்கு, நீர் எரிச்சல், நீரடைப்பு, சதையடைப்பு முதலியவைகள் குணமாகும்.

பத்தியம் :—புளி தள்ளி இச்சாபத்தியம்.

## 60. திரிவங்க பற்பம்

சரக்கும் செய்பாகமும் :—கருவங்கம், வெள்வங்கம், நாகம் வகைக்கு ஒரு பலமாகச் சேர்த்து உருக்கி இலுப்பை எண்ணெய்; நல்லெண்ணெய் இவைகளில் மும்மூன்று தடவை சாய்த்து எடுத்துக் கடாயில் போட்டு அடுப்பில் வைத்துக் காடாக்கினியாக எரிக்க உருகும். அத்தருணம் மூக்கரட்டைச் சமூலத்தைப் பொடிப் பொடியாக அரிந்து வைத்துள்ளதைக் கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டுக் கரண்டிகொண்டு தேய்த்து வருக. இப்படி நான்கு சாமம் அவசரமின்றி நிதானமாகத் தேய்த்துவரச் சத்து இல்லாமல் பற்பமாகும். இதைச் சீலையில் அரித்துத் திப்பியைத் தள்ளிவிட்டுப் பற்பத்தைக் கல்வத்தில் போட்டு மூக்கரட்டைச் சாறுவிட்டு நான்கு சாமம் அரைத்துச் சிறு வில்லைகளாகத் தட்டி ரவியில் உலர்த்தி அகலில் பரப்பி மேல் அகல் மூடிச் சீலைசெய்து 10 - 15 வறட்டியில் புடமிடவும். இப்படியே மேற்படி மூலிகைச் சாற்றுலரைத்து முன்போல் மூன்று புடமிட நல்ல பற்பமாகும். சில சந்தர்ப்பம் சிவந்து போவதும் உண்டு. எப்படி இருப்பினும் குற்றமில்லை. அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம்:—**இந்தப் பற்பத்தில் வேளைக்குக் குன்றி எடை தினம் இருவேளை மூன்று நாள் தேனில் கொடுக்கவும்.

**பத்தியம்:—** கடலைமாவை உப்பு சேர்க்காமல் சலம் விட்டுப்பிசைந்து அடைதட்டிக் கடாயில் சுட்டுச் சாப்பிட வேண்டும். தாகத்திற்குக் காய்ச்சிய பசுவின் பால் சாப்பிடவும். வேறு ஒன்றும் ஆகாது. காற்று உள்ள இடத்தில் இருக்கக்கூடாது. இப்படி இந்தப் பற்பத்தைக் கொள்ள மகோதரம் குணமாகும். ரோகிக்கு இந்த ரொட்டியை (அடையை)ச் சாப்பிடுவது கஷ்டமாக இருப்பின் பாலில் சிறிது சர்க்கரை கூட்டி அதில் அடையை ஊறப்போட்டுச் சாப்பிடலாம். தண்ணீரை எக்காரணத்தை முன்னிட்டும் மூன்று நாள் வரையில் கொடுக்கக்கூடாது. வேண்டிய அளவிற்குப் பசுவின் பாலைச் சேர்த்துக்கொள்ளவும்.

இதைப்போலவே வெள்ளைச்சாறுவேளைச் சமூலத்தைக் கிராசம்கொடுத்து முடித்த பற்பம் மேகசம்பந்தமான பல பிணிகளையும் நீர்க்கோவையுள்ள பிணிகளையும் விரைவில் குணப்படுத்தும். இத்தகைய பாகங்கள் அனுபவத்திற்குப் பெரிதும் பயன்படும்.

## 61. வேறு முறை

**சரக்கும் செய்பாகமும் ;—**கருவங்கம், வெள்வங்கம், நாகம் ஒவ்வொன்றையும் கிரமப்படி சுத்திசெய்து வகைக்கு ஒரு பலம் வீதம் கூட்டி ஒரு இரும்புக் கடாயிலிட்டு அடுப்பில் வைத்து உருக்கி நவச்சாரம் வெங்காரம் வகைக்கு ஒரு வராகனெடையாகப் பொடித்து கிராசம் கொடுத்து ஆறவிட்டு வங்கவில்லையை எடுத்துக்கொள்க.

அப்பால் இலுப்பைப்பிண்ணாக்கு பலம்-2½, சோற்றுப்பு பலம்-2½ புளித்த கழுநீர்விட்டு அரைத்து மெழுகு

பதத்தில் அரைபாகம் ஒரு மண்ணோட்டில் அடையாகத் தட்டி முன் சித்தப்படுத்தி வைத்துள்ள திரிவங்க வில்லையை வைத்து அதன்மேல் மிகுதியுள்ள மெழுகை அடைபோல் தட்டி மேல் வைத்து மண்ணோடு கொண்டு மூடிச் சீலைசெய்து 20-வறட்டியில் புடமிடவும். வங்கதோஷமற்று உருகி இருக்கும். பத்திரப்படுத்துக. பின்னர் ஒரு இரும்புக்கடாயை வெண்மைநிறமாகத் துலக்கி அதனில் முன் சுத்தப்படுத்திய திரிவங்கத்தைப்போட்டு அடுப்பில் வைத்து எரித்து உருகின சமயம் இந்த வங்கத்தின் எடைக்குச் சமன் கற்பூரசிலாசத்து பொடிசெய்து வைத்துக்கொண்டு கொஞ்சங் கொஞ்சமாகத் தூவி அத்திக்கட்டை கொண்டு தேய்த்துவருக. இது பற்பமாகும். இதைக் கல்வத்தில் போட்டு அரைத்து மெல்லிய சீலையில் அரித்துத் திப்பி இருப்பின் தள்ளிவிட்டுப் பற்பத்தின் எடைக்குச் சமன் வாலைரசம் கூட்டிக் கல்வத்தில் போட்டு வெள்ளைக்காட்டாமணக்குப் பால் விட்டு நான்கு சாமம் அரைத்துச் சிறுவில்லைகளாகச் செய்து உலர்த்தி அகலிலடக்கி மேல் அகல் மூடிச் சீலைசெய்து 15-வறட்டியில் புடமிடவும். இப்படி அரைத்து அரைத்து மூன்று புடமிட்டெடுக்க நல்ல பற்பம் ஆகும். இதை அரைத்துக் குப்பியிலிடுக.

பிரயோகம்:—இந்தப் பற்பத்தில் வேளைக்குக் குன்றி எடை தினம் இருவேளை தகுந்த அனுபானங்களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி:—மதுமேகம், கைகால் குடைச்சல், பிடிப்பு, வாதவலி, மூலம், பவுத்திரம், முகவாதம் குணமாகும். இந்தப் பற்பத்தை ஒருமுறை 5-நாள் கொடுக்கவும். மறுபடியும் கொடுக்க வேண்டியது ஏற்பட்டால் இரண்டு மூன்று ஸ்நானம் செய்தபின் அதாவது 10-நாள் சென்றபின் முன்போல் ஒருமுறை 5-நாள் கொடுக்கவும்.

**பத்தியம் :**—புளிதள்ளி இச்சாபத்தியம் மாமிசம் ஆகாது.

## 62. இரசித வங்க தாம்பர பற்பம்

**சரக்கும் செய்பாகமும் :**—வெள்வங்கம் பலம் - 1, வெள்ளி பலம்-½, சுத்திசெய்த தாம்பரப்பொடி தோலா-¼, இவற்றுடன் முதலில் வெள்ளியை ஒரு மூசையில் போட்டுக் குமட்டியில்வைத்து ஊதி உருகி கண்விட்டு ஆடும் போது தாம்பரப்பொடியைக் கொஞ்சங் கொஞ்சமாகப் போடவும். இவைகள் இரண்டும் நன்ருய் உறவானபின் வெள்வங்கத்தைச் சிறு துண்டுகளாக நறுக்கி வைத்துக் கொண்டு கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டுக் குச்சியைப் போன்ற அடுப்புக்கரியைக்கொண்டு கோலாடிக் கலக்கும் படி செய்தபின் இரும்பு உரலிலாவது அல்லது கல்லுரலிலாவது போட்டுக் கடப்பாறையால் தெரிக்காமல் இடித்துத் தூள்செய்து ஒரு இரும்புக் கடாயில்போட்டு அடுப்பிலேற்றிக் காடாக்கினியாக எரித்துக் கூத்தங்குதம்பைச் சாறு சுமார் 3-ஆழாக்கு அளவிற்குக் கொஞ்சங் கொஞ்சமாகச் சுறுக்குக் கொடுப்பதைப்போல் கொடுத்து இரும்புக் கரண்டிகொண்டு தேய்த்துவருக.

அப்போது இந்த மூன்று லோகங்களும் சாம்பலைப் போலாகும். கடாயைக் கீழிறக்கி ஆறவிடவும். இந்தப் பற்பத்தைச் சேதப்படாமல் சுரண்டிக் கல்வத்தில்போட்டு கூத்தங்குதம்பைச் சாறுவிட்டு நான்கு சாமத்திற்குக் குறையாமல் நன்ருய் அரைத்து மெழுகுபதத்தில் வில்லை தட்டி ரவியில் உலர்த்தி அகலில்வைத்து மேல் அகல்மூடிச் சீலைசெய்து 20-வறட்டியில் புடமிடவும். இப்படி அரைத்து அரைத்து ஏழு புடமிடச் சத்து இல்லாமல் நல்ல பற்பமாகும். இது நிறத்தில் சாம்பல் வர்ணமாகத்தானிருக்கும். அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தப் பற்பத்தில் வேளைக்கு 1 - 2 அரிசிப் பிரமாணம் தினம் இருவேளை 5-நாள் தகுந்த அனுபானங்களில் கொடுக்கவும். மீண்டும் கொடுப்பது அவசியம் உண்டானால் ஒருவாரம் விட்டு மறுபடியும் ஆரம்பித்துக் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—தேனில் கொடுத்துவர நல்ல பசியுண்டாகும். குன்மரோகத்தை நிவர்த்தி செய்யும். ஒரு வீசை மருதோன்றி இலையை ஒரு மண் தோண்டியில் போட்டு 4 படி சுத்த சலம் விட்டு அடுப்பிலேற்றி எரித்து ¼-படி அளவிற்குச் சுண்டக்காய்ச்சி ஆற விட்டுப் பிசைந்து வடிகட்டி எடுத்த குடிநீரில் ¼-படி சுத்தமான தனித் தேங்காய்ப்பால் கூட்டி எரித்து நெய் பிரியும்போது வடித்துக் கொள்ளவும்.

இவ்வாறு முடித்து வைத்துள்ள தேங்காய் நெய்யை ஒரு வெற்றிலையின்மேல் காலணு அகலம் பரவும் பொருட்டு விட்டு அதில் இந்தப் பற்பத்தைத் தினம் இரு வேளை கொடுத்துக்கொண்டு வர மேகரணம், தடிப்பு, திமிர், குட்டம், கரும்படை, செம்படை யாவும் குணமாகும்.

பத்தியம் ;—இச்சாபத்தியமாக அன்னங் கொள்ள வேண்டும். கைப்பு, புளிப்பு நீக்கவும்.

## 63. வங்கதாம்பர பற்பம்

சரக்கும் செய்பாகமும் :—சுத்திசெய்த வெள்வங்கம் பலம்-1, சுத்திசெய்த தாம்பரப்பொடி பலம்-1, சுத்திசெய்த பொரித்த கோழிமுட்டை ஓடு பலம்-1, வெடியுப்பு பலம்-½. இவற்றுள் தாம்பரத்தை ஒரு மூசையில் போட்டு உலையில் வைத்து ஊதி உருகிக் கண் விட்டாடும்போது வங்கத்தைச் சிறு துண்டுகளாக நறுக்கி வைத்துக்கொண்டு

கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டுக் குச்சியைப் போன்ற அடுப்புக்கரிப் லொன்றைக் கொண்டு கோலாடிக் கலக் கும்படி செய்து ஆறவிட்டு இரும்பு உரலில் போட்டு இடித்துத் தூளாக்கிக் கல்வத்தில் போட்டு அதனுடன் முட்டை ஓட்டையும் வெடியுப்பையும் கூட்டி அரைத்து மாவுபோலான சமயம் அரைபாகத்தில் அடங்கும்படியான ஒரு சீமை மூசையில் போட்டு வாய்க்குப் பொருத்தமான அகல் மூடிச் சீலைசெய்து உலையில் வைத்துக் காட்டுக் கரி யிட்டு ஊதவும். கரிபூத்து மூசை மேலே தெரியுமாயின் மீண்டும் மூசையை மேல்தூக்கி வைத்துக் காட்டுக்கரி யிட்டு ஊதவும். இப்படி 3-முறை ஊதி எடுத்து ஆற விடுக. இந்த மூசையை நான்காவது நாள் வாய் மூடி யைத் திறந்து பார்க்க வெளுத்துப் பூத்திருக்கும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—**இந்தப் பற்பத்தில் வேளைக்கு 2- அரிசி எடை தினம் இருவேளை 3-நாள் தேனில் கொடுக்க வும். குணம் தெரியாவிடின் ஒருவாரம் விட்டு மீண்டும் ஒருமுறை 3-நாள் கொடுக்கவும்.

**தீரும் வியாதி ;—**சர்வாங்க நடுக்கம், அல்லது கை கால் தலை நடுக்கம், கூன், இடுப்புவாதம், மேக ஊறல் குணமாகும்.

**பத்தியம் :—**புளி தள்ளி இச்சாபத்தியம்.

## 64. அப்பிரக பற்பம்

**சரக்கும் செய்பாகமும் :—**வெள்ளை அப்பிரகத்தை யாவது அல்லது கிருஷ்ண அப்பிரகத்தையாவது சிறு துண்டுகளாக நறுக்கி ஒரு பலம் எடைக்கு எடுத்துக் கொள்ளவும். அதன்பின் இரண்டு பலம் வெடியுப்பைத் தூள்செய்து ஒரு மட்கலயத்தில் சிறிது வெடியுப்புத்

தூளைப் போட்டுப் பரப்பி அதன்மேல் சில அப்பிரகத் துண்டுகளைப் பரப்பி அதன்மேல் சிறிது வெடியுப்புத் தூளைப் போட்டுப் பரப்பி விடவும். இப்படிப் படிப்படி யாக வெடியுப்பையும் அப்பிரகத் துண்டுகளையும் போட்டு வாய்க்கு ஓடு மூடிச் சீலைசெய்து உலர்த்தி 15-20 வறட்டி யில் புடமிடவும். புடமாறின பின் கலயத்திலிட்ட அப் பிரகத் துண்டுகளைப் பார்க்க வெளுத்து நீற்றிருக்கும். இதை அரைத்து வைத்துக்கொண்டு கொடுப்பதுண்டு. இன்னும் இந்தப் பற்பத்தை ஆலம்பாலில் அரைத்து ஒரு புடமும் பழச்சாற்றிலரைத்து ஒரு புடமும் போட்டு எடுக்க அதிக உத்தமம்.

பிரயோகம் :—இந்தப் பற்பத்தில் வேளைக்கு $\frac{1}{4}$ - $\frac{1}{2}$ குன்றி எடை நெய், வெண்ணெய், தேன் முதலிய அனு பானங்களில் தினம் இருவேளை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—பிரமேகம், அதிமூத்திரம், கிரிச் சரம், சுரம், க்ஷயம், கைகாலெரிவு குணமாகும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 65. சீனவங்கப் பற்பம்

சரக்கு :—

| | |
|---|---|
| கடையில் விற்கும் காரீயச்செந்தூரம் | பலம் 1 |
| படிக்காரம் | ,, 1 |

செய்பாகம் :—இவை யிரண்டையும் கல்வத்தில் போட்டு * வெடியுப்பு ஜெயநீர் விட்டு இரண்டு மணிநேரம்

* 10-பலம் வெடியுப்பும் 11-பலம் பழம்புளியையும் இடித்து மெழுகுபோல் செய்து சிறு வில்லைகள் செய்து ஒவ்வொரு வில்லை யாகச் சட்டியில் வைத்து எரித்து பனியில் வைத்து ஜெயநீர் கொண்டது.

அரைத்து வில்லை தட்டி உலரவிட்டு அகலில் வைத்து மேல் அகல்மூடிச் சீலைசெய்து 20 - 30 வறட்டியில் புடமிடவும். புடம் ஆறினபின் வில்லையைப் பார்க்க வெளுப்பாக இருக்கும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—**இந்தப் பற்பத்தில் வேளைக்கு 1 - 1½ குன்றி எடை தினம் இருவேளை தேன், நெய் முதலிய அனுபானங்களில் கொடுக்கவும்.

**தீரும் வியாதி:—**கரும்மேகம், செம்மேகம், மேகரணம், வெள்ளை, வெட்டை, பல தோல் சம்பந்தமான பிணிகள் குணமாகும்.

**பத்தியம் :—**இச்சாபத்தியம்.

## 66. வேறு முறை

**சரக்கு :—**

| | |
|---|---|
| கடையில் விற்கும் காரீயச்செந்தூரம் | பலம் 1 |
| படிக்காரம் | ,, 2 |

**செய்பாகம் :—**இவற்றைக் கல்வத்தில் போட்டுப் பசுவின்பால் விட்டு ஒரு மணி நேரம் அரைத்து வில்லை தட்டி உலர்த்தி ஒரு பெரிய அகலில் வைத்து வாய் மூடியிட்டுச் சீலைசெய்து 20 - 30 வறட்டியில் புடமிடவும். புடம் ஆறினபின் பார்க்க வில்லை வெளுப்பாக இருக்கும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—**இந்தப் பற்பத்தில் வேளைக்கு 2 - 3 குன்றி எடை சலத்தில் போட்டுத் தினம் இருவேளை கொடுக்கவும்.

**தீரும் வியாதி :—**பேதி, உஷ்ணபேதி, சீதபேதி, வெள்ளை, வெட்டை முதலியவைகள் குணமாகும்.

**பத்தியம் :—**இச்சாபத்தியம்.

## 67. வெள்ளி பற்பம்

**சரக்கும் செய்பாகமும் :—** ஒரு பலம் வெள்ளிச் சரிகையை ஒரு குடவான மண்ணோட்டில் வைத்துக் கன்னன் உலையிலிட்டு ஊதிச் செந்நிறமாக இருக்கும்போது மணித் தக்காளி இலைச்சாற்றில் கொட்டவும். மீண்டும் இந்தச் சரிகையை எடுத்து மண்ணோட்டிலிட்டு உலையில் வைத்து ஊதிச் செந்நிறமாக இருக்கும்போது முன்போல் மணித் தக்காளி இலைச்சாற்றில் கொட்டவும். இப்படி 5-முறை செய்தபின் கல்வத்தில் போட்டு மணித்தக்காளிச் சாறு விட்டு 4-சாமம் நன்றாய் அரைத்து ஒரே வில்லையாகத் தட்டி ரவியில் உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல் மூடிச் சீலைசெய்து 20-வறட்டியில் புடமிடவும். புடம் ஆறினபின் அகலிலிட்ட மருந்தைப் பிரமதண்டு இலைச் சாறு, உப்பிலாங்கொடிச்சாறு, சிறுகாஞ்சொறி இலைச் சாறு ஆக ஒவ்வொன்றிலும் தனித்தனி 4-சாமம் அரைத்து வில்லைதட்டி உலர்த்தி முன்போல் புடமிட்டு எடுக்க நல்ல பற்பமாகும். இதை அரைத்துச் சீசாவிலிடுக.

**பிரயோகம் :—** இந்த வெள்ளி பற்பத்தில் வேளைக்கு ஒரு துவரம்பருப்பளவு தினம் இருவேளை தாதுவிருத்திக் குரிய ஏதேனும் ஒரு லேகியத்தில் அனுபானமாக வைத்து 20-நாள் சாப்பிடவும்.

**தீரும் வியாதி :—** தாதுவிருத்தி யுண்டாக்கும், இருமல் குணமாகும்.

**பத்தியம் :—** இல்லை. நல்ல ஆகாரம் உட்கொள்ளவும்.

## 68. வேறு முறை

**சரக்கும் செய்பாகமும் :—** குஞ்சு பொரித்த புறு முட்டை ஒடு, கோழிமுட்டை ஒடு இவற்றில் ஏதேனும் ஒன்றை ஒரு பாண்டத்தில் போட்டுச் சுண்ணாம்பும்

அப்பளாக்காரமும் தண்ணீரில் கரைத்துவிட்டு அடுப்பில் வைத்து 2-மணி நேரம் எரித்து ஆறவிட்டுப் பிசைந்து பிசைந்து சவ்வு நீங்கக் கழுவி உலரவிட்டு எடுத்தது பலம்-½, சரிகை வெள்ளியைக் கொளுத்திச் சாம்பல் போக கழுவி உலரவிட்டு எடுத்தது பலம்-½ இவ்விரண்டையும் கல்வத்தில் போட்டுப் பப்பாய்க்காய்ப் பால்விட்டு 2-சாமம் அரைத்து வில்லைதட்டி உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல்மூடிச் சீலைசெய்து 20-வறட்டியில் புடமிடவும். இப்படிப் பப்பாய்காய்ப் பாலில் அரைத்து அரைத்து வில்லை தட்டி அகலிலடக்கி மூன்று புடமிட நல்ல பற்பமாகும். அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—**இந்த வெள்ளி பற்பத்தைத் தகுந்த அனுபானங்களில் தினம் இருவேளை துவரம்பருப்பு அளவு கொடுத்துவருக.

**தீரும் வியாதி :—**நரம்பின் தளர்ச்சி நீங்கித் தாது வலுக்கும்.

**பத்தியம் :—**இல்லை நல்ல ஆகாரம் உட்கொள்ளவும்.

## 69. வேறு முறை

**சரக்கும் செய்பாகமும் :—**ஒரு பலம் வெள்ளிச் சரிகையை ஒரு குடவான மண்ஞோட்டில் வைத்துக் கன்ஞன் உலையிலிட்டுப் பழுக்க ஊதி மகிழம்பூச்சாற்றில் கொட்டவும். இப்படி 7 - 8 முறை சரிகையை மண்ஞோட்டில் வைத்துப் பழுக்க ஊதி மகிழம்பூச் சாற்றில் கொட்டி சேதப்படாமல் எடுத்துக் கல்வத்தில் போட்டு மகிழம்பூச்சாறு விட்டுத் தினம ஒன்றுக்கு இரண்டு மூன்று சாமமாக இரண்டு நாள் அரைத்து வில்லைதட்டி உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல்மூடிச் சீலைசெய்து 20 - 30 வறட்டியில் புடமிடவும். இதற்குமேல் இந்த வில்லையைக் கல்வத்தில் போட்

டுச் சிறுசெருப்படைச்சாற்றில் அரைத்து முன்போல் ஒரு புடமும், கடப்பம் இலைச்சாற்றில் அரைத்து ஒரு புடமும் போட்டு எடுக்க நல்ல பற்பமாகும்.

பிரயோகம் :—இந்தப் பற்பத்தில் வேளைக்கு ஒரு துவரம்பருப்பளவு தினம் இருவேளை தகுந்த அனுபானத்தில் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—நரம்பின் தளர்ச்சியினால் நேர்ந்த தாதுநஷ்டம் போகும்.

பத்தியம்:—நல்ல ஆகாரம் உட்கொள்ளவும்.

## 70. பூர பற்பம்

சரக்கும் செய்பாகமும்;—பத்துப் பலம் கம்மாறு வெற்றிலையைச் சிறிது அனலில் வெதுப்பி இடித்து அம்மிக் கல்லில் வைத்து அரைத்து ஒரு மண்சட்டியில் போட்டு ½-படித் தண்ணீர்விட்டுக் கரைத்து அதில் ஒருபலம் முலைப் பாலில் சுத்திசெய்த பூரத்தை டோலாந்திரமாக விதிப்படி சீலையில் கட்டிச் சாறுக்குள் மூழ்கி இருக்கும்படி தொங்க விட்டுச் சாறு எல்லாம் சுண்டும் வரையில் அடுப்பில் வைத்து எரித்துப் பூரத்தை எடுத்துக்கொள்ளவும். இதற்குமேல் ஒரு சட்டியில் வெள்ளைப்பூ கலியாணமுருக்க மிலையைக் கொண்டுவந்து அரைபாகம்போட்டு அடைத்து நடுவில் பூரக்கட்டியைவைத்துச் சட்டி நிறையக் கலியாண முருக்கமிலையைப் போட்டு அழுத்தி அடுப்பில்வைத்து இலையெல்லாம் கருகிவருமளவு எரித்து பூரக்கட்டியை எடுத்துப் பார்க்கத் தன் சாயலற்று வெளுத்துக்காட்டும் இதை அரைத்துக் குப்பியிலிடுக.

பிரயோகம் :—இந்தப் பூரபற்பத்தில் வேளைக்கு ½-1 அரிசிப்பிரமாணம் தேனில் கொடுக்கச் சுரம், சந்நி,

ர வறட்சி, மேகநோய் யாவும் குணமாகும் நீடித்துக் கொடுக்கக்கூடாது.

பத்தியம் :—பால்சாதம், கஞ்சி.

---

# எச்ச இலம்பகம்

## 1. இலவணக் கறுப்பு

சரக்கு :—

| | | |
|---|---|---|
| கறி உப்புத்தூள் | பலம் | 8 |
| சுக்குத்துண்டுகள் | ,, | 1 |
| ஓமம் | ,, | 1½ |

செய்பாகம் :—மேற் கூறப்பட்ட சரக்குகளில் நான்கு பலம் உப்புத்தூளை ஒரு சிறு கலயத்தில் போட்டுப் பரப்பி அதன்மேல் ¾-பலம் ஓமத்தைப் போட்டுச் சுக்குத்துண்டுகளை வைத்து அதன்மேல் மிகுதியுள்ள ஓமத்தையும் உப்புத்தூளையும்போட்டு வாய்க்கு ஓடுமூடி சீலைசெய்து 15-வறட்டியில் புடமிடவும். புடம் ஆறினபின் கலயத்திற்குள் பார்க்கச் சரக்குகள் யாவும் கறுப்பு நிற மாக இருக்கும். இவற்றை யெல்லாம், சேதப்படாமல் கல்வத்தில் போட்டு அரைத்துச் சீசாவில் பத்திரப் படுத்துக.

பிரயோகம் :—இந்த லவணக் கறுப்பில் வேளைக்கு 1 - 1½ குன்றி எடை நெய், தேன் முதலிய அனுபானங் களில் தினம் இருவேளை கொடுத்து வருக.

தீரும் வியாதி:—வயிற்றுவலி, வயிற்றுப்பொருமல், செரியாமை, வாயுவலி, குன்மம், விக்கல், அரோசகம், அதி

சாரபேதி, சூலவலி, வயிற்று இரைச்சல், ஏப்பம், பித்த வாயுவினாலுண்டான மார்புவலி, உஷ்ணபேதி முதலிய வைகள் குணமாகும்.

பத்தியம் :—மோர்சாதம் அல்லது எளிதில் ஜீரணத் திற்கு வரக்கூடிய அன்னம்.

## 2. பஞ்சலவணக் கறுப்பு

சரக்கு :—

| | | |
|---|---|---|
| 1 | வளையலுப்பு | பலம் 1 |
| 2 | இந்துப்பு | ,, 1 |
| 3 | வெடியுப்பு | ,, 1 |
| 4 | கறுப்பு உப்பு | ,, 1 |
| 5 | கல்லுப்பு | ,, 1 |

செய்பாகம் :—மேற்கூறப்பட்ட ஐந்து உப்புக்களை யும் இடித்து ஒரு பழகின மட்பாண்டத்தில் போட்டு அதில் மூன்று பெரிய தும்மட்டிக்காயையும் 2-பலம் பிரண்டையையும் இடித்துப் போட்டு ஒரு படி புளிப்புத் தயிர் விட்டுக் கலக்கிக் கொடுத்து ஒரு இரவு ஊறவிட்டு மறுநாள் அடுப்பில் வைத்துச் சிறுக எரித்துத் தயிர் எல் லாம் சுண்டின சமயம் வாய்க்கு ஓடு மூடி சீலைசெய்து 20 - 25 வறட்டியில் புடமிடவும். ஆறினபின் மண்பாண் டத்தில் பார்க்க எல்லாச் சரக்குகளும் கறுத்து இருக்கும். இதைக் கல்வத்தில் போட்டு நன்கு அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தப் பஞ்சலவணக் கறுப்பில் வேளைக்கு 1 - 1½-குன்றி எடை தினம் இருவேளை தேன், நெய், தயிர் முதலிய அனுபானங்களில் கொடுத்து வருக.

**தீரும் வியாதி:—** உஷ்ணவாயுவினுலுண்டான பேதி, அஜீரணம், வயிற்றுவலி, வயிற்று உப்பிசம், வயிற்று இரைச்சல் முதலியவைகள் குணமாகும்.

**பத்தியம் :—** மோர்சாதம் அல்லது எளிதில் ஜீரணிக்கக்கூடிய ஆகாரம்.

## 3. வேறு முறை

**சரக்கு :—**

| | |
|---|---|
| வளையலுப்பு | பலம் 1 |
| இந்துப்பு | ,, 1 |
| வெடியுப்பு | ,, 1 |
| கல்லுப்பு | ,, 1 |
| சோற்றுப்பு | ,, 1 |

**செய்பாகம் :—** மேற்கூறப்பட்ட ஐந்து உப்புகளையும் நன்ருய்ப் பொடித்து ஒரு பழகின மட்பாண்டத்தில் போட்டு அதனில் 5-பலம் சுக்குத்தூளைப் போட்டு 1-படி புளிப்புத் தயிர்விட்டு ஒருநாள் ஊறவிட்டு மறுநாள் அடுப்பில் வைத்துத் தயிர் சுண்ட எரித்து மட்பாண்டத்திற்கு வட்டமான மண்ஞேடு கொண்டு மூடி சீலசெய்து 20 - 30 வறட்டியில் புடமிடவும். புடம் ஆறினபின் மட்பாண்டத்தில் பார்க்க எல்லாம் கறுத்திருக்கும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—** இந்தப் பஞ்சலவணக் கறுப்பில் வேளைக்கு 1-2 குன்றி எடை தினம் இருவேளை தேன், நெய், மோர் முதலிய அனுபானங்களில் கொடுத்து வருக.

**தீரும் வியாதி:—** உஷ்ணவாயுவினுலுண்டான பேதி, அதிசாரபேதி, வயிற்றுப்பிசம், வயிற்று இரைச்சல், அஜீரணம் முதலியவைகள் குணமாகும்.

## 4. கெந்தகக் கறுப்பு

சரக்கு :—

| | | |
|---|---|---|
| நெல்லிக்காய் கெந்தகம் | பலம் | 5 |
| சுக்குத்தூள் | ,, | 10 |
| திப்பிலித்தூள் | ,, | ½ |
| மிளகுத்தூள் | ,, | ½ |

செய்பாகம்:—கெந்தகத்தை ஒன்றிரண்டாக நறுக்கி ஒரு கோப்பையில் போட்டு மூழ்கப் புளிப்பு மாதுளம்பழச் சாறு விட்டு ஒரு நாள் ஊறவைத்து மறுநாள் சலம் விட்டு அலம்பி எடுத்துக் கொள்ளவும். இப்படி மூன்று முறை செய்து எடுத்தபின் இந்தக் கெந்தகத்தை மீண்டும் குமரிச் சாற்றிலும் பசுவின்மோரிலும் மும்மூன்று நாள் ஊறப் போட்டு எடுத்து அலம்பி ஈரமில்லாமல் துடைத்து எடுத்துக் கொள்ளவும். இது ஒரு விதமான நல்ல சுத்தியாகும். இதைப் பத்திரப்படுத்துக. மேற்கூறிப்பிட்ட சுக்கு மிளகு திப்பிலி முதலியவற்றின் சூரணத்தை ஒருமிக்கக் கலந்து ஒரு குடவான மண் அகண்டத்தில் பாதிச் சூரணத்தைப் போட்டுப் பரப்பி முன் சுத்தி செய்து வைத்துள்ள கெந்தகத்தைப் போட்டு அதன்மேல் மிகுதியுள்ள சூரணத்தைப் போட்டுப் பரப்பி மேல்மூடியிட்டுச் சீலெசெய்து 15-வறட்டியில் புடமிடவும். புடம் ஆறினபின் அகண்டத்திற்குள்ளிட்ட சரக்குகள் யாவும் கறுத்திருக்கும். இதைக் கல்வத்தில் போட்டு மிருதுவாக அரைத்துச் சீசாவில் பத்திரப் படுத்துக.

பிரயோகம்:—இந்தக் கெந்தகக் கறுப்பில் வேளைக்கு ஒரு குன்றி எடை தினம் இருவேளை 5-அல்லது 7-நாள் தேன் நெய் முதலிய அனுபானங்களில் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—சுரம், காமாலை, கைகால்பிடிப்பு, பாரிசவாதம், மேகவாயு, குடைச்சல், சுரபாத சன்னி, ஸ்திரீ

களுக்குண்டாகும் பாற்கட்டு முதலியவைகள் குண மாகும்.

பத்தியம் :—புளி தள்ளி இச்சாபத்தியம்

## 5. பெரிய பட்டுக் கறுப்பு

சரக்கு :—

| | |
|---|---|
| வாலைரசம் | கெந்தகம் |
| வெள்ளைபாஷாணம் | கௌரி |
| மனோசிலை | வீரம் |
| பூரம் | தாளகம் |
| இரசசெந்தூரம் | பூநீறு |
| இலிங்கம் | |

இவைகள் வகைக்கு பலம் - ½.

செய்பாகம் :—முதலில் வாலைரசத்தைக் கல்வத்தில் போட்டுக் கெந்தகத்தைக் கூட்டி அரைக்கவும். இவைகள் நன்ருய் உறவாகிக் கறுப்பு நிறமாக மாறியபின் மற்றச் சரக்குகளை ஒன்றன்பின் ஒன்று சேர்த்து அரைத்து வருவதில் வீரத்தை முடிவில் கூட்டவும். இவைகள் எல்லாம் மிருதுவாகப் பொடியானபின் சிற்ருமணக்கெண்ணெய் துளித்துளியாகக் கூட்டி மெழுதுபோல் அரைத்துக் காலணு அகலமும் அரையணு கனமும் உள்ள வில்லைகளாகத் தட்டி ஒருநாள் நிழலில் ஆற விடுக. மறுநாள் அசல் சிவப்புப் பட்டுத்துணியை ஒவ்வொரு வில்லைக்கும் மூன்று சுற்றுச் சுற்றிப் பிரியாமல் இருக்கும்படி மெல்லிய நூலால் குறுக்கு நெடுக்காக நாலைந்து கட்டுகளிட்டு வைத்துக் கொள்க.

இதற்குமேல் சித்திரமூலவேர்ப்பட்டையை இடித்துத் தூள்செய்து ஒரு அகலமான மண் அகலில் பரப்பி அதன் மேல் முன் முடித்து வைத்துள்ள வில்லைகளை ஒன்றன்மீது

ஒன்றுபடாமல் பரப்பி மேலே சித்திரமூலப்பொடியைப் பரப்பி மேல் அகல் மூடிச் சீலைசெய்து நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்க. அப்பால் தரையில் முக்கால் முழ ஆழமும் அகலமும் உயரமும் உள்ள குழி தோண்டி அடி யில் இரண்டு விரற்கடை உயரம் மணல் கொட்டப் பரப்பி அதன் நடுவில் முன் சீலைசெய்து வைத்துள்ள அகலை வைத்து அதன்மேல் இரண்டு விரற்கடை உயரமிருக்க மணல் போட்டுப் பரப்பி குழி நிறைய வறட்டித் துண்டு களைப் பிட்டு வைத்துத் தீமூட்டவும். புடம் நன்ருய் ஆறினபின் அகலிலிட்ட வில்லைகள் கறுப்பு நிறமாக இருக்கும். இவற்றை அரைத்துச் சீசாவில் பத்திரப் படுத்துக.

**பிரயோகம் :—**இந்தப் பட்டுக்கறுப்பில் வேளைக்கு 2 - 3 அரிசிப் பிரமாணம் தேன், நெய் முதலிய அனுபானங் களில் தினம் இருவேளை கொடுத்து வருக.

**தீரும் வியாதி :—**சுரம், சந்நி, இசிவு, பிரசவ அறை யில் ஸ்திரீகளுக்குக் காணுகின்ற பலவிதப் பிணிகள், மேகசுரம், யானைக்கால் சுரம், வீக்கம், வயிற்றுவலி முதலியவைகள் குணமாகும்.

**பத்தியம் :—**ரோகத்திற்கு ஏற்றவாறு புளி தள்ளி இச்சாபத்தியம்.

## 6. சின்னபட்டுக் கறுப்பு

**சரக்கு :—**

| | | |
|---|---|---|
| சுத்திசெய்த வாலைரசம் | பலம் | 1 |
| சுத்திசெய்த கெந்தகம் | ,, | 1 |

**செய்பாகம் :—**முதலில் வாலைரசத்தைக் கல்வத்தில் போட்டுக் கெந்தகத்தைக்கூட்டி 1 மணி நேரம் அரைத்து மிருதுவாகப் பொடியானபின் சிற்ருமணக்கு எண்ணெய்

துளித்துளியாகவிட்டு இரண்டு மணி நேரம் அரைத்து மெழுகுபதத்தில் கொட்டைப்பாக்களவு உருண்டைகள் செய்து ஒவ்வொன்றுக்கும் அசல் சிவப்புப் பட்டுத் துணியால் ஏழெட்டு சுற்றுச் சுற்றிப் பிரியாமலிருக்கும்பொருட்டு மெல்லிய நூலால் கட்டிவைத்துக் கொள்ளவும்.

இதற்குமேல் பச்சை சித்திரமூலம்வேர்ப் பட்டையைக் கொண்டுவந்து மெழுகுபோலரைத்து ஒவ்வொரு உருண்டைக்கும் அரையணு கனம் இருக்கும்படி கவசம் செய்து ஒவ்வொன்றிற்கும் மண்சீலை ஐந்து செய்து உலரவிட்டு எடுத்துக்கொள்க. மண் தரையில் இரண்டு விரற்கடை மணல்பரப்பி முன் சித்தப்படுத்திய உருண்டைகளை வைத்து இவற்றின்மேல் 3 விரற்கடை மணல் கொட்டி பரப்பி 5 - 6 வறட்டித் துண்டுகளைப் பிட்டு அடுக்கித் தீமுட்டவும். புடம் நன்றாய் ஆறினபின் மண் கவசத்தை நீக்கிச் சித்திரமூலம் உட்பட உருண்டைகளைக் கல்வத்தில் போட்டு அரைக்கக் கறுப்பு நிறமாக இருக்கும். இதைச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இந்தப் பட்டுக்கறுப்பில் வேளைக்குத் துவரம்பருப்பளவு தினம் இருவேளை தேனில் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—முன் முறையில் கூறப்பட்டதே யாகும்.

## 7. வேறு முறை

சரக்கு :—

| | |
|---|---|
| வாலைரசம் | பலம் 1 |
| சுத்தி கெந்தகம் | ,, 1 |

செய்பாகம் ;—இவ்விரண்டையும் கல்வத்தில் போட்டு ஒருமணி நேரம் அரைத்துக் கறுப்பு நிறமாகவும் மிருதுவாகவும் வந்த சமயம் சிற்றாமணக்கெண்ணெயைத்

துளித்துளியாக விட்டு மெழுகு பதமாக அரைத்து ஒரே வில்லையாகச் செய்து முன்போல் சிவப்புப் பட்டுத்துணி காலஞ்ணு கனத்திற்குச் சுற்றி மெல்லிய நூல்கொண்டு கட்டி சித்திரமூலம்வேர்ப்பட்டையை அரைத்து விரல்கனம் அப்பி மண்சீலை செய்து வைத்துக்கொள்ளவும்.

ஒரு மண்கட்ராவில் (மண்கிண்ணம்) அரைபாகம் கிளிஞ்சல் சுண்ணமிட்டு அதன்மேல் முன் சித்தப்படுத்திய வில்லையை வைத்து மேலே கிளிஞ்சல் சுண்ணமிட்டு அழுத்தி மேல் கட்ராவை மூடிச் சீலைசெய்து அதனைச் சதுரமான ஜாண்குழியில் பாதி உமி கொட்டி நடுவில் வைத்து மேல் உமிகொட்டி இரண்டொரு வறட்டிகளைப் பிட்டு வைத்துத் தீமூட்டவும். புடம் ஆறினபின் கட்ராவிலுள்ள வில்லையை எடுத்து மண்கவசம் நீக்கிச் சித்திரமூலம் உட்படக் கல்வத்தில் போட்டு அரைக்கக் கறுப்பு நிறமாக இருக்கும். இதைச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தப் பட்டுக்கறுப்பில் வேளைக்குத் துவரம்பருப்பளவு தினம் இருவேளை தேனில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—முன்முறையில் கூறப்பட்டதேயாகும்.

## 8. பட்டுக் கறுப்பு

சரக்கு :—

| | | |
|---|---|---|
| இரசம் | பலம் | $\frac{1}{2}$ |
| இலிங்கம் | ,, | $\frac{1}{2}$ |
| கெந்தி | ,, | $\frac{1}{2}$ |
| மனோசிலை | ,, | $\frac{1}{2}$ |
| தாளகம் | ,, | $\frac{1}{2}$ |
| பொரித்த வெங்காரம் | ,, | $\frac{1}{2}$ |

**செய்பாகம் :—** முதலில் சுத்திசெய்ய வேண்டிய சரக்குகளைச் சுத்தி செய்து கல்வத்தில் போட்டு ஆதணைப் பால் அவுன்ஸ்-2, எருக்கம்பால் அவுன்ஸ் 2, கோழி முட்டை. வெண்கரு அவுன்ஸ்-4 ஒருமிக்கக் கூட்டிக் கொஞ்சங் கொஞ்சமாக விட்டு அரைத்து மெழுகு பதத்தில் ஒரு உருண்டையாகத் திரட்டி உலர்த்தி அரைபலம் வெண்பட்டுத் துணி சுற்றி நூல்கொண்டு சுற்றிக் கட்டி வைத்துக்கொள்க. ஒரு சிறு குடுவையில் இரண்டு விரற்கடை உயரம் இரும்பு அரப்பொடி போட்டுப் பரப்பி முன் சித்தப்படுத்திய உருண்டையை வைத்து மேலே இரண்டு விரற்கடை இரும்பு அரப்பொடியிட்டுப் பரப்பிக் குடுவையின் வாய்க்கு மூடியிட்டுச் சீலசெய்து, தரையில் இரண்டு மூன்று விரற்கடை உயரம் மணல் கொட்டிப் பரப்பி நடுவில் குடுவையை வைத்துமேல் மணல் கொட்டிக் குவித்து 5-6 விரற்கடை இருக்கக் கவனித்து 7-8 வறட்டிகளைத் துண்டு துண்டாகப் பிட்டு வைத்துத் தீமூட்டவும், புடம் நன்ருய் ஆறினபின் குடுவைக்குள்ளிட்ட உருண்டையை எடுத்துப் பட்டுக் கவசம் உட்பட அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—** இந்தப் பட்டுக்கறுப்பில் வேளைக்குத் துவரம்பருப்பளவு தினம் இருவேளை தேனில் கொடுத்து வருக.

**தீரும் வியாதி :—** சுரம், சந்நி, இசிவு, பிரசவ அறையில் ஸ்திரீகளுக்குக் காணுகின்ற பலவிதப் பிணிகள், மேகசுரம், யானைக்கால், சுரம், வீக்கம், வயிற்றுவலி முதலியவைகள் குணமாகும்.

**பத்தியம் :—** ரோகத்திற்கேற்றவாறு புளி தள்ளி இச்சாபத்தியம்.

## 9. தாளகக் கறுப்பு

சரக்கு :—

| | |
|---|---|
| சுத்திசெய்த தாளகம் | பலம் ½ |
| * மூப்பு | ,, ½ |
| பூவரசங்கொழுந்து இலை அல்லது வெண்தாமரைப்பூவிதழ் | ,, 4 |

செய்பாகம்:—முதலில் தாளகத்தைக் கல்வத்தில் போட்டு இரண்டு மணி நேரம் அரைத்து நன்றாய்ப் பொடி யானபின் மூப்புக் கூட்டி அரைக்கவும். இவ்விரண்டும் கலந்து உறவான சமயம் பூவரசங்கொழுந்திலையையாவது அல்லது தாமரைப் பூவிதழையாவது கொஞ்சங் கொஞ்ச மாகப் போட்டு இரண்டு சாமத்திற்கு அரைத்து மெழுகு பதத்தில் வில்லைதட்டி உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல் மூடிச் சீலைசெய்து ரவியில் நன்றாய் உலர்த்தி அகலின் மொத்த எடைக்கு எட்டு எடை வறட்டித் துண்டுகளின் இடையில் வைத்துத் தீமூட்டவும். புட மாறினபின் வில்லையைப் பார்க்கக் கறுத்திருக்கும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இதில் வேளைக்கு ½-1 குன்றி எடை தினம் இருவேளை நெய், தேன், அதிமதுரக்கியாழம், சிறு காஞ்சொறிவேர்க்கியாழம் போன்ற அனுபானங்களில் கொடுத்து வருக.

தீரும் வியாதி :—சுரம், முறைசுரம், க்ஷயம், காசம், இரைப்பு, இருமல், துஷ்டரணம், குஷ்டம் முதலியவைகள் குணமாகும்.

பத்தியம் :—புளி தள்ளி இச்சாபத்தியம்.

---

* மூப்பு இல்லாமலும் செய்யலாம்.

குறிப்பு :—தாளகத்திற் குண்டான துர்க்குணம் இதற்குக் கிடையாது. தாளகபற்பம், தாளகச் செந்தூரம் முதலியவற்றிற்கு இணையாகக் கொடுக்கலாம்.

## 10. அக்கினி குமாரன்

சரக்கு :—

| | | |
|---|---|---|
| சூதம் | வராகனெடை | 4 |
| மனோசிலை | ,, | 2 |
| கெந்தகம் | ,, | 8 |
| காந்தம் | ,, | 16 |
| புதிய அயப்பொடி | ,, | 32 |

செய்பாகம் :—இவற்றுள் சூதத்தையும் கெந்தகத்தையும் முதலில் கல்வத்தில் போட்டு அரைக்கக் கறுப்பு நிறமாக மாறுதலடையும். அதன்பின் மற்றச் சரக்குகளை ஒன்றன்பின் ஒன்ருய் போட்டு அரைத்து நன்ருய் உறவான பதத்தில் குமரிச்சாறு விட்டுத் தினம் ஒன்றுக்கு இரண்டு மூன்று சாமம் வீதம் 5-7 நாள் வரையில் அரைத்து மெழுகுபதம் வந்த சமயம் காலணு அகலமும் அரையணு கனமும் உள்ள வில்லைகளாகச் செய்து நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்க.

பிறகு சுத்தமான செம்புத் தட்டில் வில்லைகளைப் பரப்பி ஒரு பொருத்தமான செம்புத் தட்டுகொண்டு மூடி சந்து வாய்க்கு உளுந்து சீலைசெய்து உலர்த்திச் சித்திரை மாதத்தில் அக்கினி நட்சத்திரம் (கத்திரி) ஆரம்பம் முதல் வைகாசி மாதம் அக்கினி நட்சத்திரம் முடிவு பெறும் வரையில் இரவியில் வைத்து எடுத்து உளுந்து சீலையை நீக்கி உள்ளிட்ட வில்லைகளைக் கல்வத்தில் போட்டு நன்ருய் இரண்டு சாமம் அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்த மருந்தில் வேளைக்குக் குன்றி எடை தினம் இருவேளை பனவெட்டில் வைத்து 3-அல்லது 5-நாள் வரையில் கொடுத்து வருக.

தீரும் வியாதி:—குன்மம், பெருவயிறு, பித்தம் காமாலை, அண்டவாயு, அக்கினிமந்தம், பிலீகம், குன்ம வாயு, சுரம், சன்னி முதலியவைகள் குணமாகும்.

பத்தியம் :—புளி தள்ளி இச்சாபத்தியம்.

## 11. சுயலோகாக்கினி

சரக்கு:—

| | | |
|---|---|---|
| வாலைரசம் | பலம் | 1 |
| சுத்திகெந்தகம் | ,, | 1 |
| சுத்திகாந்தம் | ,, | 1 |
| சுத்திமண்டூரம் | ,, | 1 |
| நாட்டுவெங்காரம் | ,, | 1 |

செய்பாகம் :—இவற்றை வரிசைக் கிரமமாகக் கல்வத்தில் போட்டு அரைத்து இவைகள் யாவும் நன்றாய் உறவான பதத்தில் குமரிச்சாறு விட்டு 5-7 நாள் அரைத்து மெழுகுபதத்தில் காலணு அகலமும் அரையணு கனமும் உள்ள வில்லைகளாகச் செய்து நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்க.

அப்பால் செப்புத் தகட்டில் ஜாண் அகலமும் 3-விரற்கடை உயரமும் இருக்கும்படி ஒரு கிண்ணம் அடித்து வைத்துக் கொள்ளவும். ஒரு செப்புத்தகட்டைப் பளபளவென்று துலக்கி நடுவில் முன் சித்தப்படுத்திய வில்லைகளை ஒன்றன்மீது ஒன்றுபடாமல் பரப்பி அதன்மேல் செப்புக்கிண்ணம்கொண்டு மூடிச் சந்து வாய்க்கு உளுத்தம் சீலை ஏழு எட்டுசெய்து உலர்த்திச் சித்திரை மாதத்தில் அக்கினி நட்சத்திரம் (கத்திரி) ஆரம்பம் முதல் வைகாசி

மாதம் அக்கினி நட்சத்திரம் முடிவு வரையில் வைத்து எடுத்துச் சீலையை நீக்கி உள்ளிட்ட வில்லைகளைக் கல்வத்தில் போட்டு அரைத்து எடுக்கச் சுத்தக் கறுப்பு நிறமாக இருக்கும். இதைச் சீசாவில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :—** இந்த மருந்தில் வேளைக்குக் குன்றி எடை தினம் இருவேளை பனவெட்டில் 3-5 நாள் கொடுக்கவும்.

**தீரும் வியாதி :—** நாள்பட்ட சுரம், பித்தபாண்டு, மகோதரம், மலைக்காய்ச்சல் முதலியவைகள் குணமாகும்.

**பத்தியம் :—** ரோகத்திற்கு ஏற்றவாறு கஞ்சி, புனல் பாகம் அல்லது புளிதள்ளி இச்சாபத்தியம்.

## 12. கெந்தகக் குழம்பு

**சரக்கு :—**

| | |
|---|---|
| சுத்திசெய்த கெந்தகம் | பலம் 6 |
| வாலைரசம் | „ 1 |
| ஓடுகாந்தம் | „ ½ |

**செய்பாகம் :—** இம் மூன்றையும் கல்வத்தில் போட்டு 3-நாழிகை அரைத்து மிருதுவான பதத்தில் காட்டுச் சிறுகீரைச்சாறு விட்டு 2-3 சாமம் மெழுகுபதமாக அரைத்துப் பின்னர்ச் சிறிது காட்டுச் சிறுகீரைச்சாறு விட்டு குழம்பாகும்படி இளகிய பதமாக அரைத்து வைத்துக்கொள்க. எள்ளையிட்டு ஆட்டும்படியான செக்கில் உலக்கையை எடுத்த பின் கீழிருக்கும் கலங்கல் எண்ணெயை 8-பலம் அளவிற்குக் கொண்டுவந்து ஒரு பழகின தைலப்பாண்டத்திலிட்டு அதனுடன் முன்சித்தப்படுத்திய கெந்தக ரசக்குழம்பை விட்டு அடுப்பில் வைத்துக் கமலாக்கினியாய் எரித்து வருக. அப்பொழுது ஒரு தாம்பாலத்தட்டில்

3-விரற்கடை உயரம் சலம்விட்டு வைத்துக்கொண்டு கொதித்துக் கொண்டிருக்கும் குழம்பில் இரண்டொரு துளிவிட்டுப் பார்க்கத் தண்ணீருக்குள் அமுந்திவிட்டால் சரியான பதமாகும். நீரில் மிதக்கக்கூடாது. இப்படிப் பதம் பார்த்து வாயகன்ற கோப்பையில் பத்திரப் படுத்துக.

பிரயோகம் :—இதில் வேளைக்கு ½-புளியங்கொட்டை அளவு தினம் இருவேளை 3-நாள் கொடுக்கவும். தேவை யானல் ஒருவாரம் சென்றபின் மீண்டும் ஒரு முறை 3-நாள் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—கைகால் குடைச்சல், பிடிப்பு, சூலை, மேகத்தினுல் தேகத்தில் படர்ந்திருக்கும் பலவித படை, கருமேகம், சொறி, குட்டரணம், சிரங்கு, மேகரணம் தீரும்.

பத்தியம் :—புளி தள்ளி இச்சாபத்தியம்.

## 13. இஞ்சிக்காடி

சரக்கும் செய்பாகமும் :—ஒரு வீசை இஞ்சியை நன்ருய் இடித்துக் கிடைக்கும் அளவு சாறு வாங்கி ஒரு சட்டியிலிட்டு இரண்டு மணி நேரம் சென்றபின் சுண் ணும்பு நீக்கித் தெளிவாக ஒரு புட்டியில் விட்டு அத னுடன் இரண்டு அவுன்ஸ் கெந்தகத் திராவகம் (சல்பி யூரிக் ஆசிட்) துளித்துளியாக விட்டு எல்லாம் உறவான சமயம் புட்டியில் வாய்க்கு அடைப்பு இட்டுச் சில தினம் வைத்துவிட ஒருவிதமான காடிநீர் ஆகும்.

கடுக்காய், சீரகம், மிளகு, திப்பிலி, ஓமம் இவற்றி லேதேனும் ஒன்றை மேற்படி காடியில் இரண்டொரு முறை விட்டுப் பிசிரிவைக்க உயர்தரமான பாவனத்திரா வகமாகும் அல்லது சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம்,

ஏலம் ஆக ஐந்து சரக்குகளையும் இடித்துச் சூரணித்து மேற்படி காடிவிட்டுப் பிசரிப் பிசரிச் சிலதினம் உலர்த்தி எடுத்துக்கொண்டு இரண்டொரு குன்றி எடைகொடுக்கப் பித்தவாயு, வயிற்றுப்பிசம், அஜீரணம், குன்மம் முதலிய பற்பல ரோகங்கள் குணமாகும்.

## 14. மூலத்திற்குத் தூபப்பொடி

சரக்கும் செய்பாகமும் :-யானைத்தோலைக் கொண்டு வந்து உளிகொண்டு பொடியாகச் செதுக்கி எடுத்துப் பன்றிநெய்யில் சிலநாள் ஊறப்போட்டு எடுத்து அதனுடன் சமனெடை சதகுப்பை கூட்டிக் கலந்து வைத்துக் கொள்ளவும். வேண்டும்போது புளியம்புறணியை நெருப்பாக்கி அதன்மேல் முன் சித்தப்படுத்திய பொடியைத் தூவி அதிலிருந்து வெளிப்படும் புகையை ஆசனத்தில் படும் படியாக அமர்ந்திருக்க 3-வேளைக்குள் மூலமுளை, ஆசனம் வெளிதள்ளுதல் சுருங்கிவிடும்.

## 15. குஷ்டாமிர்தம்

சரக்கு :—

| | | |
|---|---|---|
| வெள்ளறுகச்சாறு | படி | 1 |
| ஆடுதின்னாப்பாளைச்சாறு | „ | 1 |
| வல்லாரைச்சாறு | „ | 1 |
| தனித்தேங்காய்ப்பால் | „ | 1 |
| நெல்லிக்காய்க் கெந்தகம் | பலம் | 5 |
| தாளகம் | „ | 2½ |
| மயில்துத்தம் | „ | 2½ |
| கருஞ்சீரகம் | „ | 2½ |
| கார்போக அரிசி | „ | 2½ |
| நீரடிமுத்துப்பருப்பு | „ | 5 |

**செய்பாகம்:**—மேற்கூறப்பட்ட சரக்குகளில் முதலில் கெந்தகம், மயில்துத்தம், தாளகம் ஆகிய இம் மூன்றையும் கல்வத்தில் போட்டுப் புங்கம்பால் விட்டுத் தினம் ஒன்றுக்கு நான்கு சாமம் வீதம் 16 - 18 நாள் அரைக்கவும். அப்போது புங்கம்பாலானது ஏறத்தாழ ஒரு படி அளவிற்குச் சரக்குகளுடன் சம்பந்தப்பட்டு அரைப்பிலேயே மெழுகுபதம் வரவேண்டும். அதன்பின் கருஞ்சீரகம், கார்போக அரிசி, நீரடிமுத்து முதலியவற்றை இடித்துச் சூரணித்துப் போட்டு மீண்டும் 2 - 3 நாள் புங்கம்பால் விட்டு அரைத்து வழித்து ஒரு பெரிய இரும்புக் கடாயில்விட்டு அதனுடன் வெள்ளறுகுச்சாறு முதல் தேங்காய்ப்பால் ஈறாக உள்ள நான்கு திரவங்களையும் விட்டுக் கலக்கி அடுப்பில் வைத்துச் சிறுக எரித்துக் கரண்டிகொண்டு துழாவிக் கொடுத்துக்கொண்டு வருக. அப்போது நீர் சுண்டச் சுண்ட எண்ணெய் வேறு வண்டல் வேறாகப் பிரிய ஆரம்பிக்கும். அத்தருணம் கவனித்துப் பார்க்க சாதாரண தேங்காய் எண்ணெய்போல் தெளிவாக இருக்கும். இது பதமல்ல என்பதைக் கவனத்தில் வைக்கக்கடவர். அப்போது கரண்டியைக் கொண்டு வண்டலைக் கடாயில் உறையுமாறு தேய்த்துத் தேய்த்துக்கொடுக்கக் கெந் தகம் உருகித் தீய்ந்து அதன் சத்து எண்ணெயோடு கலக்கும். எண்ணெயும் கருஞ்சிவப்பாகத் தடித்திருக்கும். இதுவே சரியான பதம். வடித்து ஆறவிட்டுச் சீசாவில் பத்திரப்படுத்துக. இதில் கெந்தகம் உறைந்து அடியில் $\frac{1}{2}$ - $\frac{3}{4}$ பலத்திற்கு நிற்கும். குற்றமில்லை. அதிக அளவிற்கு நிற்குமாயின் குணம் சரிவரக் கொடுக்காது. மீண்டும் இந்த எண்ணெயைக் கடாயில் விட்டுக் கெந்தக வண்டலையும் கூட்டி அடுப்பில் வைத்துச் சிறுக எரித்துக் கரண்டிகொண்டு தேய்த்துத் தேய்த்துக் கெந்தகம் தீய்ந்து, அதன் சத்து எண்ணெயில் உறவாகும்படி செய்து வடித்துக்கொள்ளவும். தீயானது அதிகப்படின்

எண்ணெய் தீப்பற்றி எரியும். ஆதலால் சர்வ ஜாக்கிரதை யாகச் செய்து பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தக் குஷ்டாமிர்தத்தைத் தினந் தோறும் ஒரு வேளை காலை நேரத்தில் வெறும் வயிற்றில் 5-6 துளி கற்கண்டுச் சூரணத்துடன் கூட்டிக் கலந்து 5-நாள் சாப்பிடவும். ஆறுவது நாள் மருந்தில்லாமல் விட்டுவைத்து ஏழாவது நாள் நல்லெண்ணெயில் சிறிது சாம்பிராணி போட்டுக் காய்ச்சிச் சிரசிற்கிட்டு ஸ்நானம் செய்விக்கவும்.

தீரும் வியாதி ;—குஷ்டம், தடிப்பு, தோல் சம்பந்த மான பலவிதப் படைகள், தவளைச்சொறி, தேகத்திலுண் டாகும் பலவிதமான மருவு, சொறி, சிரங்கு, மேகரணம் எல்லாம் குணமாகும். ஒருமுறை ஐந்து நாளில் குண மில்லை என்று உணர்ந்தால் 10-நாள் வரையில் மருந்தில் லாமல் விட்டுவைத்து இரண்டு மூன்று ஸ்நானம் செய்த பின் மீண்டும் ஒருமுறை ஐந்துநாள் முன்போல் கொடுக் கவும். இப்படி 3-முறை கொடுப்பதற்குள் எத்தகைய கஷ்டசாத்தியமான தோல் சம்பந்தமான ரோகங்களா யிருப்பினும் குணமாகும்.

பத்தியம் :—நல்லெண்ணெய், கடுகு, புளி, மீன், கரு வாடு, இறால்மீன், முட்டை, பாகல், பூசினி, கொள்ளு, சிறுகீரை, அகத்திக்கீரை ஆகாது.

இச்சாபத்திய விதிப்படி மற்றப் பதார்த்தங்களைக் கூட்டிக்கொள்ளலாம். வெள்ளாட்டுக்கறி ஆகும். பசுவின் பால், மோர் தாராளமாகச் சேர்த்துக்கொள்ளவும்.

குறிப்பு :—மருந்து சாப்பிடும்போது பத்தியமிருக்க வேண்டும். ஸ்நானம் செய்தபின் பத்தியம் இல்லை. இஷ்ட மான போஜனம் செய்யலாம்.

## 16. காசினி சர்பத்

சரக்கு :—காசினிவேர், காசினிவிதை, சோம்புச்செடி யின்வேர், கோவைவேர், சோம்புவிதை, ரோஜாப்பூ, ஆப் சனதீன், தொக்கேகதூஸ், அனிசூன், மணித்தக்காளிவற் றல், கார்பஸ், குலேபனப்ஷா, சடாமாஞ்சி தாமரைப்பூ, கௌதமான், சாஜீரா, இவைகள் வகைக்குத் தோலா-$1\frac{1}{4}$, ரேவல்சின்னி தோலா-$3\frac{3}{4}$, காசினிக்கீரைச்சாறு பலம்—24, கற்கண்டு பலம்-30

செய்பாகம் :—காசினிவேர் முதல் ரேவல்சின்னி ஈருக உள்ள சரக்குகளை ஒன்று மிரண்டுமாக இடித்து ஒரு குடிநீர் பாண்டத்தில் போங்டு $1\frac{1}{2}$-படித் தண்ணீர் விட்டு அடுப்பில்வைத்துச் சிறுக எரித்து $\frac{1}{2}$-படி அளவிற்கு வரும்போது கீழிறக்கி ஆறவிட்டுப் பிசைந்து வடிகட்டி எடுத்து அதனுடன் காசினி இலைச்சாற்றையும் கற்கண் டுத் தூளையும் கூட்டிக் கலக்கி அடுப்பிலேற்றிச் சிறிது குழம்புபதமாகக் காய்ச்சி (அதாவது தேனிலும் சிறிது தடிப்பாக இருக்கும் பதமாக) சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தச் சர்ப்பத்தில் வேளைக்கு $\frac{1}{4}$-அவுன்ஸ் வீதம் பசுவின்பாலில் விட்டுக் கலக்கித் தினம் இருவேளையாகச் சிலதினம் கொடுத்துவருக.

தீரும்வியாதி :—இதனால் மலக்கட்டு வெளியாகும். நீர் அடுத்துப்போகும் இது மகோதரத்திற்கு இன்றியமை யாததாகும்.

## 17. தாளிசப்பத்திரி வடகம்

சரக்கு :—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தாளிசப்பத்திரி | பலம் | 1 | மிளகு | பலம் | 1 |
| செவ்வியம் | ,, | 1 | திப்பிலி | ,, | 2 |
| மோடி | ,, | 2 | சுக்கு | ,, | 3 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| இலவங்கப்பட்டை | ,, | ¼ | இலவங்கப்பத்திரி | ,, | ¼ |
| சிறுநாகப்பூ | ,, | ¼ | ஏலம் | ,, | ¼ |
| வெட்டிவேர் | ,, | ¼ | அரத்தை | ,, | 4 |

செய்பாகம் :—மேற் கூறப்பட்ட சரக்குகளை யெல்லாம் சிறிது இளந்தீயில் வாசனைக் கிளம்ப வெதுப்பி ஆற விட்டு இடித்து வஸ்திரகாயம் செய்து 16-பலம் நல்லவெல்லம் கூட்டி நன்ருய் உறவாகும்படி இடிக்கவும். வெல்லம் இளகும்போது கீழ்மேலாகப் புரட்டிக் கொடுத்து நன்கு இடித்து ஒரு ஈயம்பூசிய தட்டில் சுண்டுவிரல் கனம் இருக்கும்படி அடைதட்டி வைத்துவிடக் கெட்டிப்படும். இடையில் கத்திகொண்டு சுண்டைக்காய் பிரமாணம் இருக்கும்படி குறுக்கு நெடுக்கே கத்திகொண்டு கீறிவிட்டு இரண்டொருநாள் சென்றபின்: துண்டுகளைத் தட்டிலிருந்து பேர்த்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தத் துண்டுகளில் வேளைக்கு 1-2 தினம் இருவேளை சாப்பிடவும்.

தீரும் வியாதி :—வமனம், அதிசாரம், பக்கசூலை, கபசம்பந்தமான பிணிகள் நீங்கும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 18. விரணசஞ்சீவித் தைலம்

சரக்கு :—

| | | |
|---|---|---|
| கெந்தகம் | வராகனெடை | 1 |
| பூரம் | குன்றி எடை | 20 |
| ரசபற்பம் (காலமல்) | ,, | 20 |
| ரசசெந்தூரம் | ,, | 20 |
| இலிங்கம் | ,, | 24 |

செய்பாகம் :—மேற்கூறப்பட்ட ஐந்து சரக்குகளை யும் கல்வத்தில்போட்டு நன்றாய்ப் பொடியாகும் பொருட்டு 2-மணி நேரம் அரைத்து வைத்துக்கொள்க.

அப்பால் இரண்டு பெரிய தேங்காய்களைக் கொண்டு வந்து இரண்டிரண்டாக உடைத்துத் திருகிப் பாலெடுத்து வடிகட்டி ஒரு வாயகன்ற பழகின சட்டியில் விட்டுச் சிறு தீயாக அடுப்பில் வைத்து எரித்து வண்டல் வேறு நெய் வேருகப் பிரியும் சமயம் முன் சித்தப்படுத்திய தூளையிட் டுக் கரண்டிகொண்டு துழாவிக் கீழிறக்கி ஆறவிட்டு ஒரு வராகனெடை சுருள்பட்டையைப் பொடிசெய்து போட்டு ½-மணி நேரம் ஊறவிட்டு வடித்துச் சீசாவில் பத்திரப் படுத்துக.

பிரயோகம் :—இந்தத் தைலத்தை மேற்றடவி வரச் சொறி, சிரங்கு, படை, ரணம், கரப்பான், கால்கடுவன் இவைகள் ஆறும்.

## 19. கெந்தக ரசாயணம்

சரக்கு :—(1)

| | |
|---|---|
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | கிராம்பு |
| ஏலம் | இலவங்கப்பட்டை |
| இலவங்கப்பத்திரி | சாதிக்காய் |
| தாளிசப்பத்திரி | சிறுநாகப்பூ |
| விலாமிச்சம்வேர் | ஓமம் |
| சீரகம் | குரோசாணி ஓமம் |
| சிற்றரத்தை | சித்திரமூலம் |
| திப்பிலிமூலம் | பூலாங்கிழங்கு |
| யானைத்திப்பிலி | கருஞ்சீரகம் |
| கூகைமாவு | திராட்சைப்பழம் |
| சந்தனம் | தக்கோலம் |

| | |
|---|---|
| அதிமதுரம் | முத்தக்காசு |
| சடாமாஞ்சில் | தனியா |
| பேரீச்சங்காய் | கடுக்காய் |
| நெல்லிவற்றல் | தான்றிக்காய் |
| ஜாதிபத்திரி | குங்குமப்பூ |
| நிலப்பனங்கிழங்கு | அசுவகெந்தி |
| நெருஞ்சிமுள் | நீர்முள்ளிவிதை |
| பூனைக்காலிவிதை | குருவேர் |

இவைகள் வகைக்கு வராகனெடை-4.

| | | | |
|---|---|---|---|
| (2) | சுத்திசெய்த நெல்லிக்காய் கெந்தகம் | பலம் | 4 |
| | சுத்திசெய்த பறங்கிச்சக்கை | ,, | 20 |
| | வெள்ளைச்சர்க்கரை | ,, | 20 |
| | கறுப்புச்சர்க்கரை | ,, | 10 |
| | தண்ணீர்விட்டான் கிழங்குச்சாறு | படி | 6 |
| | பசுவின் நெய் | ,, | 1 |
| | தேன் | ,, | 1 |

செய்பாகம் :—முதலாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள நாற்பது சரக்குகளையும் இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள கெந்தகத்தையும் பறங்கிச்சக்கையையும் நன்றாய் இடித்து மெல்லிய சீலையில் அரித்து வைத்துக் கொள்க. அப்பால் ஒரு பழகிய வாயகன்ற பெரிய மட்பாண்டத்தில் தண்ணீர்விட்டான்கிழங்குச் சாற்றில் இருவிதச் சர்க்கரைகளை யிட்டுக் கரைத்து வடிகட்டி விட்டு அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்துப் பாகுபதம் வருஞ்சமயம் முன் சித்தப்படுத்திய சூரணத்தைக் கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டுக் கிளறி நெய், தேன் கூட்டிக் கிளறி வைத்துக்கொள்க. இந்த ரசாயனத்தை ஒரு ஜாடியில் போட்டு வாய்மூடி யிட்டுச் சீலைகொண்டு கட்டித்

தானியப் புடத்தில் 40-நாள் வைக்கவும். இது உபயோகப் படுத்திக் கொள்வதற்குச் சிறந்தது ஆகும்.

பிரயோகம் :—இந்த ரசாயனத்தில் வேளைக்குக் கழற்சிக் கொட்டைப்பிரமாணம் அந்தி சந்தி கொடுத்து வருக.

தீரும் வியாதி :—வாதம் - 80, பித்தம் - 40, கிரிச்சனம் - 6, கிரந்தி-18, சூலை, குன்மம், பாண்டு, சோகை, க்ஷயம், மேகம், அக்கினிமந்தம் முதலியவைகள் குணமாகும். ஒருமுறை 10-நாள் வரையில் தொடர்ச்சியாகக் கொடுக்கவும். மீண்டும் 10-நாள் மருந்தில்லாமல் விட்டு வைத்து இரண்டு ஸ்நானம் செய்தபின் ஒருமுறை 10-நாள் கொடுக்கவும். இப்படி 40-நாள் கொடுப்பது அவசியமாகும்.

பத்தியம் ;—பச்சைப்பயறு, துவரம்பருப்பு, மணித்தக்காளி வற்றல், கத்திரிப்பிஞ்சு, முருங்கைப்பிஞ்சு, கொத்துமல்லிக்கீரை, புளி, உப்பு, பசுவின் நெய், மோர், தயிர், பால், வெங்காயம், சீரகம் கூட்டவும். நல்லெண்ணெய், கடுகு, மஞ்சள், பாகல், பூசனி, அகத்தி, சிறுகீரை, கொள்ளு, மீன், கருவாடு, இரால்மீன், மாமிசம், முட்டை, கோழி முதலியவற்றைத் தள்ளவும்.

## 20. பறங்கிப்பட்டை ரசாயனம்

சரக்கு :—

| | | |
|---|---|---|
| (1) | சங்கம்வேர் | சங்கந்துப்பிவேர் |
| | கொடுவேலிவேர் | நிலப்பனங்கிழங்கு |
| | அசுவகெந்தி | குமிழம்பட்டை |
| | நீர்க்குமிழம்பட்டை | நெருஞ்சிவேர் |
| | பூவரசம் பட்டை | செங்கத்தாரிப்பட்டை |

இவைகளின் சூரணம் வகைக்குப் பலம்-1.

| (2) சுக்கு | மிளகு |
|---|---|
| திப்பிலி | ஓமம் |
| கோஷ்டம் | சிறுநாகப்பூ |
| சிற்றரத்தை | இஞ்சி |
| சன்னலவங்கப்பட்டை | இலவங்கப்பத்திரி |

இவைகளின் சூரணம் வகைக்குப் பலம்-½.

| (3) பறங்கிப்பட்டைச் சூரணம் | பலம் | 5 |
|---|---|---|
| சர்க்கரை | ,, | 10 |
| நெய் | படி | 1 |
| தேன் | ,, | 1 |

செய்பாகம் :—மேற்குறிப்பிட்டுள்ள எல்லாச் சரக்கு களையும் ஒருமிக்க ஒரு பேசினில் போட்டு உறவாகும்படி பிசரி ஒரு சாடியில் போட்டு வாய்மூடியிட்டுச் சீலைகட்டி தானியப் புடத்தில் 3-நாள் வைத்து எடுக்க உபயோகப் படுத்துவதற்கு உரித்தானதாகும்.

பிரயோகம் :—இந்த ரசாயனத்தில் வேளைக்குக் கழற்சிக்கொட்டை அளவு அந்தி சந்தி கொடுத்து வருக.

தீரும் வியாதி :—சூலை, விரணம், கிரந்தி, வாய் கோணல், குஷ்டம், பிரமேகம், குன்மம், மேகவாயு, மூர்ச்சை, வாய்நாற்றம், அக்கினிமந்தம் முதலியவைகள் தீரும்.

பத்தியம்:—இச்சாபத்தியமாக இருப்பதுடன் மிளகு, கடுகு, வாழையிலை, வாழைக்காய், வாழைப்பூ, வாழைத் தண்டு, வாழைப்பழம், கரப்பான் பண்டம் நீக்கவும்.

## 21. நீர்க்கட்டுக்குப் பரிகாரம்

சரக்கு :—நாயுருவி, பனம்பூ, வாழைச்சருகு.

செய்பாகம் :—இவற்றை யெல்லாம் நன்ருய் உலர்த்தித் தனித்தனி எரித்துச் சாம்பலாக்கிச் சமனெடையாக நிறுத்துக் கலந்தெடுத்தது பலம் இரண்டுடன் பொரித்த படிக்காரம், பொருத்த வெங்காரம், இந்துப்பு, சுத்திபூநீறு வகைக்குப் பலம்-½ ஆகக் கூட்டி அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்தக் கலவைச் சூரணத்தில் வேளைக்கு 2 - 3 குன்றி எடை தேனில் இருவேளை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—கல்லடைப்பு, நீரடைப்பு, சதையடைப்பு நீங்கும்.

பத்தியம் :—காரசாரமற்ற அன்னமாகவும் இச்சா பத்தியமாகவும் பத்தியம் செய்க.

## 22. அரையாப்பு கட்டிக்குப் பற்று

சரக்கும் செய்பாகமும் :—நீர்முள்ளிச்சாம்பல், பூசும் மஞ்சள், வெந்தயம், பனைவெல்லம், சுண்ணும்பு, உழமண் சமனெடையாகக் கூட்டி முட்டை வெண்கருவால் அரைத்துத் தினம் ஒரு வேளை கட்டியின்மேல் பூசிக் காய விடுக. இப்படி மூன்று நாள் செய்ய அடங்கி விடும். கட்டி பழுத்துச் சீழ்கொண்டிருப்பின் உடைத்துக் கொள்ளும்.

## 23. கண்டாவிழ்தம்

சரக்கு :—

| | |
|---|---|
| வெள்ளி | பவழம் |
| ஆமை ஓடு | வில்வப்பழத்தின் ஓடு |
| விளாம்பழத்தின் ஓடு | சுக்கு |
| ஏலம் | கிராம்பு |
| வால்மிளகு | அரத்தை |
| சாதிபத்திரி | கோஷ்டம் |
| மோடி | திப்பிலி |
| உருத்திராட்சம் | |

செய்பாகம் :—இவைகளை யெல்லாம் கைவசமாக வைத்துக்கொண்டு ஒரு சந்தனக்கல்லில் முலைப்பால் விட்டு ஒவ்வொரு சரக்கையும் சுமார் 4-5 குன்றி யெடை உறையும்பொருட்டு உறைத்து வழித்துக்கொண்டு தேன் விட்டு மத்தித்து ஒரு கோப்பையில் வைத்துக் கொள்க.

பிரயோகம் :—கைவிரலால் ஒரு கடலைப்பிரமாணம் வழித்து நாவின்மேல் தினம் ஒன்றுக்கு 4-5 முறை தளமிட்டு வருக.

தீரும் வியாதி :—நாவின் சுரசுரப்பு நீங்கி நாவில் நீர் சுரப்பு உண்டாகும். இது விக்கல், வாந்தி, ஓக்காளம், திகைப்பு முதலிய தோஷங்களை நீக்கும்.

## 24. தசாங்கம்

சரக்கு :—

| | | |
|---|---|---|
| சாம்பிராணி | தோலா | $2\frac{1}{2}$ |
| சிலாரசம் | ,, | $2\frac{1}{2}$ |
| சந்தனத்தூள் | ,, | $2\frac{1}{2}$ |
| மட்டிப்பால் | ,, | $2\frac{1}{2}$ |
| அகில்கட்டை | ,, | $1\frac{1}{2}$ |
| தேவதாரு | ,, | $1\frac{1}{2}$ |

| | | |
|---|---|---|
| சீமைக்கிச்சிலிக்கிழங்கு | ,, | $1\frac{1}{2}$ |
| மைசாட்சி | ,, | $1\frac{1}{2}$ |
| வெட்டிவேர் | ,, | $1\frac{1}{2}$ |
| உலர்ந்த தவனம் | ,, | $1\frac{1}{2}$ |

செய்பாகம் :—இவற்றை ஒன்றுமிரண்டுமாக இடித் துத் தூள்செய்து வைத்துக்கொள்க.

பிரயோகம் :—இந்தச் சூரணத்தில் திரிகடிப்பிரமா ணம் கரி நெருப்பனலில் போட்டுப் புகை யுண்டாக்கவும்.

தீரும் வியாதி :—இந்தச் சுகந்த வாசனையானது வீட்டிலுள்ள அசுத்தங்களை நீக்கும். ரோகி யிருக்கும்படி யான படுக்கை அறையில் புகைக்க விஷக்காற்றை யகற் றும். ஸ்நானம் செய்தவுடன் கூந்தலுக்கு இப் புகையைப் பிடிக்கச் சீதளத்தை அணுகவொட்டாமல் செய்யும்.

## 25. பறங்கிப் புண்ணுக்குக் களிம்பு

சரக்கும் செய்பாகமும்:—வெள்ளை குங்கிலியம், கத் தக்காம்பு, ரசகற்பூரம், பிஞ்சிகடுக்காய், மிருதார்சிங்கி சம னெடையாக அரைத்து வஸ்திரகாயம் செய்து கல்வத்தில் போட்டு வெண்ணெய் கூட்டி அரைத்து மேற்றடவுதற் குப் பக்குவமான களிம்பு பதத்தில் வழித்துப் பத்திரப் படுத்துக.

பிரயோகம் :—முதலில் உதியம்பட்டையைக் கியாழ மிட்டு வடிகட்டி சுகர்லெட், படிக்காரத்தூள் வகைக்கு 3-4 குன்றி எடை போட்டுக் கலக்கி விரணத்தை அலம்பி மெல்லிய சீலைகொண்டு ஈரம் நீங்க ஒத்தியெடுத்த பின் களிம்பை லேசாகத்தடவி வருக.

தீரும் வியாதி :—பறங்கிப்புண் என்கிற கொறுக்கு ரணம், படை, சிரங்கு, புண், மேகரணம் முதலியவைகள் குணமாகும்.

## 26. வீக்கம், வாயு, ஆனைக்கால் வீக்கம் இவைகட்குப் பற்று

சரக்கும் செய்பாகமும் :—மைலாலக்கடி, முசாம்பரம், கழற்சிப்பருப்பு, சுக்கு, சாம்பிராணி, பெருங்காயம், சூடம் வகைக்குப் பலம்-1, பூங்காவி பலம்-½ இவைகளை யெல்லாம் சன்னமாக அரைத்து வைத்துக்கொண்டு வேண்டும் போது கோழிமுட்டையின் வெண்கருவு விட்டரைத்து மேற்பூசவும்.

## 27. வேறு முறை

சரக்கும் செய்பாகமும் :—தயிரை ஒரு சீலையில் முடிச்சுக்கட்டி நீரெல்லாம் வடிந்தபின் முடிச்சிலுள்ள தயிருடன் சமனெடை பிரண்டைவேர் கூட்டி அரைத்து மேற்பற்றுப் போடக் குணமாகும்.

## 28. வேறு முறை

சரக்கும் செய்பாகமும் :—அரைப்படி புளிப்புத் தயிரில் ¼-பலம் ஆளிவித்தைப் பொடிசெய்து போட்டுச் சீலையில் முடிச்சு கட்டித் தொங்கவிட்டு நீரெல்லாம் சொட்டிய பின் சீலையிலுள்ள தயிர்த் திப்பியை எடுத்து அதனுடன் கொட்டைப்பாக்களவு கற்சுண்ணத்தைப் போட்டுக் கலந்து மேலுக்குப் பற்று போடவும். இதனால் வீக்கம் குறையும், வலி நீங்கும்.

## 29. புழுவெட்டுப் பரிகாரம்

சரக்கும் செய்பாகமும் :—ஒரு வராகனெடை பொரித்த வெங்காரத்தை ஒரு வெங்கலத்தட்டில் போட்டு அதில் கையாந்தகரைச் சாறுவிட்டு இரும்பு ஆழாக்கின் அடிபாகத்தைக் கொண்டு 3-நாழிகை அரைத்து அதன்

பின் வெண்ணெய் கூட்டி ஊதும் வெள்ளைச் சங்கினுல் 3-நாழிகை அரைத்து வழித்து டப்பியில் பத்திரப்படுத் துக. இந்த மையை மயிர் உதிரும் இடங்களில் தடவிவர மயிர் வளரும்.

## 30. குழந்தைகளுக்குக் காரவுண்டை

சரக்கு :—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுக்கு | பலம் | 1 | திப்பிலி | பலம் | 1 |
| மிளகு | ,, | 2 | ஓமம் | ,, | 1 |
| கருஞ்சீரகம் | ,, | 1 | கறுப்பு உப்பு | ,, | 1 |
| சிறுதேக்கு | ,, | 1 | கிராம்பு | ,, | ½ |
| கண்டத்திப்பிலி | ,, | 1 | சீரகம் | ,, | 2 |
| வாய்விளங்கம் | ,, | 1 | பூண்டு | ,, | 1 |
| வசம்பு சுட்டகரி | ,, | 1 | சதாப்பு இலை | ,, | 1 |

செய்பாகம் :—இவற்றுள் சூரணிக்க வேண்டியவை களைச் சூரணித்து மற்றச் சரக்குகளுடன் கூட்டிக் கல் வத்தில் போட்டு வெந்நீர் விட்டு 2-3 சாமம் அரைத்து மெழுகு பதத்தில் சுண்டுவிரல் கனமும் அங்குலம் நிகள மும் இருக்கும்படி திரட்டி நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்க.

பிரயோகம் :—இந்தக் காரவுண்டையைக் குழந்தை களுக்கு ஸ்நானம் செய்வித்தவுடன் சந்தனக்கல்லில் சிறிது முலைப்பால் விட்டு வயதுக்கு ஏற்றவாறு 7-8 உறை உறைத்து முலைப்பாலில் கலக்கிக் கொடுக்கவும்.

தீரும் வியாதி :—இது குழந்தைகளுக்குக் காணும் மந்தத்தை நீக்கித் தீபனத்தை அதிகப்படுத்தி நல்லபடி ஆகாரத்தை விரும்பும்படி செய்யும். வாதரோகத்தையும் சீதள ரோகத்தையும் அணுக வொட்டாது. குடல் இரைப்பை முதலியவற்றின் தோஷத்தை நீக்கி நோயின்றி வளரச் செய்யும்.

பத்தியம் :—குழந்தைகளுக்கு இயற்கையான தாய்ப் பால் அல்லது பசுவின்பால்.

## 31. பஞ்சரத்தின களிம்பு

சரக்கு :—

சூதகம் கெந்தி
இலிங்கம் காந்தம்
வெங்காரம்

இவைகள் வகைக்குப் பலம்-¼.

செய்பாகம் :—இவைகளைக் கல்வத்தில் போட்டுப் *பருத்திக்கொட்டைப்பால்விட்டு இரண்டு சாமம் அரைத்துக் குழம்பு பதத்தில் வழித்துக் கோப்பையில் பத்திரப் படுத்துக.

பிரயோகம் :—இந்தக் களிம்பைக் கால் நகச்சொத்தை, புழுவெட்டு, கொறுக்கு, மதுமேகத்தினால் இலிங்கத்தின் முனைத்தோலில் காணும் வெடிப்பு முதலியவற்றிற்கும் மேற்றடவிவரக் குணமாகும்.

## 32. பஞ்சரத்தினக் குழம்பு

சரக்கு :—

வெடியுப்பு எண்ணெய் வெங்காரம்
காய்ச்சுக்கட்டி கற்கண்டு

இவைகள் வகைக்குப் பலம்-½.

கற்பூரம் பலம்-¼

செய்பாகம் :—இவை தம்மைக் கல்வத்தில் போட்டு அரைத்து நன்றாய்த் துகளானபின் தும்பையிலைச்சாறு

---

*பருத்திக்கொட்டையை ஓர் இரவு தண்ணீரில் ஊறப் போட்டு மறுநாள் ஆட்டுக்கல்லுரலில் போட்டு ஆட்டிப் பிழிந்தெடுத்த பால்.

விட்டு ஒரு மணி நேரம் அரைத்து வழித்து வாயகன்ற கோப்பையில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இதை இரவுக்காலங்களில் கைவிரலில் உள்ள சொத்தை நகங்களுக்குத் தடவிவர 10-15 நாட்களுக்குள் சொத்தை நகம் விழுந்து புதிய நகம் முளைக்கும்.

## 33. ஆருத விரணத்திற்கு இலிங்கப்புகை

சரக்கு :—

| | |
|---|---|
| இலிங்கம் | வராகனெடை 1 |
| தேன் மெழுகு | பலம் ½ |
| தேங்காய் எண்ணெய் | „ 1 |
| துரிசு | வராகனெடை 1 |

செய்பாகம் :—முதலில் துரிசுகட்டிக்கு ஐந்தாறு சுற்றுச்சீலையைச் சுற்றி அடுப்பில் போட்டு வெந்து வெளுத்து வரும்போது எடுத்துக்கொள்ளவும். அப்பால் கல்வத்தில் இலிங்கத்தைப்போட்டு நன்ருய் அரைத்து அதில் தேங்காய் எண்ணெயும் மெழுகையும் ஒரு இரும்புக் கரண்டியில் போட்டு உருக்கிச் சாய்த்துத் துரிசு வெள்ளையைக்கூட்டி அரைத்து வழித்து பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—வேண்டும்போது இந்தக் களிம்பைச் சீலையில் தடவி வத்திபோல் சுற்றிக்கொளுத்தி ரணத்தின் மேல் புகைபடும்படி காட்டவும். இப்படி இரண்டு மூன்று முறை காட்டவும்.

தீரும் வியாதி :—ஆருத ரணங்கள் மேகரணங்கள் ஆறும்.

குறிப்பு :—இந்தப் புகையைக் காட்டியபின் விரணத்தை ஆற்றக்கூடிய எந்தக் களிம்பைத் தடவினுலும் விரைவில் ஆறும்.

## 34. தண்ணீர்விட்டான் கிழங்கு முறபா

**சரக்கும் செய்பாகமும் :—** உலர்ந்த நாட்டுத் தண்ணீர்விட்டான் கிழங்கு நடுத்தரமானதாகச் சேகரிக்க வேண்டும். எங்ஙனமெனில் இதை வளைத்தால் வளையக் கூடிய இளங்கிழங்குகளாக இருக்கக்கூடாது. இதை வளைத்து உடைத்தால் உடையாதிருக்கின்ற முதிர்ந்த கிழங்குகளாகவும் இருக்கக்கூடாது. இதை வளைத்து உடைத்தால் எளிதில் உடையவேண்டும். இதுவே நடுத்தரமானது. இந்தக் கிழங்குகளை ஒரு மட்பாண்டத்தில் போட்டுப் பாண்டம் நிறையத் தண்ணீர்விட்டு ஏழுநாள் ஊறவைக்கவும். இதில் அழுகல் இருந்து மேல் மிதக்குமானால் நீக்கிவிடவும். எட்டாவதுநாள் இந்தக் கிழங்குகளின் மேலுள்ள தோலை உரித்துவிட்டுக் கல்லின்மேல் வைத்துச் சிதைத்து உள்ளிருக்கப்பட்ட நரம்புகளை நீக்கித் தண்ணீர்விட்டு நன்ருய் அலம்பி ஒரு மட்பாண்டத்தில் போட்டு மூழ்கப் பசுவின் பால்விட்டு அடுப்பில் வைத்து எரித்துக் கிழங்குகள் மிருதுவான சமயம் பாலை வடித்துவிட்டு இந்தக் கிழங்குகளைத் துவரம்பருப்பு கடலைப்பருப்பு அளவிருக்கும்படி சிறு துண்டுகளாக நறுக்கி 5-பலம் அளவிற்கு எடுத்து வைத்துக்கொள்ளவும்.

இதற்குமேல் 20-பலம் அப்பட்டமான தேனைக் கொண்டுவந்து ஒரு இரும்புக்கடாயில்விட்டுச் சிறு தீயாக எரித்துத் தேனில் காணும் நுரை, அழுக்கு, மெழுகு இவற்றைச் சல்லிக்கரண்டிகொண்டு அப்புறப்படுத்தி ஆறினபின் ஒரு பேசினில் விட்டு முன் சித்தப்படுத்தி வைத்துள்ள தண்ணீர்விட்டான் கிழங்குப் பொடிகளைப்போட்டு 5-6 நாள் ஊறவிடவும். அப்போது கிழங்குத் துண்டுகள் தேனிலுள்ள சாரத்தைக் கிரகித்துக் கொள்ளத் தேன் தண்ணீர்போல் நீற்றுவிடும். மறுபடியும் இந்த நீரை

வடித்து இரும்புக் கடாயிலிட்டுக் காய்ச்சிப் பாகுபதம் வரும்போது கிழங்குள்ள பேசினில்விட்டு 5-6 நாள் வைக்கவும். இதுவும் நீற்றுத் தண்ணீர்போலானால் மீண்டும் வடித்து அதனுடன் 5-பலம் சுத்தமான தேன் கூட்டி காய்ச்சிப் பாகுபதத்தில் கிழங்குள்ள பேசினில் விடவும். இப்படி ஊறப் போட்டதுவே முறபா ஆகும்.

பிரயோகம் :—இந்த முறபாவை வேளைக்கு ஒரு தேக்கரண்டி நிறைய எடுத்துக் காலை மாலை இருநேரம் சாப்பிடவும். இப்படி 10-20-நாள் சாப்பிடத் தாதுவிருத்தி விசேஷிக்கும். விந்து கட்டும். இதைச் சாப்பிடுவதற்கும் ருசியாக இருக்கும். வெட்டை தணியும். ஆரம்பத்தில் சிலருக்கு ஜலதோஷம் முதலியவைகளைச் செய்தாலும் பின்பு சரீரத்திற்குப் பொருத்தப்படும்.

## 35. உருத்திராட்சக் கறுப்பு

சரக்கு :—

| | | |
|---|---|---|
| மயிலிறகு கத்தரித்த பொடி | பலம் | ½ |
| அரிசித்திப்பிலி | ,, | ½ |
| துண்டுதுண்டாக உடைத்த உருத்திராக்ஷம் | ,, | ½ |

செய்பாகம் :—ஒரு குடுவையில் முசுமுசுக்கை இலையைப் பாதி போட்டு அதன்மேல் ஷை சரக்குகளைப்போட்டு அதன்மேல் முசுமுசுக்கை இலையைப் போட்டு வாய்மூடிச் சீலைசெய்து 30-வறட்டியில் புடமிடவும். ஆறினபின் குடுவையிலுள்ள எல்லாச் சரக்குகளையும் கல்வத்தில் போட்டு அரைத்து எடுக்கக் கறுப்புநிறமாக இருக்கும். இதைச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—குழந்தைகளின் பருவத்திற்கு ஏற்றவாறு 1-2 அரிசிப்பிரமாணம் தேனில் அனுபானம் செய்து தினம் 2-3 வேளை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—இருமல், வாந்தி, விக்கல் தீரும்.

## 36. சந்தனுசவம்

சரக்கு:—(1)

| | |
|---|---|
| சந்தனத்தூள் | தாமரைக்கிழங்கு |
| விலாமிச்சம்வேர் | லோத்திரப்பட்டை |
| கோரைக்கிழங்கு | மஞ்சிஷ்டி |
| பெருங்குமிழ் | செஞ்சந்தனம் |
| நீலோற்பலக்கிழங்கு | வட்டத்திருப்பி |
| ஞாழல் | நிலவேம்பு |
| பற்பாடகம் | ஆலம்பட்டை |
| பச்சைக்கிச்சிலிக்கிழங்கு | பேய்ப்புடல் |
| அரசம்பட்டை | மாம்பட்டை |
| இலவம்பிசின் | அதிமதுரம் |
| சிற்றரத்தை | மந்தாரைப்பூ |

இவைகள் வகைக்குப் பலம்-1.

சரக்கு :—(2)

| | | |
|---|---|---|
| காட்டாத்திப்பூ | பலம் | 16 |
| உலர்ந்த திராட்சைப்பழம் | ,, | 20 |

சரக்கு:—(3)

| | | |
|---|---|---|
| வெல்லம் | பலம் | 100 |
| தேன் | ,, | 50 |
| சுத்த ஜலம் | படி | 32 |

செய்பாகம் :—ஒரு பெரும்பானையைக் காரசாரமின்றிப் பழக்கி அதனை நன்றாய்க் கழுவிக் காயவைத்துச் சாம்பிராணி தூபங் காட்டி அதில் மூன்றாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள சுத்த ஜலத்தையும் வெல்லத்தையும் போட்டுக் கரைத்துத் தேன்விட்டு வைத்துவிடவும்.

இதற்குமேல் முதலாவது இரண்டாவது அங்கங்களில் கூறப்பட்டுள்ள சரக்குகளை யெல்லாம் ஒன்றுமிரண்டுமாக இடித்துப் போட்டு வாய்க்குப் பொருத்தமான மண் சாணக்கைக் கொண்டுமூடி அசையாமல் ஒருபுறம் வைத்திருந்து 30 - நாள் சென்றெடுத்துத் தெளிந்துள்ள நீரை வடித்துச் சீசாவிலிடுக.

பிரயோகம் :—இந்த ஆசவத்தை வேளைக்கு ½ - 1 பலம் வீதம் தினம் இருவேளை உட்கொள்ள வேண்டும்.

தீரும் வியாதி :—வெள்ளை, வெட்டை, பெரும்பாடு, தாகம், அழலை, சுக்கில மேகம், கை கால் கண் முதலிய ஸ்தானங்களில் ஏற்படும் எரிச்சல் முதலியவைகள் குணமாவதுடன் இரத்தக் கொதிப்பைத் தணித்து இருதயத்திற்கு நல்ல பலத்தை யுண்டாக்கும்.

பத்தியம் :—இச்சாபத்தியமாக இருக்க வேண்டும். மருந்துண்ணுங் காலத்தில் ஸ்திரிகளுடைய சங்கற்பம் கூடாது.

## 37. பிப்பல்யாசவம்

சரக்கு :—(1)

| | |
|---|---|
| அரிசித்திப்பிலி | மிளகு |
| செவ்வியம் | வாய்விளங்கம் |
| மஞ்சள் | கோரைக்கிழங்கு |
| சித்திரமூலம்வேர்பட்டை | பாக்கு |
| லோத்திரப்பட்டை | நெல்லிவற்றல் |
| வட்டத்திருப்பி | விலாமிச்சம்வேர் |
| சந்தனம் | கோஷ்டம் |
| ஞாழல் | கிராம்பு |
| கிரந்திதகரம் | சடாமாஞ்சில் |

| | |
|---|---|
| சிறுநாகப்பூ | இலவங்கப்பட்டை |
| இலவங்கப்பத்திரி | ஏலம் |

இவைகள் வகைக்குப் பலம்-½.

சரக்கு :—(2)

| | | |
|---|---|---|
| வெல்லம் | பலம் | 300 |
| காட்டாத்திப்பூ | ,, | 10 |
| திராட்சைப்பழம் | ,, | 60 |
| தண்ணீர் | படி | 32 |

செய்பாகம் :—ஒரு பெரும்பானையைக் காரசாரமின்றிப் பழக்கி, அதனை நன்குய்க் கழுவிக் காய வைத்துக் கொள்க. பின்னர் ஜடாமாஞ்சில் மிளகு இவ்விரண்டையும் கரிநெருப்பனல் போட்டு அதிலிருந்துண்டாகும் புகையை முன் சித்தப்படுத்திய பானையின் உட்புறத்திற்குத் தூபங் காட்டி இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள சரக்குகளை யெல்லாம் போட்டுக் கரைத்து முதலாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள சரக்குகளை யெல்லாம் ஒன்று மிரண்டுமாக இடித்துப் போட்டுக் கலக்கி வாய்க்குப் பொருத்தமான மண் சாணக்கைக் கொண்டு மூடி அசை யாமல் ஒருபுறம் வைத்து விடுக. ஒரு மாதம் சென்ற பின் மேலே தெளிந்துள்ள நீரை வடித்துச் சீசாக்களில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்த ஆசவத்தை வேளைக்கு ½ - ¾ பலம் வீதம் தினம் காலை மாலை சாப்பிட்டு வருக.

தீரும் வியாதி :—குன்மம், மகோதரம், கிராணி, பாண்டு, மூலம், க்ஷயம் தீருவதுடன் தேவசக்தி மீறும்.

பத்தியம் :—இச்சாபத்தியமாக அன்னங் கொள்வதுடன் சிற்றின்ப உணர்ச்சியை முற்றிலும் நீக்க வேண்டும்.

## 38. இலவங்காசவம்

சரக்கு :—

| | |
|---|---|
| இலவங்கம் | திப்பிலி |
| அயப்பொடி | மிளகு |
| வாசனைப்பச்சிலை | வகைக்குப் பலம் 2 |
| தண்ணீர் படி 4 | வெல்லம் ,, 20 |

செய்பாகம் :—சுத்தமாகப் பழக்கிய ஒரு பெரும் பானைக்குச் சாம்பிராணித் தூபம் கொடுத்து அதில் தண்ணீரையும் வெல்லத்தையும் போட்டுக் கரைத்து அதனில் மேற் கூறப்பட்ட ஐந்து சரக்குகளையும் நன்கு இடித்துக் கூட்டி வாய்க்குப் பொருத்தமான மண்ஞோட்டைக் கொண்டு மூடி அசையாமல் ஒருபுறம் 30-நாள் வைத்து விடுக. அதன்பின் மேலே தெளிந்துள்ள நீரை வடிகட்டிச் சீசாக்களில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்த ஆசவத்தை வேளைக்கு ¼ - ½-பலம் தினம் இருவேளை சாப்பிட்டு வருக.

தீரும் வியாதி :—குதரோகம், கிராணி, கல்லீரல், மண்ணீரல், வீக்கம், குன்மம், வயிற்றுச்சங்கடம், வெண்குட்டம், கிருமிரோகம், கிரந்தி, சுரம், சோபை, காமாலை, பாண்டு, இருதயரோகம் முதலியவைகள் குணமாகும். இன்னும் கண்களைப் பறிக்கத்தக்க தேஜசு உண்டாகும்.

பத்தியம் :—இச்சாபத்தியம் ஸ்திரீபோகம் கூடாது.

## 39. சர்க்கராசவம்

சரக்கு :—(1)

| | | |
|---|---|---|
| சிறுகாஞ்சொறிவேர் | பலம் | 16 |
| சித்திரமூலம்வேர்ப்பட்டை | ,, | 2 |
| ஆடாதோடை | ,, | 2 |

| | | |
|---|---|---|
| கடுக்காய் | ,, | 2 |
| நெல்லிவற்றல் | ,, | 2 |
| வட்டத்திருப்பி | ,, | 2 |
| சுக்கு | ,, | 2 |

சரக்கு :—(2)

| | | |
|---|---|---|
| திப்பிலி | பலம் | 1 |
| செவ்வியம் | ,, | 1 |
| ஞாழல் | ,, | 1 |

சரக்கு :—(3)

| | |
|---|---|
| நாட்டுச்சர்க்கரை | பலம் 100 |

செய்பாகம் :—முதலாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள ஏழு சரக்குகளையும் இடித்து ஒரு குடிநீர்ப் பாண்டத்தில் போட்டு 16-படி சுத்த சலம்விட்டு அடுப்பிலேற்றிச் சிறுக எரித்து 4-படி அளவிற்குச் சுண்டின சமயம் பிசைந்து வடிகட்டி வைத்துக்கொள்க. அப்பால் காரசாரமின்றிச் சுத்தமாகப் பழக்கி வைத்துள்ள ஒரு மட்பானைக்குத் தேனும் நெய்யும் கலந்து உட்புறம் பூசி அதற்குள் முன் சித்தப்படுத்திய கியாழத்தை விட்டு இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள சரக்குகளை நன்கு இடித்துப் போட்டு மூன்றுவது அங்கத்தில் கூறப்பட்ட நாட்டுச் சர்க்கரையைப் போட்டுக் கரைத்து வாய்க்குப் பொருத்தமான மண் சாணக்கைக் கொண்டு மூடிச் சீலைசெய்து அசையாமல் ஒரு மாதம் வைத்துவிடவும். அதன் பின்பு மேலே தெளிந்துள்ள நீரை வடிகட்டிச் சீசாக்களில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்த ஆசவத்தை வேளைக்கு $\frac{1}{4}$ - $\frac{1}{2}$-பலம் வீதம் தினம் இருவேளை சாப்பிட்டு வருக.

தீரும் வியாதி:-மூலம், கிராணி, அரோசகம், பாண்டு, இருதயரோகம், மலமூத்திர நோய்கள் எல்லாம் குண மாகும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 40. பப்பூலாரிஷ்டம்

சரக்கு :—(1)

| | | |
|---|---|---|
| கருவேலம்பட்டை | பலம் | 200 |
| தண்ணீர் | படி | 64 |
| வெல்லம் | பலம் | 300 |

சரக்கு :—(2)

| | | |
|---|---|---|
| காட்டாத்திப்பூ | பலம் | 16 |
| திப்பிலி | ,, | 2 |
| ஜாதிக்காய் | ,, | 1 |
| தக்கோலம் | ,, | 1 |
| இலவங்கப்பட்டை | ,, | 1 |
| இலவங்கப்பத்திரி | ,, | 1 |
| ஏலம் | ,, | 1 |
| சிறுநாகப்பூ | ,, | 1 |
| கிராம்பு | ,, | 1 |
| மிளகு | ,, | 1 |

செய்பாகம் ;—முதலாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள கருவேலம்பட்டையைப் பஞ்சுபோல் நசுக்கி ஒரு பெரிய குடிநீர்ப் பாண்டத்தில் போட்டு தண்ணீர் விட்டு அடுப்பில் வைத்துச் சிறுக எரித்து நான்கிலொரு பாக மாகச் சுண்டி வரும்போது (அதாவது 16-படி அளவிற்கு) பிசைந்து வடிகட்டி வெல்லத்தைப் போட்டுக் கரைத்து வைத்துக் கொள்ளவும். பின்னர் ஒரு பெரிய மண் பானையைக் காரசார மில்லாமல் பழக்கி நன்ருய்ச் சுத்த சலம்

விட்டு அலம்பிக் காயவைத்து உட்பாகத்திற்குச் சாம்பிராணி தூபம் காட்டி முன் சித்தப்படுத்திய கியாழத்தை விட்டு இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட்ட சரக்குகளையெல்லாம் நன்கு இடித்துப் போட்டு வாய்க்குப் பொருத்தமான மண்சாணக்கைக்கொண்டு மூடிச் சீலசெய்து அசையாமல் 30-நாள் வைத்து விடவும். இதற்குப் பின் மேல் மூடியை நீக்கித் தெளிந்துள்ள நீரை வடிகட்டிச் சீசாக்களில் பத்திரப்படுத்தவும்.

பிரயோகம் :—இந்த அரிஷ்டத்தை வேளைக்கு $\frac{1}{4}$ - $\frac{1}{2}$ பலம் தினம் இருவேளை உட்கொள்ளவும்.

தீரும் வியாதி :—பிரமேகம், குன்மம், காசம், கஷ்டசுவாசம், க்ஷயம், கிராணி, அதிசாரம், பெரும்பாடு இவைகள் தீரும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 41. சிரீஷாரிஷ்டம்

சரக்கு :—(1)

| | | |
|---|---|---|
| வாகைப்பட்டை | பலம் | 50 |
| தண்ணீர் | படி | 32 |
| வெல்லம் | பலம் | 200 |

(2)

| | |
|---|---|
| திப்பிலி | ஞாழல் |
| கோஷ்டம் | ஏலம் |
| அவுரிவேர் | சிறுநாகப்பூ |
| மஞ்சள் | மரமஞ்சள் |
| சுக்கு | |

இவைகள் வகைக்குப் பலம்-1.

செய்பாகம் :—முதலாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள வாகைப்பட்டையைப் பஞ்சுபோல் நசுக்கி ஒரு குடிநீர்ப் பாண்டத்தில் போட்டுத் தண்ணீர்விட்டு அடுப்பில்

வைத்துச் சிறுக எரித்து 8-படி அளவிற்குச் சுண்டி வரும் போது வடிகட்டி அதில் வெல்லத்தைப் போட்டுக் கரைத்து வைத்துக் கொள்ளவும். இதற்குமேல் ஒரு பெரிய பாண்டத்தை முன்முறையில் கூறியவாறு பழக்கிச் சாம் பிராணித் தூபம் கொடுத்து அதனில் மேல் சித்தப்படுத் திய கியாழத்தை விட்டு இரண்டாவது அங்கத்தில் குறிப் பிட்டுள்ள சரக்குகளை யெல்லாம் ஒன்று மிரண்டுமாக இடித்துப் போட்டுக் கலக்கி வாய்க்குப் பொருத்தமான மண்ஞோட்டைக் கொண்டு மூடிச் சீலசெய்து ஒரு மாதம் வரையில் அசையாமல் வைத்து விடவும். பின்னர் தெளிந் துள்ள நீரை வடித்துச் சீசாக்களில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்த அரிஷ்டத்தில் வேளைக்கு $\frac{1}{2}$ - $\frac{3}{4}$ பலம் வீதம் தினம் இருவேளை கொடுத்துக்கொண்டு வருக.

தீரும் வியாதி:—ஒருவர் மனப்பாங்கைக் கெடுத்துத் தன்வசம் செய்யும் பொருட்டுக் கொடுக்கப்பட்ட ஈடு என் னும் மருந்தை முறித்து விடும். அதனுல் உண்டான பற் பல கெடுதல்களும் நிவர்த்தியாகும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 42. முஸ்தாரிஷ்டம்

சரக்கு :—

| | | | |
|---|---|---|---|
| (1) | கோரைக்கிழங்கு | பலம் | 40 |
| | தண்ணீர் | படி | 64 |
| | வெல்லம் | பலம் | 100 |
| | தேன் | படி | 8 |

(2) ஜாதிக்காய் — ஜாதிபத்திரி
பச்சிலை — சித்திரமூலவேர்ப்பட்டை
மாங்கனிப்பருப்பு — கிராம்பு
சீரகம் — அதிவிடயம்

மாதுளம்பழத்தின்ஓடு வெட்பாலையரிசி
வெட்பாலைவேர் சுக்கு
புளியமிலை ஈர்க்கு

இவைகள் வகைக்குப் பலம்-1.

செய்பாகம் :—முதலாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள கோரைக்கிழங்கை நன்றாய்ச் சுத்தம் செய்து இடித்து ஒரு குடிநீர்ப் பாண்டத்தில் போட்டுத் தண்ணீர் விட்டு அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்து 16-படி அளவிற்தச் சுண்டிவருஞ் சமயம் கீழிறக்கி ஆறவிட்டுப் பிசைந்து வடிகட்டி வெல்லம் தேன் கூட்டிக் கரைத்து வைத்துக்கொள்ளவும்.

அப்பால் ஒரு பெரிய மண்பானையைக் காரசாரமின்றி பழக்கி நன்றாய்க் கழுவிக் காயவைத்து எடுத்துக்கொள்க. அதன்பின் சடாமாஞ்சில், மிளகு இவ்விரண்டையும் பொடித்துக் கரி நெருப்பனலில் போட்டுப் புகை கிளம்பும் சமயம் முன் சித்தப்படுத்திய பானையின் உட்புறத்திற்குத் தூபம் காட்டி அதில் முன் சித்தப்படுத்திய திரவத்தைவிட்டு, இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள சரக்குகளை ஒன்றுமிரண்டுமாக இடித்துப் போட்டு வாய்க்குப் பொருத்தமான மண் சாணக்கைக்கொண்டு மூடிச் சீலைசெய்து அசையாமல் ஒரு மாதம் வைத்துவிடவும். அதன்பின் வாய்மூடியை எடுத்துத் தெளிந்துள்ள நீரை வடிகட்டிச் சீசாக்களில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்த அரிஷ்டத்தில் வேளைக்கு $\frac{1}{2}$ - $\frac{3}{4}$ பலம் தினம் இருவேளை சாப்பிட்டுக்கொண்டு வருக.

தீரும் வியாதி :—அதிசாரம், வெளிமூலம், உள்மூலம், கிராணி, குன்மம் முதலியவைகள் தீரும். நல்ல பசியை யுண்டாக்கும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 43. திரிபலாத்யரிஷ்டம்

சரக்கு :—

(1) கொட்டை நீக்கிய கடுக்காய்த்தோல்
விதை நீக்கிய நெல்லிவற்றல்
கொட்டை நீக்கிய தான்றிக்காய்த்தோல்
ஓமம் கொடுவேலிவேர்ப்பட்டை
திப்பிலி வாய்விளங்கம்
சன்னமாக இராவிய அரப்பொடி

இவைகள் வகைக்குப் பலம்-4.

| | | |
|---|---|---|
| (2) வெல்லம் | பலம் | 200 |
| தேன் | ,, | 50 |
| தண்ணீர் | படி | 16 |

**செய்பாகம் :**—ஒரு பெரிய மட்பாண்டத்தை முன் முறையில் கூறியவண்ணம் பழக்கித் தூபமிட்டு அதனில் இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள தண்ணீர், தேன் முதலியவற்றைவிட்டு வெல்லத்தைக் கூட்டிக் கரைத்து வைத்துக்கொள்ளவும். அப்பால் முதலாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள எல்லாச் சரக்குகளையும் நன்கு இடித்து முன் சித்தப்படுத்திய பாண்டத்தில் போட்டு வாய்க்குப் பொருத்தமான மண் சாணக்கைக்கொண்டு மூடிச் சீலைசெய்து அசையாமல் 40-நாள் வைத்துவிடவும். அதன்பின் மேல்மூடியை எடுத்துத் தெளிந்துள்ள நீரை வடிகட்டிச் சீசாக்களில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம் :**—இந்த அரிஷ்டத்தில் வேளைக்கு ¼ - ½-பலம் வீதம் தினம் இருவேளை கொடுக்கவும்.

**தீரும் வியாதி ;**—மூலம், சோபை, பாண்டு, காமாலை, வீக்கம் முதலியவைகள் தீரும். மலம், நீர் தாராளமாக

வெளிப்படும். இன்றேல் அளவை அதிகப்படுத்திக் கொள்க.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

## 44. வாசாரிஷ்டம்

சரக்கு :—(1)

| | | |
|---|---|---|
| ஆடாதோடை | பலம் | 200 |
| தண்ணீர் | படி | 8 |
| வெல்லம் | பலம் | 100 |

சரக்கு :—(2)

| | | |
|---|---|---|
| காட்டாத்திப்பூ | பலம் | 8 |
| இலவங்கப்பட்டை | ,, | 1 |
| இலவங்கப்பத்திரி | ,, | 1 |
| ஏலம் | ,, | 1 |
| சிறுநாகப்பூ | ,, | 1 |
| சுக்கு | ,, | 1 |
| மிளகு | ,, | 1 |
| திப்பிலி | ,, | 1 |
| தக்கோலம் | ,, | 1 |
| வெட்டிவேர் | ,, | 1 |

செய்பாகம் :—ஒரு பெரிய குடிநீர்ப் பாண்டத்தில் முதல் அங்கத்தில் கூறப்பட்ட ஆடாதோடையைச் சிறுக அரிந்து போட்டுத் தண்ணீர் விட்டுச் சிறுக எரித்து இரண்டு படி அளவிற்குச் சுண்டி வரும்போது பிசைந்து வடிகட்டி வெல்லத்தைப் போட்டுக் கரைத்து வைத்துக் கொள்ளவும்.

அப்பால் ஒரு மண்பானையை முறைப்படிப் பழக்கி நறுமண தூபமிட்டு முன் சித்தப்படுத்திய திரவத்தை விட்டு அதனில் இரண்டாவது அங்கத்தில் குறிப்பிட்டுள்ள

சரக்குகளை யெல்லாம் ஒன்றுமிரண்டுமாக இடித்துப் போட்டுத் தேன் பலம்-10 விட்டுக் கலக்கி வாய்க்குப் பொருத்தமான மண் சாணக்கைக் கொண்டு மூடிச் சீலை செய்து அசையாமல் ஒரு மாதம் வைத்துவிடவும். பின்பு வாய்மூடியை நீக்கித் தெளிந்துள்ள நீரை வடிகட்டிச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம் :—இந்த அரிஷ்டத்தை வேளைக்கு $\frac{1}{2}$ - $\frac{3}{4}$ பலம் வீதம் தினம் இருவேளை கொடுத்து வருக.

தீரும் வியாதி :—ரத்தபித்தம், மேல் சுவாசம், காசம், இருமல், வீக்கம், பாண்டு எல்லாம் தீரும்.

பத்தியம் :—இச்சாபத்தியம்.

முற்றிற்று.

# அவிழ்த அட்டவணை

அவிழ்த அட்டவணை முற்றிற்று.

---

திருமகள் அச்சகம், சென்னை-1.—1971.

# சிறந்த வைத்திய நூல்களின் விளம்பரம்

## பதார்த்த குண விளக்கம்

முதல் பாகம் (மூல வர்க்கம்) விலை ரூ. 10—00

ஷ இரண்டாம் பாகம் (தாது - ஜீவ வர்க்கம்) விலை ரூ. 5—00

[வைத்திய வித்வன்மணி சி. கண்ணுசாமிப் பிள்ளை அவர்கள் இயற்றியது.]

பல வைத்திய நண்பர்களின் வேண்டுகோளுக் கிணங்க இந்நூலை இப்போது புதியதாக வெளியிட்டுள்ளார். இந்நூல் சித்த வைத்தியத்திற்குரிய மூலிகைகளே யன்றி, தென்னாட்டு மருத்துவர்கள் கையாண்டுவரும் சில யூனானி ஆங்கிலச் சரக்குகளும் பதார்த்தகுண சிந்தாமணியில் கூறப்படாத பல மூலிகைச் சரக்குகளும் இதில் சேர்க்கப்பட்டுள்ளன.

இந்நூல் உயிர் மெய் எழுத்து வரிசையில் ஒவ்வொரு சரக்கின் பெயரும் அதற்குரிய செய்யுளும், பின்னர் அதன் உரையும், அதன்கீழ் அச்சரக்கின் செய்கையும், உபயோகிக்கும் முறையும், மற்றும் வைத்தியர்க்குரிய பல அரும் பெரும் முறைகளையும் கூறியுள்ளார்.

## சிகிச்சா ரத்ன தீபம் விலை ரூ. 6—00

[வைத்திய வித்வன்மணி சி. கண்ணுசாமிப் பிள்ளை அவர்கள் இயற்றியது.

ஒவ்வொருவரும் எளிதிலுணரும் வண்ணம், தேக பஞ்சபூதம், நாடி, ரோகநிதானம், செய்பாக விளக்கம், கியாழம், சூர்ணம், மாத்திரை, மெழுகு, லேகியம், கிருதம், செந்தூரம், பற்பம், தீநீர், திராவகம், ஆசவம், அரிஷ்டம், பத்தியம் இன்னும் பல பாகங்களையும் இலம்பகங்களாக வரைந்துள்ளார். இந்நூல் வைத்தியத் தொழிலைக் கற்கவிரும்பும் மாணவர்களுக்கும் வைத்தியர்களுக்கும் மற்ற ஏனையோருக்கும் பெரும் நன்மையைத் தரத்தக்கது. வாலை யந்திர படங்களுடன் கூடியது.

## வைத்திய சிந்தாமணி

விலை ரூ. 5—00

[வைத்திய வித்வன்மணி சி. கண்ணுசாமிப் பிள்ளை இயற்றியது.]

இந்த "வைத்திய சிந்தாமணி" என்னும் நூலானது யூகிமா முனி என்பவரால் கூறப்பட்டது. இதனில் ரோக நிதானங்களைக் கூறி யிருப்பதினுல் இதனை ஆதாரவாகக்கொண்டும் சில கிரந்தங் களினின்று சிலது சேர்க்கப்பட்டும், ஒவ்வொரு ரோகங்களின் இறுதியில் ஆங்கிலேய மருத்துவத்தில் கூறப்பட்டுள்ள ரோக நிதான விஷயங்களை மதாந்தரமாகவும், அமைத்துக் காலதேச வர்த்தமானங்களுக்குத் தக்கவாறு அநேக சிகிச்சைகளையும் சேர்க் கப்பட்டிருக்கின்றது.

## கண்ணுசாமியம் என்னும் வைத்திய சேகரம்

விலை ரூ. 3—50

[வைத்திய வித்வன்மணி சி. கண்ணுசாமிப்பிள்ளை அவர்கள் இயற்றியது.]

கண்ணுசாமிப் பிள்ளையவர்கள் தமது பெயர் உலகில் எக் காலத்தும் நிலைபெறுமாறு பரம ரகசியமாக தான் கையாண்டு வந்த பல அரிய பெரிய பாகங்களை யெல்லாம் சூர்ணம், மாத் திரை, லேகியம், எண்ணெய், தைலம், கிருதம், பற்பம், செந் தூரம், ஆக்கிராணம் முதலியவைகளை ஆங்காங்கு கைபாகம் செய் பாகம் முதலியவற்ருல் எளிதில் உணரும்படி இப்புத்தகத்தில் எழுதியுள்ளார்.

## கைமுறை பாக்கெட் வைத்தியம்

விலை ரூ. 3—00

இதிலுள்ள முறைகள் சுமார் 30-வருஷ காலமாக கைமுறை யாக சுருதி, யுக்தி, அநுபவத்துடன் கைபாகம், செய்பாகம், திட்சைபாகம் தவருமல் செய்து முடித்துப் பலருக்கும் கொடுத்துப் பூரண சௌக்கியம் உண்டாகி யிருக்கிறது. ஒவ்வொருவரும் ஆபத்துக் காலத்தில் வைத்தியரைத் தேடாமல் இதிலுள்ள ஔஷத முறைகளை நம்பிக்கையாகச் செய்து சௌக்கியத்தை அடையலாம். இது சட்டைப்பையின் அடங்கக்கூடிய சிறிய அளவில் நல்ல கிளேஸ் கடிதத்தில் அச்சிடப்பட்டு காலிகோ பைண்டு செய்யப் பெற்றிருக்கிறது.

## தஞ்சை வைத்தியராஜ சிந்தாமணி

முதல் பாகம் — விலை ரூ. 3—00

இரண்டாம் பாகம் — விலை ரூ. 4—00

இக்கிரந்தமானது தஞ்சாவூர் சரபோஜி மஹாராஜா அவர்கள் வைத்திய சாலையை விருத்தி செய்யுங்காலத்தில் ஆயுள்வேதத்தில் தேர்ச்சி யனுபோகங்களிற் சிறந்த பண்டிதர்களாகிய முத்துசாமி தீக்ஷதர், சேதுபண்டிதர், வேங்கடபதி ஐயர், பரங்கிப்பேட்டை அப்பு வைத்தியர், கோபாலபிள்ளை, ஐயாகண்ணுபிள்ளை, சிதம்பரப் பிள்ளை, ராமாராவ், துமால்ராவ் முதலிய பண்டித சிரோன்மணிகளைக் கொண்டு தமது ராஜ குடும்பத்திற்கும், நகரவாசிகளுக்கும் உபயோகமாகும் பொருட்டு அநேக ஔஷதங்களை முடித்து கையாண்டு வந்த அனுபோக முறைகளை மஹாராஷ்டிர பாஷையில் ஓலை எட்டுப் பிரதிகளில் எழுதி வைத்திருந்தவைகளை ஷை மகாராஜாவின் பௌத்திரராகிய யோகராத ஆவாரே சாஹேப் அவர்கள் தம் முன்னிலையில் தக்க பண்டிதர்களைக்கொண்டு தமிழில் மொழி பெயர்த்ததை லோகோபகாரமாய் அச்சிற் பதிப்பிக்கப்பெற்றது. இதிலுள்ள ஒவ்வொரு முறையின் தலைப்பிலும் இன்ன பண்டிதர் கையாண்டது என்று அவரவர்களின் பெயர்களையும் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. வைத்தியத் தொழில் கற்போர்க்கு இன்றியமையாத சிறந்த வைத்திய நூல்.

## சுகந்த பரிமள சாஸ்திரம் — விலை ரூ. 1—00

இதில் சுகந்த மூக்குத்தூள், ஸ்நானப்பொடிகள், பல்பொடி, புதுக்கோட்டை, மைசூர் முதலிய சமஸ்தான அத்தர்பில்லைகள், ஊதுவர்த்திகள், பரிமளத் தைலங்கள், கர்ப்பூரம், கர்ப்பூரத் தைலம்; சந்தனாதித் தைலம் முதலிய இன்னும் பல அருமையான பரிமளத் திரவியங்கள் செய்யும் முறைகள் அடங்கி யிருக்கின்றன.

## கனக சாஸ்திரம் — விலை காசு—75

இதில் கஸ்தூரி, பச்சைக்கர்ப்பூரம், கர்ப்பூரம், சாம்பிராணி, குங்குமப்பூ, கெம்பு, முத்து, செம்பு, அயமணி, இரசமணி, தம் பாக்கு, மண்பவழம், பன்னீர், ஓமவாட்டர், சோம்பு வாட்டர், மிளகுத்தைலம், கற்கண்டு, பென்சல், தீக்குச்சி, சாயநீர் முதலிய அரிய கைத்தொழில் முறைகள் அனேகம் அடங்கி யிருக்கின்றன.

